ஸ்ரீ

புகழேந்திப்புலவர் செய்த

# நளவெண்பா,

மகாவித்துவான்

கோ. இராஜகோபாலப்பிள்ளையவர்கள்

இயற்றிய

## உரையுடன்.

---

இது

சென்னைப் பச்சையப்பன் காலேஜ்

தமிழ்ப்பண்டிதர்

கா. ர. கோவிந்தராஜ முதலியாரால்

பார்வையிடப்பெற்று,

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

---

1914

விலை ரூபா 1.

ஸ்ரீ

# முகவுரை.

## காவிய இலக்கணம்.

காவியமாவது: கடவுள் வணக்கம், நாடு, நகரம், மலை, கடல், பருவம், சந்திர சூரியர்களின் உதயாஸ்தமனம், கலியாணம், முடிகவித்தல், பொழில்விளையாட்டு, நீர்விளையாட்டு, உண்டாட்டு, மக்கட்பேறு, கலவியிற்களித்தல், புலவியிற் புலத்தல், மந்திரம், தூது, போர்ச்செலவு, போர்புரிதல், வெற்றி முதலிய இவற்றுள் ஏற்பனவற்றின் வர்ணனைகளை யமைத்துக் கவிகளாற் பாடப்படுஞ் சிறந்த தலைவன் ஒருவனுடைய கதைத் தொடர்ச்சியாம்.

இது பெருங்காவியம் எனவும், சிறுகாவியம் எனவும் இருவகைப்படும்.

அவற்றுள் பெருங்காவியமாவது: அறம், பொருள், இன்பம், வீடு என்னும் பொருள்கள் நான்குந் தன்கண் கூறப்பெற்றிருப்பதாகும்.

சிறுகாவியமாவது: அந்நான்கு பொருள்களில் ஒன்றேனும், பலவேனுங் குறையக் கூறப்பெற்றிருப்பதாகும்.

இவ்விருவகைக் காவியங்களுக்கும் முற்கூறப்பட்ட கடவுள் வணக்க முதலியன பொது இலக்கணமாம் எனவும், பிற்கூறப்பட்ட இவ்வற முதலியன சிறப்பிலக்கணமாம் எனவுங் கொள்க.

இந்நளவெண்பாவில் வீடு நீங்கலாக மற்றைய மூன்று பொருள்களை கூறப்பட்டிருத்தலின் இது சிறுகாவிய மெனப்படுகின்றது. இதனை,

"கூறுசில குன்றினுமக் காப்பியமா மென்பர்
பெரிதறமே யாதி யிறைத்து—வருவதுதான்

காப்பிய மாகுங் குலவரவு சரிதை
யாப்பிற் புராணமே யாம்."

என்று மிதனா லறிக.

நளவெண்பாவின் மூன்று படலங்களிலுமுள்ள கதையின் சுருக்கக் குறிப்பு வருமாறு:—

## முதலாவது - சுயம்வரகாண்டம்.

தருமர் வருந்தல், வியாசர் கூறல், நளன் சோலைபுகல், அன்னம் வருதல், பெண்கள் அதனைப்பற்றித் தருதல், அன்னம் தமயந்தியின் அழகையும் குணத்தையுங் கூறுதல், நளன் அவள்பாற் காதல்கூறல், அன்னம் அவள் உன்னை மணக்கும்படி செய்கின்றேன் என்று கூறி விடைபெற்றுச் செல்லல், அன்னந் தமயந்தியினிடஞ் செல்லல், அவள் அதனை நோக்கி வினவல். அன்னம் நளன்றன் அழகு குணம் வீரமுதலியவற்றைத் தமயந்திக்குக் கூறுதல், அவள் அதுகேட்டு அவன்பாற் காதன்மிக்கு வருந்தல், தோழியர் தமயந்தியின் வாட்டத்தைக் கண்டு அதனை அவளது தாய்க்குத் தெரிவித்தல், அவள் தன்னாயகனாகிய வீமராஜனுக்குத் தெரிவித்தல், அவன் சுயம்வரம் ஏற்படுத்தி அரசர்கள்பால் தூதுவரை யனுப்புதல், அன்னம் நளனையடைந்து தமயந்தியின் காதலைத் தெரிவித்தல், தூதுவர் நளனையணுகிச் சுயம்வரம் ஏற்படுத்தியதைக் கூறல், நளன் குண்டினபுரியை யடைதல், இந்திரன், எமன், வருணன், அக்கினி நளனுக்கு எதிர் தோன்றித் தம்பொருட்டுத் தமயந்தியினிடந் தூதாகச் செல்லும்படி அவனை வேண்டல், நளன் அதற்கிசைந்து தமயந்தியினிடஞ்சென்று அவர்கள் கருத்துக்கிணங்கும்படி கூறல், தமயந்தி மறுத்தல், நளன் மீண்டு அவர்கள்பால்வந்து தமயந்தி மறுத்தமையைச் சொல்லல், அவர்கள் நளனுக்கு வரமளித்துச் செல்லல், நளனுமற்றைய அரசர்களும் சுயம்வர மண்ட-

பத்தை யடைதல், தமயந்தி தோழியர் தன்னைச் சூழ்ந்து வரக் கையிற் பூமாலையோடு சுயம்வர மண்டபத்துக்கு வருதல், தோழியரில் ஒருத்தி தமயந்திக்கு அவ்வரசர்களின் பெயர் முதலியவற்றைச் சொல்லிக்கொண்டுவர அவள் அவர்களைப் பார்த்துக்கொண்டு செல்லல், தமயந்தி நளனிடம் வருமுன் இந்திரன்முதலிய நான்கு தேவர்களும் நளனுருவங்கொண்டு அவனுக்கருகில் உட்கார்ந்திருத்தல், தமயந்தி அங்குவந்து நளனுருவ முடையவர்கள் ஐவர் இருக்கக் கண்டு திகைத்து நிற்றல், அவள் பிறகு கடவுளை வணங்கிச் சில குறிப்புகளால் நளனையே நளனென உணர்ந்து அவனுக்கு மாலைசூட்டல், இந்திரன் முதலிய தேவர்கள் நால்வரும் அவ்விடம்விட்டுச் செல்கையில் கலி அவர்கள் எதிரில் வருதல், அவர்களால் தமயந்தி நளனுக்குப் பூமாலை சூட்டினள் என்பதை உணர்ந்த கலி சபதங் கூறிச் செல்லுதல், நளனுக்கும் தமயந்திக்குங் கலியாணமாதல், நளன் குண்டினபுரத்திற் சிலதினங்கள் தங்கியிருத்தல்.

## இரண்டாவது - கலிதொடர்காண்டம்.

நளன் தமயந்தியுடன் தன்னகர்க்குச் செல்லல், கலி நளனைத்தொடரக் காத்திருத்தல், மக்களுண்டாதல், நளன் கால் கழுவுதலிற் சிறிது பிழைக்கக் கலிதொடர்தல், கலி புட்கரனை அழைத்தல், புட்கரன் கலிசொன்னபடி நளனைச் சேரல், நளன் அவனோடு சூதாடல், நளன் ராச்சிய முதலிய யாவற்றையுந் தோற்றல், மக்களை வீமராஜனிடம் அனுப்புதல், சுரமடைதல், நளன் ஒரு புள்ளைப் பற்றத் தன்றுகிலை வீச அது அத்துகிலைக்கொண்டேகல், சூரியன் அஸ்தமிக்க நளனுந் தமயந்தியும் காட்டில் ஒரு மண்டபத்தை யடைதல், தமயந்தி துயில்கையில் நளன் தமயந்தியின் துகிலை அரிந்துகொண்டு செல்லல், தமயந்தி விழித்துக்கொண்டு வருந்

தல், பொழுதுவிடிதல், பாம்பு விழுங்கல், வேடன் தப்புவித்
தல், வேடன் தீய எண்ணங்கொண் டழிதல், ஒரு வியாபாரி
தமயந்தியை அழைத்துச் சென்று சேதிநகரிற் சேர்த்தல்,
தமயந்தியைக் கண்ட சேதிநகரத் தரசியின் றோழி யொரு
த்தி அவ்வரசிக்குக் கூறல், தமயந்தி அந் நாட்டரசியிடந்
தங்கல், வீமன் தேடவிடல், பிராமணன் தமயந்தியைக்
கண்டு வீமனிடம் அழைத்தேகல், அவர்கள் வருந்தல்.

---

## மூன்றாவது - கலிநீங்குகாண்டம்.

நெருப்பில் அகப்பட்டுக்கொண்ட கார்க்கோடகன்
நளனை வேண்டல், நளன் அவனை எடுத்தல், நளனை அவன்
கடித்தல், அவன் கடித்ததற்குக் காரணங் கூறல், நளன்
அயோத்தியை யடைதல், தமயந்தி நளனைத்தேட வேதியனை
யனுப்பல், அவன் அயோத்தியில் வாகுகன் என்னும்
பெயரோடு இருக்கும் நளனைக் கண்டு சென்று தமயந்திக்குக்
கூறல், தமயந்தி தனக்கு இரண்டாம் சுயம்வரம் ஏற்படுத்தப்
பட்டிருக்கின்றதென ருதுபர்னனுக்குத் தெரிவிக்கும்படி
வேதியனை அனுப்பல், வேதியன் சென்று அவ்வாறே ருது
பர்னனுக்குத் தெரிவித்தல், ருதுபர்னன் நளன் சித்தஞ்
செய்த தேரி லேறிக்கொண்டு குண்டினபுரத்துக்குச் செல்
லுதல், ருதுபர்னன் என் மேலாடை வீழ்ந்தது எடு என
நளன் அவ்விடத்தினின்றுந் தேர் பத்துக்காதம் வந்துவிட்
டது எனல், அஸ்வஹ்ருதயம், அக்ஷஹ்ருதயம் என்னும்
வித்தைகளை இருவரும் மாற்றிக்கொள்ளுதல், அவர்கள் குண்
டினபுரமடைதல், வீமன் ருதுபர்னனை இப்பொழுது நீர் வந்த
தன் காரணம் யாதென வினவல், அவன் நாணத்தோடு பதி
லுரைத்தல், தமயந்தி நளனது சமயற்றொழிலை யாராயும்படி
தன் தோழியை யனுப்புதல், தமயந்தி குழந்தைகளை நள
னிடம் அனுப்பல், அவன் அவர்களைக் கண்டு வருந்தல், நள

னுக்கும் அப்பிள்ளைகளுக்கும் சம்பாஷணை நடத்தல், தமயந்தி வீமனுக்கு ருதுபர்ணனது தேரையோட்டிக் கொண்டுவந்த சாரதியே தன்னாயகனாகிய நளனென்று தெரிவித்தல், வீமன் சென்று நளனைக் காணுதல், வீமன் நளனது உண்மை யுருவைக் காட்டச் சொல்ல அவன் காட்டுதல், நளன் மக்களும் தமயந்தியும் அவன் பாதத்தில் வீழ்ந்து அரற்றல், கலிபுருடன் நளனுக்கு வரமளித்து அவனைவிட்டு நீங்கிச் செல்லல், ருதுபர்ணன் விடைபெற்றுச் செல்லல், நளன் தமயந்தியுடனும் மக்களுடனும் சேனைகளுடனும் சென்று தன்னகர்ப் புறத்திற்றங்கல், நளன் மீண்டும் புட்கரனோடு சூதாடி யாவற்றையும் வென்றுகொள்ளல், புட்கரன் நளனிடம் விடைபெற்றுக்கொண்டு தன்னகரை யடைதல், நளன் நகருக்குட் பிரவேசித்து அரசு வீற்றிருத்தல்.

---

## வேறு குறிப்புகள்.

இந்நூலின் தற்சிறப்புப் பாயிரத்துள் வேறு பிரதிகளுட் காணப்படும் "நீலநெடுங்கொண்மூ" என்னுஞ் செய்யுள் இரும்பல்காஞ்சி என்னுஞ் சங்கச்செய்யுளினுள்ளது என்பதை வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ. அவர்கள் தாம் பதிப்பித்த நளவெண்பா மூலத்தின் முகவுரையில் உரைத்திருக்கின்றனர்.

நளன் ஆறு சக்கரவர்த்திகளில் ஒருவன். ஆறு சக்கரவர்த்திகளாவார்: அரிச்சந்திரன், நளன், முசுகுந்தன், புருகுச்சன், புரூரவன், கார்த்தவீரியன் என்பவர்.

நளன் முதலெழுவள்ளல்களில் ஒருவன். முதலெழு வள்ளல்களாவார்: குமணன், சகரன், சகாரன், செம்பியன், துந்துமாரி, நளன், நிருதி என்பவர்.

இடையெழுவள்ளல்கள்: அக்குரன், அந்திமான், அரிச்சந்திரன், கன்னன், சந்திமான், சிசுபாலன், தந்தவக்கிரன் என்பவர்.

கடையெழுவள்ளல்கள்:—எழினி, ஓரி, காரி, நள்ளி, பாரி, பேகன், மலையன் என்பவர்.

நளன் விஷ்ணுபக்தனென நூற்கள் கூறுகின்றன.

தமிழில் நளசரித்திரத்தைக் கூறு நூற்கள் மூன்று. அவை:—இந் நளவெண்பா, அதிவீரராமபாண்டியர் விருத்தப்பாவினு லியற்றிய நைடதம், மற்றொருவர் கலித்துறையில் இயற்றிய நைடதம் என்பன.

புகழேந்திப்புலவரைப்பற்றிய சில குறிப்புகள்.

"நூலார் கலைவல்ல செம்பியன் கேட்க நொடித்தமிக்க
கோலா கலனொட்டக் கூத்தனை யென்றுதற் கோலியென்று
மேலார் கவிசொல்லி நெய்த்தானத் தேசென்று வென்றுகொண்ட
மாலார் களந்தைப் புகழேந்தி யுந்தொண்டை மண்டலமே."

என்னுந் தொண்டைமண்டலச்சதகச் செய்யுளும்,

"நளனைப் புகழ்கின்ற வெண்பாவைப் பாடினன் நட்கவிதை
கழகத்தின் மிக்க புகழேந்தி யாங்கவி ராசன்றனைத்
தளவப் பெருநகை மாதொரு தென்னவன் றன்மணஞ்செய்
வளவற்குச் சீதன மீந்தது பாண்டியன் மண்டலமே."

என்னும் பாண்டிமண்டலச்சதகச் செய்யுளும் இந்நூலாசிரியரைப்பற்றியனவே. இவர் விக்கிரமச்சோழன் காலத்தில் அரசாண்டிருந்த ஒரு பாண்டியனிடத்தில் சமஸ்தான வித்துவானகவிருந்து, பிறகு அவ்விக்கிரமன் புத்திரனுகிய இரண்டாங் குலோத்துங்கன் காலத்திற் சோழநாட்டை யடைந்தவர் என்பது இவரது சரித்திரத்தால் விளங்குகின்றது. இரண்டாங் குலோத்துங்கன் வித்தியாகுருவாகிய ஒட்டக்கூத்தப்புலவர் இவருக்குப் பெரிதும் இடர்ப்பாடியற்ற இவர் குலோத்துங்கனைவிட்டுச் சோழநாட்டிலிருந்த சிற்றரசனுகிய சந்திரன் சுவர்க்கியை யடைந்து அவனால் அன்புடன் போற்றப்பட்டிருந்தனர். அதன் பிறகுதான் கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பநாடர் இரண்டாங் குலோத்துங்கன் சமுகத்தை யடைந்து பிறகு சிலகாலஞ் சென்று ராமாயணத்தைப் பாடி

னர். கம்பநாடர் ராமாயணம் பாடியபிறகுதான் சந்திரன் சுவர்க்கியின் வேண்டுகோளால் இவர் இந்நளவெண்பாவைப் பாடினர். இவர் இரண்டாங் குலோத்துங்கன் மகனாகிய இரண்டாம் ராஜராஜன் காலத்தில் இருந்தனர் என்பதும் இருந்திலர் என்பதும் நன்கு விளங்கவில்லை. சிலர் அபிப்பிராயப்படி கவிச்சக்கரவர்த்தியார் ராமாயணம் பாடியது இராஜராஜன் காலமானால் இவர் அவன் காலத்திலும் உயிர்த்திருந்தவராதல் வேண்டும். கவிச்சக்கரவர்த்தியார் தாம் பாடிய ராமாயணத்துக்கு இவரிடமிருந்து அபிப்பிராயம் பெற்றிருப்பதாகத் தோன்றுமையின் இவர் அக்காலத்திற் குலோத்துங்கனிட மிருந்திலரென்பதும், இவர் இருந்த இடமே சோழன் முதலாயினார்க்குத்தெரியாமலிருந்திருக்கவேண்டுமென்பதும் நன்கு விளங்குகின்றன. விக்கிரமன் அரசாண்டது கி. பி. 1118 முதல் 1132 வரையினும், இரண்டாங் குலோத்துங்கன் அரசாண்டது கி. பி 1132 முதல் 1162 வரையினும், இரண்டாம் ராஜராஜன் அரசாண்டது கி. பி. 1162 முதல் 1200 வரையினுமாகும். இதனால் இவரது காலம் நன்கு விளங்கும்.

## இவ்வுரையைப்பற்றிய சில குறிப்புகள்.

சென்ற நூற்றாண்டில் இலக்கணத்துக் கோர் இலக்காய் விளங்கிய மகாவித்துவான் கோமளபுரம் - இராஜகோபாலப் பிள்ளையவர்கள் இந் நளவெண்பாவுக்கு இயற்றிய உரையில் சுயம்வரகாண்டத்தில் நூற்றுப்பதினைந்தாவது செய்யுண் முதல் அக்காண்டத்தின் ஈற்றுச் செய்யுளாகிய நூற்று எழுபத்தோராவது செய்யுள் வரையினும் ஐம்பத்தொரு செய்யுளும், கலிதொடர் காண்டத்தில் முதற் செய்யுளிலிருந்து முப்பத்தொரு செய்யுளும் ஆக எண்பத்தெட்டுச் செய்யுள்கட்கு உரை காணப்படவில்லை. மேற்படி செய்யுள்கட்கு இவரது உரை யாரிடமேனுங் கிடைக்கக்கூடும் எனக் கருதிப் பலரையும் அடுத்தடுத்து விசாரித்தும் ஒருவரிடமுங் கிடைக்

காமையின் "இவர் இவ்வுரையை இந்நூலினின்றும் வருடந்தோறும் எப்-ஏ-வகுப்புக்குப் பாடமாக வந்த பாகங்களுக்கு அவ்வப்போது எழுதிவந்தவரேயன்றி இந்நூல் முழுதுக்கும் உரை யெழுதவேண்டுமென்று தொடங்கி எழுதினவரல்லர். மேற்கண்ட செய்யுட்கள் மேற்படி வகுப்புகளுக்கு இவர் காலத்து வாராமலிருந்திருக்கும். அதனால் இவர் அச்செய்யுள்கட்கு உரை யெழுதாமல் விட்டிருப்பர்" என்று எண்ணி அவ்வெண்பத்தெட்டுச் செய்யுள்கட்கும் யான் உரை எழுதிச் சேர்த்து இவ்வுரைநூலை முடிப்பித்தேன். பூவோடு கூடிய நாரை யாரும் இகழாரன்றே; அதுபோல் பொருள்மணங் கமழும் இவர்தம் உரைமலர் தொடர்புற்று முடிந்திலகுதற்கு அனுகூலமாக உடன் சேர்க்கப்பட்ட என்னுரைநாரையும் யாரும் இகழாமற்கொள்ளுவர் எனப் பெரிதும் நம்புகிறேன். பிள்ளையவர்கள் எழுதிய 'புகழேந்திப்புலவர் சரித்திர'மும், 'நளவெண்பா ஐயமறுப்பு'ம், 'நளவெண்பா விபரீதகுண திரஸ்கார'மும், இம்முகவுரையின் பின் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இவ்வுரை நூலில் இவரது சரித்திர முழுவதையும் எழுதிச் சேர்க்கவேண்டுமென்னும் அவாவினால் இவரை நன்குணர்ந்த பெரியோர்கள் சிலரை விசாரித்தேன். அவர்கள், யான் இவரது நீதிநெறிவிளக்கவுரைப் புத்தகத்தின் முகவுரையில் இவரைப்பற்றி எழுதியதினும் வேறாக ஒன்றுங் கூறிற்றிலர். ஆதலின், அக் காரியத்தை விடுத்தேன். இவரது சரித்திரத்தை யாரேனுந் தெரிவிப்பின் அது இவரது உரைப்புத்தகங்களொன்றின் மறுபதிப்பிலேனும் தனியாகவேனும் தெரிவிப்பார் பெயரோடு வெளியிடுவதுமன்றி அங்ஙனந் தெரிவிப்பார்க்கு யான் நன்றியறிதலுடன் கூடிய வந்தனத்தையுஞ் செலுத்துங் கடமையுடையேன்.

---

க. ர. கோ.

ஸ்ரீ

# புகழேந்திப்புலவர் சரித்திரம்.

புலவர்திலகராகிய புகழேந்திப்புலவர் : கம்பநாடர், ஔவை, ஒட்டக்கூத்தர் இவர்களோடு இருந்தனராகத் தமிழ்ப்புலவர்கள் சொல்லிவருகையால். அவருடைய காலம் சற்றேறக்குறைய சாலிவாகன சகாப்தம் ௮0௭-ஆம் ௵, அதாவது கூகூடு வருடத்துக்கு முற்பட்டது. அவர் பிறந்த இடம், செங்கற்பட்டையடுத்த பொன்விளைந்தகளத்தூ ரென்பதும், குலம் தொண்டைமண்டலவேளாள ரென்பதும், படிக்காசுப் புலவர் பாடிய தொண்டைமண்டல சதகத்தால் விளங்குகின்றன. இவர் செய்த நூல்கள் நளவெண்பாவும், இரத்தினச் சுருக்கமுமாம்.

இப் புலவர்திலகர், தென்மதுரையை ஆண்டுவந்த சண்பகமாறனென்னும் பாண்டியனிடத்தில் தமிழ்ப்புலவராயிருந்தனர். வேறு கூறுவாரு முளர். இதன் உண்மை தெளிந்து கூறக்கூடாமையாயிருக்கின்றது. அந்தக்காலத்தில்உறையூரில் அரசுபுரிந்துகொண்டிருந்த குலோத்துங்கச் சோழராஜனுக்குப் பெண் கேட்கும்படி, அவனுக்கு வித்தியாகுருவும், அவனுடைய சமஸ்தான வித்துவானும் ஆகிய ஒட்டக்கூத்தப்புலவர், சண்பகமாறனிடத்தில் சென்று அவனோடு பேசிக்கொண்டிருக்கையில், பாண்டியராசன் பரிகாசமாய்ச் "சோழராஜன் பாண்டியகுலத்துப் பெண்ணைக் கொள்ளத்தக்க பாத்திரனோ? எங்களிலும் அவனுக்குள்ள ஏற்றமென்ன? சொல்லும்" என்றான். அதுகேட்டு ஒட்டக்கூத்தப்புலவர், சோழராஜனுடைய பெருமைதோன்ற "அவனுடைய குதிரை, நதி, மாலை, குலம், வீரம், கொடி, நகர், தேசம் இவைகளுக்குப் பாண்டிய

## புகழேந்திப்புலவர் சரித்திரம்.

ஜனுடைய குதிரைமுதலிய அவ்வெட்டும் ஒப்பாகமாட்டா" ன்னும் பொருளை அமைத்து,

### எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

"கோரத்துக் கொப்போ கனவட்ட மம்மானே
கூறுவதுங் காவிரிக்கு வையையோ வம்மானே
ஆருக்கு வேம்புநிக ராகுமோ வம்மானே
ஆதித் தனுக்குநிக ரம்புலியோ வம்மானே
வீரர்க்குள் வீரனொரு மீனவனோ வம்மானே
வெற்றிப் புலிக்கொடிக்கு மீன்கொடியோ வம்மானே
ஊருக் குறந்தைநிகர் கொற்கையோ வம்மானே
ஒக்குமோ சோணாட்டைப் பாண்டிநா டம்மானே."

ன்னும் பாடலைச் சொல்லினர். அதுகேட்ட பாண்டியராச வுடைய சமஸ்தான வித்துவானாகிய புகழேந்திப்புலவர், ஒட் க்கூத்தப்புலவரை நோக்கி, அதற்கு மாறாக,

"ஒருமுனிவ னேரியிலோ வுரைதெளித்த தம்மானே
ஒப்பரிய திருவிளையாட் டுறந்தையிலோ வம்மானே
திருநெடுமா லவதாரஞ் சிறுபுலியோ வம்மானே
சிவன்முடியி லேறுவதுஞ் செங்கதிரோ வம்மானே
கரையெதிரல் காவிரியோ வையையோ வம்மானே
கடிப்பகைக்குத் தாதகியங் கண்ணியோ வம்மானே
பரவைபணிந் ததஞ்சோழன் பதந்தனையோ வம்மானே
பாண்டியனார் பராக்கிரமம் பகர்வரிதே யம்மானே."

என்ற பாடலைச் சொல்லினர். அதுகேட்டுப் பின்னர் ஒட்டக் கூத்தப்புலவர் சோழனைப் புகழவேண்டி,

### வெண்பா.

"வென்றி வளவன் விறல்வேந்தர் தம்பிரான்
என்று முதுகுக் கிடான்கவசம்—துன்றும்

னைக் கூறிச் சற்று ஆலோசித்தனர்; இதற்குள் புகழேந்திப் புலவர்,

> வெறியார் தொடைகமழு மீனவர்கோன் கைவேல்
> எறியான் புறங்கொடுக்கி னென்று."

எனக்கூறி முடித்தனர். தாம் சொல்லியவற்றிற்கெல்லாம் பிரதிகூலமாய்ப் பேசினானென்று அவர்மேல் ஒட்டக்கூத்தருக்கு வருத்த முண்டாயிற்று. பின்பு பாண்டியராசன் தன் புத்திரியைக் கொடுப்பதற்குச் சம்மதித்தான். ஒட்டக்கூத்தர் உடனே புறப்பட்டு வந்து, குலோத்துங்கச் சோழனுக்கு இது செய்தியைத் தெரிவித்தனர். சோழராசன் தன் போதகாசிரியராகிய ஒட்டக்கூத்தரை நகரையாளும்படி வைத்துத் தான் தென்மதுரைக்குச்சென்று பாண்டியராசனுடையமகளை மணம்புணர்ந்தனன். பாண்டியன், தன் குமாரத்திக்குச் சீதனமாகப் பொன்னணி முதலியவற்றையும், புகழேந்திப்புலவரையும் கொடுத்தனன். சோழராசன் சீதனப் பொருள்களையும் அப்பொருள்களி லொருவராகிய புகழேந்திப்புலவரையும் முன்னதாகத் தனது நகரத்துக்கு அனுப்பினன். உறையூரில் அரசு புரிகின்ற ஒட்டக்கூத்தப்புலவர், புகழேந்திப்புலவரைக் கண்டமாத்திரத்தில் முன்னே தம்மைக் கல்வியறிவால் அவமதித்த புலவர்திலகரைச் சிறைச்சாலையில் அடைவித்துச் சற்றேனும் இரக்கமென்பதில்லாமல், நாளொன்றுக்கு ஆழாக்கு அரிசியும் உழக்கு உப்பும் கொடுக்கும்படி உத்தரவு செய்தனர். புகழேந்தியாரும் அவ்வாறே சிறைச்சாலையி லிருந்துகொண்டு அந்தக் காராகிருகத்தின் பக்கத்து மார்க்கமாகத் தண்ணீர்க்குச்செல்கின்ற பெண்களைச் சாளரத்தின்வழியாகப் பார்த்து, அவர்கள் காதுக்கு இனிமையாய் எளிதிற் பொருள் விளங்கும்படி ஸ்ரீமகாபாரதத்தில் சிற்சிலசரித்திரங்களை எடுத்துச்சுருக்கி, இக்காலத்தில் தெருக்களில் சில எளிய சனங்கள்

உடுக்கை தட்டிப் பாடிச் சீவனஞ்செய்துகொண்டு வருகின்ற அல்லியரசிமாலையீடு, பவளக்கொடிமாலையீடு, புரந்தரன்களவு மாலையெனச் செம்பாகமான பாடல்களாகப்பாட, அவைகளைக் கேட்டு மகிழ்ந்த பெண்கள் தங்கள் வீட்டிலிருந்து கொண்டு வந்து கொடுக்கும் அரிசி காய்கறி முதலியவற்றில் தமக்குப் போதுமாயினவற்றை எடுத்துக்கொண்டு சமைத்துண்டு, மிகுதியைக் காவற்சேவகர்களுக்குக் கொடுத்துவருவர். இது காரணத்தால் அவர்களும் இவர்மேல் மிகுதியும் அன்பு வைத்து மரியாதையாய் நடத்திவந்தார்கள்.

இப்படியிருக்கையில் சோழராசன் கலியாணகாரியம் யாவும் நிறைவேறின மாத்திரத்தில் தன் மனையாளோடு நக ரமேவந்து சேர்ந்து, ஒருநாள் யானைமேல் பவனி வந்தான். சிறைச்சாலைத் தளத்தின்மேல் நின்று புகழேந்தியார், அச் சிறப்பைப் பார்த்துக்கொண்டிருக்க, சோழன் தன்னருகி லுள்ள ஒட்டக்கூத்தருக்குக் காட்டி "இதோ மேன்மாடத்தில் நிற்கின்ற புகழேந்திப்புலவர் சிறந்த புலவரன்றோ" என்றான். அச் சொல்லுக்குப் பொறுக்காமல் ஒட்டக்கூத்தர், புகழேந் திப்புலவரை யிகழ்ந்து,

கட்டளைக்கலித்துறை.

"மானிற்கு மோவந்த வாளரி வேங்கைமுன் வற்றிச்செத்த
காணிற்கு மோவவ் வெரியுந் தழன்முன் கனைகடலின்
மீனிற்கு மோவந்த வெங்கட் சுறவமுன் வீசுபனி
தானிற்கு மோவக் கதிரோ னுதயத்திற் றூர்மன்னனே."

என்ற பாடலைச் சொல்லினர். அதுகேட்டுப் புகழேந்திப்புல வர், "இவன் அவ்வளவு சமர்த்தனு" என்று புன்னகைசெய்து சோழனைப் பார்த்து, "இக்கவியை வெட்டிப் பாடவோ அல் லது ஒட்டிப் பாடவோ?" என்று கேட்க, அரசன் ஒட்டக்

கூத்தரிடத்தில் வைத்த அன்பால் "வெட்டிப் பாடவேண்டுவ தில்லை, ஒட்டியே பாடும்" என்ன,

இதுவுமது.

"மானவ னானந்த வாளரி வேங்கையும் வற்றிச்செத்த
கானவ னானவ் வெரியுந் தழலுங் கலைகடலின்
மீனவ னானந்த வெங்கட் சுறவமும் வீசுபனி
தானவ னானக் கதிரோ னுதயமுந் தார்மன்னனே."

என்று அப்பாடலையே ஒட்டிப் பாடினர். பாடியும் அரசன் ஒட்டக்கூத்தரிடத்தில் வைத்த அன்பின் மிகுதியால் சிறை மீட்கக் கருதாமற்போயினன்.

இதுநிற்க, ஒட்டக்கூத்தப்புலவர் சோழராசனுடைய சமூகத்தில் பரிசுபெறவரும் தமிழ்ப் புலவர்களில் தாம் கேட்ட வினாக்களுக்குத் தக்க விடை தராதவர்களைச் சிறைச்சாலையை அடைவித்து, நவராத்திரி யுற்சவத்தில் இருவர் இருவராகக் குடுமியோடு குடுமி முடிபோட்டு, அங்குள்ள பிடாரிக்கு முன்பாக நிறுத்தி, அவர்களைப் பலி கொடுப்பது வழக்கம். அவ்வழக்கப்படி புகழேந்திப்புலவர் சிறையிருந்த காலத்திலும் பல புலவர்கள் அடைபட் டிருந்தனர்கள். அஃ தறிந்து, புகழேந்திப்புலவர் இக்கொடிய வழக்கத்தை நிறுத்தவேண்டுமெனக் கருதிச் சிறையி லிருக்கும் புலவர்களில் குயவன், அம்பட்டன், கருமான், தச்சன், தட்டான், வண்ணான், வேளாளன் ஆகிய எழுவர்களைத் தெரிந்தெடுத்துச் சிறைச்சாலையிலேயே சம்பிரதாயத்தோடு இலக்கிய இலக்கணங்களைப் பயிற்றுவித்துச் சமர்த்தர்களாகச் செய்தனர். நவராத்திரி யுற்சவமுஞ் சமீபித்தது. அக்காலத்தில்வழக்கப்படி அடைபட்டுக் கிடக்கும் புலவர்களைச்சிறையி லிருந்து கொண்டுவரும்படி ஏவலாளரை அனுப்ப, புலவர்

திலகராகிய புகழேந்திப்புலவர், தம்மிடத்தில் கல்விபயின்று தேர்ந்த எழுவர்களையும் முன்னே செல்லவும், மற்றையோர்களை அவர்கள் பின்னே செல்லவும், உறுதிசொல்லி அனுப்பினர். அவர்களுள் முன்னே குசவன்போய் மிகுதியு மிடுக்காக நின்றான். ஒட்டக்கூத்தர் அவன் மிடுக்காக நிற்கின்றதைக் கண்டு செய்யுள் செய்யுந்திறத்தை அறியும்படி,

கலிவிருத்தம்.

"மோனை முத்தமிழ் மும்மத மும்பொழி
யானை முன்வந் தெதிர்த்தவ னாடா?"

என்றனர். அதற்குக் குசவன்,

"கூனை யுங்குட முங்குண்டு சட்டியும்
பானை யுஞ்செயு மங்குசப் பையல்யான்."

என்றான். ஒட்டக்கூத்தர், தம்மை யானையெனச் சொன்னதற்கு, யானையை யடக்குவது அங்குச மாகையால் அங்குசம் போன்ற பையலெனவும், தான் குசவனாதலால், அழகிய குசப்பைய லெனவும் சிலேடையாகப் பொருள்பட அங்குசப் பையல் என்றனன். ஒட்டக்கூத்தப் புலவர் அது கேட்டுச் சற்று வாட்டமுற்று மற்றொருவனை அழைப்பிக்க, ஒருகண் பூப்பட்டு நின்ற அம்பட்டன் வந்து நின்றான். அவனைக் கண்டு,

கட்டளைக்கலித்துறை.

"விண்பட்ட கொக்குவல் லூறுகண் டென்ன விலவிலக்கப்
புண்பட்ட நெஞ்சொடு மிங்குநின் றாய்பொட்டை யாய்புகலாய்?"

என, அதற்கு அம்பட்டன்,

"கண்பொட்டை யாயினு மம்பட்ட னுன்கவி வாணர்முன்னே
பண்பட்ட செந்தமிழ் நீயுந் திடுக்கிடப் பாடுவனே."

என்றான். அதைக் கேட்டுக் கலங்கி மற்றொருவனை அழைப்பிக்க, அவன்பின் கருமான்வந்து நின்றான். முன்னே கவியால் வினவினாற்போல வினவாமல் "நீ யார்?" என்ன, அதற்கவன்,

இதுவுமது.

"செல்வன் புதல்வன் றிருவேங் கடவன் செகத்குருவாங்
கொல்லன் கவியைக் குறைசொன்ன பேரைக் குறடுகொண்டு
பல்லைப் பிடுங்கிப் பருந்தாட்ட மாட்டிப் பகைவர்முன்னே
அல்லும் பகலு மடிப்பேன் கவியிருப் பாணிகொண்டே."

என்று சொல்லினன். ஒட்டக்கூத்தர் கிலேசங்கொண்டு அவனை அப்புறப்படுத்தி, வேறொருவனை அழைப்பிக்க, தச்சன் வந்து நிற்க "அவனை நீ யார்?" என்ன,

"சொன்னசந் தக்கவி யாவரும் சொல்லுவர் சொற்சுவைசேர்
இன்னசந் தக்கவி யேதென்ற போதி லெதிர்த்தவரை
வன்னசந் தங்கெட வாயைக் கிழித்திந்த வாய்ச்சியினால்
கன்னசந் தங்கங் களிற்கவி யாப்பைக் கடாவுவனே."

என்றனன். அது கேட்டு வருத்தமுற்று, அவனை அடுத்து நின்றவனை யழைக்க, வண்ணான் வந்து தைரியமாக நின்றான். "நீ யாரடா?" என்று செருக்காகக் கேட்க,

இதுவுமது.

"சேலேய் விழிமட வாரிற்செங் காலன்னஞ் சேர்பழனப்
பாலேய் மணவயிற் கூத்தநின் போலியர் பாப்புனைந்த
நூலேய் துகளறத் தூய்தாக்கு நோன்மை நுவல்வதல்லால்
மேலேய் தமிப்புல வோரென்னை யென்னை விளம்புவதே."

தான் வண்ணானும், ஒட்டக்கூத்தர் கைக்கோளருமாதலால் பாப்புனைந்த துகளற எனச் செய்யப்பட்ட நூல்களி

லுள்ள குற்றங்களற எனவும், பாவோட்டி நெய்த வஸ்திரத்தி லுள்ள மாசு நீங்க எனவும் சிலேடைபடக் கூறினன். இது கேட்டு "இவன் யாவரினுங் கெட்டவன்" என்று அப்புறப் படுத்தி, அவனுக் கயலில் நின்றவனை அழைக்க, வேளாளன் ஒழுக்கமாக வந்து எதிரே நின்றான். அது கண்டு ஒட்டக் கூத்தர் "பெருங்கவிஞர்கள் முன் சிறுகவிஞர்கள் வந்து நிற் பது தகுதியோ?" என்றனர். அதுகேட்ட வேளாளன்,

இதுவுமது.

"கோக்கண்டு மன்னர் குரைகடல் புக்கிலர் கோகநகப்
பூக்கண்டு கொட்டியும் பூவா தொழிந்தில பூதலமேழ்
காக்கின்ற மன்ன கவிபொட்டக் கூத்தநுங் கட்டுரையாம்
பாக்கண் டொளிப்பர்க ளோதமிழ் பாடுறு பாவலரே."

என்று கூறி, இவனை இம்மட்டிலே விடுதல் தகுதியன் றென்று கருதி, நீர் சோழராசன்மேற் பாடிய அண்டத்துப் பரணி யென்னும் நூலில், இவ்வண்டத்தையே நகரமாகவும், சக்ரவாளகிரியையே மதிலாகவும், அதற் குட்புறத்துள்ள கடல்களையே அகழாகவும், பூமிநடுவிலுள்ள மகமேருவையே கோட்டைக் கொடிக்கொம்பாகவும் உருவகப்படுத்தி வரு ணித்திருக்கின்றீரே. அகழ் மதிலின் புறத்திலன்றோ இருக்க வேண்டும். அகத்தி லிருப்பதாகக் கூறியது குற்றமன்றோ? பெரும்புறக் கடலையே அகழெனக்கூற மறந்தீர்போலும். கவிச்சக்கரவர்த்தியாராகிய தெய்வப்புலமைக் கம்பநாடர் அயோத்தியாநகர வருணனையில்,

கலிவிருத்தம்.

"நேமி மால்வரை மதிலாக நீள்புறப்
பாம மாகடல் கிடங்காகப் பன்மணி
வாம மாளிகை மலையாக மன்னற்குப்
பூமியு மயோத்திமா நகரம் போலுமே."

என்ற செய்யுளைப் பார்த்ததும், கேட்டதும் இல்லையோ?" என்றான். அந்தமட்டிலே அக்கினிதேவனுக்கு அபிடேகஞ் செய்தாற்போல ஒட்டக்கூத்தர் முகங்கருகி வாளா விருந்தனர். அவரைப் பிடித்திருந்த அகங்கார துட்டப்பேயோ விட்டுத் தொலைந்தது. நமக்குச் சம்பவித்த இந்த மானக்கேடெல்லாம் புகழேந்தியால் சம்பவித்ததென்று உணர்ந்து கொண்டு, மற்ற கவிஞர்களையும் வரவழைத்து அவர்கட்குத் தக்க பரிசு அரசனைக்கொண்டு கொடுப்பித்து, அவர்கள் யாவரையும் தங்கள் தங்கள் இருப்பிடஞ் சேரும்படி செலவு கொடுத்தனர்.

இச்செய்திகள் யாவும் பரிசாரகப் பெண்களால் சோழன் மனைவி கேள்வியுற்றுப் 'புகழேந்திப்புலவரை இன்னும் அரசன் சிறையினின்றும் விடுதல் செய்யவில்லை' என மனவருத்தமுற்றுப் பள்ளியறைக்குத் தன்னாயகனாகிய சோழராசன் வரும்போது, வீட்டு வாயிற்கதவைச் சாத்தித் தாழ்பூட்டிக்கொண்டாள். தான் பற்பல இனிய மொழிகளைக் கூறியுந் திறவாமையால், அரசர்கள் தங்களுக்கும் தங்கள் மனைவிமாருக்கும் ஊடல் முதலியன நிகழ்ந்தபோது, தங்கள்பாலுள்ள புலவரைக்கொண்டு தீர்த்துக்கொள்ளுதல் வழக்கமாதலால் இவளுடைய துனியைத் தீர்க்கும்படி ஒட்டக்கூத்தரை அனுப்பினான். அவர் போய்,

> "நானே யினியுன்னை வேண்டுவ தில்லை நளினமலர்த்
> தேனே கவாடந் திறந்திடு வாய்திற வாவிடினே
> வானே றனைய விரவி குலாதிபன் வாசல்வந்தால்
> தானே திறக்குநின் கைத்தல மாகிய தாமரையே."

என்ற கவியைக் கூறினார். அவர் பாடலைக் கேட்ட உடனே மிகுதியுஞ் சினங்கொண்டு 'ஒட்டக்கூத்தர் பாட்டுக்கு இரட்

டைத் தாழ்ப்பாள்' என்று மற்றொரு தாழ்ப்பாளும் போட்டாள். ஒட்டக்கூத்தர் உடனே வந்து அரசனுக்கு அதைத் தெரிவித்தனர். 'நம்முடைய மனைவிக்கு யாதொரு வழுவுதலுமின்றி வேண்டியதை வேண்டியபடியே நடத்திவருகையில், இப்படிப்பட்ட துனியுண்டாவதற்கு என்னிமித்தம்' எனத் தனக்குள்ளே எண்ணிப் 'புகழேந்திப்புலவரைச் சிறையில் வைத்திருக்கின்றோமே, இதுவேயாம்' எனத் துணிந்து, சிறை நீக்கித் தன் மனையாளுடைய துனியைத் தீர்க்கும்படி அனுப்பினன்; அவரும் அவ்வாறே சென்று,

"இழையொன் றிரண்டு வகிர்செய்த நுண்ணிடை யேந்தியபொற்
குழையொன் றிரண்டு விழியணங் கேகொண்ட கோபமென்னே
மழையொன் றிரண்டுகைம் மானா பரணனின் வாசல்வந்தால்
பிழையொன் றிரண்டு பொறாரோ குடியிற் பிறந்தவரே."

என்ற கவியைக் கூறினர். இக்கவியைக் கேட்டவளவில் மன மகிழ்ந்து சோழன் மனைவி துனி, தீர்ந்தனள். அதுமுதல் சோழராசன் புகழேந்திப்புலவரை மேம்பாடாகவே தன்னுடைய சமஸ்தானத்தில் வைத்துக்கொண்டு பரிபாலித்து வந்தனன். ஆயினும் ஒட்டக்கூத்தர் முன் தம்மைச் சிறையில் அடைவித்ததையும், இப்போதுந் தம்மேல் பொறாமையாயிருப்பதையுந் தெரிந்துகொண்டு, அக்கருத்தை அரசனுக்குத் தெரிவிக்காமற் சென்று, உறையூரைச் சார்ந்த மள்ளுவமென்னும் ஒரு சிறிய நாட்டில் முரணூரிலிருந்த சந்திரன் சுவர்க்கி யென்னும் அரசனிடஞ் சேர்ந்து, அவனுடைய வேண்டுகோளால் நளவெண்பாவாகிய நூலைச் செய்து தக்க பரிசுபெற்று வாழ்ந்திருந்தனர்.

சிலநாள் கழிந்தபின்னர்க் குலோத்துங்கச் சோழன் புகழேந்திப்புலவர் நளவெண்பா நூலைச் செய்து முரணை நக

ரில் சந்திரன் சுவர்க்கியென்பவனால் ஆதரிக்கப்பட்டிருக்குஞ் செய்தியைக் கேள்வியுற்று, அதிமரியாதையோடு அவரை வரவழைத்துத் தன்னுடைய சமுகத்தில் பிரசங்கிக்கும்படிக் கேட்டுக்கொண்டனன். அவரும் ஒம்மென ஒத்துக்கொண்டு, கம்பநாடர், ஔவையார், ஒட்டக்கூத்தர் முதலிய தமிழ்ப் புலவர்கள் முன்னிலையில் உபநியாசஞ் செய்கையில்,

"மல்லிகையே வெண்சங்கா வண்டே வான்கருப்பு
வில்லிகணை தெரிந்து மெய்காப்ப—முல்லைமலர்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது."

இப்பாடலைச் சொல்லும்போது, ஒட்டக்கூத்தப்புலவர் "மல்லிகை யரும்பைச் சங்காகவும், வண்டைச் சங்கூதுஞ் செய்பவனாகவும் கற்பித்தது உசிதமே; சங்கூதுவோன் அதன் அடியையன்றோ வாயில் வைத்து ஊதுவான்; அப்படி வண்டு அம்மலரின் அடிப்புறத்தி லூதுகின்றதில்லையே; ஆதலால் இந்த வருணனை குற்றம்" என்றார்.

உடனே கம்பநாடர் புகழேந்திப்புலவரை நோக்கிக் கண்சைகை செய்தனர். அதை யுணர்ந்துகொண்டு புகழேந்தியார் "கட்குடியனுக்குச் சூத்தென்றும் வாயென்றுந் தெரியுமா?" என்றார். அப்புறம் மேலுள்ள பாடல்களைச் சொல்லிப் பொருள் சொல்லுகையில்,

"செப்பிளங் கொங்கைமீர் திங்கட் சுடர்பட்டுக்
கொப்புளங் கொண்ட குளிர்வானை—இப்பொழுதும்
மீன்பொதிந்து நின்ற விசும்பென்ப தென்கொலோ
தேன்பொதிந்த வாயாற் றெரிந்து."

இச்செய்யுளில் ஒட்டக்கூத்தர் "நீர் விண்மீன்கள் அடர்ந்த வானத்தைத் திங்கட் சுடர்பட்டுக் கொப்புளங்கொண்ட குளிர்வா னென்றது வியக்கத்தக்கதே; அக் கொப்புளத்தி லிருந்து சீயாவது சிலைநீராவது வடியுமே அது யாதோ" எனக் குசோத்தியமாய்க் கேட்க, புகழேந்தியானவர் "சீ வடியவில்லை, சிலைநீர் வடிவதுண்டு; அதுதான் பனி" என்றார். இவ்வாறு அவர் செய்யும் தூாட்சேபங்களுக்கெல்லாம் உத்தரஞ்சொல்லி அவர் நாவை யடக்கினர். கம்பநாடரும் ஒளவையாரும் புகழேந்திப்புலவர் சார்பாகவே சார்ந்து புகழ்ந்தார்கள்; அரசனும் புகழேந்திப்புலவருக்குத் தக்கபரிசு கொடுத்தனன்.

ஒளவையார் சோழனுடைய சபையினிடத்தில் தாம் இரண்டு கால்களையும் நீட்டிக்கொண்டு உட்கார்ந்திருப்பர். அக்காலையில் கம்பநாடர் அங்கு வருவாராயின் அவர்வரவைக் கண்ட மாத்திரத்தில் இரண்டு கால்களையும் முடக்குகிறதும், புகழேந்திப்புலவர் வருவதைக் கண்டால் வலக்காலையும், சோழனைக்கண்டால் இடக்காலையும் முடக்குகிறதும், ஒட்டக்கூத்தரைக் கண்டால் இரண்டு காலையும் நீட்டுகிறதும் வழக்கம். இதைப்பலமுறை ஒட்டக்கூத்தர் கண்டு, இந்த "ஒளவையானவள், சிறந்தவராகிய கம்பநாடருக்கும், உனக்கும் செய்யும் மரியாதையைப்பற்றி யான் ஒன்றும் சொல்லவில்லை; புகழேந்திக்கு வலக்கால் முடக்குகைக்கும், எனக்கு இருகாலையும் நீட்டியபடி யிருத்தலுக்கும் யாது காரணம்? இதை நீ ஒளவையினிடத்தில் கேட்டறி?" என்று சோழராசனிடத்தில் ஒட்டக்கூத்தர் சொல்லிக்கொண்டனர். அவ்வாறு ஒளவையார் செய்வதைச் சோழராசனுங்கண்டு "எம்பெருமாட்டியே! ஒட்டக்கூத்தரும், புகழேந்தியாரும் ஒத்த புலவர்களாயிருக்க, ஒட்டக்கூத்தருக்கு இரண்டு காலையும் நீட்டியபடி யிருத்த

னும், புகழேந்தியாருக்கு வலக்காலை முடக்கலும் உமக்குத் தகுதியன்றோ" என்றனன். "நான் செய்வது தகுதிதான்" என்று சொல்லி, இருவரையும் அழைத்துத் தமது கையால் சில குறிகளைக் காட்டி, "இவற்றிற் கிணங்க ஒரு வெண்பாச் செய்யாய்" என்று ஒட்டக்கூத்தரைக் கேட்க, உடனே,

"இவ்வளவு கண்ணினா ளிவ்வளவு சிற்றிடையாள்
இவ்வளவே போன்ற விளமுலையாள்—இவ்வளவு
நைந்த வுடலா ணலமேவு மன்மதன்கை
ஐந்துகணை யால்வாடு வாள்."

என்று பாடினர். அப்புறம் புகழேந்திப்புலவரைப் பார்க்க, அவர் உடனே,

"ஐய விடுமி னறநெறியைக் கைப்பிடிமின்
இவ்வளவே யாயினுநீ ரிட்டுண்மின்—தெய்வம்
ஒருவனே யென்றுள் ளுணரவல் லீரேல்
அருவினைக ளைந்து மறும்."

என்றுகூறினர். சோழனை நோக்கி "இவ்விருவருடைய கருத்தும் இன்னவென்று தெரிந்துகொண்டாயா?" என்று கூறி, மீண்டு அவ்விருவரையும் நோக்கி, "அறுசீர்க்கழிநெடிலா சிரியவிருத்தத்தி னிறுதியடியில் திங்களின் பெயரிலொன்று பொருள் வேற்றுமையாய் மூன்று முறைவரப் பாடுக?" என ஒட்டக்கூத்தர்,

"வெள்ளத் தடங்காச் சினவாளை வேலிக் கமுகின் மீதேறித்
துள்ளி முகிலைக் கிழித்துமழைத் துளியோ டிறங்குஞ் சோணாடா
கள்ளக் குறும்பர் குலமறுத்த கண்டா வண்டர் கோபாலா
பிள்ளை மதிகண் டெம்பேதை பெரிய மதியு மிழந்தாளே."

என்றனர். அதுகேட்ட ஔவையார் "ஒட்டா! ஒருமதி கெட்டாய்" என்றனர். உடனே புகழேந்திப்புலவர்,

"பங்கப் பழனத் துழுமுழவர் பலவின் கனியைப் பறித்ததென்று
சங்கிட் டெறியக் குரங்கிளநீர் தனைக்கொண் டெறியுந் தமிழ்நாடா
கொங்கைக் கமரா பதியளித்த கோவே ராச குலதிலகா [விழியே.
வெங்கட் பிறைக்குங் கரும்பிறைக்கு மெலிந்தப் பிறைக்கும் வேல்

என்றனர். "இக் கவிகளைக் கேட்டு இவ்விருவருக்குமுள்ள தாரதம்மியத்தை இன்னமும் நீ உணர்ந்திலையோ?" என்று சோழராஜனைக் கேட்டனர். அரசன் ஒன்றும் பேசாமலிருந்து விட்டனன். ஒட்டக்கூத்தர் இப்படித் தமக்கு நேரிட்ட அவமானத்தைப் பெரிதா எண்ணாமல், புகழேந்திப்புலவருடைய கல்வித்திறத்தைத் தமக்குள்ளே வியந்துகொண்டு, ஒருநாள் இராத்திரி படுத்திருக்கையில் அவர் மனைவி "போசனகாலமாகின்றது" என்றாள். "ஆயினும் நான் புசியேன்" என்றார். "சர்க்கரை சேர்ந்த பால் கொண்டுவருகின்றேன்" என்றாள், அதுகேட்டு, "சர்க்கரையோடு சேர்ந்த பாலன்று, புகழேந்தி செய்த நளவெண்பாவில் நாலைந்து பாடலை எடுத்துப் பிழிந்து அந்த இரசத்தைக் கொண்டுவந்தாலும் உண்ணேன் போ" என்றார். தம்மையும், தம்முடைய பாடலையும் வியக்காமையால் ஒட்டக்கூத்தரைக் கொல்ல வெண்ணித் தற்செயலாய் அன்றுவந்து ஒளித்திருந்த புகழேந்திப்புலவர், பொருக்கென வெளிப்பட்டு நின்று, அவர்பாற் கொண்ட பகைமையைவிட்டுச் சிநேகத்தைப் பாராட்ட, அவரும் மனமொத்து நட்புப் பாராட்டினர். குலோத்துங்கச்சோழனும் இச்செய்தி கேட்டு மனமகிழ்ந்து அவ்விருவரையு நோக்கி, நெய்த்தானமென்னுந் தலத்தி லெழுந்தருளியிராநின்ற சிவமூர்த்திமேல் நெய்த்தானத்தானைச் சேவித்தே என்பது கடைசியாக எண்சீர்க்கழிநெடில் வண்ணவிருத்தம் பாடும்படிக் கேட்க,

ஒட்டக்கூத்தர்.

"விக்கா வக்கா வித்தா விப்போய்
விட்டா னட்டார் சுட்டேர் புக்கார்
இக்கா யத்தா சைப்பா டற்றே
யிற்றே டிப்போய் வைப்பீர் நிற்பீர்
அக்கா டப்பேய் தொக்கா டச்சு
ழப்பா டத்தீ வெப்பா டப்பூண்
டெக்கா டக்கா னத்தா டப்போ
டெய்த்தா னத்தா னைச்சே வித்தே."

என்று பாடினர்.

புகழேந்திப்புலவர்.

"தூற்கோ விப்பூ சற்பா சத்தே
தப்பா மற்சா கைக்கே நிற்பீர்
மூற்கோ விக்கோ விப்பா வித்தே
மூட்டா மற்பூ சித்தே நிற்பீர்
வற்றா தெட்டோ டைப்பா ரைச்சேல்
மைப்பூ கத்தே றித்தா விப்போய்
செற்றா ரூற்றா லைப்பா கிற்சேர்
டெய்த்தா னத்தா னைச்சே வித்தே.

என்று பாடினர். மற்றொருநாள் திருக்குறுங்குடி யென்னுந் தலத்தில் எழுந்தருளியிராநின்ற எம்பெருமான்மேல் வல்லோசையுள்ள கட்டளைக்கலித்துறை பாடும்படி அரசன் கேட்டுக்கொள்ள,

ஒட்டக்கூத்தர்.

"திக்குளெட் டுக்கயந் தூக்கமுற் றுத்திடுக் கிட்டலற
மைக்கடற் குட்சரந் தைக்கவிட் டோற்கிட மாமதூ

இக்குமுற் றிக்கணுச் சற்றுவிட் டுத்தெறித் திட்டமுத்தைக்
கொக்குமொக் கிக்கக்கி விக்குமச் சோலைக் குறுங்குடியே."

என்றொரு பாட்டும்,

புகழேந்திப்புலவர்.

"எட்டெழுத் தைக்கருத் திற்குறித் திட்டுநித் தம்பரவும்
சிட்டர்கட் குத்திருப் பொற்பதத் தைச்சிறக் கத்தருமவ்
வட்டநெட் டைப்பணித் தற்பநித் தற்கிடம் வாரிசப்பொ
குட்டினத் தாக்குலந் தத்திமுத் தீனுங் குறுங்குடியே."

என்றொரு பாட்டும் பாடினார்கள். குலோத்துங்கச்சோழன் உள்ளங்களித்து இருவர்க்கும் சர்வோபசாரங்களையுஞ் சமமாகவே நடப்பித்துவந்தான். இவ்வாறு சோழநாட்டிலிருந்து காலங் கழித்தனர். இச்சரித்திரத்தைச் சென்னை இயற்றமிழாசிரியரும், எமக்குப் போதகாசிரியரும் ஆகிய அ. வீராசாமி செட்டியாரவர்கள் எழுதிய விநோதரசமஞ்சரி யென்னும் நூலில் சுருக்கமொழியக் காண்க.

ஸ்ரீ

# நளவெண்பா ஐயமறுப்பு.

வெண்பா பிண்டித்தபொருளாதலால் பிண்டித்தபொருளாகிய வெண்பாவைநூலுக்குச் சினையென்றல் பொருந்தாதென்னின், இங்கு நூல் வெண்பா தொக்க பலபொருளின் தொகுதியாதலால் வெண்பா நூற்குச் சினை எனப்படுமாகலானும் "பிண்டப் பெயரும் ஆயியல் திரியா, பண்டியன் மருங்கின் மரீஇய மரபே" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தில் "குப்பையைத் தலைக்கட் சிதரினான்" என உதாரணங்காட்டித் தலையைச் சினை என உரையாசிரியரை யுள்ளிட்ட மூவரும் கூறலானும், வேறுபல தொக்க பொருளினின்றும் பிரிக்கப்படுபொருளே பிண்டித்த பொருளெனப்படு மாதலால் வெண்பா வேறுபல பாத்தொகாத இந்நூலுக்குப் பிண்டிக்கப்படும் பொருளாகாமையானும் சினை என்றலே பொருந்தும்; பிண்டித்த வென்றல் குற்றமாமென்க. நன்னூலுரைகாரர் "நெல்லைப் பொலியின்கண் வாரினான்", எனக் கூறிய உதாரணத்தால் பிண்டித்த பொருள் இன்னதெனத் தெற்றென வுணர்க.

வெண்பா நூலுக்கு நியதிப்பெயரன்றாதலால் ஆகுபெயரென்னல் இழுக்கன்றோ எனின், நன்று சொன்னாய்; குருகை வெண்பா, புலியூர் வெண்பா, செந்தில்வேலர் வெண்பா, போரூர் வெண்பா என்பனவற்றில் வெண்பா என்பது தன் தொகுதியாகிய மாலையென்னும் நூலுக்கானதுபோல இங்கு வெண்பா காப்பியமாகிய நூலுக்கு ஆனமைபற்றி நியதிப்பெயரேயாம். வெண்பா என்த் தனித்து நூலு

க்கு வழங்காமையால் ஆகுபெய ராகாதெனின், மொழிகள் யாண்டுந் தனித்து வழங்குத லின்மையானும், பூ, இலை என்றாற் போல்வன ஆகுபெயராங்கால் பூநட்டுவாழும் இலைநட்டுவாழுமெனத் தொடர் மொழிபட்டே வருதலானும், இதுபற்றியே ஆகுபெயரைக் குறிப் பினு ளடக்குப ஆதலானும், நளவெண்பா எனத் தொடர்பட்டே வந்து ஆகுபெயராய்த் தன் பொருளைக் குறிப்பா னுணர்த்துமென்க.

வெண்பா நளனென்னும் அடையடுத்து நிற்றலால், நன்னூல் உரைகாரர் "திருவாசகம் உண்மையால்நோக்குவோர்க்கு அன்மொழித் தொகை ஆம்" என்றாற்போலக் கருவியாகுபெயரெனக் கொள்ளா மல் அன்மொழித்தொகை என்று கூறாமை இழுக்கன்றோ எனின், அறியாது வினவினை; அதனைக் கருவியாகக் கொள்ளின் திரு என் பது வாசகத்தா லுணர்த்தப்படும் ஆகுபெயர்ப் பொருளையே விசே டித்து நில்லாமையான் அன்மொழித்தொகையாவதல்லது ஆகுபெய ராகாது; நளனென்பது தான் ஒத்த வெண்பாவை விசேடிக்காமல் அவ்வெண்பாவா லுணர்த்தப்படும் ஆகுபெயர்ப் பொருளை விசே டித்து நிற்றலால் இது கருவியாகுபெயரும் ஆவதன்றி அன்மொழித் தொகை யாகாதென்க.

வெண்பாவாற் சமைந்த நூலெனக் கருவியாகுபெயராய்ப் பொருள் கொள்ளில் அதனது தலைமைக்கு இழுக்காதலில் தலைமை தோன்ற வெண்பாவையுடையதெனப் பொருள் கொள்ளுதலே சிறப் பெனின், இவ்வாறு கொள்ளின் வெண்பா உடைமையும், நூல் உடை யதும் ஆகல்வேண்டும்; ஆகவே வெண்பாவேறும், நூல்வேறுமெனப் படுதலானும், வெண்பா நூலாகிய முதற்பொருளின் ஏகதேசமாகிய

ஓருறுப்பெனப்படுதலானும், இது பல்வகைப் பாக்களா லமைந்ததா யின் அவ்வாறு வெண்பாவையுடையதெனக் கூறலாமாதலானும், நள வெண்பா என்பது அன்மொழித் தொகையென்பார் நளனது வெண் பாவையுடையதெனக் கூறாமல் வெண்பாவையுடையதெனக் கூறல் இழுக்கெல்லாவற்றுள்ளும் இழுக்கெனப்படுமாதலானும், நூலுக்குத் தலைமைதோன்றல் வேண்டி இலக்கணவரம்பைக் கடந்து பொருள் கோடல் மரபன்றாதலானும், யாம் கூறியதே சிறப்பன்றி அவ்வாறு பொருள் கூறல் சிறப்பன்றென மறுக்க.

வெண்பா சினையாகுபெயரெனவும், கருவியாகுபெயரெனவும் எடுத்துக் காட்டிய அவ்வாகுபெய ரிரண்டும் கடுத்தின்றான் என்றாற் போல விடாத ஆகுபெயராதலின் அவற்றிற்கு வெண்பாவை யுடைய நூல் எனவும், வெண்பாவாற் சமைந்த நூலெனவும் பொருள் கொள் ளாது நளனது நூலெனப் பொருள் கொள்ளுத லிழுக்காதலால் அவை யிழுக்கென்னலாமெனின்,

இவ்விரண் டாகுபெயர்க்கும் பொருள் இன்ன என அங்கு உரைத்திருக்கின்றமை உணரமாட்டாது கூறியதேயன்றி இக்கூற்று வேறன்று.

பொருள் வருமாறு: அவ்வெண்பாத் தன்றொகுதியாகிய நூலுக் காதலால் சினையாகுபெயராகிய காரணப்பெயராம்; தன்னாற் சமைந்த நூலுக்காதலால் கருவியாகுபெயராயிற் றெனினும் பொருந்தும். இவ் வாறு முறையே இடுகுறிப்பெயரும் காரணப்பெயருமாக நின்று புணர்ந்த நளவெண்பா என்பது பாரியது பாட்டென்றாற்போலத் தொக்குமொழிச் செய்தியென்னுஞ் செய்யுட்கிழமை யிரண்டனுள்

ஒன்றாகிய பொருட்பிறிதின் கிழமைப் பொருளுடையதாய்த் தொக்க ஆறாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். எனவே நளனது நூலென்பது பொருளாம். நளனது நூலென உரைத்த பொருள் முறையே இடுகுறிப்பெயரும், காரணப்பெயருமாக நின்ற நளவெண்பா என்பதற்கா? அவ்வெண்பா தன்றொகுதியாகிய நூலுக்காதலால் சினையாகுபெயரெனவும், வெண்பாவாற் சமைந்த நூலெனவும் உரைத்தனவற்றிற்கா? நன்காராய்ந்துணர்க.

காண்டமும் வெண்பாவுமாகிய இரண்டுறுப்படக்கிய பிண்டமாகிய நளவெண்பாவை ஒருறுப்பாகக்கூறி அதனது சிறப்புணர்த்தலாகாதோ எனின், நூல் உறுப்பெனப்பட்டபின் அந்த நூலுக்குச் சிறப்பு யாதெனவும், நூல் உறுப்பாயின் பிண்டமாகிய உறுப்பி யாதெனவும் கூறி மறுக்க.

பொற்றொடி என்றாற்போல ஓர் ஊரையே உணர்த்தும் கிள்ளிகுடி என்னும் விட்ட அன்மொழித்தொகையை "புள்ளியீற்றுமுன்" என்றாற்போல நளனது வெண்பாவினை யுடையதென முன்னின்ற அடைமொழி தானடுத்த மொழிப்பொருளை விசேடித்து நிற்பதை விடாது விரிக்கப்படும் விடாதவன்மொழித்தொகைக்குக் காட்டாகக்கூறுதல்இழுக்கெனின், கிள்ளிகுடி,பொற்றொடி என்பனவற்றில் முன்னின்ற அடைமொழிகள் தாம் அடுத்த குடி, தொடி என்னும் மொழிப்பொருளை விசேடித்துநில்லாவிடின்கிள்ளி குடி, பொற்றொடி என்பன அன்மொழித்தொகை என்னல் எவ்வாறுகூடும்? அன்றியும், கிள்ளிகுடி ஓர் ஊரையே உணர்த்தினமையால் விட்ட அன்மொழித்தொகை எனின் நளவெண்பா என்பது ஒரு நூலையே யுணர்த்தி

னமையால் இதுவும் விட்ட அன்மொழித்தொகையாகல் வேண்டும். இது நளனது வெண்பாவினை யுடையதென முன்னின்ற அடைமொழி தானடுத்த மொழிப்பொருளை விசேடித்து நிற்பதை விடாது விரிக்கப்படுதலால் விடாத அன்மொழித்தொகை எனின், கிள்ளியினது குடியையுடைய ஊர் என விரித்த வியையுமாதலால் அதுவும் விடாத அன்மொழித்தொகை யாகல்வேண்டும். இங்ஙனமாகக் கிள்ளிகுடி விட்ட அன்மொழித்தொகையும், நளவெண்பா விடாத அன்மொழித்தொகையும் ஆதலால் இவை தம்முள் ஒவ்வா எனக் கூறுங் கூற்று தாயை மலடியென்னலை ஒக்குமென்க.

பார்ப்பனச்சேரி என்றாற்போலக் கிள்ளிகுடி என்னும் ஊரில் அக்குடிமக்கள் வழிவந்தோர்கட்குச் சிறிது மியைபில்லாத பிறரும் வாழ்பவருளராகக் கிள்ளிகுடி என நிற்றல் தலைமைபற்றிய வழக்கெனக் கொள்ளல்போலத் தன்னோ டியைபில்லாத கடவுள் வாழ்த்துமுதலிய செய்யுளுளவாக நளவெண்பா வென்றது அவ்வழக்கெனக் கைக்கொள்ளாமல், கிள்ளிகுடி அக் குடிமக்களி லொவ்வொருவனும் கிள்ளிக் குரிமைப்பொருளாக நின்றாற்போலக் கடவுள்வாழ்த்தும், இருதுவருணனைச்செய்யுள் முதலியனவும் நளனுக்குரியவா மவ்வாறுநில்லாவென்று கூறுங் காண்டல் விரோதத்தைக் கைவிடாததென்னை?

நன்று, நன்று! நின் வினா; கிள்ளிகுடி என்றாற்போல ஆறும் வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைநிலைத் தொடராய் நின்றதெனிற்படுங்குற்றம யாதெனின், அது விரிந்த கிள்ளியினது குடியிருக்கும் ஊர் என்பதில் கிள்ளியினதென்னும் ஆறாவது குடியென்னும் பெயரைக் கொண்டதன்றி நளனது நூலென்

பதுபோல அக்குடியிருக்கும் ஊரைக் கொள்ளாமையாலும், அன்மொழித்தொகையில் முன்னின்ற அடைமொழி தானடுத்த மொழிப் பொருளை விசேடிப்பதன்றி அவ்வன்மொழித்தொகைப் பொருளை விசேடியாமையே அன்மொழித்தொகைக்கு இலக்கணமாதலாலும் எனக்கூறியதனால் நளவெண்பா என்பது அன்மொழித்தொகையாகா தென்பதற்குக் காரணங் கூறி, அக் குடிமக்களில் ஒவ்வொருவனும் கிள்ளிக்குரிமைப்பொருளாக நின்றாற்போல "கேசரிதுங்கூர" என்பதொழிய மற்ற நான்முகச் செய்யுள்களும் இருதுவருணனைச் செய்யுண் முதலியவைகளும் நளனுக்கு அவ்வாறு உரியனவாய் நில்லாமையாலும் எனக் கூறியதனால் கிள்ளியினதென்னும் ஆறாவதற்குக் குடி என்பது முடிக்குஞ்சொல்லாய் நின்றாற்போல நளனதென்னும் ஆறாவதற்கு வெண்பா என்பது அவ்வாறு முடிக்குஞ் சொல்லாய் நின்றில தென்பது விளங்கக் கூறியதேயன்றி நளவெண்பா என்பது தலைமை பற்றிய வழக்கன்றெனவும், தலைமைபற்றிய வழக்கெனவுங் கூறா திருக்கவும் தலைமைபற்றிய வழக்கெனல் எற்றுக்கு?

முன்னே கிள்ளிகுடி விட்ட அன்மொழித்தொகை, நளவெண்பா விடாத அன்மொழித்தொகை ஆதலால் இவை தம்முள் ஒவ்வா எனவும் கூறிமறுத்து, விட்ட அன்மொழித்தொகைக்கும், விடாத அன்மொழித்தொகைக்கும் தாம் கொண்ட இலக்கணத்துக்கே மாறாக மேலே குறித்தவாறுடன்பட்டுக் கூறல் காண்டல் விரோதமே யன்றோ? அன்றியும் மறுத்துடன்படலென ஓர் மதம் யாண்டுளதோ அறிந்திலம். தன்னில் வாழ்பவரிற் பார்ப்பார் சிலரும், மற்றை மூன்று வருணத்தாரும், ஏனைச் சங்கர வருணத்தாரும் பலருமாயிருக்க அச் சேரியைப் பார்ப்பனச்சேரி என்றது தலைமைபற்றிய வழக்கென்றல்

தக்கதே. நளவெண்பா என்னும் நூலில் கடவுள் வாழ்த்து முதலிய செய்யுள் சிலவும், நளனைக் குறித்தெழுந்த செய்யுள் பலவுமாதலால் எயினர்நாடு, உயிரீற்றுப்புணரிய லென்பனபோலப் பன்மைபற்றிய வழக்கென்னுது தலைமைபற்றிய வழக்கென்றது முற்றும் பொருத்த மில் கூற்றாய்க் காண்டல் விரோதத்தின்பாற் படுமென்க.

கிள்ளிகுடி வாழ்ச்சிக்கிழமை என்னும் பொருட் பிறிதின்கிழமைப் பொருளில்வந்த ஆறாம் வேற்றுமைத் தொகைநிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகையாகாதோ எனின், யானையது காடென்பதில் யானைக்குக் காடு வாழுமிடனானாற்போலக் கிள்ளிக்கு இடப் பெயரல்லாத குடிவாழுமிடனாகாதன்றே? ஆயின் கிள்ளியைக் குடி மக்களில் ஒருவனாகக் கொள்ளல்வேண்டும். குடிக்குச் சிறப்புத்தோன் றக் கிள்ளியினது குடி எனக் கூறியதாதலால் தலைவனை அவர்களி லொருவனாகக் கொள்ளல் முறையன்று; ஆதலால், கொள்ளலாகா தென்க. அது கிள்ளியினது குடியிருக்கு மூரென விரிக்கப்படுதலால் கிள்ளியினது என்னும் ஆறாவது ஊரென்னும் பெயரைக் கொண்ட தாகக் கொள்ளின், பொருள்வாழ்ச்சிக் கிழமை யென்னலாகாதோ எனின், அவ்வாறு கொள்ளின் குடி யாகுபெயராய் ஊரை உணர்த் தியதெனக் கொள்ளல்வேண்டு மாதலாலும், அன்மொழித்தொகை யில் முன்னின்று அடைமொழி தானடுத்த மொழிப்பொருளை விசே டிக்குமேயன்றி அன்மொழித்தொகையா லுணர்த்தப்படும் பொருளை விசேடியாதாதலாலும் என்னலாகாதென்க.

நளவெண்பா தெரிந்துமொழிச் செய்தியின் பகுப்பாய்த் தன் னாலும் தன்மேற் பிறராலு மாக்கப்படு நூலென இருவகைப்பட்டு

நின்ற செய்யுட்கிழமை யென்னும் பொருட்பிறிதின் கிழமைப் பொருளில் வந்த ஆறும் வேற்றுமைத் தொகைநிலைக்களத்துப் பிறந்த விடாதன்மொழித்தொகை என்றால் என்னை? தன்னாலும் அதன் மேற் பிறராலு மாக்கப்படு நூலென விருவகைப்பட்டு நின்ற செய்யுட்கிழமை யென்னும் பொருட்பிறிதின் கிழமைப்பொருளில் வந்தது ஆறும் வேற்றுமையாயின், அவ்வாறாவதற்குப் பயனிலை வெண்பாவன்றே யாகல்வேண்டு மாதலாலும், வெண்பா பயனிலை யாயினபோது அவ்வெண்பாவே மேற்கூறிய இருவகையோராலும் ஆக்கப்படுநூலுள் ஒன்றை யுணர்த்தியதாகல் வேண்டுமாதலாலும், அங்ஙனம் உணர்த்தியபோது அது யாம் கூறிய ஆகுபெய ரிரண்டனுள் ஒன்றாதல்வேண்டு மாதலாலும், இங்ஙனமாகவே நளவெண்பா இரண்டு சொல்தொக்க தொகையாற்றலால் பிறிதுபொரு ளுணர்த்தும் அன்மொழித்தொகை யென்னல் எவ்வாறியையும்? அன்றியும், அந்நளவெண்பா என்பது தன்னாலும் பிறராலு மாக்கப்படும் நூலென இருவகைப்பட்டு நின்ற செய்யுட்கிழமைப்பொருளில் வந்த ஆறும் வேற்றுமைத் தொகையாயின் பின் அத் தொகைநிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகைப்பெயரால் உணர்த்தப்படுவது யாது? ஆதலால் குற்றமென்க.

ஸ்ரீ

# நளவெண்பா விபரீதகுண திரஸ்காரம்.

பிண்டப்பொருள் ஒன்று பலகுழீஇயது எனவும், வேறு பலகுழீஇயது எனவும் இருவகைப்படுமென்றோ! வேறு பலதொக்க பொருளினின்றும் பிரிக்கப்படுபொருளே பிண்டித்தபொருளென்றது என்னை? நளவெண்பா ஐயமறுப்பில் எழுதியதை நன்காய்தலின்றி வினவிய வினாவேயன்றி இது வேறன்று. "குப்பையைத் தலைக்கட்சிதறினான்" என்பதில் குப்பை ஒன்று பலகுழீயதே ஆயினும் அக்குப்பையைத் தலை, இடை, அடி என்னும் மூன்று வகுப்புள்ள பொருளாகக் கொண்டு தலைக்கட்சிதறினானென உதாரணங் காட்டினர் உரையாசிரியரை யுள்ளிட்ட மூவரும். இவ்வாறு கூறினாற்றான் குப்பை பிண்டமெனப்படும். நெற்குப்பை நெல்லை யுடையதாயிருக்கிறதென்னின் நளவெண்பா வென்னும் நூல் வெண்பாவை யுடையதென்றாற்போல அறிவிலான் கூற்றாய் முடிவதுமன்றி நெற்குப்பை பிண்டமும், நெல் பிண்டித்த பொருளு மெனப்படா. நெற்குப்பையில் ஒரு படி நெல் வாரினான் என்பதில் நெற்குப்பை பலபடிநெல் தொக்க பொருளாகக் கொண்டமையால் அவ்விரண்டும் முறையே பிண்டமும் பிண்டித்த பொருளும் எனப்படும். இவ்வாறே நளவெண்பா முதற்பங்கு வருணனையுடையது, இடைப்பங்கும் கடைப்பங்கும் அவ்வளவு வருணனையுடையது அன்று என்னின் முறையே பிண்டமும், பிண்டித்த பொருள்களுமாம். எனவே ஒன்று பலகுழீஇயதும் வேறு பலதொக்க பொருளாகக் கொள்ளுங்கால் பிண்டமெனப்படுமாறுணர்க. மக்கட்கூட்டமென்பது ஒன்றுபல குழீஇயதாயினும் மக்கட்கூட்டத்தில்அந்தணரைப் பிரித்தானென்றபோது அதுவேறுபல குழீஇயதாதல்போலக் குப்பையைத் தலைக்கட் சிதறினானென்பார்க்கும் அது

வே கருத்தென்க. ஆதலால் நளவெண்பா என்னும் நூற்கு வெண்பா சினை என்றலே இலக்கண மாவதன்றி அந்நூலைப் பிண்டப்பொருளும், வெண்பாவைப் பிண்டித்த பொருளுமென்றலும், அது அன்மொழித்தொகைப்பெய ரென்பார்க்கு வெண்பாவை யுடையதென்பதும் இலக்கணமாகாமை யுணர்க. குப்பையைத் தலைக்கட்சிதறினான் என்பதில் உரைகாரர் மூவரும் தலையைமட்டுஞ் சினையெனக் கொண்டாரென்றார்; இடைக்கட்சிதறினான், அடிக்கட்சிதறினான் என்பார்களானால் இடையைமட்டுஞ் சினையெனக் கொண்டார், அடியைமட்டுஞ் சினையெனக் கொண்டார் என்பார்போலும். நன்று நன்று. பிறர் கூறுங் கூற்றானே அன்றிச் சிற்றறிவுடையோனும், கண்ணிலானும் காட்சியாலும், பரிசவுணர்ச்சியாலும் உணரக்கூடிய நெல்லிராசி பயற்றிராசியுமாகிய ஒன்று பலகுழீஇய பொருள் உண்டென்பதற்கு நனி உழந்து தொல்காப்பிய நன்னூற் சூத்திரங்கள் அங்குப் பல எடுத்துக் காட்டினர். இது மிகுதியும் வியக்கத்தக்கதே. இம்மட்டோ! நள வெண்பா என்பதற்கு வெண்பா பிண்டித்த பொருள் என்பது பொருந்தாதென்பதற்கு யாம் சில ஏதுக்கள் எடுத்துக்காட்டி, நெல்லைப் பொலியின்கண் வாரினான் என நன்னூலுரைகாரர் கூறிய உதாரணத்தால் பிண்டித்த பொருள் இன்னதெனத் தெற்றெனவுணர்க என்ன, "இவ்வுதாரணத்தை எடுத்துக்காட்டியது நெல் வேறு பலதொக்க பொருளென்றதற்கா! பிண்டித்தபொருள் என்றதற்கா எற்றுக்கு!" என்று வினவினர். இதென்ன விபரீதம்? குப்பையைத் தலைக்கட்சிதறினா னென்பதுபோலப் பொலியின்கண் நெல்லைவாரினானெனப் பிண்டப்பொருளை முன்னும், பிண்டித்த பொருளை அதன் பின்னுமாகக் கூறாமையால் நெல்லை அவ்வாறு விபரீதப்பட்டு வினவினார்போலும்.

ஆகுபெயர் குறிப்புகள் ஒன்றாயிருக்க, ஆகுபெயராய்த் தன் பொருளைக் குறிப்பாலுணர்த்திற் றென்றல் ஒன்றனை யொன்று பற்றுதலென்னுங் குற்றமாமன்றோ எனின், ஒன்றனை யொன்று பற்

றுதலென்னுங் குற்றம் இன்னதெனத் தெளியாமையால் கூறினதே அன்றி அது இங்குச் சிறிதும் பொருந்தாது. சொற்கள் யாவும் வெளிப்படையாலாயினும், குறிப்பினாலாயினும் பொருளை யுணர்த்து மென்பது "வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே," "குறிப் பிற் றருமொழி யல்லன வெளிப்படை" என்பவற்றா லுணர்க. அவ் விரண்டிடத்துமுள்ள ஐந்தாவதற்குப் பொருள் இன்னதென உணரின், வெண்பா ஆகுபெயராய்த் தன் பொருளைக் குறிப்பாலுணர்த் திற்றென்றல் குற்றமன்றென விளங்கும். குற்றமென விபரீதப் பட்டவர் ஆகுபெயர் குறிப்புளொன்றுயிருக்க என்றதற்குப் பொருள் ஆகுபெயர் குறிப்பாற் பொருளுணர்த்துஞ் சொற்களால் ஒன்று யிருக்க என்பதன்றே உய்த்துணர்க, உய்த்துணர்க.

ஒருசொல் யாண்டுந் தனித்து நில்லாதென்றதைச் சாமானியவிதி யென்றும், ஆகுபெயர் தொடர்பட்டே நிற்குமென்றதை மலடியைத் தாயென்றாற்போ லாகுமென்றுங் கூறிக் கண்டித்துவிட்டார். சொல் தனித்துநில்லாதென்பதைச் சாமானியவிதி யென்றாராயின் தனித்து நிற்குமென்பது விசேஷ விதியாகல்வேண்டும். அது யாண்டுக் கண் டனரோ? மாணாக்கர் உணர்தற்பொருட்டு இன்னது பெயர், இன் னது வினை, இன்னது இடை, இன்னது உரி என எழுந்த சூத்திரங் களைத் தனித்து நிற்குமென்னும் விசேடவிதியென விபரீதமாகக் கொண்டார்போலும். சொல் தனித்து நில்லாதென்பது தமிழிலக்கண நூலார்க்கே அன்று; பிறபாடை இலக்கண நூலார்க்கு முடன்பா டென வுணர்க.

"தொல்காப்பியம் வேற்றுமைமயங்கியலுள் ஆகுபெயர்க் கிலக் கணம் நான்கு சூத்திரத்தாற் கூறி, எச்சவியலுள் அன்மொழித்தொ கைக்கு இலக்கணங் கூறியிருத்தலையும், நன்னூலுள் அவ்வாறே பெய ரியலிலும் பொதுவியலிலும் கூறியிருத்தலையும் நோக்காது அன் மொழித்தொகையெல்லாம்ஆகுபெயரெனக்கூறுவார்கூற்றுயடங்கும்,

ஆதலால் அடைமொழி அடுத்த மொழியை விசேடியாதும் விசேடித்தும் நிற்பின் ஆகுபெயரெனவும் அன்மொழித்தொகைஎனவுங்கூறல் மிகைபடக் கூறலென்னுங் குற்றமாமென்க" என்றார். தொல்காப்பியர் முதலாயினார் எல்லாம் பலசூத்திரங்களாற் கூறியிருக்கவும் யாம் ஆகுபெயர்க்கும் அன்மொழித்தொகைக்கும் வேற்றுமை யின்னதெனக் கூறியது மிகைபடக்கூறலென்னுங் குற்றமானால் நன்னூலுரைகாரரும், சூத்திரவிருத்திகாரரும் கூறியிருத்தலையும் அவ்வாறு குற்றமெனக் கூறவேண்டுமன்றே; அவரிருவரும் இவர்காலத்திலில்லாமையால் இக்குற்றம் அவர்களைச்சாராதென்னுங் கருத்துப்போலும். மிகைபடக்கூறலை இவ்வாறு விபரீதமாகக் கோடற்கு ஏது யாதோ? இருது வருணனைச் செய்யுள்பல, நளனைக்குறித்தெழுந்த செய்யுள் சிலவென்றார். இதுவே காண்டல் விரோதம். நளவெண்பாவைக் கற்கும் சிறுவர்களே அதனை மறுப்பாராதலால் யாம் அதைக்குறித்தொன்றும் எழுதிலம். மூன்றும் பக்கத்தில் "யாதானும் ஒரு சொல் தனித்துநில்லா," "ஒருசொல் தனித்துநில்லா" என இரண்டிடத்துக் கூறினர். ஒருமை வினைமுதல் பன்மைவினை கொள்ளாதே எனின், செய்யுள்விகாரத்திலாவது, பால்வழுவமைதியிலாவது அடக்கி மறுப்பார்போலும். இம்மட்டோ! "வினையெச்சங்கட்குத் தனித்து இலக்கணங் கூறி," "ஆகுபெயர்க்குத் தனித்து இலக்கணங் கூறி," என்றார். பவணந்தி முனிவர் இவற்றிற்கு இலக்கணங் கூறுங்கால் தனியாயிருந்து கூறினரெனப் பொருளாகிறது. அங்ஙனங் கூறுதற்குக் காரணம் யாதோ! அறிந்திலம்.

ஸ்ரீ

# நளவெண்பா

## மூலமும் உரையும்.

நளன் - நிடதநாட்டரசனது இயற்பெயராகிய இடுகுறிப்பெயர்; வெண்பா - காரணப்பொதுப்பெயர். இதில் வெள் என்னும் பண்பு வெண்சோறென்பதிற் போல வேற்றுத்தளை விரவாப்பெருமையாகிய கலப்பின்மை யுணர்த்தி, தொடைபாவி நடத்தற்காரணத்தால் வந்த பா வென்னும் பெயர்க்கு அடையாய் நின்றது; பா-முதனிலைத் தொழிலாகு பெயராகிய காரணப்பெயர். எனவே வெண்பா என்பது தூய்மையாகிய பா என்றதாயிற்று. இதுபற்றியே பாட்டியலாரும் இப்பாவை அந்தணர்சாதியைச் சாரவைத்ததென்க. இது குறள்வெண்பா, நேரிசைவெண்பா, இன்னிசைவெண்பா, பஃறொடைவெண்பா, நேரிசைச்சிந்தியல்வெண்பா, இன்னிசைச்சிந்தியல்வெண்பா, சவலைவெண்பா என்னும் ஏழனுள் குறள்வெண்பாப்போல இரண்டடியும், சிந்தியல் வெண்பாப்போல மூன்றடியும் உடையதாகிக் குறைந்தும், பஃறொடை வெண்பாப்போல நான்கின்மிக்க பலவடியுடையதாகி மிக்கும் வாராமல் இயல்பாகிய நான்கடியே யுடையதாகிப் பெரும்பான்மையும் பயின்று வருந் தலைமைபற்றி நேரிசைவெண்பாவுக் காயிற்று. பிறிதினியைபு நீக்கிய நளனென்னும் விசேடணமடுத்துநின்ற அவ்வெண்பாத் தன்றொகையாகிய நூலுக்காதலால் சினையாகுபெயராகிய காரணப்பெயராம்; தன்னாற்சமைந்த நூலுக்காதலால் கருவியாகுபெயராயிற்றெனினும் பொருந்தும். இவ்வாறு முறையே இடுகுறிப்பெயரும், காரணப்பெயருமாக நின்று புணர்ந்த நளவெண்பா என்பது பாரியதுபாட்டென்றாற்போலத் தெரிந்துமொழிச்செய்தி யென்னுஞ் செய்யுட்

கிழமையிரண்டனுள் ஒன்றாகிய பொருட்பிறிதின்கிழமைப்பொருளை தாய்த் தொக்க ஆறாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். எனவே நளனது நூலென்பது பொருளாம். பிறிதினியைபு நீக்கிய விசேடணமாகிய நளனென்பது ஆகுபெயர்ப்பொருளாகிய நூலை விசேடித்து நிற்கின்றமையால் அன்மொழித்தொகையாகாது.

கிள்ளிகுடி என்றாற்போல ஆறாம்வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைநிலைத்தொடராய் நின்றதெனிற் படுங்குற்றம் யாதெனின், அது விரிந்த கிள்ளியினது குடியிருக்கும் ஊர் என்பதில் கிள்ளியினதென்னும் ஆறாவது குடியென்னும் பெயரைக் கொண்டதன்றி, நளனது நூலென்பதுபோல அக்குடியிருக்கும் ஊரைக் கொள்ளாமையாலும், அன்மொழித்தொகையில் முன்னின்ற அடைமொழி தானடுத்த மொழிப்பொருளை விசேடிப்பதன்றி அவ்வன்மொழித்தொகைப்பொருளை விசேடியாமையே அன்மொழித்தொகைக்கு இலக்கணமாதலாலும் குற்றமென்க. வெண்பா நூலுக்கு ஆதல் திருவேங்கடவெண்பா, புலியூர்வெண்பா என்பவற்றாலுணர்க.

---

# தற்சிறப்புப்பாயிரம்.

### நேரிசை வெண்பா.

நேசரிதங் கூர நிலவலயந் தாங்குநளன்
மாசரிதங் கூற வருந்துணையாப்—பேசரிய
மாமகிழ்மா றன்புகழாம் வண்டமிழ்வே தம்விரித்த
மாமகிழ்மா றன்றாண் மலர்.

(இதன் பதப்பொருள்.) நேசர்-(தன்னிடத்துப்) பகைத்தன்மையில்லாதவர், இதம் கூர - சுகமிகும்படி, நிலவலயம் - பூமிவட்டத்தை, தாங்கும் நளன் - சுமக்கின்ற நளமகாராசனது, மா சரிதம்-பெருமையாகிய

சரித்திரத்தை, கூற - (செய்யுளில் அமைத்துச்) சொல்லுதற்கு, பேசு அரிய - (செயல் குணங்களைச்) சொல்லுதலரிய, மா மகிழ்-திருமகள் களிக்கின்ற, மால்தன் - திருமாலினுடைய, புகழ் ஆம் - புகழாகிய, வள் தமிழ்வேதம் - வளமாகிய தமிழ்வேதத்தை, விரித்த - வெளியிட்டருளிய, மா மகிழ்-பெருமையமைந்த மகிழமலர்மாலையணிந்த, மாறன் தாள்மலர் - சடகோபமுனிவனுடைய திருவடித்தாமரைமலர்கள், துணையாக வரும் - உதவிசெய்வனவாகவரும், என்றவாறு.

(வி-ரை.) நேசரென்றது அவனது குடையின்கீழடங்கி வாழ்பவர்களை. நேசர்-பண்படியாகப் பிறந்த பல்லோர்படர்க்கைப்பெயர்; நேசம்-பகுதி, அர்-பல்லோர்படர்க்கைவிகுதி, பகுதியீற்று அம்முக்கேடு கடைக்குறை; இவ்வாறன்றிப் பகுதியீற்று மகரக்கேடு சந்தி, விகுதிமுதல் அகரக்கேடு முதற்குறை எனினும் பொருந்தும். நேசரிதங்கூர - திணைவழுவமைதி; [நன்னூற்பொதுவியற் சூத்திரம் உ௬.] நிலம்-தொழிலடியாகப் பிறந்தபெயர்; நில்-பகுதி, அம்-வினைமுதற்பொருண்மை விகுதி; பொருள் நிற்றலுடையதென்பது; நிலை, கிடக்கை என்பவற்றுக்கும், அசலை, அசலம் என்னும் வடமொழிகளுக்கும் இதுவே பொருள். நிலவலயம்-பண்புத்தற்கிழமைப்பொருளதாகிய ஆறும்வேற்றுமைத் தொகை நிலைத்தொடர். நிலவலயந் தாங்குதலாவது - குடிகளை அறத்தின்வழி ஒழுகுவித்துத் தண்ணளிசெய்து காத்தல். பண்பாகுபெயராய் நின்ற துணையென்னும் பெயரை வினைப்படுத்த ஆவென்னும் வினைமுதனிலைபுணர்ந்த துணையா-பகுதி, கு-சாரியை, அ-எதிர்கால வினையெச்சவிகுதி, உகரக்கேடு சந்தி; இதனீறு தொகுக்கப்பட்டது. பேசு-முதனிலைத் தொழிற்பெயர்; பேசரிய-எழுவாய்த் தொகாநிலைத்தொடர்; நான்காம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடருமாம்; பேச என்னும் செயவெனெச்சம் ஈறு தொகுக்கப்பட்டதெனக் கொண்டு வினையெச்சத் தொகாநிலைத்தொடரெனினு மொக்கும். மா என்னும் வடமொழி மூன்றனுள் இடையிலுள்ளது தற்சமம்; மஹா என்னும் ஆரியமொழிச் சிதைவாகிய மற்ற இரண்டும் தற்பவம். மகிழென்னுஞ் சொல் இரண்

டனுள் முன்னது வினைத்தொகை வினைச்சொல்; பின்னது மலருக்கு முதலாகுபெயராய், அது மாலைக்குக் கருவியாகுபெயராய் நின்றது. ()

மற்றொரு பிரதி.

ஈசன்

கரியா னனத்தான் கருதுபுகழ் பூண்ட
கரியா னனத்தான் கழல்.

(இ-ள்.) ஈசன் - சிவனும், கரியான்-திருமாலும், அன்னத்தான்-பிரமனும், கருது - மதிக்கின்ற, புகழ் பூண்ட - புகழை அணிந்த, கரி ஆனனத்தான் - யானைமுகக்கடவுளினது, கழல் - பாதம், எ - று.

(வி-ரை.) அன்னத்தா னென்பதில் னகரம் தொகுத்தலாயிற்று. மூவருமென்னுஞ் செவ்வெண்ணின் தொகையோடு முற்றும்மை விகாரத்தால் தொக்கது.

ஆதித் தனிக்கோல மானு னடியவற்காச்
சோதித் திருத்தூணிற் றோன்றினான் - வேதத்தின்
முன்னின்றான் வேழ முதலே யெனவழைப்ப
என்னென்றா னெங்கட் கிறை.

(இ - ள்.) தனி - ஒப்பற்ற, ஆதிக்கோலம் ஆனான் - ஆதிவராக மானவனும், அடியவற்கு ஆக - அடியானாகிய பிரகலாதப் பெருமானுக்காக, சோதி - ஒளியமைந்த, திருத் தூணில் - திருத் தூணினிடத்து, தோன்றினான் - அவதரித்தானும், வேதத்தின்முன் - பிரணவத்தில், நின்றான் - பொருளாக நின்றானும், வேழம் - கஜேந்திரனென்னும் யானை, முதலே என அழைப்ப - முதற்கடவுளே யென்றழைக்க, என் என்றான் - ஏனென்று வந்தானுமாகிய திருமால், எங்கட்கு இறை - எங்களுக்குக் கடவுள், எ - று.

(வி - ரை.) பிரணவத்தின் விவரணம் வேதங்களாதலால் அது வேதத்தின்முன் எனப்பட்டது; இது ஆறும்வேற்றுமைத் தொகைப்

புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். முதல்-பண்பாகுபெயர். அழைப்ப - செயவென் வாய்பாட்டுக் காரணப்பொருட்டாகிய இறந்தகால வினையெச்சம்; அழை-பகுதி; ப்-சந்தி, ப்-விரித்தல் விகாரம், அ-வினையெச்சவிகுதி. என் - எவனென்னும் வினாவினைக் குறிப்பின் மரூஉ. கோலமானான், தோன்றினான், நின்றான், என்றான் என்னும் வினையாலணையும் பெயர்கள் திருமாலென்னும் ஒரு பொருண் மேல்வந்து இறையென்னும் ஒரு பயனிலை கொண்டன [நன்-பொது-கூ - சக.] ஆதிவராகமானது அண்டங்களைத் தாங்கும்படி அன்றியும், பூமியை எடுத்துச்சென்ற இரணியாட்சனைக் கொல்லும்படியும்; நரசிங்கமானது திரிலோகத்தையும் தன்னாணைக்குள் ளடங்கச்செய்து தன்னையே முதற்கடவுளாக வணங்கச்செய்து, இதற்கிணங்காத தன் குமாரனை வருத்தப்படுத்திய இரணியனைக் கொல்லும்படியும். தம்போலும் அடியாரைத் தம்மொடுபடுத்தி 'எங்கட்கு' என்றார். (உ)

## மற்றொரு பிரதி.

கலாப மயிலிருந்த பாகத்தார் கங்கை
உலாவு சடைமே லுறையும் - நிலாவை
வழியவார்த் தாலன்ன மாநீற்றார் நாகம்
கழியவார்த் தார்நமக்கோர் காப்பு.

(இ-ள்.) கலாபம் - தோகையையுடைய, மயில் இருந்த - மயில் போலும் பார்வதி தங்கிய, பாகத்தார் - இடப்பாகத்தை யுடையாரும்' கங்கை - கங்காநதி, உலாவு - திரிகின்ற, சடைமேல் உறையும் - சடையின்மேல் உள்ள, நிலாவை - சந்திரனொளியை, வழிய - (தமது திருமேனியில்) வழியும்படி, வார்த்தால் அன்ன - வார்த்தாற்போன்ற, மாநீற்றார் - பெருமையாகிய திருநீற்றை யணிந்தவரும், நாகம் - பாம்புகளை, கழிய - மிகுதியும், (அணிகளாக) ஆர்த்தார் - கட்டினவருமாகிய பரமசிவனார், நமக்கு ஓர்காப்பு - நமக்கு ஓரிரட்சகர், எ-று.

(வி-ரை.) காப்பு-தொழிலாகுபெயர். அன்ன-இடைச்சொலடியாகப்பிறந்த குறிப்புப் பெயரெச்சம்; அன்-பகுதி, ன்-சந்தி, அ-பெயரெச்ச விகுதி; அன்றென்னும் அவ்வினை முற்றிலும் னகரம் நித்தியமாய் வருதலால், அ-பகுதி என்னலாகாது. (௩)

### அவையடக்கம்.

வெந்தறுகண் வேழத்தை வேரிக் கமலத்தின்
தந்துவினாற் கட்டச் சமைவதொக்கும்-பைந்தொடையில்
தேன்பாடுந் தார்நளன்றன் றெய்வத் திருக்கதையை
யான்பாட லுற்ற விது.

(இ-ள்.) பைந்தொடையில் - (தொடுக்கப்பட்ட) பசுமையாகிய பூங்கொத்தில், தேன் பாடும் - வண்டுகள் பாடுகின்ற, தார் நளன்தன் - மாலையணிந்த நளராசனது, தெய்வம் - தெய்வத்தன்மையுள்ள, திருக் கதையை - அழகிய சரித்திரத்தை, யான் - கல்வியறிவில்லாத நான், பாடல் உற்ற - பாடத்தொடங்கிய, இது - இம்முயற்சி, வெம் தறுகண் - (போரில்) கொடிய அஞ்சாமைத்தன்மையையுடைய, வேழத்தை - யானையை, வேரி - மணமமைந்த, கமலத்தின் - தாமரையினது, தந்துவினால் - நூலினால், கட்ட - (தனக்கு அடங்கும்படி) கட்டுதற்கு, சமைவது - (அறிவில்லாதான்) ஆயத்தப்படுவதை, ஒக்கும் - ஒத்திருக்கும், எ - று.

(வி-ரை.) உவமையால் கல்வியறிவில்லாமை *பொருளுக்குத் தந்துரைக்கப்பட்டது. இதுவென்னுஞ் சுட்டுப்பெயர் பாடலுற்றதைச்சுட்டி நின்றதாதலால் உற்ற என்னும் காரியப்பொருட்டாகிய பெயரெச்சம் இதுவென்னுஞ் செயற்பெயர் கொண்டு முடிந்தது. நூல் செய்யப்புகுவோர்

---

* பொருளுக்கு - உபமேயத்துக்கு. உபமேயம், பொருள், புகழ்பொருள், வர்ணியம், புகழ்வுளி என்பன ஒருபொருட்சொற்கள். உபமானம், அல்பொருள், அவர்ணியம், புனைவிலி என்பன ஒருபொருட் சொற்கள்.

கல்வியறிவொழுக்க முதலியவற்றால் குறைவின்றி நிறைந்தோர் கூடிய சபைக்குத் தாம் அடங்கி ஒழுகுதலைக் கூறுதல் மரபாதலால் புகழேந்திலக ராகிய ஆசிரியர் இவ்வாறு தம்மை யிழித்துக் கூறிக்கொண்டனர். தந்து: வடமொழிக்குற்றியலுகரமாதலால் தந்துவினுடைய [நன்-உயி-சூ-கஉ] பொதுவிதியை ஏற்று, உகரங்கெடாமல் வகரவுடம்படுமெய் பெற்றது. தொடை-தொழிலடியாகப் பிறந்தபெயர்; தொடு-பகுதி, ஐ-வினைமுதற்பொருண்மை விகுதி, உகரக்கேடு சந்தி; பொருள் பூ ஒன்றுடனொன்று இணைதலுடையதென்பது; தொடுக்கப்படுவதெனப் பொருள் கொண்டு, ஐ - செயப்படுபொருண்மை விகுதியெனின் பூங்கொத்து இயற்கைப்பொருளாதலால் என்னல் கூடாதென்க. பசுமணென்பதிற்போலப் பைந்தொடை யென்பதில் பசுமை ஈரம் புலராமையை யுணர்த்திற்று; பசுமை தொடையென்னும் வருமொழிப்புணர்ச்சியில் மையீறு கெட்டு, அடி அகரம் ஐயாகி, "இனையவும்" என்பதனால் சகரவுகரங் கெட்டு, இனவெழுத்து மிகுந்தது. தொடையென்பதற்குச் செய்யுளெனப் பொருள் கூறின், பாடலென்பதனால் அது நன்குவிளங்குதலால் கூறலாகாதென்க. கதைக்குத் தெய்வத்தன்மையாவது இவனது சரித்திரத்தைப் படிப்பவரைத் தீமையைத் தருங் கலிபுருஷன் அணுகாமையும், படியாதமுன் அணுகியிருப்பினும் படித்தபின் அவரை விட்டொழிதலுமாம். கமலத்தின்றந்து-உறுப்புத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். (௪)

தற்சிறப்புப்பாயிர முற்றிற்று.

---

நூல்.

# சுயம்வரகாண்டம்.

சுயம் - பெயர்ச்சொல், வரம் - தொழிற்பெயர்ச்சொல், காண்டம்-பெயர்ச்சொல்; (இம்மூன்றும் வடமொழி;) என மூன்றுசொல் இரண்டு

சந்தியாய், முன்னது ஏழாம்வேற்றுமைத் தொகைநிலைச்சந்தியும், பின்னது ஆறாம்வேற்றுமைத் தொகைநிலைச் சந்தியுமாம். பொருள் ஒரு கன்னிகை தானாக ஒரு கணவனைக் கோரிக்கொள்ளுதலினது செய்திக் கூட்டத்தை யுணர்த்துவதென்பது. எனவே சுயம்வரகாண்டமென்பது ஆறாம்வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயராயிற்று. கன்னிகையென்றது தமயந்தியை. கணவனென்றது நளராசனை. காண்டம்-முதனிலைத் தொழிற்பெயரெனலும், சண்டை, கூத்தென்பனபோலாமையால் முதனிலைபெறாத் தொழிற்பெயரெனலும் பெருங்குற்றமே ஆம்.

பாண்டவரின் முன்றோன்றல் பார்முழுதுந் தோற்றொருநாள்
ஆண்டகையே தூதுவனாய்ச் சென்றவனி - வேண்ட
மறுத்தா னிருந்தானை மண்ணொடும்போய் மாளப்
பொறுத்தா னிருந்தான் புலர்ந்து.

(இ-ள்.) பாண்டவரில் - பாண்டுபுத்திரர்களில், முன் தோன்றல்- முதற்புத்திரனாகிய தருமராசன், பார் முழுதும் தோற்று - தன்னுடை முழுமையும் (சூதாட்டத்தில்) தோற்று, ஆண்டகையே - ஆடவர்களில் பெருமையுடையோனாகிய கண்ணபிரானே, தூதுவனாய்ச் சென்று - தூதனாகச் சென்று, அவனி வேண்ட - பூமியை வேண்டிக்கேட்க, மறுத்தான் - (கொடேனென்று) மறுத்த துரியோதனன், இரு தானையொடும் - பெருஞ்சேனையோடும், மண்ணொடும் போய்மாள-பூமியோடும் போய் இறக்கும்படி, பொறுத்தான் - பொறுத்தவனாகி, ஒருநாள் புலர்ந்து இருந்தான் - ஒருநாள் வாடியிருந்தனன், எ-று.

(வி-ரை.) கண்ணபிரான் தூதுவனாகச் சென்று அவனிவேண்டத் துரியோதனன் மறுத்ததும், பொறுத்ததும் வனவாசத்துக்கும், அஞ்ஞாதவாசத்துக்கும் பிற்பட்டனவாயினும், இங்குக் கூறியது தருமராசனது பொறுமையை விளக்குதற்கென்க. தோன்றல் - தொழிலாகு

பெயர். மண் கருவியாகுபெயர். மண்ணொடும்போய் மாளுதல் - பூமியின் சுதந்தரம் நீங்கி இறத்தல். கருமையின் விகாரமொழியாகிய காரென்பது போன்ற பருமையின் விகாரமொழியாகிய பார் பண்பாகுபெயர். ஏ-உயர்வுசிறப்பு. ஒடு வருமைத் தானை யென்பதனோடுங் கூட்டுக. உம்மை தொகுக்கப்பட்டது. மறுத்தான்-இறந்தகாலவினையாலணையும் பெயர். பொறுத்தான் - வினைமுற்று வினையெச்சமாய் நின்றது. ஆண்டகை - ஏழாம் வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். ஆய்-ஆக என்பதன் திரிபு. முழுது-பண்புப்பெயர்; முழு-பகுதி, து-பகுதிப்பொருள் விகுதி. (க)

நாட்டின்கண் வாழ்வைத் துறந்துபோய் நான்மறையோர்
ஈட்டங்கள் சூழ விருந்தானைக் - காட்டில்
பெருந்தகையைக் கண்டார்கள் பேரெழிற்றோள் வேந்தர்
வருந்தகைய ரெல்லாரும் வந்து.

(இ-ள்.) பேர் எழில் - மிகுந்த அழகமைந்த, தோள் வேந்தர் - தோள்களையுடைய அரசர்களில், வரும் - வந்து காணுதற்குரிய, தகையர் எல்லாரும் - தன்மையுடையாராகிய யாவரும், நாட்டின்கண் - இந்திரப்பிரஸ்தத்தில், வாழ்வை - சுகித்திருத்தலை, துறந்து - பற்றறநீக்கி, காட்டில்போய் - காமியவனத்திற் சென்று, நால் மறையோர் - நான்கு வேதங்களையு முற்றவுணர்ந்த முனிவர்களது, ஈட்டங்கள் சூழ கூட்டங்கள் (தன்னைச்) சூழும்படி, இருந்தானை-வீற்றிருந்தவனை, பெருந்தகையை வந்து கண்டார்கள் - பெருங்குணத்தையுடைய தருமபுத்திரனை வந்து கண்டு வினவினார்கள், எ-று.

(வி-ரை.) மறை - தொழிலடியாகப் பிறந்த பெயர்; ஓதல், ஓதுவித்தல், கேட்டல் மூன்றனுள் ஓதுவித்தல் அரசர்க்கும், அதனோடு ஓதல் வைசியர்க்கும், அவ்விரண்டனோடு கேட்டல் சூத்திரர்க்கும் மறுத்தற்குரியதென்னும் பொருளில் மறு-பகுதி, ஐ-செயப்படுபொருண்மைவிகுதி, உகரக்கேடு சந்தி; இங்ஙனமன்றி இறைவனுடைய குணம்

செயல் இவற்றின் பெருமையைக் கூடமாகச் சொல்வதென்னும் பொருளில் தொழிலாகுபெயர் ஈட்டங்கள்-தொழிலாகுபெயர்; ஈண்டு-பகுதி, அம்-புடைபெயர்ச்சி விகுதி, ணகரம் டகரமானது வலித்தல், உகரக்கேடு சந்தி, கள் - பன்மை விகுதி; அம் விகுதிப்புணர்ச்சியில் தேடு தேட்டமென நெடிற்றொடரும், உருகு உருக்கமென உயிர்த்தொடரும், ஒல்கு ஒற்கமெனை இடைத்தொடரும், நறு நற்றமென முற்றியலுகரமும் விகாரப்படும். மறையோரீட்டங்கள் - ஒன்றன் கூட்டத் தற்கிழமைப்பொருளதாகிய ஆறாம்வேற்றுமைத் தொகைநிலைத் தொடர். வந்து-இடவழுவமைதி; [நன்-பொது-சூ-கூ०.] பெருந்தகை-பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப் பெயர். இருந்தானை, பெருந்தகையை என ஒரு பொருண்மேல் வந்த பலபெயர்கள் கண்டார்களென்னும் ஒருவினை கொண்டன. (உ)

> கொற்றவேற் றானைக் குருநாடன் பாலணைந்தான்
> எற்றுநீர் ஞாலத் திருணீங்க - முற்றும்
> வழிமுறையே வந்த மறையெல்லாந் தந்தான்
> மொழிமுறையே கோத்த முனி.

(இ-ள்.) எற்றுநீர் - கடலாற்சூழப்பட்ட, ஞாலத்து - பூமியிலுள்ளாரது, இருள் நீங்க - அஞ்ஞானம் நீங்கும்படி, முற்றும் - முழுமையும், வழி - குருபரம்பரையில், முறையே வந்த - முறைபாகவே உபதேசிக்கப்பட்டு வந்த, மறை எல்லாம்-வேதங்களை யெல்லாம், தந்தான்-(தன் சீடருக்கு) உபதேசித்து, மொழி - வேதப்பொருளை, முறையே கோத்த - தவறில்லாமலே கோவைசெய்த, முனி - வியாசமுனிவன், கொற்றம் - வெற்றியாகிய, வேல் - படைகளையேந்திய, தானை-சேனைகளையுடைய, குருநாடன்பால் - குருநாட்டரசனாகிய தருமபுத்திரனிடத்து, அணைந்தான் - சேர்ந்தருளினான், எ - று.

(வி - ரை.) குருபரம்பரையில் முறையாகவே உபதேசிக்கப்பட்டு வந்ததாவது - இறைவன் அன்னவுருவமாய் உபதேசிக்கப் பிரமன் பெற்

றுத் தன் புத்திரனுகிய வசிட்டனுக்கும், அம்முனி தன் பேரனுகிய பராசரனுக்கும், பிதாவாகிய அவன் தனக்கும் உபதேசிக்க வந்ததென்பது. வேதப்பொருளை முறையாகக் கோவைசெய்ததாவது - சாத்துவிகம், இராசதம், தாமதமென்னும் குணமூன்றனுள் ஒவ்வொன்றுக்கும் அவ்வாறு புராணங்களாகச் செய்தமை. கொற்றம் - தொழிற்பெயர்; கொல்-பகுதி, து-சாரியை, அம்-புடைபெயர்ச்சிவிகுதி, லகர தகரங்கள் றகரமானதும், உகரக்கேடும் சந்தி. குருநாடு - குருவாகிய நாடெனவுரைக்கின் இருபெயரொட்டுப் பண்புத்தொகையாகவும், குருவினது நாடென உரைக்கின் இடப்பிறிதின்கிழமைப் பொருளதாகிய ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடராகவுங் கொள்க; குருவால் ஆளப்பட்ட தேசத்துக்குக் குருவென ஆரியத்தில் வழங்குகின்றமையால் குருநாடு இருபெயரொட்டென்றும். எற்றுநீர் - வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர்; இது தலைமைபற்றிய பெயர். எற்றுதல்-எறிதல். ஞாலம்-இடவாகுபெயர். ஏ-இரண்டும் பிரிநிலை. மொழி-சொல்லாகுபெயர். இருள்-உவமையாகுபெயர். (௩)

மறைமுதல்வ நீயிங்கே வந்தருளப் பெற்றேன்
பிறவிப் பெருந்துயர மெல்லாம் - அறவே
பிழைத்தேன்யா னென்றானப் போராழி யானை
அழைத்தேவல் கொண்ட வரசு.

(இ-ள்.) அப்போர் ஆழியானை - அந்தப் பெரிய சுதரிசனமென்னும் சக்கரத்தைத் தாங்கிய கண்ணபிரானை, அழைத்து-(தன்னிடத்து) வரச்செய்து, ஏவல் கொண்ட அரசு - (தன்னால்) ஏவப்படுந்தொழிலைச் செய்யப்பெறும் அரசன், மறை முதல்வ - வேதங்களை யுணர்ந்த முதல்வனே, நீ இங்கு வந்தருளப்பெற்றேன் - நீ என்னிடம் எழுந்தருளுதலைப்பெற்றேன்; (ஆதலால்) பிறவி - இப்பிறப்பினது, பெருதுயரம் எல்லாம் - பெருந்துன்பங்களெல்லாம், அற-நீங்கும்படி, யான் பிழைத்தேன் என்றான் - நான் தப்பினேனென்று சொல்லினான், எ - று.

(வி-ரை.) இங்கென்பது தன்மை முன்னிலைகளுக்குப் பொதுவாயினும் இங்கே தன்மையிடத்ததாய் நின்றது. வந்தருள என்னும் செய வெனெச்சம் தொழிற்பெயர்ப் பொருள்பட நின்றது. பிறவிப் பெருந்துயரம் தன்னைப்பற்றி வருவதும், பிறரைப்பற்றி வருவதும், தெய்வத்தைப்பற்றி வருவதுமென மூவகைப்படும். அ என்னுஞ்சுட்டு அசுரர் முதலிய தீயோரைக் காய்ந்து, தேவர் முதலிய நல்லோரைக்காத்த லென்னும் உயர்வைச் சுட்டியது. ஏவல் - தன்னாலாம் காரியமாகிய தொழிலை உணர்த்தலால் காரணவாகுபெயர். ஏ இரண்டில் முன்னது அசை;பின்னது தேற்றம். ஏவல்கொண்ட என்பதில் நிலைமொழி அஃறிணைப் பெயராதலாலும், இரண்டாம் வேற்றுமைத் தொகையாதலாலும், நன் - மெய் - கூ - உச - இன்படி திரியாமல், உருபு - கூ - கசு-இன்படி விகாரத்தியல்பாயிற்று. கொண்டவென்பது சாதுசனங்களிடத்து இறைவன் போருளுடையானாய் வேண்டுவனவற்றை வேண்டியவாறு செய்பவனென்னும் தெளிவுபற்றிக் கொள்ளுமென்னும் எதிர்காலம் இறந்த காலமாக வந்த காலவழுவமைதி. அரசு-பண்பாகுபெயர். (ச)

மெய்த்திருவந் துற்றாலும் வெந்துயர்வந் துற்றாலும்
ஒத்திருக்கு முள்ளத் துரவோனை - சித்தம்
வருந்தியவா றென்னென்றான் மாமறையா லுள்ளம்
திருந்தியவா மெய்த்தவத்தோன் றேர்ந்து.

(இ-ள்.) மாமறையால்-பெருமையாகிய வேதப்பொருளால், உள்ளம் திருந்தி - மனம் திருத்தமடைந்து, அவாம் - (பிறரால்) விரும்பப்படுகின்ற, மெய்த்தவத்தோன்-உண்மையாகிய தவத்தையுடைய வியாசமுனிவன், தேர்ந்து - தெரிந்துகொண்டு, மெய்த்திரு - உண்மையாகிய பொருட்செல்வம், வந்து உற்றாலும்-வந்து அடைந்தாலும், வெம் துயர்-கொடுமையாகிய வறுமை, வந்து உற்றாலும் - வந்து அடைந்தாலும், ஒத்திருக்கும் - (வேறுபடாமல்) ஒருதன்மைப்பட்டிருக்கும், உள்ள

த்து - மனத்தையுடைய, உரவோனே-அறிவுள்ளானே, சித்தம் - மனம், வருந்திய ஆறு - வருந்தியவிதம், என் என்றான் - யாதென்று கேட்டருளினான், எ-று.

(வி-ரை.) உண்மையாகிய வழியில் தேடியபொருளை மெய்த்திருவென்றது மரபுவழுவமைதி [நன் - பொது-சூ-நிஎ.] துயரை விளைக்கும் வறுமையைத் துயரென்றது காரணத்தைக் காரியமாகக் கூறுவதோர் உபசாரவழக்கு. பொருட்செல்வமும், வறுமையும் ஒருவன் வேண்டியபடி அடையப்படுவன அன்றி, முன்செய்வினையால் தாமே வந்து அடைவனவாதலால் 'திருவந்துற்றாலும்,துயர்வந்துற்றாலும்'என்றான். உள்ளம் ஒத்திருத்தலாவது - களித்தலும் துக்கித்தலும் இல்லாதிருத்தலென்பது. உரவோன் - பண்படியாகப் பிறந்த பெயர்ச்சொல்; உரம்-பகுதி, அன் - ஆண்பாற் படர்க்கை விகுதி, மகரக்கேடும் வகரத்தோற்றமும் சந்தி; விகுதி அ ஓ வானது, [நன் - பொது சூ-உ] இல் ஆகலுமென்ற உம்மையை ஆக்கவும்மையாக்கி, அதனாற் கொள்க. ஒத்திருக்கும்-எதிர்காலப்பெயரெச்சம்; ஒ-பகுதி, (இடைச்சொல்) து-சாரியை, தகரத்தோற்றமும் உகரக்கேடும் சந்தி, இரு - பகுதிப்பொருள் விகுதி, அனைத்துமொருபகுதி, கு-சாரியை, ககரத்தோற்றமும், உகரக்கேடும் சந்தி, உம்-எதிர்காலப் பெயரெச்சவிகுதி; முக்காலத்திலும் ஒத்தியல் பொருளை எதிர்காலத்தாற் கூறுதல் தமிழ்நூல் வழக்கு. திருந்தியென்னும் காரணப்பொருட்டாகிய இறந்தகாலவினையெச்சம் தவத்தோனென்னும் குறிப்புவினைப்பெயர்கொண்டது. திருந்தியவாம் என்பதைத் திருந்திய ஆம் எனப் பதம் பிரித்து, திருந்துப்படி ஆகின்ற என உரைக்கினும் பொருந்தும்; திருந்திய - காரியப்பொருட்டாகிய செய்யிய என்னும் வாய்பாட்டெதிர்கால வினையெச்சம். (௫)

தான் மனம் வருந்தியதற்குத் தருமபுத்திரன்
காரணங் கூறுகின்றான்.

அம்பொற் கயிலைக்கே யாகத் தரவணிவார்
தம்பொற் படைக்குத் தமியனு - எம்பியைமுன்

*போக்கினே னென்றுரைத்தான் பூதலத்து மீதலத்தும்*
*வாக்கினே ரில்லாத மன்.*

(இ-ள்.) பூதலத்தும் - பூமியிலும், மீதலத்தும் - சுவர்க்கத்திலும், வாக்கின் - வாக்கினால், நேர் - (தனக்கு) ஒப்பாவார், இல்லாத மன் - இல்லாத தருமபுத்திரன், அம் - அழகிய, பொன்-வெண்பொன்னாகிய, கயிலைக்கு - கைலைக்கு, ஆகத்து - மார்பில், அரவு அணிவார்தம் - பாம்பையணிந்த சிவனுருடைய, பொன் படைக்கு - அழகிய பாசுபதாஸ்திரத்தைப் பெறுதற்கு, தமியன் ஆக - தனியனாக, எம்பியை - தம்பியாகிய அருச்சுனனை, முன் போக்கினேன் என்று - முன்னால் அனுப்பினேனென்று, உரைத்தான் - சொல்லித் துன்பப்பட்டான், எ - று.

(வி-ரை.) அருச்சுனன் கைலைக்குச் சென்று சிவனை நோக்கித் தவஞ் செய்ததிலும், பாசுபதாஸ்திரம் பெற்றபின், இந்திரனுடைய வேண்டுகோளால் நிவாதகவசகாலகேயர், இரணியபுரவாசியரென்னும் அசுரரோடு போர்செய்து வெற்றிகொண்டதிலும், சுவர்க்கத்தில் வாசஞ் செய்ததிலும் நாள்பல சென்றமையால், கைலைக்குத் தவஞ்செய்யச் சென்றதொன்றுமே அறிந்துள்ள தருமபுத்திரன் இவ்வாறு கவலைப் படுவானாயினன். வெள்ளி-வெண்பொனாதலால் பொன்னெனப்பட்டது. கயிலை யென்பதில் ஐகாரத்துக்கு அகரமும் யகர இகரமும் போலியாக வந்தன. கு இரண்டனுள் முன்னது ஏழாம்வேற்றுமை யிடப்பொருளிலும், பின்னது நிமித்தகாரணகாரியப்பொருளிலும் வந்தன. அரவணிவாரென்பதில் நிலைமொழி அர என்றாவது, அரவு என்றாவது கொள்க [நன்-உயிர்-சூ-உஉ.] தமியனாக என்பதில் வினையெச்ச விகுதியாகிய அகரந்தொகுத்தல். தமியன்-பண்படியாகப் பிறந்தபெயர்; தமி-பகுதி (தனி), ய் - சந்தி, அன்-ஆண்பாற்படர்க்கைவிகுதி. எம்பி - பொருளடியாகப் பிறந்த பெயர்; யாம்-பகுதி, பி - இளையானென்னும் முறைப்பொருண்மை விகுதி, யா - இடப்பிறப்பாலொத்த எவ்வானது

குறுக்கல் விகாரம்; பகுதி இடவழுவமைதியும், பால்வழுவமைதியுமாம். இடைச்சொல் பெயரோடொக்குமாதலால் மன் பண்பாகுபெயராம். மீத்தலென்பதில் தகரம் சந்த இன்பப்பொருட்டுத் தொகுத்தல் பெற்றது. இன்னுருபு ஏதுப்பொருளது. வாக்கிலெனப் பிரித்து, பிறிதின் கிழமைப்பொருளுக்குத் தொழிலை இடனாக வேற்றுமைசெய்த ஏழாம் வேற்றுமைப் புணர்ச்சியாகவுங் கொள்க. நேர்-பண்பாகுபெயர். (சு)

வியாசமுனிவன் தருமபுத்திரனை நோக்கி, அருச்சுனனுடைய தனிமையைக் கருதி நீ கவலற்க என்றருளிச்செய்கின்றனன்.

காண்டா வனந்தீக் கடவுளுணக் கைக்கணையால்
நீண்ட முகிறடுத்து நின்றாற்கு—மீண்டமரர்
தாளிரண்டு நோவத் தனித்தனியே யோடியநாள்
தோளிரண்டு மன்றோ துணை.

(இ-ள்.) காண்டாவனம் - காண்டவவனத்தை, தீக்கடவுள் - அக்கினிதேவன், உண்ண - உண்ணும்படி, கைக்கணையால் - கையிற்கொண்ட அம்பினால்; நீண்ட முகில் தடுத்து - பரந்த மேகங்களை (பெய்யவொட்டாமல்) தடுத்து, நின்றாற்கு - நிலைபெயராத அருச்சுனனுக்கு, அமரர் - தேவர்கள், மீண்டு - முதுகுகாட்டி, தாள் இரண்டும் - இரண்டு கால்களும், நோவ - நோவும்படி, தனித்தனியே ஓடியநாள் - தனித்தனியாகவே ஓடியகாலத்தில், தோள் இரண்டும் அன்றோ - இரண்டு தோள்களும் அல்லவோ, துணை - துணையாயமைந்த பொருள், (ஆதலால் நீ கவலவேண்டுவதில்லை), எ-று.

(வி-ரை.) தந்துரைத்தது இசையெச்சம். காண்டவவனத்தை எரித்த செய்தி:—கண்ணபிரானும் அருச்சுனனும் கூடியிருந்தகாலத்தில் தீக்கடவுள் அந்தணனுருக்கொண்டுவந்து எனக்கு உணவு இடுகவென்று இரக்க, தருகிறோமென்னலும், நான் அக்கினி; இந்திரனுடைய வனமாகிய காண்டவவனத்தை எனக்குணவாகத் தருக என்றனன். அது கேட்டருளிய கண்ணபிரானுடைய கட்டளையால் அச்

கினி கொடுத்த குறைவுபடாத அம்புப்புட்டிலையும், வில்லையும், தேரையும், வெள்ளைக்குதிரைகளையும் பெற்றுக்கொண்ட அருச்சுனன் கண்ணபிரானோடு சென்று, அவ்வனத்தை எரிக்கையில் வந்தெதிர்த்த தேவர் முதலானோரைத் துரத்தி, இந்திரனால் ஏவப்பட்டுவந்த மேகங்கள் பெய்த மழையைச் சரக்கூடங்கட்டித் தடுத்தனனென்பது. காண்டாவனம் - காண்டவமென்னும் அரக்கனிருந்த வனம். தீக்கடவுள் - தீக்குக் கடவுள், தீயின்று கடவுள், தீயைக் காக்குங் கடவுள், தீயாகிய கடவுள் என நான்கு பொருளிில் மயங்கும். உண்ண, போவ - காரியப்பொருளவாகிய எதிர்காலவினையெச்சம். கைக்கணை பென்பதில் கை கையேடு, கைக்குடை யென்பவற்றிற்போலச் சிறுமையை யுணர்த்தும் இடைச்சொல்லெனக்கொண்டு சிறுகணையென உரைக்கினும் பொருந்தும். அமரர்-மரணமில்லாதவர். அடுக்குப் பன்மைப்பொருளது. தனித்தனி ஓடுதல் சிதறியோடுதல். ஏ - தேற்றம். தாள் - பண்பாகுபெயர். அன்று-ஒன்றன்படர்க்கைக் குறிப்புவினைமுற்றாயினும் உண்டென்பது போல இருதிணை ஐம்பால் மூவிடங்களிலும் வழங்கும் பொதுவினை; இங்குப் பொதுமைநீங்கிப் பலவின்படர்க்கையாய் நின்றது. ஓ - எதிர்மறை; இரண்டு எதிர்மறையால் கூறல் துணிவுப்பொருள் படுதற்கென்க. துணை-பண்பாகுபெயர். (எ)

தருமபுத்திரன், அருச்சுனன் தனியனாய்ச் சென்றதைக் குறித்துத் தான் கொண்ட கவலை ஒழிந்து, செல்வப்பொருளை யிழந்து காடடைந்ததற்குக் காரணம் வினவுவானாயினன்.

பேரரசு மெங்கள் பெருந்திருவுங் கைவிட்டுச்
சேர்வரிய வெங்கானஞ் சேர்தற்குக் - காரணந்தான்
யாதோவப் பாவென்றா னென்றுந்தன் வெண்குடைக்கீழ்த்
தீதோவப் பார்காத்த சேய்.

(இ-ள்.) என்றும் - எந்நாளிலும், தன் வெண்குடைக்கீழ் - தனது வெண்கொற்றக் குடையின்கீழ், தீது - தீச்செயல், ஓவ - ஒழியும்படி,

பார் காத்த - பூமியிலுள்ளாரைக் காத்த, சேய் - சுப்பிரமணியனை ஒத்த தருமபுத்திரன், அப்பா - தந்தையே, எங்கள் - எங்களுடைய, பேர் அரசு-பெருமையாகிய ஆளுகையையும், பெரு திருவும் - பெருமையாகிய செல்வத்தையும், கைவிட்டு - பற்றறவிட்டு, சேர்வு அரிய - (ஒருவர்) அடைதல்கூடாத, வெம் கானம் - கொடுமையாகிய காட்டில், சேர்தற்கு - அடைந்ததற்கு, காரணம் யாதோ என்றான் - எது எதுவோ என்று வினவினன், எ-று.

(வி-ரை.) அரசென்னுஞ் சாதிப் பண்புப்பெயர் தன் காரியமாகிய ஆளுகையை யுணர்த்தலால் காரணவாகுபெயர். தன் தம்பிமாரையும் தன்னொடுபடுத்தி 'எங்கள்' என்றான் உம்மைகளிரண்டும் உயர்வுசிறப்போடு எண்ணும்பொருளன. குவ்வுருபு நிமித்தகாரணகாரியப்பொருளது. ஓ - இரக்கப்பொருளது. தந்தையின் தந்தையாகிய வியாசமுனிவனை அப்பா என விளித்தது உபசாரம். என்று மென்பதில் உம்மை முற்றும்மையாதலால் எகரம் எஞ்சாமைப்பொருளது. என்று மென்றது அவனுண்ட நாள்களை. மையீறுகெட்டுநின்ற வெள்ளென்னும் பண்படியினீற்று ளகரம் ணகரமாகத் திரிந்தது [நன் - மெய் - சூ - ௩௩]. கருமை காரெனவிகாரப்பட்டாற்போலப் பருமை விகாரப்பட்ட பார் பண்பாகுபெயர். கட்டிளமையும், போரில் அஞ்சாதுநின்று பொருதலும்பற்றித் தருமபுத்திரனைச் 'சேய்' என்றார். தீது-பண்படியாகப் பிறந்தபெயர்; மையீறு கெட்டுநின்ற தீ - பகுதி, து - ஒன்றன் படர்க்கை விகுதி. ஒவ - காரியப்பொருட்டாகிய எதிர்காலச் செயவெனெச்சம்; ஓரெழுத்தொருமொழியாகிய ஓ - பகுதி, வ்-சந்தி, அ - எதிர்காலவினையெச்சவிகுதி. (அ)

கேடில் விழுச்செல்வங் கேடெய்து சூதாடல்
ஏடவிழ்தார் மன்னர்க் கியல்பேகாண் - வாடிக்
கலங்கலைநீ யென்றுரைத்தான் காமருவு நாடற்
கிலங்கலைநூன் மார்ப னெடுத்து.

(இ - ள்.) கா மருவு - பூஞ்சோலைகளால் சூழப்பட்ட, நாடற்கு-குருநாட்டரசனாகிய தருமபுத்திரனுக்கு, இலங்கு - விளங்குகின்ற, அலை - அசைகின்ற, நூல் மார்பன் - பூணுநூலணிந்த மார்பையுடையானாகிய வியாசமுனிவன், கேடு இல் - (இடையே) கெடுதலில்லாத, விழுச்செல்வம் - சிறந்த செல்வம், கேடு எய்து - அழிவை அடைதற்குக் காரணமாகிய, சூது ஆடல் - சூதாடுதல், ஏடு அவிழ் - இதழ்கள் விரிந்த, தார் - மலர்மாலையணிந்த, மன்னர்க்கு - அரசர்களுக்கு, இயல்பே - உரியதே வேறன்று; (ஆதலால்) நீ வாடி - நீ உடல் வாடும்படி, கலங்கல் என்று எடுத்து உரைத்தான்-மனங்கலங்குத லொழியென்று எடுத்துச் சொல்லினான், எ-று.

(வி - ரை.) கலங்கலென்னும் முன்னிலையொருமை ஏவல் எதிர்மறை வினைமுற்றில் ஐ சாரியை, வேண்டாவழி வந்தமையால் விரித்தல் விகாரம்; ஒரு சொல்லாகக்கொண்டு ஐ யீற்று வியங்கோளெனின் அச்சொல் ஐம்பால் மூவிடங்களினும் வாராமையால் குற்றமாம். கேடு-முதனிலை திரிந்த தொழிற்பெயர்; கெடு - பகுதி, தல் என்னும் புடைபெயர்ச்சி விகுதி புணர்ந்து கெட்டமாத்திரத்தில் முதல் நீண்டது. கேடில் செல்வம் - பால்வழுவமைதி. இல் செல்வம்-பண்புத்தொகை நிலைத்தொடர். விழுச்செல்வமென்பதும் அத்தொடர்; விரிந்தால் விழுப்பமாகிய செல்வமென விரியும். ஏ - தேற்றம். காண்-முன்னிலையொருமை அசைச்சொல். இலங்கு, அலை-வினைத்தொகையாகிய காலங்கரந்த பெயரெச்ச மிரண்டடுக்கி, நூலென்னும் வினைமுதற் பெயர் கொண்டன. (க)

கண்ணிழந்து மாயக் கவறுடிக் காவலர்தா
மண்ணிழந்து போந்து வனநண்ணி - விண்ணிழந்த
மின்போலு நூன்மார்பா மேதினியில் வேறுண்டோ
என்போ லுழந்தா ரிடர்.

(இ - ள்.) விண் இழந்த-மேகத்தினின்று நீங்கிய, மின்போலும்-மின்னலை யொக்கின்ற, நூல்மார்பா-பூணுநூலையணிந்த மார்புடையானே,

கண் இழந்து-(மேல்விளைவை) என்னுந்தலையிழந்து, மாயம்-வஞ்சனையாகிய, கவறு ஆடி - சூதாடி, காவலர் - அரசர், மண் இழந்து - தேசத்தையிழந்து, வனம்போந்து - காட்டிற்புகுந்து, நண்ணி - வசியாநின்று, என்போல - என்னைப்போல, இடர் உழந்தார் - துன்பத்தால் வருந்தினவர், மேதினியில்-பூமியில், வேறு உண்டோ - (என்னைவிட) வேறரசர் உளரோ, எ-று.

(வி-ரை.) கண் - முதனிலைத்தொழிற்பெயர்; விகுதிபெறின் கண்ணெனலாகும்; அறிவுக்கு உவமையாகுபெயராகக்கொண்டு, கண்ணிழந்தென்பதற்கு அறிவிழந்தென உரைப்பினும் பொருந்தும். கவறு - உருட்டுங்காய்; சூதாடு கருவிகளிற் சிறந்த கருவி இது ஆதலால் 'கவறாடி' என்றான். காவலர் - தொழிலடியாகப் பிறந்த பல்லோர் படர்க்கைப்பெயர்; காவல் - பகுதி. அர் - பல்லோர்படர்க்கைவிகுதி; காத்தலில் வல்லாரெனப் பொருள் கொள்ளின், பண்படியாகப் பிறந்த அப்பெயரென்க. மண் - கருவியாகுபெயர். போந்து - இறந்தகால வினையெச்சம்; போ-பகுதி (புகு என்பதன் மரூஉ), த்-சந்தி, த்-இறந்தகால இடைநிலை, உ - வினையெச்சவிகுதி, சந்தித்தகரம் நகரமானது மெலித்தல். நண்ணி-நண்ணாநின்றென்பதன் திரிபு. மேதினி-இறைவனால் கொலையுண்ட மது, கைடவரென்னும் அசுரருடைய மேதையாலானது. மேதை-நிணம். (௧௦)

சேமவேன் மன்னனுக்குச் செப்புவான் செங்கோ
னாமவேற் காளை நளனென்பான் - யாமத்
தொலிபாழி வைய மொருங்கிழப்பப் பண்டு
கலியால் விளைந்த கதை.

(இ-ள்.) சேமம் - (உலகத்துயிர்களுக்குக்) காவலாகிய, வேல் மன்னனுக்கு - வேலைத்தாங்கிய தருமராசனுக்கு, தனி - ஒப்பில்லாத, செங்கோல் - செங்கோலையும், நாம - அச்சத்தைத்தருகின்ற, வேல் காளை - வேலையுமுடைய இடபத்தை ஒத்தவனாகிய, நளன் என்பான்.

நளனென்று சிறப்பித்துச் சொல்லப்படுவோன், பண்டு-முற்காலத்தில், யாமத்து - இரவில், ஒலி - மிகுதியும் ஒலிக்கின்ற, ஆழி வையம் - கடலாற் சூழப்பட்ட பூமியை, ஒருங்கு இழப்ப - ஒருமிக்க இழக்கும்படி, கலியால் - கலிபுருஷனால், விளைந்த கதை - உண்டாகிய கதையை, செப்புவான் - சொல்லுவான், எ - று.

(வி - ரை.) பகைவர், கள்வர் முதலியோரால் துன்பம் நேரிடாதபடியும், தீயவழியில் செல்லாதபடியும் குடிகளைக் காத்தல் வேலைக்கொண்டாதலால் 'சேமவேல் மன்னன்' என்றார். செப்புவான் - ஆண்பாற் படர்க்கை எதிர்காலவினைமுற்றின் பகுதியாகிய செப்பு திசைச்சொல். காளை - உவமையாகுபெயர். ஆழி - ஆழுமுடையதென்னும் பொருளில் ஆழ் - பகுதி, இ - வினைமுதற்பொருண்மை விகுதி. இழப்ப - காரியப் பொருளதாகிய எதிர்காலவினையெச்சம்; இழ-பகுதி, ப்-சந்தி, ப்-விரித்தல் விகாரம், அ - எதிர்காலவினையெச்சவிகுதி; இவ்வாய்பாட்டெச்சத்துக்கு விகுதியே காலங்காட்டுவதாதலால் ப் - விரித்தல் விகாரமெனப் பட்டது. என்பான் - செயப்பாட்டு எதிர்காலவினையாலணையும்பெயர்; என்-பகுதி, அ சாரியை, ப்-சந்தி படு செயப்பாட்டு வினைப்பொருண்மைவிகுதி, அனைத்துமொருபகுதி, வ் - எதிர்கால இடைநிலை, ஆன் - ஆண்பாற்படர்க்கைவிகுதி; படுவிகுதி தொகுத்தலாய் நின்றது. (கக)

## நாட்டுச்சிறப்பு.

காமர் கயல்புரளக் காவி முகைநெகிழத்
தாமரையின் செந்தேன் றளையவிழப் - பூமடந்தை
தன்னாட்டம் போலுந் தகைமைத்தே சாகரஞ்சூழ்
நன்னாட்டின் முன்னாட்டு நாடு.

((இ - ள்.) சாகரம் சூழ்-கடலால் சூழப்பட்ட, நல் நாட்டில் - நன்மையாகிய பூமியில், முன் நாட்டு - முதலிலெடுத்துக் குறிக்கப்படும், நாடு- நிடதநாடு, காமர்-அழகிய, கயல் புரள - சேல்மீன்கள் புரளுதலா

லும், காவி முகை - நீலோற்பலங்களினது பேரரும்புகள், நெகிழ - மலர்தலாலும், தாமரையின் - தாமரைகளினது, தளை - பேரரும்புகளினின்றும், செந்தேன் அவிழ - செந்தேன் சிந்தலாலும், பூமடந்தைதன் - தாமரைமலரி லெழுந்தருளிய திருமகளுடைய, நாட்டம்போலும் - கண்ணை ஒத்திருக்கும், தகைத்து - பெருமையுடையது, எ - று.

(வி-ரை.) தளையென்னும் முதனிலைத்தொழிற்பெயர் தொழிலாகுபெயராய்ப் பேரரும்பை யுணர்த்திற்று. தேன் பேரரும்பினின்றும் சிந்துதல் அது மலர்ந்தபோதாதலால், தாமரைமலர் முகமாக, அம்முகத்திலுள்ள கண்ணின்பிறழ்ச்சிபோலக் கயலின் பிறழ்ச்சியும், கண்ணின் கருமைபோலக் காவிமலரின் கருமையும் உடைமையால் நாடு திருமகளினுடைய நாட்டம்போல்வதாயிற்று. காவி - பண்பாகுபெயர்; காவி - சாயம், அது இந்தக்கருமையின் மேலது; பற்காவியென்னும் வழக்கிலுங்காண்க. பூமடந்தையென்பதில் பூ-மலர்களிற்சிறந்த சிறப்புப் பற்றித் தாமரைமலருக்காயிற்று. நாட்டம் - தொழிலடியாகப்பிறந்த பெயர்; நாடு-பகுதி, அம்-கருவிப்பொருண்மைவிகுதி, பகுதி குற்றியலுகரமாதலால் அது இரட்டியதும், உகரக்கேடும் சந்தி; தொழிலாகுபெயருமாம். தகைத்து-பண்படியாகப்பிறந்த குறிப்புவினைமுற்று; தகைமை-பகுதி, த்-சந்தி, து-ஒன்றன்படர்க்கைவிகுதி. சாகரம் - சகரனுடைய புத்திரர்கள் அசுவமேதத்துக் குதிரையின் பின்செல்லுகையில், இந்திரன் அக்குதிரையை அவர்களுக்குத் தெரியாதபடி பாதலத்தில் கபிலமுனியின்பின் ஒளித்துவைத்தனன். அதைக் காணும்படி சாகரர் தோண்டியகாரணத்தால் வந்த தத்திதாந்த நாமபதம். ஏ-ஈற்றசை. ()

இதுமுதலிய ஐந்து பாட்டு நகரச்சிறப்பு.

கோதை மடவார்தங் கொங்கை மிசைத்திமிர்ந்த
சீத களபச் செழுஞ்சேற்றால் - வீதிவாய்
மானக் கரிவழுக்கு மாவிந்த மென்பதோர்
ஞானக் கலைவாழ் நகர்.

(இ - ள்.) ஞானம் - மெய்யறிவைத்தருகின்ற, கலை வாழ் - கல்வி கள் நிலைக்கின்ற, ஓர் நகர் - ஒப்பற்றநகரம், கோதை - மலர்மாலையணி ந்த, மடவார்தம்-மாதர்களுடைய, கொங்கைமிசை-மூலைகளிலே, திமிர் ந்த - பூசிய, சீதம் - குளிர்ச்சியாகிய செழுகளபச்சேற்றால் - செழுமை யுள்ள கலவைச் சந்தனச்சேற்றால், வீதிவாய் - தெருக்களில், மானம் - பெருமையாகிய, கரி - யானைகள், வழுக்கும் - (கால்) வழுக்குகின்ற, மாவிந்தம் என்பது - மாவிந்தமென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது, எ - று.

(வி-ரை.) நாயகரோடு கொண்ட ஊடலால் வழித்தெறிந்த கல வையால் வீதி சேறுடையதாயிற்றென்பது கருத்து. அம்மங்கையர் ஆடிய நீர்ப்பெருக்கு வண்டலிட்ட கலவையால் ஆயிற்றெனினும் பொ ருந்தும். மடவார் - பண்படியாகப்பிறந்த பெண்பாற்படர்க்கைப் பன் மைப் பெயர்; மடமை - பகுதி, ஆர் - பல்லோர்படர்க்கை விகுதி, மகர மெய்கேடும், வகரத்தோற்றமும் சந்தி; மடம் - பகுதியெனினு மொக் கும்; பொருள் கற்புடையார். கரி-கரத்தையுடையது. ஞானக்கலைவாழ் தல் ஆராய்தலுடையோரால் என்றும் ஆராயப்படுதல்; எனவே அவரை யுடைய நகரமென்பது கருத்து. மூன்றனுருபு ஏதுப்பொருளது. (கரு)

நின்றுபுயல் வானம் பொழிந்த நெடுந்தாரை
யென்று மகில்கமழு மென்பரால் - தென்ற
லலர்த்துங் கொடிமாடத் தாயிழையார் ஐம்பால்
புலர்த்தும் புகைவான் புகுந்து.

(இ - ள்.) தென்றல் - தென்காற்று, அலர்த்தும் - விரியச்செய் கின்ற, கொடி - கொடிகளைக்கட்டிய, மாடத்து - உப்பரிகைகளில், ஆய் இழையார் - ஆய்ந்தணிந்த ஆபரணங்களையுடைய மாதர்கள், ஐம்பால் - தமது கூந்தலை, புலர்த்தும் - உலர்த்துதற்கு ஊட்டுகின்ற, புகை வான் புகுந்து - அகிற்புகை ஆகாயத்தில் புகுவதினால், புயல்-மேகம், வானம் நின்று-(காலந்தவறாமல்) ஆகாயத்தில் நிலைத்து, பொழிந்த நெடுந்தாரை-

பெய்த நீண்டதாரைகள், என்றும்-பெய்யப்படும்போதெல்லாம், அகில் அகிலின்மணம், கமழும் - மணக்கும், என்பர் - என்று (அறிவுடையோர்) சொல்லுவர், எ-று.

(வி-ரை.) தாரை அகில்கமழும்-பால்வழுவமைதி. நன்-பொது-சூ - உகூ. இல் "சொற்சொற் றிற்றிதன்பெற்றி" என்னும், உரி-உ0-ஆம் புறனடைச் சூத்திரத்தாற் கொள்க. அகில் - பொருளாகுபெயர். அலர்த்தும்-பிறவினையாகியஎதிர்காலப்பெயரெச்சம்; அலர்-தன்வினைப் பகுதி, த்-சந்தி, து-பிறவினைப்படுத்தும் விகுதி, இவ்வாறு முடிந்த அலர்த்து - பகுதி, உம்-எதிர்காலப் பெயரெச்சவிகுதி, உ.கரக்கேடு சந்தி; இது கொடியென்னும் செயப்படு பொருட்பெயர் கொண்டது. கொடி - பண்படியாகப்பிறந்த ஒன்றன்படர்க்கைப் பெயர்; கொடு-பகுதி (வளைவு), இ-ஒன்றன்படர்க்கைவிகுதி, உகரக்கேடுசந்தி ஐம்பால் - பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர்; விரிந்தால் ஐந்தாகிய பாலையுடையதென விரியும். ஐம்பாலாவன - முடி (உச்சியில் முடிப்பது), கொண்டை (வலத்திலாவது இடத்திலாவது முடிப்பது), சுருள் (பின்னேசொருகுவது), குழல் (சுருட்டிமுடிப்பது), பனிச்சை (பின்னிவிடுவது) என்பன. புகுந்து-காரணப்பொருட்டாகிய செயவெனெச்சத்திரிபு. (கச)

வெஞ்சிலையே கோடுவன மென்குழலே சோருவன
அஞ்சிலம்பே வாய்விட் டரற்றுவன - கஞ்சங்
கலங்குவன மாளிகைமேற் காரிகையார் கண்ணே
விலங்குவன மெய்ந்நெறியை விட்டு.

(இ-ள்.) கோடுவன-(அந்நகரத்தில்) கோணுவன, வெம் சிலையே - (போரில்) கொடுமையாகிய விற்களே; சோருவன - சோர்வைப்பெறுவன, மெல் குழலே - மென்மையாகிய கூந்தல்களே; வாய்விட்டு அரற்றுவன - வாய்விட்டுக்கதறுவன, அம் சிலம்பே - (பாதத்தில் அணியப்பட்ட) அழகிய சிலம்புகளே; கலங்குவன - நிலைகுலைவன, (குளங்களில்

மாதர்கள் குளிப்பதினால்) கஞ்சம் ஏ - தாமரைகளே; மெய்ந்நெறியை விட்டு - உண்மையாகிய நல்வழியைவிட்டு, விலங்குவன-விலகிச்செல்வன, மாளிகைமேல் - மாளிகைகளின் மேல்நிலைகளில், காரிகையார் கண்ணே - மாதர்களுடைய கண்களே வேறில்லை, எ - று.

(வி-ரை.) எனவே அந்நகரத்தார் நீதிவழுவல், தளர்தல், புலர்பல், கலங்குதல், மெய்ந்நெறிவிட்டுவிலகல் இல்லாரென்பது குறிப்பெச்சம். ஏ-பிரிநிலை. இதனைக் கஞ்சமென்பதனோடுங் கூட்டுக. கஞ்சமென்பது நீரில் பிறப்பது. கண்கள் மெய்ந்நெறியைவிட்டு விலகலாவது - தம் முடைய நாயகரது கட்டழகைக்கண்டு மகிழ்ந்து காமநெறியில் சேர்தல். காரிகை - அழகு; அது பண்பாகுபெயராய்ப் பெண்ணை யுணர்த்தியது; அது இங்கு ஆரென்னும் பல்லோர்படர்க்கை விகுதிபெற்று நின்றது. நிலைமுதலிய ஐந்து பெயரும் பால்பகா அஃறிணைப்பெயராதலால் முறையே கோடுவனமுதலிய ஐந்து பலவின்படர்க்கை வினையால் பாற் பொதுமைநீங்கின. நிலைமுதலியன முக்காலத்திலும் ஒத்தியல்பொருள்களாகக் குறிக்கப்பட்டமையால் எதிர்காலவினையாற்கூறினார். மேல்-பண்பாகுபெயர். மாளிகைமேல் - உருப்புத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். இது ஒழிந்துக்காட்டணி.

தெரிவனநூ லென்றுந் தெரியா தனவும்
வரிவளையார் தங்கண் மருங்கே - யொருபொழுது
மில்லா தனவு மிரவே யிகழ்ந்தெவருங்
கல்லா தனவுங் கரவு.

(இ-ள்.) என்றும்-(அந்நகரத்தில்) எந்நாளிலும், தெரிவன - தெரியப்படுவன, நூல் ஏ - அறிவுநூல்களே; தெரியாதனவும் - தெரியப்படாதவைகளும், வரிவளையார்தங்கள் - சிற்றமைந்த வளையலணிந்த மாதர்களது, மருங்கே - இடைகளே; ஒருபொழுதும் - ஒருகாலத்திலும், இல்லாதனவும் - இல்லாதவைகளும், இரவே - இரக்குந்தொழில்களே;

எவரும் - எல்லோரும், இகழ்ந்து - அவமதித்து, கல்லாதனவும் - கற்கப் படாதவைகளும், கரவு ஏ - வஞ்சமாகிய ஒழுக்கங்களே, எ - று.

(வி-ரை.) மாதரது பன்மையைப்பற்றி மருங்கும், உண்டி உடுக்கை முதலிய பொருளின் பன்மையைப்பற்றி இரவும், கரவும் பலவாயின. நூலுக்குத் தெரிதல் ஆராய்தல்;. மருங்குக்குத் தெரிதல் தோன்றுதல். கல்வியறிவு பெண்பாலாரால் கொள்ளப்படாமையால் தெரிவனநூ லென்பது ஆண்பாலார்மேனின்றது. முதலிரண்டடியில் முறையே ஆண்மக்களையும் பெண்மக்களையும்பற்றிச் சிறப்புவகையால் கூறி, ஈற்றிரண்டடியில் அவ்விருவரையும்பற்றிப் பொதுவகையால் கூறினர். இவ்வாறு கூறவே ஆடவர் அறிவுநூலாராய்பவரென்பதும், பெண்டிர் மெல்லிய இடையாரென்பதும், இவ்விருவரும் பெருஞ்செல்வத்தின ரென்பதும், வஞ்சமில்லாத ஒழுக்கமுடையாரென்பதும் விளங்கின. ஒருபொழுதுமென்ற உம்மை இழிவுசிறப்போடு முற்றுப்பொருளது. என்றும், எவருமென்ற உம்மை முற்றுப்பொருளன; எவ்விஞ எஞ்சா மைப்பொருளன. மற்ற இரண்டும்மையும் இழிவுசிறப்புப்பொருளன. பிரிநிலை ஏகாரத்தை நூலென்பதனோடும், கரவென்பதனோடுங்கூட்டுக. வளை-பண்பாகுபெயர். தெரிவன, தெரியாதன, கல்லாதன என்னும் எதிர்மறைச் செயப்பாட்டுவினைகளில் படுவிகுதி தொகுத்தலென்க. ()

மாமனுநூல் வாழ வருசந் திரன்சுவர்க்கி
தாமரையாள் வைகுந் தடந்தோளான் - காமருபூந்
தாரான் முரணைநகர் தானென்று சாற்றலாம்
பாராளும் வேந்தன் பதி.

(இ-ள்.) பார் ஆளும் - பூமியை ஆளுகின்ற, வேந்தன் - நளராச னது, பதி - மாவிந்தநகரம், தாமரையாள் - செந்தாமரைமலரி லெழுந் தருளிய விசயலட்சுமி, வைகும் - தங்குகின்ற, தடவுத்தோளான்-பெரு மையாகிய தோளையுடையானும், காமர் - அழகிய, பூந்தாரான் - மலர் மாலையணிந்தானுமாகிய, மா மனுநூல்-பெருமையுள்ள மனுசாஸ்திரம்,

வாழ வரு-வாழும்படி பிறந்த, சந்திரன் சுவர்க்கி-சந்திரன் சுவர்க்கியென்னும் அரசனுடைய, முரணை நகர்தான் என்று-முரணைநகரமேயென்று, சாற்றல் ஆம் - சொல்லலாம், எ - று.

(வி - ரை.) உறையூரைச்சார்ந்த மள்ளுவநாட்டிலுள்ள முரணைநகரத்தரசனாகிய சந்திரன்சுவர்க்கியென்பவன் ஆசிரியரை ஆதரித்ததும், இந்நூலைச்செய்வித்ததுமாகிய நன்றியைப்பற்றி மாவிந்தநகரம் முரணைநகரமாமெனக் கூறினர். மநுநூல் - மநு என்பவரால் செய்யப்பட்ட தருமநூல். அது வாழ்தலாவது தன்னுணைக்குட்பட்டவர் அந்நூல் கூறும் விதிவிலக்குகளை யறிந்து ஒழுகச்செய்தலால் கெடாதுவழங்கல். வாழ-காரியப்பொருட்டாகிய எதிர்காலச்செயவெனெச்சம். தாமரை - முதலாகுபெயர். காமமென்னும் உகரச்சாரியை பெற்றுக் காமரு என நின்றது; காமம் வரு என்பது காமரு என்றான தென்பாருமுளர்; இது மருஉ; பொருள்: கண்டோர்க்கு விருப்பம் தோன்றுகின்ற என்பது. கருமையின் விகாரமாகிய காரென்பதுபோலப் பருமையின் விகாரமாகிய பார் பூமிக்குப் பண்பாகுபெயர்; பருவென்னும் பண்படியோடு, பகுதிப்பொருள் விகுதியாகிய மையீறு புணர்ந்து கெட்டமாத்திரையில் ஆதிநீண்டு, ஈற்றுகரங் கெட்டுநின்றதென்னுமல், பர என்னும் வினையடிமுதனீண்டு, ஈற்றகரங் கெட்டுநின்றதெனின், தன்னில் விகாரப்படுவதோர்சொல் இன்மையாலும், வினையடி இவ்வாறு விகாரப்படலியல்பன்மையாலும் அஃது குற்றமே ஆம். (கஎ)

ஓடாத தானை நளனென் றுளனொருவன்
பீடாருஞ் செல்வப் பெடைவண்டோ - டோடா
முருகுடைய மாதர் முலைநனைக்குந் தண்டா
டருகுடையான் வெண்குடையா னங்கு.

(இ-ள்.) பீடு - செல்வம், ஆரும் - நிறைகின்ற, செல்வப்பெடை - சிறப்பமைந்த பெண்வண்டு, வண்டோடு-ஆண்வண்டினிடத்து, ஊடா - ஊடிக்கொண்டதினால், உடைய - (பேரரும்புகள்) உடைவதினால்,

முருகு-ஒழுகும்தேன், மாதர் முலை-(அணைந்த) மாதர்களுடைய முலை களை, நனைக்கும் - நனையச்செய்கின்ற, தண் தார்-குளிர்ச்சியாகிய மலர் மாலையை, அருகு உடையான்-(மார்பின்) அருகிலுடையானும், வெள் குடையான் - வெண்கொற்றக்குடையை யுடையானுமாகிய, ஒருவன் - ஓரரசன், ஆங்கு - அம்மாவிந்தநகரத்தில், ஓடாத தானை - (போரில்) பின்னிடாதசேனையையுடைய, நளன் என்று - நளனென்று சிறப்பித் துச் சொல்லப்பட்டு, உளன் - இருக்கின்றனன், எ - று.

(வி-ரை.) ஒடுருபு ஏழாவதனிடப்பொருளது. ஊடா-செயவென் வாய்பாட்டிறந்தகாலவினையெச்சத்தின் திரிபு. உடைய என்னும் செய வென் வாய்பாட்டிறந்தகால வினையெச்சத்துக்குப் போரும்பென்னும் வினைமுதல் எஞ்சிநின்றது. பெடை ஊடுதல் போரும்புடைதலுக்கும், போரும்புடைதல் தேன்சிந்துதலுக்கும் காரணமாயின. முருகுடைய மாதரென்பதற்கு இளமையுடையமாதரெனவும் உரைக்கலாம்; அங்ங னம் உரைத்தால், பெடை ஊடுதலால் தன்னிலுள்ளதேன் முலைகளை நனைக்குமெனின் அவ்வினைக்கு மாலை என்பது கருத்தாவாகக்கொள்க. மாது-விருப்பம்; அது கண்டோர்க்கு விருப்பத்தைத் தருகின்ற பெண் ணுக்குக் காரியவாகுபெயர்; பண்பாகுபெயருமாம்; அச்சொல் அர் என் னும் பலர்பாற்படர்க்கை விகுதிபெற்று மாதரென நின்றது. வெண் குடை என்பதில் மையீறு கெட்டுநின்ற வெள் என்பதனீற்று ளகரம் மெல்லின முதன்மொழிமுன் ணகரமாதல்போல [நன் - மெய் - சூ - ௩௬.] இன்படி வல்லின முதன்மொழி முன்னும் ணகரமாயிற்று. ()

சீத மதிக்குடைக்கீழ்ச் செம்மை யறங்கிடப்பத்
தாதவிழ்பூந் தாரான் றனிக்காத்தான் - மாத
ருருகூட்டும் பைங்கிளியு மாடும் பருந்து
மொருகூட்டில் வாழ வுலகு.

(இ-ள்.) தாது - தாதுக்கள், அவிழ் - சிந்துகின்ற, பூந்தாரான் - மலர்மாலையணிந்த நளன், சீதம் - குளிர்ச்சியாகிய, மதிக்குடைக்கீழ் -

சந்திரன்போன்ற தனது குடைநிழலில், செம்மை அறம் - குற்றமற்ற அறங்கள், கிடப்ப - தங்கவும், மாதர் - மங்கையர், அருகு - தமதருகில் வைத்து, ஊட்டும் - ஊட்டிவளர்க்கின்ற, பைங்கிளியும்-பசுமையாகிய கிளியும், ஆடல் பருந்தும்-வெற்றியையுடைய பருந்தும், ஒரு கூட்டில் வாழ - ஒரு கூட்டில் வாழவும், உலகு - உலகத்தை, தனிக்காத்தான் - பொதுவில்லாமல் ஆண்டான், எ - று.

(வி - ரை.) பொதுவில்லாமல் காத்தலாவது சில அரசர்கள் தன்னோடொப்பச் சில தேயங்களை ஆளத் தான் சில தேயங்களை ஆளுதலில்லாமல் தானே முற்றும் ஆளல். ஆளுகை தண்ணளியோடுகூடியதாகையால் அவன் குடைக்குச் சீதமதி உவமையாயிற்று. பைங்கிளியும் ஆடற்பருந்தும் ஒரு கூட்டில்வாழ என்றதனால் வலியோர் மெலியோரை வருத்துதலின்றி நட்பினராய் வாழ என்பது குறிப்பெச்சம். குடை - பண்பாகுபெயர். மதி-பொருளடியாகப் பிறந்த ஒன்றன்படர்க்கைப் பெயர்ச்சொல்; மது-பகுதி, இ - ஒன்றன்படர்க்கைவிகுதி, உகரக்கேடு சந்தி; மது-சுவையுடைய சாறு; அது இங்கு அமுதத்தை யுணர்த்திற்று; இறைவனுடைய மனத்தில் பிறந்தமையால் மதி இடவாகு பெயரெனின், "மதிநுட்பநூல்" எனச் செய்யுளிலும், இப்படிச்சொல்ல இவனுக்கு மதிகெட்டதா என வழக்கிலும் மதி அறிவுக்கே அன்றி, மனத்துக்கு வழங்காமையால் அது குற்றமே. ஊட்டும் - பிறவினையாகிய எதிர்காலப் பெயரெச்சம்; உண்-பகுதி, டு - பிறவினைப்படுத்தும் விகுதி, பகுதி முதனீண்டது நீட்டல் விகாரம், ணகரம் டகரமாதல் சந்தி, உம்-எதிர்காலப் பெயரெச்சவிகுதி, உகரக்கேடு சந்தி. இது இயல்பினால் நிகழ்காலம் எதிர்காலமாகவந்த காலவழுவமைதி. பைங்கிளி - பண்புத்தொகை; பசுமையென்னும் பண்புப்பெயர் கிளியென்னும் பதப்புணர்ச்சியில் மையீறுகெட்டு, அடி அகரம் ஐகாரமாகி, "இனையவும்" என்பதனால் சுகரம்கெட்டு, ஙகர இனவெழுத்து மிகுந்தது. (கக)

வாங்குவளைக் கையார் வதன மதிபூத்த
பூங்குவளைக் காட்டிடையே போயினான் - தேங்குவளைத்

*தேனுடி வண்டு சிறகுலர்த்து நீர்நாடன்*
*பூநாடிச் சோலை புக.*

(இ - ள்.) *தேன் குவளை - மணமுள்ள குவளைமலரிலுள்ள, தேன் ஆடி - தேனில் முழுகி, வண்டு - வண்டுகள், சிறகு உலர்த்து - சிறகை உலரச்செய்கின்ற, நீர் நாடன்-நீர்வளமுள்ள நிடதநாட்டரசன், பூ நாடி- மலரைக் கருதி, சோலை புக - சோலையில் புகுவதற்கு, வாங்கு - வளைந்த, வளை-வளையலணிந்த, கையார்-கையையுடைய மாதர்களது, வதன மதி - முகமாகிய சந்திரன், பூத்த - மலர்ந்த, பூ குவளை - பொலிவாகிய குவளைமலர்களினது, காட்டிடையே - காட்டினிடத்தே, போயினான்- சென்றான், எ-று.*

(வி - ரை.) *வாங்குவளைக்கையா ரென்பதற்கு, வளைவாங்குகை யாரெனப் பதங்களை நிறுத்தி, வளையல் நீங்குகின்ற கையையுடைய மாதரெனவும் பொருள் கூறலாம்; அவனையடையப் பெறாமையால் மெலிந்த உடலினராகி, வளையல்கள் கையினின்றும் கழல நின்றார்க ளென்பது கருத்து. வதனமதிபூத்த பூங்குவளைக் காட்டிடையே போயினானென்றது தன்னழகை மங்கையர்கள் வியந்து பார்க்கப் போயினானென்பதை. பூத்த என்னும் இறந்தகாலப் பெயரெச்சம் குவளையென்னும் பிறபெயர்கொண்டது. மதிபூத்த குவளை-பால்வழுவமைதி. குவளை - முதலாகுபெயர். குவளைக்காடு - ஒன்றன்கூட்டத் தற் கிழமைப்பொருளதாகிய ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். உலர்த்து-காலங்கரந்த பெயரெச்சமாகிய பிறவினை இடமடியாகப் பிற ந்த நாடனென்னும் பெயரின் முதனிலையாகிய நாடென்னும் பெயர் கொண்டது. ஏ - பிரிநிலை; உலர் - பகுதி, த் - சந்தி, து - பிறவினைப் படுத்தும் விகுதி, இவ்வாறுமுடிந்த உலர்த்து காலங்கரந்த பெயரெச்ச மாகிய வினைத்தொகை வினைச்சொல். உலர்த்து நீரென்பதை உலர்த் தும் நீரெனப் பதம் பிரித்துப் பொருள் கூறலுமாம்.* (௨௦)

வென்றி மதவேடன் வில்லெடுப்ப வீதியெலாம்
தென்றன் மதுநீர் தெளித்துவர - நின்ற
தளவேனன் மீதலருந் தாழ்வரைசூழ் நாடற்
கிளவேனல் வந்த தெதிர்.

(இ-ள்.) நின்ற - (முல்லைநிலத்தில்) வளர்ந்த, தளவு - முல்லைக் கொடிகள், ஏனல்மீது - தினைப்பயிரின்மேல் படர்ந்து, அலரும் - மலர்கின்ற, தாழ்வரை சூழ் - நீண்டமலைகள் சூழ்ந்த, நாடற்கு எதிர் - நிடத நாட்டரசனுக்கு எதிரில், வென்றி - (யாவரையும்) வெற்றிகொள்ளுத லுடைய, மதவேள் - மதனாகியகாமன், தன் வில் எடுப்ப - (போரைக் கருதி) வில்லைக்கையிலெடுக்கவும், வீதி எல்லாம் - (அரசன் செல்லும்) வீதிமுழுமையும், தென்றல் - தென்காற்று, மது நீர் - மலர்த்தேனாகிய நீரை, தெளித்துவர - தெளித்துச் செல்லவும், இளவேனல் வந்தது - இளவேனிற்காலம் சென்றது, எ-று.

(வி-ரை.) இனி நளராசன் தமயந்தியின்மேல் விருப்பங்கொள்ளுஞ் செய்தியைக் கூறுவாராதலால் அதற்கிசைய, காமத்துக்குரிய வேனிற்பருவம் நளராசனை எதிர்கொண்டதாக இங்குக்கூறினார். செல்லும் வீதியில் இவனது பேரழகைக்கண்டு மாதர் மோகங்கொள்ளலால் வேள் வில்லெடுப்பதாயினான். வர, வந்தது-இரண்டும் இடவழுவமைதி [நன் - பொது - சூ-ட0]. ஏனல் பண்பாகுபெயர். வென்றி தொழிற்பெயர்; வெல்-பகுதி, தி-புடைபெயர்ச்சிவிகுதி, லகரமும் தகரமும் றகரமாகத்திரிதல் சந்தி, பகுதியீற்றுச் சந்தி றகரம் னகரமாதல் மெலித்தல் விகாரம்; இவ்விகாரம் பெறாமல் வெற்றியெனவும் வழங்கும். மதவேள் - இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடர். மதுநீரென்பதும் அத்தொடர். எடுப்ப, வர என்னும் காரியப்பொருளன ஆகிய எதிர்காலச் செயவெனெச்ச மிரண்டடுக்கி வந்ததென்னும் ஓரெச்சங் கொண்டன. எடுப்ப: எடு-பகுதி, ப்-சந்தி, ப் - விரித்தல் விகாரம், அ - எதிர்காலவினையெச்சவிகுதி. குவ்வுருபு எல்லைப்பொருளது. 'தளவே

னன் மீதலருந் தாழ்வரைசூழ் நாடன்' என்றதினல் நிடதநாட்டுக்கு முல்லையும், குறிஞ்சியும் அண்மையிலுள்ளன என்பதாயிற்று. ஆகவே காட்டரண், மலையரண் உடையது மாவிந்தமென்பது பெறப்பட்டது.

தேரிற் றுகளைத் திருந்திழையார் பூங்குழலின்
வேரிப் புனனனைப்ப வேயடைந்தான் - கார்வண்டு
தொக்கிருந்தா லித் துழலுந் தூங்கிருள்வெய் யோற்கொதுங்கிப்
புக்கிருந்தா லன்ன பொழில்.

(இ-ள்.) கார் வண்டு - கருமையாகிய வண்டுகள், தொக்கிருந்து - கூடி, ஆலித்து - களியாநின்று, உழலும் - உலவுகின்ற, தூங்கு இருள் - நீண்ட இருள், வெய்யோற்கு - சூரியனுக்கு, ஒதுங்கி - விலகி, புக்கு இருந்தால் அன்ன - புகுந்திருந்தாலொத்த, பொழில் - சோலையை, தேரின் துகளை - (தான் ஏறிச்செல்லுகின்ற) தேரினலெழுகின்ற புழுதியை, திருந்து இழையார் - திருந்திய ஆபரணங்களையணிந்த மாதர்களது, பூங்குழலின் - பூவையணிந்த கூந்தலினது, வேரிப்புனல் - தேனாகிய நீர், நனைப்ப - நனைக்கும்படி, அடைந்தான் - சேர்ந்தான், எ - று.

(வி - ரை.) சோலைமரங்களி னடர்ச்சியால் வெயில் உள்ளே நுழையப்பெறாமைபற்றிக் குளிர்ந்திருண்டிருத்தலால் இருள்புக்கிருந்தாற்போல்வதாயிற்று. தேரின்றுகள் - மூன்றுருவுதன் ஏதுப்பொருளில் வந்த ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்; இதில் இன் சாரியையின் ஈற்றுனகரம் றகரமானது எதுகைத்தொடை நோக்கிவந்த வலித்தல் விகாரம். தொக்கிருந்து - செய்தென்வாய்பாட்டிறந்தகால வினையெச்சம்; தொகு - பகுதி, இரு - பகுதிப்பொருள் விகுதி, பகுதி முற்றியலுகரமாதலால் ககரமெய்மிரித்தல் விகாரம், உகரக்கேடு சந்தி, அனைத்து மொருபகுதி, த்-சந்தி, த்-இறந்தகால இடைநிலை, உ - வினையெச்சவிகுதி, சந்தித்தகரம் நகரமாதல் மெலித்தல் விகாரம். உழலு

மென்னும் வினையடியாகப் பிறந்த நிகழ்காலப்பெயரெச்சமும், அன்ன என்னும் இடைச்சொலடியாகப் பிறந்த குறிப்புப்பெயரெச்சமும், முறையே நிலமாகவும், செய்யதாகவும் நின்ற பொழிலென்னும் பெயர் கொண்டன. ஆலித்து-ஆலியாநின்றென்பதன் திரிபு. தூங்கிருளென்பதில் தூங்கு அழிபசி, வருந்துபிணி என்பனபோலக் காரியப்பொருட்டாகிய வினைத்தொகையாகக்கொண்டு, எல்லாவுயிர்களும் தூங்குதற்குரிய இருளெனப் பொருளுரைப்பினும் பொருந்தும். அவ்விருள் நடுவிராத்திரியிருள். வெய்யோன் - பண்படியாகப் பிறந்த ஆண்பாற்படர்க்கைப்பெயர்; மையீறு கெட்டுநின்ற வெம் - பகுதி, ஆன் - ஆண்பாற் படர்க்கைவிகுதி, முன்னின்ற மெய்யாகிய மகரம் யகரமானது சந்தி, தனிக்குறின்முன்னொற்றாகிய யகரமிரட்டலும் அது; இவ்வாறு முடிந்துநின்ற வெய்யானென்பதில் ஆ ஓவானது செய்யுள் வழக்கு; வெம்மை: சொல்லளவில் பகுபதமெனவும், மை பகுதிப்பொருள் விகுதியெனவும் உரையாசிரியர்கள் கூறியதை மறந்து, பண்படியாகவும் பெயரென்பதைச் சிந்தியாமல், "எ எனவரு முயிர்மெய்யீறாகாது" "எகரமெய்யொடேலாது" என்னும் சூத்திரங்களை மதிக்காமல் வெ முதனிலையென மயங்கிக் கூறுவாரொருவர். (உஉ)

நீணிறத்தாற் சோலை நிறம்பெயர நீடியதன்
றாணிறத்தாற் பொய்கைத் தலஞ்சிவப்ப - மாணிறத்தான்
முன்னப்புட் டோன்று முளரித் தலைவைகு
மன்னப்புட் டோன்றிற்றே யாங்கு.

(இ-ள்.) ஆங்கு - அவ்விடத்தில், தன் நீள் நிறத்தால் - தனதுமிகுந்த வெண்ணிறத்தால், சோலை நிறம் பெயர - சோலை தன் பசுமைநிறம் மாறவும், நீடிய தன் தாள் நிறத்தால் - நீண்ட தனது அடியினது செந்நிறத்தால், பொய்கை - தடாகம், தலம் சிவப்ப - நீருள்ளவிடம் சிவக்கவும், அப்புள் - நீரில், தோன்றும் - முளைத்த, முளரித்தலை - தாமரைமலரில், வைகும் - தங்குகின்ற, அன்னப்புள்-அன்னப்பறவை,

மார்ன் நிறத்தான்முன்-மாட்சிமையாகிய ஒளியையுடைய நளராசனுக்கு முன்னே, தோன்றிற்று - காணப்பட்டது, எ-று.

(வி - ரை.) சோலைநிறம் பெயர்தல் வெண்ணிறமாதல். சோலை நிறம் பெயர, பொய்கைதலஞ்சிவப்ப என்பன பால்வழுவமைதி. பொய் கைத்தலஞ்சிவப்ப எனப் பாடமாயினபோது தடாகத்தினிடம் சிவக்க எனவுரைக்க. பொய்கைத்தலம்-ஒற்றுமைப்பொருளதாகிய ஆறும்வேற் றுமைத் தொகைநிலைத்தொடர். மாணிறத்தானென்பதற்கு மாட்சிமைப் பட்ட மார்பையுடையானெனவு முரைக்கலாம். நிறம் பண்பாயினுந் தான் விசேடியமும், நீள் விசேடணமுமாக நிற்றலால் நீணிறம் பண்புத் தொகைநிலைத்தொடர். நிலைமொழியை வினைத்தொகை வினைச்சொல் லாகக்கொண்டு, வினைத்தொகைநிலைத்தொடராக்கினு மமையும். நீடிய-இறந்தகாலப் பெயரெச்சம்; நீடு-பகுதி, இன் - இறந்தகால இடைநிலை, அ-பெயரெச்சவிகுதி, இடைநிலை னகரக்கேடு கடைக்குறை, ய் - சந்தி. முளரி - பொருளாகுபெயர். தோன்றல் - முளைத்தல் (அது காணப்படு தல்). ஏ - ஈற்றசை. (உங)

பேதை மடவன்னந் தன்னைப் பிழையாமன்
மேதிக் குலமேறி மென்கரும்பைக் - கோதிக்
கடித்துத்தான் முத்துமிழுங் கங்கைநீர் நாடன்
பிடித்துத்தா வென்றான் பெயர்ந்து.

(இ - ள்) மேதிக்குலம் - எருமையின் கூட்டம், ஏறி-(வயலில்) சென்று, மெல் கரும்பை - மென்மையாகிய கரும்புகளை, கடித்துக் கோதி - கடித்துமென்று, முத்து உமிழும் - முத்துகளை உமிழ்கின்ற, கங்கைநீர் நாடன் - கங்கைநீரையுடைய நிடதநாட்டரசன், பெயர்ந்து - (பூர்வெங்கருத்து) மாறி, பேதை - பெண்ணே, மடம் - இளமையாகிய, அன்னந்தன்னை - அன்னத்தை, பிழையாமல் - தப்பாமல், பிடித்துத் தா என்றான் - பிடித்துக்கொடுவென்று கட்டளையிட்டனன், எ-று.

(வி - ரை.) பெயர்தல் - மாறுதல். பிழையாமை - தப்பிப்போக விடாமை. அறியாமையுணர்த்தும் பண்புப்பெயராகிய மடம் தன்காரணமாகிய இளமையின்மேல் நின்றது. பண்பாகுபெயராகிய பேதை அண்மைவிளியாதலால் இயல்பாயிற்று. இப்பெண் பணிப்பெண்களில் ஒருத்தி. முத்துகளின் பிறப்பிடமாகிய பொருள்களில் கரும்பும் ஒன்றாதலால், மேதிக்குலம் கரும்பைக்கடித்துக் சோதி முத்துமிழ்வதாயிற்று. முத்துப் பிறப்பிடச்செய்யுள்:—"தந்திவராக மருப்பிப்பி பூகந்தழை கதலி, நந்துசலஞ்சலமீன்றலை கொக்குநளினமின்னார், கந்தரஞ் சாலி கழைகன்னலாவின்பல் கட்செவிகார், இந்துவுடும்பு கராமுத்தமீனு மிருபதுமே." இது ஆசிரியர் செய்த இரத்தினச்சுருக்கத்துள்ளது. விகுதி புணர்ந்துகெட்டுநின்ற தா என்னும் ஏவலொருமை வினைமுற்று அரசனுடைய இரப்புரையாய் நின்றமையால் மரபுவழுவமைதி. தான்-அசை. என்றான் - இடைச்சொலடியாகப் பிறந்த ஆண்பாற்படர்க்கை இறந்தகால வினைமுற்று; என் - பகுதி; ற் - இறந்தகால இடைநிலை, ஆன் - ஆண்பாற்படர்க்கைவிகுதி. (உச)

நாடிமட வன்னத்தை நல்ல மயிற்குழாம
ஓடி வளைக்கின்ற தொப்பவே - நீடியநற்
பைங்கூந்தல் வல்லியர்கள் பற்றிக் கொடுபோந்து
தங்கோவின் முன்வைத்தார் தாழ்ந்து.

(இ - ள்.) நீடிய - நீண்ட, நல் - குற்றமற்ற, பைங்கூந்தல் - பசுமையாகிய கூந்தலையுடைய, வல்லியர்கள் - பூங்கொடியையொத்த பணிப்பெண்கள், நாடி-(பிடிக்கும் உபாயத்தை) ஆராய்ந்து, நல்ல மயிற்குழாம் - சிறந்த மயிலின்கூட்டம், ஓடி வளைக்கின்றது - ஓடிச் சுற்றிக் கொள்வதை, ஒப்ப - ஒத்திருக்கச் சுற்றிக்கொண்டு, மட அன்னத்தை - இளமையாகிய அன்னத்தை, பற்றி-பிடித்து, கொடுபோந்து-கொண்டு வந்து, தம் கோவின்முன் - தமது அரசனுக்கு எதிரில், தாழ்ந்து வைத்தார் - வணங்கிவைத்தார்கள், எ - று.

(வி - ரை.) ஒப்ப என்றமையால் சுற்றிக்கொண்டென்பது வருவிக்கப்பட்டது. அன்னத்தின்மேல் நாட்டமுடையாராதலால் கூந்தல் சோர்தலையும் மதித்திலரென்பார் 'நீடியபைங் கூந்தல்' என்றார். எனவே அது கலாபத்தை ஒத்ததென்பதாயிற்று. வளைக்கின்றது-நிகழ்காலத் தொழிற்பெயர்; இத் துவ்விகுதி: வளைப்பது, வளைத்தது, வளையாதது என எதிர்கால இறந்தகாலத் தொழிற்பெயர்க்கும்,எதிர்மறைத்தொழிற் பெயர்க்கும், வேது, விழுது என கால இடைநிலை பெறாத தொழிற்பெயர்க்கும் விகுதியாய் வரும். உவமையாகுபெயராய்ப் பெண்ணை உணர்த்திநின்ற வல்லி, அதன் பன்மைக்கண் அர் விகுதிபெற்றது; கள்-ஒருபொருட்பன்மொழியாய் விகுதிமேல் விகுதியாக வந்தது. கொடு - கொண்டென்பதன் மரூஉ. போந்து - இறந்தகால வினையெச்சம்; புகு என்பதன் மரூஉ ஆகிய போ-பகுதி, த் - சந்தி, த் - இறந்தகால இடைநிலை, உ - வினையெச்சவிகுதி, சந்தித்தகரம் நகரமாதல் மெலித்தல் விகாரம். (உரு)

அன்னந் தனைப்பிடித்தங் காயிழையார் கொண்டுபோய்
மன்னன் றிருமுன்னர் வைத்தலுமே - அன்னம்
மலங்கிற்றே தன்னுடைய வான்கிளையைத் தேடிக்
கலங்கிற்றே மன்னவனைக் கண்டு.

(இ - ள்.) அங்கு - அச்சோலையில், ஆய் இழையார் - ஆராய்ந்தணிந்த ஆபரணங்களுடைய பெண்கள், அன்னந்தன்னைப் பிடித்து - அன்னத்தைப்பிடித்து, கொண்டுபோய் - தாங்கிச்சென்று, மன்னன் - அரசனுடைய, திருமுன்னர்-அழகியஎதிரிடத்தில்; வைத்தலும் வைக்குதலும், அன்னம் - அன்னமானது, தன்னுடைய வான் கிளையைத் தேடி-தனது உயர்ந்த உறவாகிய அன்னங்களைத்தேடி, மலங்கிற்றே - வருந்தியதே; மன்னவனைக் கண்டு - அரசனைப்பார்த்து, கலங்கிற்றே - மனங் கலங்கியதே; எ-று.

(வி - ரை.) திரு - கண்டோரால் விரும்பப்படும் அழகையுணர்த் தும் பண்புப்பெயர். முன்னர் - பண்புப்பெயர்; முன்-பகுதி, நர்-பகுதிப் பொருள்விகுதி, நகரம் னகரமாதல் சந்தி; அர் விகுதியெனல் குற்ற மென்பதை நன்னூலென்பதனாலுணர்க; இது பண்பாகுபெயராய் இடத் தை யுணர்த்திற்று; காலத்தை யுணர்த்தலுமுண்டு. வைத்தலும்-இறந்த கால வினையெச்சம்; வை - பகுதி, து, அல்-சாரியை, உம்-இறந்தகால வினையெச்சவிகுதி, தகரத்தோற்றமும், உகரக்கேடும் சந்தி. இதனை அடு த்த வ ஈற்றசை; மற்ற இரண்டும் இரக்கப்பொருளன. இது புதியன புகுதல். கிளை - உவமையாகுபெயர். மன்னன் - இடைச்சொலடியா கப்பிறந்த பெயர்ச்சொல்; மன் - பகுதி, (மிகுதிப்பொருளது), ன் - சந்தி, அன் - ஆண்பாற்படர்க்கைவிகுதி. மலங்கிற்று - ஒன்றன்படர்க் கை இறந்தகாலவினைமுற்று; மலங்கு - பகுதி, இன் - இறந்தகால இடைநிலை, று - ஒன்றன்படர்க்கைவிகுதி, பகுதி யீற்றுகரங் கெட்ட தும், இடைநிலை யீற்றுனகரந் திரிந்ததும் சந்தி. (உகூ)

அஞ்சன் மடவனமே யுன்ற னணிநடையும்
வஞ்சி யனையார் மடநடையும் - விஞ்சியது
காணப் பிடித்ததுகா ணென்றான் களிவண்டு
மாணப் பிடித்ததார் மன்.

(இ - ள்.) களி வண்டு-(தேனையுண்டு) களித்தவண்டுகள், மாண-(தாம்) மாட்சிமைப்பட, பிடித்த - பற்றிய, தார் மன் - மலர்மாலையணி ந்த அரசன், மட அன்னமே - இளமையாகிய அன்னமே, அஞ்சல்-அஞ்சுதலொழி; பிடித்தது - உன்னைப் பிடிப்பித்தது, உன்தன் - உன் னுடைய, அணி நடையும் - அழகாகிய நடையும், வஞ்சி அனையார் - பூங்கொடியை ஒத்தவரது, மடநடையும் - மென்மையாகிய நடையும், (இவ்விரண்டில்) விஞ்சியது - சிறந்ததை, காண - காணுதற்கு ஆம், என்றான் - என்று சொல்லினான், எ-று.

(வி - ரை.) இரண்டில், ஆம் என்பன எஞ்சி நின்றன. அஞ்சல்- ஏவலொருமை எதிர்மறைவினை; அஞ்சு - பகுதி, அல் - ஏவலொருமை எதிர்மறைவிகுதி, உகரக்கேடு சந்தி; இது ஐம்பால் மூவிடங்களில் செல்லாமையால் வியங்கோளெனல் குற்றம். இளமையை யுணர்த்தும் மடமென்னும் பண்பு மென்மைக்காயிற்று. விஞ்சியது - ஒன்றன்படர்க்கை யிறந்தகால வினையாலணையும்பெயர். பிடிப்பித்தது - பிறவினையாகிய இறந்தகாலத் தொழிற்பெயர்; இதில் பிவ்விகுதி தொகுத்தலாயிற்று. காண் - முன்னிலையொருமை அசைச்சொல்; ஏவலொருமை எதிர்கால வினையெனக்கொண்டு, நீ அறி என உரைக்கினும் பொருந்தும். இடைச்சொல் பெயருளடங்குமாதலாலும், இச்சொல் மிகுதிப் பொருளாதலாலும் மன் என்பதைப் பண்பாகுபெயரென்க. (உஎ)

செய்ய கமலத் திருவை நிகரான
தையல் பிடித்த தனியன்னம் - வெய்ய
அடுமாற்ற மில்லா வரசன்சொற் கேட்டுத்
தடுமாற்றந் தீர்ந்ததே தான்.

(இ - ள்.) செய்ய-சிவந்த, கமலம்-தாமரைமலரி லெழுந்தருளிய, திருவை நிகர் ஆன - திருமகளை ஒத்த, தையல்-பெண்ணால், பிடித்த - பிடிக்கப்பட்ட, தனி அன்னம் - ஒப்பற்ற அன்னம், வெய்ய - கொடிய, அடு மாற்றம் - கொலையை யுணர்த்துஞ்சொல்லை, இல்லாத சொல்லுத லில்லாத, அரசன் சொல் கேட்டு - அரசனுடைய சொல்லைக்கேட்டு, தடுமாற்றம் - (யாதுசெய்வேனோ என்னும்) கலக்கம், தான் தீர்ந்தது - தான் நீங்கியது, எ-று.

(வி - ரை.) கமலம் - முதலாகுபெயர். தையல் - பண்பாகுபெயர். வெய்ய - பண்படியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம்; வெம்மை - பண்புப்பெயர் பெயரெச்ச அகரவிகுதிப் புணர்ச்சியில் "ஈறுபோதல்" என்பதனால் மையீறு கெட்டு, "முன்னின்ற மெய்திரிதல்" என்பத

னால் மகரமெய் யகரமெய்யாகத் திரிந்து, அது தனிக்குறின் முன் னொற்றாதலால் யகரம் இரட்டலாகிய சந்திபெற்று முடிந்தது. அடு-முதனிலைத் தொழிற்பெயர். அடுமாற்றம்-இரண்டாம் வேற்றுமை யுருபும் பயனும் உடன்தொக்க தொகைநிலைத்தொடர்; வினைத்தொகை நிலைத் தொடராகவாவது எதிர்காலப்பெயரெச்சத் தொகைநிலைத் தொடராக வாவது கொள்ளினும் பொருந்தும்; வினைத்தொகை வினைச்சொல் பெய ரெச்சத்து ளடங்குதலால், இப்பெயரெச்சம் காரியப்பொருளனலாய் நின்று, தன்னை யுணர்த்தும் கருவியாகிய மாற்றமென்னும் பெயர் கொண்டதென்க. சொற்கேட்டு என்பதில் நிலைமொழி அஃறிணைச் சொல்லாயினும், குற்றொற்றடுத்தமொழியாதலால், [நன்-உருபு-கசு-கூ] இல் "விகாரத்தியல்பும்" என்ற உம்மையை இறந்ததுதழீஇய இழிவு சிறப்பும்மையாகக்கொண்டு, [மெய் - உ௯ - ஆம்] சூத்திரத்தின் பொது விதிப்படி லகரந்திரிந்தது. (உ௮)

> திசைமுகந்த வெண்கவிகைத் தேர்வேந்தே யுன்றன்
> இசைமுகந்த தோளுக் கிசைவாள் - வசையில்
> தமையந்தி யென்றோதுந் தையலாண் மென்றோள்
> அமையந்தி யென்றோ ரணங்கு.

(இ - ள்.) திசை - எட்டுத்திக்கிலுள்ளாரையும், முகந்த - தன்னு ளடக்கிய, வெள் கவிகை - வெண்கொற்றக் குடையையும், தேர் வேந்தே - தேர்ச்சேனையையுமுடைய அரசனே, இசை - கீர்த்தியை, முகந்த - நிரம்பப்பெற்ற உன் தன் தோளுக்கு - உன்னுடைய தோள்க ளுக்கு, இசைவாள் - தகுவாள், வசை இல் - (அழகு, குணம், செயல் இவற்றால்) நிந்தையில்லாத, தமையந்தி என்று ஓதும் - தமயந்தியெ ன்று சிறப்பித்துச் சொல்லப்படும், தையலாள் - பெண்ணாகிய, மெல் தோள் - மென்மையாகியதோள், அமை அந்தி - மூங்கில்போலும் அழ குடையாள், என்று ஓர் அணங்கு - என்று சொல்லப்பட்ட ஓர்மாது, எ-று.

(வி - ரை.) திசை-இடவாகுபெயர். கவிகை - தொழிலாகுபெயர். வேந்து-பண்பாகுபெயர். அணங்கு-உவமையாகுபெயர். தமையந்தியென்பதில் யகர முன்னின்ற அகரத்துக்கு ஐகாரம்போலி. முகத்தல்-மொள்ளுதல். கவிகையென்றது ஆளுகையை. தோள் இசைமுகத்தலாவது - போரில் வெற்றிகொள்ளலும், ஈகை முதலியவற்றில் சிறத்தலும், அழகும் திண்மையு முடைமையும் ஆகிய இவற்றால் வரும் புகழைப் பெறுதல். அந்தி-பண்படியாகப் பிறந்த பெண்பாற் படர்க்கைப் பெயர்; அந்தம் - பகுதி, (திசைச்சொல்), இ-பெண்பாற் படர்க்கை விகுதி, பகுதியீற்று அம்முக்கேடு கடைக்குறை. என் - பகுதி, ன் - சந்தி, அ-சாரியை, ப் - சந்தி, பு - செயப்பாட்டு வினைப்பொருண்மை விகுதி, அனைத்து மொருபகுதி, அ-பெயரெச்சவிகுதி, பகுதி ஒற்றிரட்டலும், உகரக்கேடும் சந்தி, இரட்டியதே காலங்காட்டியது, இவ்வாறுமுடிந்து என்னப்பட்ட என நின்ற இடைச்சொலடியாகப் பிறந்த இறந்தகாலச் செயப்பாட்டுப் பெயரெச்சம்; படுவிகுதி தொகுக்கப்பட்ட என்ற, என்னுஞ்சொல் அகரவிகுதி தொகுத்தலாய் நின்றது. (உக)

அன்ன மொழிந்த மொழிபுகா முன்புக்குக்
கன்னி மனக்கோயில் கைக்கொள்ளச் - சொன்னமயி
லார்மடந்தை யென்றா னநங்கன் சிலைவளைப்பப்
பார்மடந்தை கோமான் பதைத்து.

(இ - ள்.) அன்னம் மொழிந்த - அன்னஞ் சொல்லிய, மொழி புகாதமுன் - சொல் (முற்றும்) நுழையாதமுன், கன்னி - கன்னியாகிய தமயந்தி, மனக்கோயில் - மனமாகியகோயிலை, புக்கு - நுழைந்து, கைக்கொள்ள - வசமாக்கிக்கொண்டதினால், அநங்கன் - மன்மதன், சிலை வளைப்ப - வில்லெடுத்து வளைத்ததனால், பார் மடந்தை - பூமியாகிய பெண்ணுக்கு, கோமான் பதைத்து - அரசனாகிய நளன் பதறி, சொன்ன மயில்-நீ சொல்லிய மயிலை ஒத்தவள், ஆர் மடந்தை என்றான்- எவருடைய மகளென்று கேட்டான், எ-று.

(வி - ரை.) மொழி - மொழியப்படுவதென்னும் பொருளில் மொழியென்னும் முதனிலை, செயப்படுபொருண்மை விகுதியாகிய ஐ புணர்ந்து கெட்டுநின்றது; தொழிலாகுபெயரெனினு மொக்கும். புக்கு - இறந்தகால வினையெச்சம்; புகு - பகுதி, உ - வினையெச்ச விகுதி, பகுதி முற்றியலுகரமாதலால் ககரமிரட்டியது விரித்தல் விகாரம், அதுவே காலங்காட்டியது, உகரக்கேடு சந்தி. கைக்கொள்ள - ஒரு சொல்லின்தன்மையது; இது சிலைவளைத்தலுக்குக் காரணமாதலால் இறந்தகால வினையெச்சம். வளைப்ப என்பது பதைத்தலுக்குக் காரணமாய் நிற்றலின் இதுவும் இறந்தகாலத்தது. அழகு நற்குண நற்செயலுடைய பெண்ணைப் பெற்றமை கருதி, 'ஆர் மடந்தை' என வினவினன். இது உயர்வுபற்றிவந்த பால்வழுவமைதி. ஆர் - யாவரென்பதன் மரூஉ. மடந்தை-மகளென்பதன்மேலது. அநங்கன்-உருவமில்லானென்பது; இதன் செய்தி:—சிவன் செய்த யோகத்துக்கு விக்கினஞ்செய்த காரணத்தால் அம்மூர்த்திக் குக் கோபம் பிறந்து நெற்றிககண்ணால் எரித்தமையால் உருவில்லானென்பது. சொன்ன - இறந்தகாலப் பெயரெச்சம்; சொல் - பகுதி, இன் - இறந்தகால இடைநிலை, அ - பெயரெச்ச விகுதி, இடைநிலை இகரக்கேடு முதற்குறை; லகரம் னகரமாதல் சந்தி.

> எழுவடுதோண் மன்னு விலங்கிழையேர் தூண்டக்
> கொழுநுதியிற் சாய்ந்த குவளை - யுழுநர்
> மடைமிதிப்பத் தேன்பாயு மாடொலிநீர் நாடன்
> கொடைவிதர்ப்பன் பெற்றதோர் கொம்பு.

(இ - ள்.) எழு-தூணை, அடு - வென்ற, தோள் மன்னு - தோள்களையுடைய அரசனே, இலங்கு இழை - விளங்குகின்ற ஆபரணங்களையணிந்தபெண், ஏர் தூண்ட - ஏரை நடத்துகையில், கொழு நுதியின்-கொழுவினது நுனியினால், சாய்ந்த குவளை - படிந்த குவளைமலர்களை, உழுநர் - உழவர், மடை மிதிப்ப - நீர்மடையினிடத்து மிதிப்பதினால், தேன் பாயும்-(அம்மலர்களினின்று)தேன்பாய்கின்ற, மாடு-பக்கத்தில்,

ஒலி நீர் - ஒலிக்கின்ற நீர்வளமுள்ள, நாடன் - விதர்ப்பநாட்டரசனுகிய, கொடை - கொடுக்குந் தொழிலையுடைய, விதர்ப்பன் - வீமராசனால் பெற்றது - பெறப்பட்டவளாகிய, ஓர் கொம்பு - ஒப்பற்ற பூங்கொம்பை ஒத்தவள், எ-று.

(வி-ரை.) கொம்பு என்றதற்கு ஏற்கப் 'பெற்றது' என்றார். இது இறந்தகாலச் செயப்பாட்டு வினையாலணையும்பெயர்; பகுவிகுதி தொகுத்தலாயிற்று. எழு - தொழிலாகுபெயர். இலங்கிழை - வினைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். தூண்ட-நிகழ்காலச் செயவெனெச்சம். மிதிப்ப என்னும் செயவெனெச்சம் பாய்தலுக்குக் காரணமாய் நிற்றலால் இறந்தகாலத்தது. தொழுநுதி சினைத் தற்கிழமைப்பொருளதாகிய ஆறாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். மடை - தொழிலடியாகப் பிறந்த பெயர்; மடு - பகுதி, ஐ - வினைமுதற் பொருண்மைவிகுதி, உகரக்கேடு சந்தி; மடுத்தல் - உண்ணல்; அது நீரைத் தன்னில் அடக்கல். பாயுமென்னும் பெயரெச்சம் நாடனென்னும் பெயரின் முதனிலையாகிய நாடென்னும் இடப்பெயர் கொண்டது; தேன் பாய்தலுக்கு நீரும் காரணமாதலால் பாயுமென்னும் பெயரெச்சம் நீரென்னும் காரணப்பெயர் கொண்டதெனினும் இழுக்காது. கொடை - ஐ விகுதிபெற்ற தொழிற்பெயர். (௩௧)

நாற்குணமு நாற்படையா வைம்புலனு நல்லமைச்சா
வார்க்குஞ் சிலம்பே யணிமுரசா - வேற்படையும்
வாளுமே கண்ணா வதன மதிக்குடைக்கீ
ழாளுமே பெண்மை யரசு.

(இ - ள்.) நாற்குணமும் ஏ - நான்குகுணங்களுமே, நாற்படை ஆக-நான்குவகைச் சேனையாகவும், ஐம்புலனும் ஏ - ஐம்பொறிகளுமே, நல் அமைச்சு ஆக - நல்ல மந்திரியாகவும், ஆர்க்கும் - (பாதத்தில்) ஒலிக்கின்ற, சிலம்பே - சிலம்புகளே, அணி முரசு ஆக - அழகிய முரசாகவும், கண் ஏ - கண்களே, வேல் படையும் வாளும் ஆக - வேலா

யுதமும் வாளுமாகவும், வதனமதிக் குடைக்கீழ் - முகசந்திரனுகிய குடையின்கீழ், பெண்மை - பெண்தன்மையை, அரசு ஆளும் - அரசாள்வாள், எ-று.

(வி - ரை.) நாற்குணமாவன—அச்சம் (அன்புகாரணமாக உண்டாகும்பயம்), மடம் (அன்புடையார் கூறுவதைக் கேட்டும் தான் முன்கொண்ட கருத்தைவிடாமை), நாணம் (கணவனிடத்து விருப்பக்குறிப்புத் தோன்றியபோது உண்டாகும் உள்ளத்திெருக்கம்), பயிர்ப்பு (முன் கண்டறியாதவற்றைக் கண்டபோது மனம் பொருந்தாத கூச்சம்). நாற்படை - தேர், யானை, குதிரை, காலாள். புலன்-பண்பாகு பெயர். ஐம்பொறிகள்-மெய், வாய், கண், மூக்கு, செவி. சிலம்பே என்னும் பிரிநிலை ஏகாரத்தைக் குணம் புலன் என்பவற்றுக்கும் கூட்டுக. வாளுமேயென்னும் ஏகாரத்தைக் கண்ணென்பதனேடு சார்த்துக. முகத்தைச் சந்திரனுக வுருவகஞ்செய்து, அதனையே குடையாக வுருவகஞ்செய்தமையால் உருவகவுருவகம். மற்ற ஏ ஈற்றசை. பெண்ணுக்குரிய நாற்குணங்களையு முடையாளாகி, மனத்தைப் பொறியின்வழிப் போக்காமல் அடக்கிப் பெண்கள்நாயகமா யிருக்கின்றன ளென்பது கருத்து. இச்செய்யுள் சிறப்புருவகவணி. பெண்மையென்றது உயருந்திணைப்பெண்மையை. ஆக என்னும் செயவெனெச்சத்தீறு தொகுத்தல். புலம் என்பதில் இருகுறிலை யடுத்த மகரமாதலால், அம்மகரத்துக்கு னகரம் போலியாக வந்தது. • (௩௨)

> மோட்டிளங் கொங்கை முடியச் சுமந்தேற
> மாட்டா திடையென்று வாய்விட்டு - நாட்டே
> னலம்புவார் கோதை யடியிணையில் வீழ்ந்து
> புலம்புமா நூபுரங்கள் பூண்டு.

(இ-ள்.) மோடு - உயர்வாகிய, இளங்கொங்கை - இளமுலைகளை, முடியச் சுமந்து - முற்றும் தான் சுமப்பதினால், ஏறமாட்டாது - ஓங்க வலியிலது, இடையென்று - இடையென்று கருதி, நூபுரங்கள் - சில

ம்புகள், நாள் தேன் - புதிய தேனால், அலம்பு - அலம்பப்படும், வார் கோதை - நீண்ட கூந்தலையுடையாளது, அடி இணையில் வீழ்ந்து - இரண்டு பாதங்களிலும் விழுந்து, பூண்டு - விடாமல்பற்றி, வாய்விட்டுப் புலம்பும் - வாய்திறந்து புலம்பாநிற்கும், எ-று.

(வி - ரை.) சுமந்து - சுமக்க என்பதன் திரிபு; இது காரணப் பொருட்டாகிய இறந்தகால வினையெச்சம். ஏறல் - வளர்தல். மாட்டாது - ஒன்றன்படர்க்கை எதிர்மறை வினைமுற்று; மாட்டு - பகுதி, ஆ - எதிர்மறை விகுதி, உகரக்கேடு சந்தி, அனைத்து மொருபகுதி, து- ஒன்றன்படர்க்கை விகுதி; மாட்டும் மாட்டுவான் என எதிர்காலத்தில் வினைமுற்றும், மாட்டாமல் மாட்டாத மாட்டாமை என எதிர்மறையில் வினையெச்சப் பெயரெச்சங்களும் தொழிற்பெயரும் வரும். மலரின் புதுமையைத் தேனின்மேலேற்றி 'நாட்டேன்' என்றார். வார்கோதை- வினைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப் பெயர். இடை - பண்பாகுபெயர். இது தற்குறிப்பேற்றம். (௩௩)

> என்று நுடங்கு மிடையென்ப வேழுலகு
> நின்ற கவிகை நிழல்வேந்தே - யொன்றி
> யறுகாற் சிறுபறவை யஞ்சிறகால் வீசுஞ்
> சிறுகாற்றுக் காற்றா தேய்ந்து.

(இ - ள்.) ஏழு உலகும் - ஏழ் தீவுகளிலும், நின்ற - நிலைத்த, கவிகை நிழல் - குடையினது நிழலையுடைய, வேந்தே-அரசனே, அறு கால் - ஆறுகால்களையுடைய, சிறு பறவை - வண்டுகள், ஒன்றி - நெருங்கி, அஞ்சிறகால் - அகத்திலுள்ள சிறகினால், வீசும் - வீசப்படுகின்ற, சிறு காற்றுக்கு ஆற்றாது - மெல்லியகாற்றுக்குச் சகிக்காமல்,தேய்ந்து- இளைத்து, என்றும்-எப்போதும், நுடங்கும் - துவளும், இடை என்ப- இடையென்று சொல்லுவார்கள் (கண்டோர்கள்), எ-று.

(வி - ரை.) உலகு - தீவின்மேலது; தீவு ஏழாவன—நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்கரம், தெங்கு, சமுகு. ஏழுதீவுகளிலும்

கவிகை நிழல் நிற்றலாவது அவை இவனது ஆளுகையின் கீழமைந்து நிற்றல். அறுகாலென்னும் விசேடணத்தால் சிறுபறவை வண்டை யுணர்த்தியது பறவை - தொழிலடியாகப் பிறந்த பெயர்ச்சொல்; பற-பகுதி, வ் - சந்தி, ஐ - வினைமுதற்பொருண்மை விகுதி. அறுகாற் சிறுபறவை - இரண்டாம்வேற்றுமை யுருபும்பயனும் உடன்தொக்க தொகைநிலைத்தொடர்; அறுகாலென்பதைப் பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயராகக் கொண்டு, இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலையெனினுமொக்கும். அஞ்சிறகென்பதை அகம் சிறகெனப் பதம் பிரிக்க; நிலைமொழியினிடையில் நின்ற ககரவுயிர்மெய் கெட்டது; [நன் - மெய் - சூ - கக] இல் செவி எனச் சகரத்தைமுன் கூறினமையால் என்க. ஆற்றுதென்பதை வினைமுற் றென்றாயினும், வினைமுற்று வினையெச்சமான தென்றாயினும் சொள்க. வினைமுற்றுக்குத் துவ்விகுதியெனவும், வினையெச்சத்துக்கு உகர விகுதியெனவுங் கொள்க. ஒன்றி - ஒன்றென்னும் வரையறைப் பண்புப்பெயரினடியாகப் பிறந்த இறந்தகால வினையெச்சம்; ஒன்று-பகுதி, உகரத்தின் திரிபாகிய இ இறந்தகால,வினையெச்சவிகுதி, உகரக்கேடு சந்தி. காற்றுக்கென்னும் நான்கனுருபு பகைப்பொருளது. (கசு)

செந்தேன் மொழியாள் செறியளக பந்தியின்கீ
ழிந்து முறியென் றியம்புவார் - வந்தென்றும்
பூவாளி வேந்தன் பொருவெஞ் சிலைசார்த்தி
யேவாளி தீட்டு மிடம்.

(இ-ள்.) பூவாளி - பூவாகிய அம்புகளையுடைய, வேந்தன் - மன்மதராசன், என்றும் வந்து - தினமும்வந்து, பொரு - போர்செய்தற்குரிய, வெம் சிலை - கொடுமையாகிய வில்லை, சார்த்தி - சாரவைத்து, ஏவாளி - ஏவாகிய அம்புகளை, தீட்டும் இடம் - கூர்செய்யும் இடமாகிய நெற்றியை, செம் தேன் - செந்தேன்போன்ற, மொழியாள் - சொல்லையுடைய தமயந்தியினது, செறி - அடர்ந்த, அளகபந்தியின் கீழ் - மயிர்க்

குழற்சியினது வரிசையின்கீழ்நின்ற, இந்து முறி என்று - சந்திரனது துண்டமென்று, இயம்புவார் - (புலவர்) சொல்லுவார்கள், எ-று.

(வி - ரை.) மயிர்க்குழற்சி-நெற்றியின் மேலிடத்துள்ள சுருண்ட மயிர். நீட்டுமிடமென்றது நீட்டுங்கல்லை. சிலையென்றது புருவத்தை யெனவும், நீட்டுமிடமென்றது நெற்றியையெனவுங்கொள்க. பந்தி - வரிசை; அது பண்பாகுபெயராய்ப் பந்தியாயுள்ள பொருளை யுணர்த் திற்று. அளகபந்தி - ஒன்றன்கூட்டத் தற்கிழமைப்பொருளதாகிய ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். முறி - தொழிலடியாகப் பிறந்த பெயர்; முறி - பகுதி, இ-செயப்படுபொருண்மை விகுதி புணர்ந்து கெட்டது. இந்துமுறி - சினைத்தற்கிழமைப்பொருளதாகிய ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்; சினைமுதற்பொருளின் ஏகதேச மென்பதை உணராத ஒருவர் குற்றமென மயங்கிக் கூறுவர். பூவாளி, ஏவாளி - இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடர்; முதலி லுள்ள தொகைநிலைத்தொடரை மூன்றும்வேற்றுமை யுருபும்பயனு முடன்றொக்க தொகைநிலைத் தொடரெனினும் பொருந்தும். ஏ - தொழிலாகுபெயர். ஆளி - பண்படியாகப்பிறந்தபெயர்; வாள் - பகுதி, (பண்பு) இ - ஒன்றன்படர்க்கை விகுதி. (ருகூ)

அன்னமே நீயுரைத்த வன்னத்தை யென்னாவி
யுன்னவே சோரு முனக்கவளோ - டென்ன
அடைவென்றான் மற்றந்த வன்னத்தை முன்னே
நடைவென்றா டன்பா னயந்து.

(இ - ள்.) அந்த அன்னத்தை - தமயந்தியைப்பற்றிப் பேசுகின்ற அன்னத்தை, முன்னே - நடக்கத்தொடங்கிய காலத்தே, நடை வென்றாள் தன்பால் - நடையால்வென்ற தமயந்தியினிடத்து, நயந்து - விருப்பங்கொண்டு, அன்னமே நீ உரைத்த அன்னத்தை - அன்னமே நீ சொல்லிய அன்னத்தை ஒத்தவளை, உன்னவே - நினைக்கவே, என் ஆவி சோரும் - என் உயிர்சோர்கின்றது; உனக்கு அவளோடு - உன

க்கு அவளிடத்தில், என்ன அடைவு என்றான் - யாது சம்பந்தமென்று வினவினான், எ-று.

(**வி - ரை.**) காண என்பதினின்றும் உன்ன என்பதைப் பிரித்தமையால் ஏ பிரிநிலை. பின்னுள்ளதும் அது. ஒடுருபு ஏழாவதனிடப் பொருளது. என்ன - எவனென்பதன் மரூஉ. ஆகிய வினவினைக் குறிப்புமுற்று; இவ்வாறன்றி என் என்னும் வினைப்பெயரினடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சமாகக்கொண்டு, இது கொண்டுமுடிந்த அடையென்னும் எழுவாய் கொண்டுமுடியும் உளதென்பது சொல்லெச்சமாய் நின்றதெனவைத்து, எப்படிப்பட்ட சம்பந்தமுள்ளதென உரைப்பினும் பொருந்தும். நடை-தொழிற்பெயர்; நட-பகுதி, ஐ-புடைபெயர்ச்சி விகுதி, பகுதியீற்று அகரக்கேடு கடைக்குறை. 'என்றான் - ஒற்றுமைப்பொருளதாகிய ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர் (௩௬)

*பூமனைவாய் வாழ்கின்ற புட்குலங்கள் யாமவடன்*
*மாமனைவாய் வாழு மயிற்குலங்கள் - காமன்*
*படைகற்பான் வந்தடைந்தான் பைந்தொடியாள் பாத*
*நடைகற்பான் வந்தடைந்தே நாம்.*

(இ-ள்.) காமன் - மன்மதன், (அவளுடைய கண்ணினிடத்தில்) படை - அம்புகளை எய்யுந்தொழிலை, கற்பான் - கற்கும்படி, வந்து அடைந்தான்-சென்று சேர்ந்தான்; பைந்தொடியாள் - அப்பசும்பொன் வளையணிந்தவளது, பாதம் - பாதத்தினிடத்தில், நடை - நடக்குந்தொழிலை, கற்பான் - கற்கும்படி, நாம் வந்து அடைந்தேம்-நாங்கள் சென்று சேர்ந்தோம்; பூமனைவாய் - தாமரைமலராகிய வீட்டில், வாழ்கின்ற புள் குலங்கள் யாம் - வாழ்கின்ற பறவைக்கூட்டங்களாகிய நாங்கள், (அது காரணத்தால் இப்போது) அவள் தன் - அவளுடைய, மாமனைவாய் - பெருமையாகிய மனையினிடத்து, வாழும் - வாழுகின்ற, மயில் குலங்கள் - மயிலின் கூட்டங்கள்போலாயினோம், எ - று.

(வி-ரை.) எனவே அவளுக்கு விளையாட்டுப் பொருள்களில் ஒரு வகைப் பொருளாயிருப்பதே எமக்குண்டாகிய சம்பந்தமென்றதாயிற்று. தன்னினத்தைத் தன்னொடுபடுத்தி 'யாம் அடைந்தேம்' என்றதாதலால் உயர்வு முதலிய காரணம் பற்றிவந்த பால்வழுவமைதியன்று. பூ தொழி லடியாகப் பிறந்த பெயர்ச்சொல்; பூ-பகுதி, இ - வினைமுதற்பொருண் மை விகுதி புணர்ந்துகெட்டது. இது தலைமைபற்றி, மலர்களிற் சிற ந்த தாமரைமலரை யுணர்த்திற்று. பூமனை - பண்புத்தொகை நிலைத் தொடர். நடைக்குப் பாதத்தைக் கூறினமையால் படைக்குங் கண்ணென் பது வருவிக்கப்பட்டது. "காமற், கேவெலாங் காட்டுகின்ற வினை நெடுங்கண் ணேரேழை" எனக் கம்பநாடர் கூறலுங் காண்க. படை - தன்றொழிலை யுணர்த்தலால் காரணவாகுபெயர். மயிற்குலங்கள்போ ல்ஞ்குதல் ஊட்டி வளர்த்தற்கும், விளையாடற்கும் உரியவையாகுதல். கற் பான்: பான்விகுதி எதிர்காலவினையெச்சம். பசும்பொன்தொடி யென் பதைப் பைந்தொடி யென்றது ஓர் குறிப்பு. தொடி - தொழிலடியாகப் பிறந்த பெயர்; தொடு - பகுதி, இ - செயப்படுபொருண்மை விகுதி, உகரக்கேடு சந்தி. (கூஎ)

இற்றது நெஞ்சு மெழுந்த திருக்காத
லற்றது மான மழிந்ததுநாண் - மற்றினியுன்
வாயுடைய தென்னுடைய வாழ்வென்றான் வெங்காமத்
தீயுடைய நெஞ்சுடையான் றேர்ந்து.

(இ - ள்.) வெம் காமத்தீ உடைய - வெப்பமாகிய காமத்தீயை யுடைய, நெஞ்சு உடையான் - மனமுடையவனான், தேர்ந்து - துணிந்து, நெஞ்சம் இற்றது - மனநிலைகெட்டது; இரு காதல் - மிக்க ஆசை, எழு ந்தது - உயர்ந்தது; மானம் அற்றது - மானம் ஒழிந்தது; நாண் அழிந் தது - நாணம் இலதாயிற்று; (ஆதலால்) என்னுடைய வாழ்வு - என துயிர்வாழ்க்கை, இனி - மேல்வருங்காலத்தில், மற்று உன் வாய் உடை யது - உனது வாயையுடையதா யிருக்கின்றது, என்றான் - என்று (அன்னத்தை நோக்கிச்) சொல்லினான், எ-று.

(வி-ரை.) *தமயந்தியை அடைவதற்கு என் முயற்சியாலாவதொன் றில்லை, அவளைப் பெறுவிடின் உயிர் நீங்குவேன் என்பான் 'என்னு டைய வாழ்வு உன்வாயுடையது' என்றான். இற்றது-ஒன்றன்படர்க்கை இறந்தகாலவினைமுற்று; இறு-பகுதி, அ-சாரியை, து-ஒன்றன்படர்க்கை விகுதி, பகுதி முற்றியலுகரமாதலால் அதன் மெய்யிரட்டல் விரித்தல் விகாரம், அதுவே காலங்காட்டியது, உகரக்கேடு சந்தி; இம்முதனிலை யோடு தல் விகுதி புணர்ந்து கெட்டமாத்திரையில் ஈறு எனவரும்; இது முதனிலை திரிந்த தொழிற்பெயர்; இதுபோலப் பெறுதல் பேறு, உறுதல் ஊறு எனவும், விடுதல் வீடு, படுதல் பாடு எனவும் வரல் காண்க. ஈறென்பதினின்றும் இறு என்னும் முதனிலை பிறந்ததென் னில், பேறுமுதலியன பிறந்தன எனல்வேண்டும் ஆதலால் அது குற்ற மென்க. மானம் - உயர்குடியில் பிறந்தவன் தன்னிலையில் தாழாமை யும், தாழ்வுவந்தபோது உயிர்வாழாமையுமாம். நாண் - தனக்குத் தகாத கருமத்தில் மனம் கூசுதலுடையனாந்தன்மை; இது முதனிலைத்தொ ழிற்பெயர். என்னுடைய என்பதில் உடைய என்பது ஆறாவதன்சொல் லுருபிடைச்சொல்; முதலிலுள்ள உடையதென்பதும், ஈற்றிலுள்ள உடைய என்பதும் முறையே குறிப்புவினைமுற்றும், அப்பெயரெச்சமு மாம். உடையான் - அவ்வினைப்பெயரே; பண்படியாகப் பிறந்த பெய ரன்று. மற்று - வினைமாற்றுப் பொருளது.* (௩அ)

* வீமன் றிருமடந்தை மென்முலையை யுன்னுடைய
வாம நெடும்புயத்தே வைகுவிப்பேன் - சேம
நெடுங்குடையா யென்றுரைத்து நீங்கியதே யன்னம்
ஒடுங்கிடையா டன்பா லுயர்ந்து.

(இ-ள்.) சேமம் - (தன்னிழலால் உயிர்களுக்கு) இன்பத்தைச் செய்கின்ற, நெடு குடையாய் - பெருங்குடையையுடைய அரசனே, வீமன் திருமடந்தை - வீமராசனுடைய செல்வப்புத்திரியினது, மெல் முலையை - மென்மையாகிய முலைகளை, உன்னுடைய வாமம் நெடு

புயத்தே - உன்னுடைய அழகிய நீண்ட தோள்களினிடத்தே, வைகு விப்பேன் - தங்குவிப்பேன், என்று உரைத்து - என்றுசொல்லி, அன்னம் - அன்னமானது, ஒசிந்து இடையாள்தன்பால் - சுருங்கிய இடையை யுடைய தமயந்தியினிடத்து, உயர்ந்து - உயரத்தில் பறந்து, நீங்கியது - சென்றது, எ-று.

(வி - ரை.) மடந்தை மென்முலையை யுன்னுடைய புயத்தே வைகுவிப்பே னென்பதற்கு அவள் உன்னையே மணஞ் செய்துகொள் ளும்படி செய்விப்பேனென்பது கருத்து. உயிர்களை முறைவழுவாமல் இனிது காக்கும் நீதியையுடையாய் ஆதலால் நீ எண்ணியது எளிதில் கைகூடுமென்னுங் கருத்தால் 'சேமநெடுங் குடையால்' என்றது. வைகு விப்பேன் - பிறவினையாகிய தன்மையொருமை எதிர்கால வினைமுற்று; வைகு - பகுதி, வி - பிறவினைப்படுத்தும் விகுதி, அனைத்து மொரு பகுதி, ப் - எதிர்கால இடைநிலை, என் - தன்மை யொருமை விகுதி. ()

இவ்வளவிற் செல்லுங்கொ லிவ்வளவிற் காணுங்கொ
லிவ்வளவிற் காத லியம்புங்கொ - லிவ்வளவின்
மீளுங்கொ லென்றுரையா விம்மினான் மும்மதநின்
றாளுங்கொல் யானை யரசு.

(இ - ள்.) மும்மதம் உம் நின்று - மூன்று மதங்களும் நிலைத்து, ஆளும் - ஆளுகின்ற, கொல் யானை - கொல்கின்ற யானைச்சேனையை யுடைய, அரசு - நளன், (என்னினீங்கிய அன்னம்) இவ்வளவில் - இவ்வளவுக் காலத்தில், செல்லுங்கொல் - (குண்டினபுரத்தில்) போயி ருக்குமோ, இவ்வளவில் - இவ்வளவுக்காலத்தில், காணுங்கொல் - (தம யந்தியைக்) காணுமோ, இவ்வளவில் - இவ்வளவுக்காலத்தில், காதல் - எனது ஆசையை, இயம்புங்கொல் - சொல்லுமோ, இவ்வளவில் - இவ் வளவுக்காலத்தில், மீளுங்கொல் - [illegible], என்று உரையா என்று சொல்லி, விம்மினான் - [illegible], எ-று.

(வி - ரை.) மும்மதம் ஆளுதலாவது தம்வசப்படுத்திக்கொள்ளல். இவ்வளவென்றது தன்னால் குறித்துக்கொள்ளப்பட்ட காலம். அள வென்னும் பண்புப்பெயர் காலத்துக்கானமையால் பண்பாகுபெயர். கொல் என்பன ஐயப்பொருளன. உரையா-உரையாநின்றென்னும் நிகழ் கால வினையெச்சத்தின் திரிபு. கொல்யானை - முக்கால வினைத்தொகை நிலைத்தொடராகக்கொள்க. அரசு - பண்பாகுபெயர். மும்மதமென்பத னீற்றில் முற்றும்மை விகாரத்தால் தொக்கது. (௫௦)

சேவல் குயிற்பெடைக்குப் பேசுஞ் சிறுகுரல்கேட்
டாவி யுருகி யழிந்திட்டான் - பூவி
னிடையன்னஞ் செங்கா லிளவன்னஞ் சொன்ன
நடையன்னந் தன்பா னயந்து.

(இ - ள்.) பூவினிடை-செந்தாமரைமலரி லெழுந்தருளிய, அன்னம் - அன்னம்போலும் திருமகளை ஒத்தவளும், செம் கால் - சிவந்த காலையுடைய, இளஅன்னம்-இளமையாகிய அன்னத்தினால், சொன்ன-சொல்லப்பட்ட, நடை அன்னந்தன்பால்-நடையில்சிறந்த அன்னத்தை யொத்தவளுமாகிய தமயந்தியினிடத்து, நயந்து - விருப்பங்கொண்டத னால், சேவல் - ஆண்குயிலானது, குயில்பெடைக்கு - பெண்குயிலி னிடத்தில், பேசும் - பேசுகின்ற, சிறுகுரல் கேட்டு - மெல்லிய ஓசை யைக் கேட்டு, ஆவி உருகி-உயிருருகி, அழிந்திட்டான்-அறிவழிந்தான், எ-று.

(வி - ரை.) சேவற்குயில் பெடைக்குயிலினிடத்துப் பேசுமொலி யைக் கேட்டமாத்திரையில் தான் தமயந்தியை மணந்து இவ்வாறு பேசு வதற் கில்லையேயென்று கலங்கினனென்பது கருத்து. ஆவியுருகுத லுக்கும் அழிதலுக்கும், நயந்து கேட்டென்னும் இரண்டெச்சமும் காரணமாய் நின்றன. குரல் - கருவியாகுபெயர். முதலிலும், ஈற்றிலு முள்ள அன்னம் உவமையாகுபெயர். உயிர்களைக் காக்குந் தொழில் பற்றி அரசனை இறைவனாகக் கூறல் மரபாதலால், நளனுக்கு இனித்

தமயந்தி மனைவியாதலைக் கருதி, அவளைத் 'திருமகள்' என்றார். இளை அன்னஞ்சொன்ன நடை அன்னமென்றது "பைந்தொடியாள் பாத நடை கற்பான் வந்தடைந்தோம்" என்றதைக் குறிப்பித்தற்கு. அழிந்திட்டான்-ஆண்பாற்படர்க்கை இறந்தகால வினைமுற்று; அழி - பகுதி, த்-சந்தி, து-சாரியை, இடு - பகுதிப்பொருள்விகுதி, தகரம் நகரமாதல் மெலித்தல், உகரக்கேடு சந்தி, அனைத்துமொருபகுதி, ஆன்-ஆண்பால் படர்க்கைவிகுதி, பகுதி ஒற்றிரட்டலும் உகரக்கேடும் சந்தி, ஒற்றிரட்டலே காலங்காட்டியது. (௩௪)

> அன்ன முரைத்த குயிலுக் கலசுவான்
> மென்மயிறன் றோகை விரித்தாட - முன்னதனைக்
> கண்டாற்றா துள்ளங் கலங்கினான் காமநோய்
> கொண்டார்க்கி தன்றோ குணம்.

(இ - ள்.) அன்னம் - அன்னத்தினால், உரைத்த-சொல்லப்பட்ட, குயிலுக்கு - குயிலினால், அலசுவான் - தளரும் நளன், மெல் மயில் - மென்மையாகிய மயிலானது, தன் தோகை-தனது கலாபத்தை, விரித்து ஆட-பரப்பி ஆடாநிற்க, அதனை முன்கண்டு - அம்மயிலை எதிரில்கண்டு, ஆற்றாது - சகிக்காமல், உள்ளம் கலங்கினான் - மனநிலை கலங்கினான்; காமநோய் கொண்டார்க்கு - காமநோயைக் கொண்டவர்க்கு, குணம்-தன்மை, இது அன்றோ - இப்படிக் கலங்குதலே ஆம், எ-று.

(வி-ரை.) தன்பெடையைக் களிப்பிக்கும்பொருட்டு மயிற்சேவல் ஆடுவதைக் கண்டபோது, இவ்வாறு தான் தமயந்தியை மகிழ்விப்பதற் கில்லையேயென்று கலங்கினனென்பது கருத்து. குயிலுக்கென்னும் நான்கனுருபு மூன்றுவதன் ஏதுப்பொருளில் வந்தது. கொண்டார்க்கென்பது நேர்ச்சிப்பொருளது; ஆறுவதன் தற்கிழமைப்பொருளில் வந்ததெனினும் பொருந்தும். உள்ளங்கலங்கினான் - திணைவழுவமைதி [நன்-பொது - ௬ - ௨௬]. விரித்து - பிறவினையாகிய செய்தென் வாய்

பாட் டிறந்தகால வினையெச்சம்; விரி - தன்வினை பிறவினைகளுக்குப் பொதுவாகிய பகுதியாயினும் இங்குப் பிறவினைக்குரியதாய் நின்றது; த்-சந்தி, த்-இறந்தகால இடைநிலை, உ-வினையெச்சவிகுதி. காமநோய்-இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடர். அன்று-பண்படியாகப்பிறந்த ஒன்றன்படர்க்கைக் குறிப்புவினைமுற்று; அல் - பகுதி, று-ஒன்றன்படர்க்கை விகுதி, லகரம் றகரமாதல் சந்தி, அது னகரமாதல் மெலித்தல் விகாரம். ஓ-எதிர்மறை. இரண்டெதிர்மறை இணைந்து வருதல் தேற்றப்பொருள் தருதற்கென்க. இது வேற்றுப்பொருள் வைப்பென்னும் அணி. (சஉ)

* வாரணியுங் கொங்கை மடவா ணுடங்கிடைக்குப்
பேருவமை யாகப் பிறந்துடையீர் - வாரீர்
கொடியா ரெனச்செங்கை கூப்பினா னெஞ்சந்
துடியா நெடிதுயிராச் சோர்ந்து.

(இ - ள்.) நெஞ்சம்-மனம், துடியா - துடித்து, நெடிது உயிரா - பெருமூச்சுவிட்டு, சோர்ந்து - தளர்ந்து, கொடியார் - பூங்கொடியாரே, வார் அணியும் - கச்சை அணிந்துள்ள, கொங்கை - ஸ்தனங்களையுடைய, மடவாள்-தமயந்தியினுடைய, நுடங்கு இடைக்கு-துவளுகின்ற இடைக்கு, பேர் உவமையாக - பெருமையாகிய உவமைப்பொருளாகும்படி, பிறந்து உடையீர் - பிறந்து (அப்பிறப்பின் பயனை) உடையீர், வாரீர் என-வாருங்கோளென்று, செம் கை கூப்பினான்-அகங்கைகளைக் குவித்தான், எ-று.

(வி - ரை.) உடையீரென்னும் பண்படியாகப்பிறந்த செயப்படுபொருள்குன்றாத முன்னிலைப் புன்மைக் குறிப்புவினைமுற்றாதலால் பயனென்னும் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. கொடியாரென்பது மடவாள் நுடங்கிடைக்கு உவமைபாதலாகிய உயர்வுபற்றி அஃறிணை உயர்திணையாக வந்த திணைவழுவமைதி. வாரீர் - ஏவற்பன்மை

வினை; வா-பகுதி, ரு-விரித்தல் விகாரம், இர் - எவற்பன்மை எதிர்கால விகுதி, உகரக்கேடு சந்தி. கை என்பது செம் என்னும் விசேடணத்தால் அகங்கைக்காயிற்று. மடவாள் - பண்படியாகப்பிறந்த பெயர்; மடமை-பகுதி, (இளமை அல்லது கற்பு), ஆளென்னும் பெண்பாற்படர்க்கை விகுதிப்புணர்ச்சியில் மையீறுகெட்டு, வகரமெய்தோன்றி முடிந்தது. உவமை-பண்பாகுபெயர். கூப்பினன் - பிறவினையாகிய ஆண்பாற்படர்க்கை யிறந்தகால வினைமுற்று; கூம்பு-தன் வினைப்பகுதி, மெல்லொற்று வல்லொற்றாதலாகிநின்ற கூப்பு-பகுதி, இன் - இறந்தகால இடைநிலை, ஆன் - ஆண்பாற்படர்க்கை விகுதி, உகரக்கேடு சந்தி. நெடிது - குறிப்புவினையெச்சம்; நெடுமை-பகுதி, உகர வினையெச்ச விகுதிப் புணர்ச்சியில், மையீறுகெட்டு, உகரம் இகரமாதல் சந்தி, த் - எழுத்துப்பேறு. (௩௩)

* கொங்கையிள நீரால் குளிர்ந்தவிளஞ் சொற்கரும்பால்
பொங்கு சுழியென்னும் பூந்தடத்தின் - மங்கைநறுங்
கொய்தாம வாசக் குழனிழற்கீ ழாறேனோ
வெய்தாமக் காம விடாய்.

(இ - ள்.) மங்கை - மங்கைப்பருவத்தையுடைய தமயந்தியினது, கொங்கை இளநீரால் - முலைகளாகிய இளநீரினாலும், குளிர்ந்த இள சொல் - குளிர்ச்சியாயுள்ள மெல்லிய சொற்களாகிய, கரும்பால்-கருப்பஞ்சாற்றினாலும், பொங்கு - (அழகு) மிகுகின்ற, சுழி என்னும்-உந்தியென்று சொல்லப்படும், பூ தடத்தில் - தாமரைமலர்த் தடாகத்திலும், நறு - நல்ல, கொய் - (அப்போது) பறித்த, தாமம் - மலர்மாலையணிந்த, வாசம் - மணமாகிய, குழல் நிழற்கீழ் - கூந்தலாகிய சோலைநிழலிலும், வெய்து ஆம்-வெப்பமுடையதாகிய, அக் காமவிடாய்-தமயந்தியாலடைந்த காமத்தினது விடாயை, ஆறேனோ-ஆற்றிக்கொள்ளேனோ, எ - று.

(வி-ரை.) சுழி-தொழிலடியாகப் பிறந்த பெயர்; சுழி-பகுதி, இ-வினைமுதற்பொருண்மை விகுதி புணர்ந்துகெட்டது; தொழிலாகுபெய

ரெனினும் பொருந்தும். நிழலென்பதனால் சோலையென்பது விளங்குத லால் 'குழனிழல்' என வாளா கூறினர். இளநீர்-பண்புத்தொகைப் புறத் துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர்; பொருள்: சுவை முதிராத நீரையுடைய காயென்பது. ஓ - இரக்கப்பொருளது. அ என் னுஞ்சுட்டு காமத்தின் கொடுமையைச் சிறப்பித்தற்கண் வந்தது. வெய் து-பண்படியாகப்பிறந்த ஒன்றன்படர்க்கைப்பெயர்; வெம்மை - பகுதி, து - ஒன்றன்படர்க்கை விகுதி, மையீறுகெட்டு, முன்னின்ற மெய் யாகிய மகரம் யகரமெய்யாகத் திரிந்து, முடிந்தது. விடாயாறுதற்குரிய இளநீரும், கரும்பும், பூந்தடமும், குழனிழலும் தம்மு ளியைபுடை யனவாயிருத்தலால் இது இயைபுருவகம். (௪௪)

மன்னன் விடுத்த வடிவிற் றிகழ்கின்ற
அன்னம்போய்க் கன்னி யருகணைய - நன்னுதலுந்
தன்னுடல் விட்டுத் தனியிடஞ்சேர்ந் தாங்கதனை
யென்னுடல் சொல்லென்று ளீங்கு.

(இ - ள்.) மன்னன் விடுத்த - அரசன் அனுப்பிய, வடிவின் திகழ்கின்ற - அழகினால் விளங்குகின்ற, அன்னம் போய் - அன்னம் சென்று, கன்னி அருகு - தமயந்தியின் சமீபத்தில், அணைய - சேர, நன்னுதலும் - நல்லநெற்றியையுடைய தமயந்தியும், தன் ஆடல் விட்டு- தன் விளையாட்டைவிட்டு, தனி இடம் சேர்ந்து - ஒருவருமில்லாத இடத்தில்போய், ஆங்கு - அவ்விடத்து, அதனை - அவ்வன்னத்தை, என் - எப்பொருளை, ஈங்கு நாடல் - இங்கேதேடுதல், சொல் என்றாள்- சொல்லென்று கேட்டாள், எ - று.

(வி - ரை.) தமயந்தி தன் ஆடலை விடுதலுக்கும், தனியிடஞ்சேர்த லுக்கும் சிறந்த வடிவுகாரணமென்பது விளங்க 'வடிவிற்றிகழ்கின்ற அன்னம்' என்றார். உம்மை-ஒருபுடை பிறந்ததுதழீஇய எச்சவும்மை. நன்னுதல் - பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக்

காரணப்பெயர். என்-வினைப்பெயர். தனியிடம்-ஒருவருமில்லாத இடம்; இது பண்புத்தொகைநிலைத்தொடர்; விரிந்தால் தனிமையான இட மென விரியும். விடுத்த - தன்வினையாகிய இறந்தகாலப் பெயரெச்சம்; விடு-பகுதி, த்-சந்தி, த் இறந்தகால இடைநிலை, அ-பெயரெச்சவிகுதி; இடைநிலை பெறாமல், பகுதியொற் றிரட்டிவிட்ட எனவும் வரும். ஆங் கென்னும் சுட்டடியாகப் பிறந்த பெயர்ப்பகுபதம் என்றானென்னும் வினை கொண்டது. ஈங்கென்னும் அப்பெயர்ப்பகுபதம் நாடலென்னும் தொழிற்பெயர் கொண்டது. சுட்டுப்பெய ரிரண்டில் முன்னது கவி கூற்று; பின்னது இவன் கூற்று. நாடலென்பதனைத் தொழிலாகு பெயரெனக்கொண்டு நாடும் பொருளென உரைப்பினும் பொருந்தும். அவ்வாறு கொள்கையில் என் குறிப்புவினைமுற்று. என்னுட லென் பதற்கு என்னைக் குறிப்பாக நோக்குதலை என உரைப்பினும் பொருந் தும். (சஙு)

செம்மனத்தன் றண்ணளியன் செங்கோலான் மங்கையர்கள்
தம்மனத்தை வாங்குந் தடந்தோளான் - மெய்ம்மை
நளனென்பான் மேனிலத்து நானிலத்து மிக்கான்
உளனென்பான் வேந்த னுனக்கு.

(இ-ள்.) உனக்கு வேந்தன்-உனக்குத் தலைவன், செம்மனத்தன் - நடுநிலைமையுள்ள மனமுடையானும் தண் அளியன் - குளிர்ச்சியாகிய கருணையுடையானும், செங்கோலான்-செங்கோலுடையானும், மங்கை யர்தம் மனத்தை - மங்கைப்பருவமுடைய மாதர்களது மனத்தை, வாங்கும் - தம்வசப்படுத்திக்கொள்ளும், தடவுத்தோளான் - பெருமை யாகிய தோள்களையுடையானுமாகிய, மெய்ம்மை - சத்தியத்தையுடைய, நளன் என்பான் - நளனென்று சிறப்பித்துச் சொல்லப்படுவான், மேல் நிலத்தும் - சுவர்க்கலோகத்தாரிலும், நால் நிலத்தும் - பூமியிலுள்ளார் களிலும், மிக்கான் - சிறந்து, உளன் - இருக்கின்றனன், எ-று.

(வி - ரை.) சோர்வை ஒருபக்கத்தில் சாய்தலின்மை; அது இந்த நடுநிலைமைக்காயிற்று. வேந்தனென்றது ஆளுந்தலைவனை. உனக்கென்னும் நான்கனுருபு தகுதிப்பொருளது; பொருட்பிறிதின்கிழமைப் பொருளதாகிய ஆறும்வேற்றுமையெனின், ஆறுவதன் எச்சப்பெயர் முதலில் வாராதாதலால் உனக்கு வேந்தனெனக் கொண்டு கூட்டுக. செங்கோல் - செம்மையாகிய கோல்போலக் குடிகளை ஆளும் முறைமை. நிலம் - இடவாகுபெயர். என்பான் - செயப்பாட்டு வினைமுற்று; என் பகுதி, ன்-சந்தி, அ-சாரியை, ப்-சந்தி, படு செயப்பாட்டு வினைப் பொருண்மை விகுதி, அனைத்து மொருபகுதி, வ்-எதிர்கால இடைநிலை, ஆன் ஆண்பாற்படர்க்கை விகுதி; இவ்வாறு முடிந்தசொல் படு விகுதி தொகுத்தலாகியது. இவ்வினைமுற்றும், மிக்கானென்னும் இறந்தகால வினைமுற்றும் வினையெச்சமாயின. இரண்டாவது என்பான் அசைநிலை; "பற்றறப்படிப்பதன்றன், பேரென்பானவன் செய்மாயப்பெரும் பிணக்கொருங்கு தேர்வான், ஆரென்பா னமலமூர்த்தி" எனக் கம்பநாடர் செய்யுளாலுங் காண்க. நானிலம் - பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர்; விரிந்தால் நான்காகிய நிலங்களையுடையதென விரியும்; நிலம் ஐந்தனுள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் இவற்றில் நன்மக்கள் வசித்தலின், மறவர்க்கிடமாகிய பாலையை ஒழித்து, நிலநான்கையே சிறப்பாகக் கொண்டனராதலின் பூமி 'நானிலம்' எனப்பட்டது. (சக)

அறங்கிடந்த நெஞ்சு மருளொழுகு கண்ணு
மறங்கிடந்த திண்டோள் வலியுந் - திறங்கிடந்த
செங்கண்மா லல்லனேற் றேர்வேந்த ரொப்பரோ
அங்கண்மா ஞாலத் தவற்கு.

(இ - ள்.) அம் கண் - அழகிய இடமகன்ற, மா ஞாலத்தவற்கு - பெரிய பூமியையுடைய நளனுக்கு; அறம் கிடந்த - அறம் தங்கிய, நெஞ்சம் - மனத்தினும், அருள் ஒழுகு - கருணை பெருகி வழிகின்ற

கண்ணும்-கண்களினாலும், மறம் கிடந்த-வீரம் தங்கிய, திண் தோள்-வன்மையாகிய தோள்களினது, வலியும் வலியினாலும், திறம் கிடந்த-இவ்வகைத் தன்மைகளுள்ள, செம்கண் மால்-செந்தாமரைமலர்போன்ற கண்களையுடைய திருமால் ஒப்பாவான், அல்லன் எல்-ஒப்பாகானாயின், தேர் வேந்தர் தேரரசர்கள், ஒப்பரோ-ஒப்பாவார்களோ, எ-று.

(வி - ரை.) நெஞ்சு, கண், வலி என்பவற்றினீற்றில் மூன்றனுருபு தொகுத்தல்; தொகையன்று. செங்கண்-ஓர் குறிப்பு [நன்-பொது-சூ-நி]. மால்-பண்பாகுபெயர்; அடியார்பக்கல் மிக்க ஆசையுடையான்; எல்லாப் பொருள்களிலும் பெரியோன் என்பன பொருள். எல்-எனி லென்பதன் மரூஉ; இது தானடுத்த வினைமுற்றை வினையெச்ச மாக்கும். ஒப்பர்-உவமையிடைச்சொலடியாகப் பிறந்த எதிர்கால வினை முற்று; ஒ-பகுதி, ப்-சந்தி, ப்-எதிர்கால இடைநிலை, அர் - பல்லோர் படர்க்கை விகுதி. ஓ-எதிர்மறை. ஞாலத்தவன்-இடமடியாகப்பிறந்த பெயர்; ஞாலம்-பகுதி, அத்து, அ-சாரியை, அன்-ஆண்பாற் படர்க்கை விகுதி, பகுதியீற்று மகரமும், அத்துச்சாரியையின் முதல் அகரமும், ஈற்றுகரமும் கெடுதலும், வகரமெய் தோன்றலும் சந்தி. நளன்-சக்கர வர்த்திகளி லொருவனாதலால் 'ஞாலத்தவன்' என்றார். குவ்வுருபு ஒப்புப்பொருளது. நெஞ்சு-இடவாகுபெயர். (சுஎ)

புள்ளின் மொழியினொடு பூவாளி தன்னுடைய
வுள்ளங் கவர வொளியிழந்த - வெள்ளை
மதியிருந்த தாமென்ன வாய்ந்திருந்தாள் வண்டின்
பொதியிருந்த மெல்லோதிப் பொன்.

(இ-ள்.) வண்டின் பொதி - வண்டின் கூட்டம், இருந்த - தங்கிய, மெல் ஓதி - மென்மையாகிய கூந்தலையுடைய, பொன் - பொன்னை யொத்த தமயந்தி, புள்ளின் - அன்னப்பறவையினது, மொழியினொடு-சொல்லோடு, பூ வாளி - (மன்மதனுடைய) மலராகிய அம்பு, தன்னுடைய உள்ளம் - தன் மனத்தை, கவர - கொள்ளை கொண்டதனால்

ஒளி இழந்த-ஒளியை இழந்துவிட்ட, வெள்ளை மதி - வெண்மையாகிய சந்திரன், இருந்தது என்ன - (அசைவற்று) இருந்ததுபோல, வாய்ந்து- (இளமை நிறம் இழத்தல்) அமைந்து, இருந்தாள் - அசைவற்று நின்றனள், எ - று.

(வி - ரை.) மனம் நளன்மேற்கொண்ட ஆசையின் வசப்படுதலும் உடல் வாடி, செயலற்றுளென்பது கருத்து. கவர - காரணப்பொருட்டாகிய இறந்தகாலச் செயவெனெச்சம். ஆம் - அசைச்சொல். வாளி- பண்படியாகப்பிறந்த ஒன்றன் படர்க்கைப்பெயர்; வாள் - பகுதி, இ - ஒன்றன்படர்க்கைவிகுதி. தன்னுடைய உள்ளம் - சினைத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறும்வேற்றுமைத் தொகாநிலைத்தொடர்; உடைய வென்பது ஆறும்வேற்றுமைச் சொல்லுருபு. அவனுடைய விறலியர் என்பதை முன்றுசொல், முன்னது எழுவாய்த் தொகாநிலைத்தொடரும், பின்னது குறிப்புப்பெயரெச்சத் தொகாநிலைத்தொடருமென இரண்டு சந்தி யென்பாருமுளர் ; அவர்க்குத் தன்னுடைய வுள்ள மென்ப தியையாமை காண்க; இதில் தன்னையுடைய எனப் பொருள் கொண்டு இரண்டாம்வேற்றுமைச் சந்தியெனின் முதல் உடையதும், சினை உடைமையுமாகக் கொள்ளுதலே மரபாதலால் என்னலாகாதென்க. உள்ளத்தைக் கவர்வதில் புள்ளின்மொழி முற்பட்டதாதலால், அதற்கு ஒடுவுருபு தந்துகூறினர். வெள்ளை - பண்புப்பெயர்; வெள்-பகுதி, ள்- சந்தி, ஐ - பகுதிப்பொருள்விகுதி; பச்சை, தொல்லை என்பனவும் அவ்விகுதியன. பொதி - முதனிலைத்தொழிற்பெயர்; (பொதிதல் - நிறைதல்); அது தொழிலாகுபெயராய் நின்றது. பொன் - உவமையாகு பெயர். (சஅ)

* மன்னன் மனத்தெழுந்த மையலோ யத்தனையும்
அன்ன முரைக்க வகமுருகி - முன்ன
முயங்கினாள் போற்றன் முலைமுகத்தைப் பாரா
முயங்கினா ளென்செய்வாள் மற்று.

(இ - ள்.) மன்னன் மனத்து - (தமயந்தியைக்குறித்து) நளராச னது மனத்தில், எழுந்த - தோன்றிய, மையல் நோய் அத்தனையும் - ஆசைநோயவ்வளவையும், அன்னம் உரைக்க - அன்னம் சொல்லிய தனுல், அகம் உருகி - மனம்கரைந்து, முன்னம் - அன்னம் சொல்வ தற்குமுன்னே, முயங்கினுள்போல - தழுவினவள்போல, தன் முலை முகத்தைப் பாரா - தன்முலைகளினது முனையைப்பார்த்து, மயங்கி னுள் - அறிவுகுலைந்தாள்; மற்று என்செய்வாள் - வேறு யாதுசெய் வாள், எ-று.

(வி - ரை.) காதல் பெருகியதனுல், இதற்குமுன் தழுவினவள் போல முலைமுகத்தைப் பார்த்து, அத்தழுவியகுறி சிறிதுங் காணப் படாமையால், இதற்குக் காரணம் யாதோவென்று மயங்குவாளாயினு ளென்க. உம்மை முற்றுப்பொருளதாதலால் அத்தனை எஞ்சாமைப் பொருளது. போல - போலென்னும் உவமை யிடைச்சொலடியாகப் பிறந்தசெயவெனெச்சம்; இதில் அகரவிகுதிதொகுத்தலாயிற்று. என் - எவனென்பதன் மரூஉ அன்று, வினுப்பெயர். மற்று - பிறிதென்னும் பொருளது. (சக)

வாவி யுறையு மடவனமே யென்னுடைய
ஆவி யுவந்தளித்தா யாதியாற் - காவினிடைத்
தேர்வேந்தற்கென்னிலைமை சென்றுரைத்தி யென்றுரைத்தாள்
பார்வேந்தன் பாவை பதைத்து.

(இ - ள்.) பார் வேந்தன் - குண்டினபுரத்து அரசனுடைய, பா வை - மகளாகிய தமயந்தி, பதைத்து - பதறி, வாவி உறையும் - தடா கத்தில் வசித்தலுள்ள, மட அன்னமே - இளமையாகிய அன்னமே, சென்று - நீபோய், காவினிடை-சோலையினிடத்தில், தேர் வேந்தற்கு - தேரையுடைய அரசனுகிய நளராசனுக்கு, என் நிலைமை-எனது இயல்பு களை, உரைத்தி - சொல்லு; (சொல்லுவாயாகுல்) என்னுடைய ஆவி-

எனதுயிரை, உவந்து - மகிழ்ந்து, அளித்தாய் ஆதி - கொடுத்தாய் ஆகிறாய், என்று உரைத்தாள் - என்று சொல்லினாள், எ-று.

(வி - ரை.) எனவே இன்னிலையை அரசனுக்குச் சொல்லாவிடின் என்னுயிரை விடுவேனென்பது குறிப்பெச்சம். நீ வசிக்குமிடத்துக்கு அவனிருக்குமிடம் தூரமானதன்றென்பாள் 'வாவியுறையு மடவனமே' என்றாள். ஆதி - முன்னிலையொருமை நிகழ்காலவினைமுற்று; ஆ - பகுதி, த்-நிகழ்கால இடைநிலை, இ - முன்னிலை யொருமைவிகுதி; த் - எழுத்துப்பேறு, இகரவிகுதியே நிகழ்காலத்தையுங் காட்டியதென்பாருமுளர். உரைத்தி - ஏவலொருமை வினை; உரை - பகுதி, த் சந்தி, த்-எழுத்துப்பேறு, இ-ஏவலொருமை எதிர்காலவிகுதி. பார் - குண்டினபுரத்தை யுணர்த்திற்று. சென்று - இறந்தகால வினையெச்சம்; செல் - பகுதி, ற் - இறந்தகால இடைநிலை, உ - வினையெச்சவிகுதி, லகரம் றகரமாதல்சந்தி, அது னகரமாதல் மெலித்தல். (௩௦)

* மன்னன் புயநின் வனமுலைக்குக் கச்சாகு
மென்ன முயங்குவிப்பே னென்றன்னம் — பின்னும்
பொருந்தவன்பா லோதிமலர்ப் பூங்கணைகள் பாய
இருந்தவன்பாற் போன தெழுந்து.

(இ - ள்.) அன்னம் - அன்னமானது, மன்னன் புயம் - நளராசனுடைய தோள்கள், நின் வனம் முலைக்கு - உன்னுடைய அழகிய முலைகளுக்கு, கச்சு ஆகும் என்ன - அணிந்த கஞ்சுகமாகுமென்று சொல்லும்படி, முயங்குவிப்பேன் என்று - அணைவிப்பேனென்று சொல்லி, பின்னும் - மேலும், பொருந்த - (அவள் மனத்தில்) பதியும்படி, அன்பால் ஓதி - அன்பினால் சொல்லி, மலர் பூங்கணைகள் பாய - மலராகிய பொலிவுள்ள அம்புகள் பாய்வதினால், இருந்தவன் பால் - ஒரு முயற்சியுமில்லாமல் இருந்த நளராசனிடத்து, எழுந்து போனது - பறந்துபோனது, எ-று.

(வி-ரை.) புயம் கச்சாததல் நீங்காதிருத்தல். என்று-இடைச்சொலடியாகப் பிறந்த இறந்தகாலவினையெச்சம்; என்-பகுதி, ற்-இறந்தகால இடைநிலை, உ-வினையெச்சவிகுதி. உம்மை-இறந்தது தழீஇய எச்சவும்மை. முயங்குவிப்பேன் - தன்மையொருமைப் பிறவினையாகிய எதிர்கால வினைமுற்று; முயங்கென்னும் தன்வினைப்பகுதியைப் பிறவினைப்படுத்தவந்த விகாரம் புணர்ந்த முயங்குவி - பகுதி, ப் - சந்தி, ப்-எதிர்கால இடைநிலை, ஏன்-தன்மையொருமை விகுதி. (௱௩)

கொற்றவன்றன் றேவிக்குக் கோமகடன் றோழியர்க
ளுற்ற தறியா வுளநடுங்கிப் - பொற்றொடிக்குப்
வேறுபா டுண்டென்றார் வேந்தனுக்கு மற்றதனைக்
கூறினாள் பெற்ற கொடி.

(இ-ள்.) கொற்றவன்தன் தேவிக்கு - வீமராசனுடைய மனைவிக்கு, கோமகள்தன் தோழியர்கள் - இராசபுத்திரியாகிய தமயந்தியினுடைய தோழிமார்கள், உற்றது அறியா - (அவளுக்கு) நேரிட்ட காமநோயைத் தெரிந்து, உளம் நடுங்கி-மனம் நடுங்கி, பொற்றொடிக்கு - பொன்வளையலணிந்த தமயந்திக்கு, வேறுபாடு உண்டு என்றார் - முன்னிலைமை மாறுதலுளதாயிற் றென்றார்கள்; அதனை - அச்செய்தியை, பெற்ற கொடி - தாயானவள், வேந்தனுக்குக் கூறினாள் - வீமராசனுக்குச் சொல்லினாள், எ-று.

(வி-ரை.) தோழியர்கள் கன்னித்தன்மை யழியாதபடி காவலிருப்பவராதலின் தமயந்தியினிடத்துண்டாகிய வேறுபாட்டைக் கண்டு உள்ளம் நடுங்குவாராயினார். கணவன்மேல் கொண்ட விருப்பமென்பதனை மறைத்து வேறுபாடென்றாராதலின் இது இடக்கரடக்கலாமென்க. முதலினும் ஈற்றிலுமுள்ள நான்கனுருபுகள் கொடைப்பொருளன. இடையிலுள்ளது ஏழாவதனிடப்பொருளது. தேவிக்கென்னும் நான்காவது என்றுமொன்னும் இடைச்சொலடியாகப் பிறந்த

இறந்தகாலப் பல்லோர்படர்க்கை வினைமுற்றைக் கொண்டது. தோழியர்கள் - பண்படியாகப் பிறந்த பல்லோர் படர்க்கைப்பெயர்; தோழமை - பகுதி, இ - பெண்பாற்படர்க்கை விகுதி, மையீறும், இணையவு மென்பதனால் அகரமும் கெட்டது சந்தி, இவ்வாறு முடிந்துநின்ற தோழியென்னும் பெண்பாற்படர்க்கைப்பெயர், அர் என்னும் பல்லோர் படர்க்கை விகுதிபெற்று, விகுதிமேல் விகுதியாகக் கள் விகுதியேற்றது. உற்றது-ஒன்றன்படர்க்கை யிறந்தகால வினையாலணையும் பெயர். பொற்றொடி-மூன்றும்வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர்; பண்புத்தொகைப்புறத்துப் பிறந்ததெனினும் அமையும். வேறுபாடு - முதனிலைதிரிந்த தொழிற்பெயர்; வேறென்னும் பண்புப்பெயரை வினைப்படுத்தப் படு என்னும் வினைமுதனிலை புணர்ந்த வேறுபடு-பகுதி, தல்-விகுதி புணர்ந்து கெட்டமாத்திரையில் வேறுபாடென முதனீண்டது. கொடி-பண்படியாகப் பிறந்த பெயர்; கொடுமை - பகுதி, (வளைவு), இ - ஒன்றன்படர்க்கை விகுதி, மகர ஐகாரக்கேடும், உகரக்கேடும் சந்தி; இது இங்குப் பூங்கொடியென்க; இது உவமையாகுபெயராய்ப் பெண்ணை யுணர்த்திற்று.

> கருங்குழலார் செங்கையினால் வெண்கவரிப் பைங்கால்
> மருங்குலவ வார்முரச மார்ப்ப - நெருங்கு
> புரிவளை நின்றேங்கப் போய்ப்புக்கான் பெற்ற
> வரிவளைக்கை நல்லாண் மனை.

(இ-ள்.) கருங்குழலார் - கருமையாகிய கூந்தலையுடைய மாதர்களது, செம் கையினால் - அகங்கையினால், வெள் கவரி - வெண்மையாகிய சாமரைகளினது, பைங்கால் - குளிர்காற்று, மருங்கு உலவ - இருபக்கங்களிலும் உலாவவும், வார் - வாரால்இறுகக்கட்டிய, முரசம் ஆர்ப்ப - முரசவாத்தியம் ஒலிக்கவும், நெருங்கு-நெருங்கிய, புரி வளை - சுழிந்துள்ள சங்குகள், நின்று ஏங்க - இடைவிடாமலொலிக்கவும், போய் - நடந்து, பெற்ற - தன்னால் பெறப்பட்ட, வரி வளைக்கை -

கீற்றமைந்த வளையலணிந்த கைகளையுடைய, நல்லாள் மனை - நற்குண நற்செயல்களையுடைய தமயந்தியினது மாளிகையில், புக்கான் - புகுந்தான், எ-று.

(வி - ரை.) முதலடியின் நான்கு சீர்களின் முதலிலும் முறையே கருமை, செம்மை, வெண்மை, பசுமைவரத் தொடுத்தமையால் தொடையில் முற்றுமுரண்; அணியில் விரோதாலங்காரத்தி லொருவகை. மூன்றனுருபு ஏதுப்பொருளது. உலவமுதலிய மூன்று செயவெனெச்சத்துக்குப்போதலைக் காரணமாகக் கொள்ளின் அவை காரியப்பொருளனவாகிய எதிர்கால எச்சங்களென்க; உலவுதல் முதலிய அம்மூன்றும் நடக்கையில் போதலும் நடந்ததெனக் கொள்ளின் நிகழ்காலத்தனவென்க. பெற்ற - செயப்பாட்டு வினையாகிய இறந்தகாலப் பெயரெச்சம். (ருந)

கோதை சுமந்த கொடிபோ லிடைநுடங்கத்
தாதை திருவடிமேற் றான்வீழ்ந்தாள் - மீதெல்லாம்
காந்தாரம் பாடிக் களிவண்டு நின்றரற்றும்
பூந்தாரம் மெல்லோதிப் பொன்.

(இ - ள்.) களி வண்டு - (மதுவுண்டு) களிக்கின்ற வண்டுகள், மீது எல்லாம் - மேலிடமுழுதும், காந்தாரம் பாடி - காந்தாரமென்னும் இசையைப் பாடாநின்று, நின்று அரற்றும் - நீங்காம லொலிக்கின்ற, பூ தார் - மலர்மாலையணிந்த, அம் மெல் ஓதி - அந்த மென்மையாகிய கூந்தலையுடைய, பொன்-பொன்னையொத்த தமயந்தி, கோதை சுமந்த-பூமாலையைச் சுமந்த, கொடிபோல - பூங்கொடியைப்போல, இடை நுடங்க - இடை துவளும்படி, தாதை திருவடிமேல்-தந்தையினுடைய திருவடிமேல், தான் வீழ்ந்தாள் - தான் விழுந்து தொழுதாள், எ-று.

(வி-ரை.) தாதையென்னும் பொதுப்பெயர் இங்குப் பொதுமை நீங்கி உயர்திணையாய் நின்றது; தாதை திருவடி வருமொழித் தகரம் இயல்பானது [நன் - உயிர் - ரு - க]. கோதை சுமந்த என்பதில் நிலை

மொழி அஃறிணைப் பெயராதலாலும் இஃது இரண்டாம் வேற்றுமைத் தொகையாதலாலும், [நன் - உயிர் - சூ - கரு] இன்படி மிகாமல், [உரு-பு-சூ கசு-இன்படி] விகாரத்தியல்பாயிற்று. மீது - பண்படியாகப் பிறந்த ஒன்றன்படர்க்கைப் பெயர்; மேலுள்ள இடமென்பதுபொருள். மீதெல்லாம் - ஒருமையிற் பன்மை வந்த பால்வழுவமைதி; எல்லாம் - தனித்தனியாக எண்ணப்படும் பொருள்களின் பன்மையையுணர்த்துஞ் சொல்லாதலால் பால்வழுவமைதியாயிற்று. இஃதுணராத ஒருவர் உரிச்சொலென்பர். உரிச்சொல் பால்பகா அஃறிணைப் பெயராயிருத்தல்வேண்டுமாதலாலும், இருதிணைப்பொருளையு முணர்த்தின் ஆகு பெயராகல் வேண்டுமாதலாலும், எல்லா ஆசிரியர்களும் திணையிரண்டுக்குப் பொதுவாகிய பன்மைப்பெயராகக் கொண்டதனாலும் உரிச்சொலெனல் குற்றமாம். பாடி-பாடாநின்றென்பதன் திரிபு. (௩௪)

> பேரழகு சோர்கின்ற தென்னப் பிறைநுதன்மேல்
> நீரரும்பத் தன்பேதை நின்றாளைப் - பாராக்
> குலவேந்தன் சிந்தித்தான் கோவேந்தர் தம்மை
> மலர்வேய்ந்து கொள்ளு மணம்.

(இ-ள்.) குலவேந்தன் - சிறந்த வீமராசன், பேர் அழகு - மிகுதியாகிய அழகானது, சோர்கின்றது என்ன-பெருகி வழிகின்றதுபோல, பிறைநுதல்மேல் - பிறைச்சந்திரனை ஒத்த நெற்றியில், நீர் அரும்ப - வேர்வைநீர் தோன்றித் துளிக்கும்படி, நின்றாள் தன்பேதையை - நின்றவளாகிய தன் குமாரத்தியை, பாரா - பார்த்து, கோவேந்தர் தம்மை - கோவாகிய அரசர்களில், மலர் வேய்ந்து-(ஒருவனுக்குப்) பூமாலையைச் சூடி, கொள்ளும் மணம் - பெறுகின்ற மணத்தை, சிந்தித்தான்-நினைத்தான், எ-று.

(வி-ரை.) நெற்றியில் அரும்பிய வேர்வையினால் இவளுக்குக் கணவன் விருப்புமுளதாயிற்றென்பதை உணர்ந்து திருமணஞ் செய்தலைக் கருதினனென்பது கருத்து. நின்றாள் - பெண்பாற்படர்க்கை

இறந்தகால வினையாலணையும்பெயர். நின்றாள் பேதை-இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடர். கோவேந்தரென்பதும் அது. கோ - உயர்திணை ஆண்பால் ஒருமை பன்மைகளுக்கு வழங்கும் பெயராயினும் இங்குப் பன்மையாய்நின்றது. வேந்தர்தம்மை யென்னும் ஐயுருபை ஏழாவதாகத் திரித்துக்கொள்க. நுதல்மேல் அரும்ப என்றதனால் நீர் வேர்வைக்காயிற்று. பிறை - தொழிலடியாகப்பிறந்த பெயர்; பிற-பகுதி, ஐ - வினைமுதற்பொருண்மை விகுதி, பகுதியீற்று அகரக்கேடு கடைக்குறை; பொருள் காணப்படுதலுடையதென்பது. பேதை - பண்பாகுபெயர். மலர்-கருவியாகுபெயர்; சினையாகுபெயருமாம். (௩௩)

மங்கை சுயம்வரநா ளேழென்று வார்முரச
மெங்கு மறைகென் றியம்பினான் - பைங்கமுகின்
கூந்தன்மேற் கங்கைக் கொழுந்தோடு நன்னாடன்
வேந்தர்மேற் றூதோட விட்டு.

(இ - ள்.) பைங்கமுகின் - பசுமையாகிய கமுகமரத்தினது, கூந்தல்மேல் - பாளைகளின்மேல், கங்கைக் கொழுந்து - கங்காநதியின் நீர்க் கொழுந்து, ஓடு நல் நாடன் - ஓடுகின்ற நல்ல விதர்ப்பநாட்டையுடையான், வேந்தர்மேல் - அரசர்களிடத்து, தூது - தூதுவர்கள், ஓட விட்டு - விரைந்துசெல்லும்படி அனுப்பி, மங்கை - தமயந்தியினது, சுயம்வரநாள் - சுயம்வரத்தைக் குறித்தநாள், ஏழ் என்று - ஏழாநாளென்று, வார் முரசம் - வாரால்இறுக்கிய முரசத்தை, எங்கும் - நகர்முழுமையும், அறைக என்று - கொட்டுங்கோளென்று, இயம்பினான் - (வள்ளுவர்களுக்குச்) சொல்லினான், எ-று.

(வி - ரை.) சுயம்வரம் - ஒரு பெண் ஒருவனைக் கணவனாகக் கோரிக்கொள்ளுதல். ஏழ் - எண்ணலளவையாகுபெயர்; ஏழென்றென்பதை ஏழு என்று என உகரவீற்றதாகப் பிரிப்பினும் பொருந்தும். கூந்தல், கொழுந்து - உவமையாகுபெயர்; கொழுந்து - ஓடுநீரின்முனை.

தூது - பண்பாகுபெயர். எங்குமென்பதில் உம்மை முற்றும்மை யாதலால் எகரவினு எஞ்சாமைப்பொருளது. அறைக என்னும் வியங் கோளின் ஈறுதொகுத்தல். வேந்தர்களுக்குத் தூதுஉரை யனுப்பியது தன் பெண்ணின்மேல் விருப்பங்கொண்ட அரசர்கள் வரவும், எங்கும் முரசு அறைக என்றது நகரத்துள்ளார் நகரை அலங்கரிக்கவும் ஆம். ()

மாமுத்த வெண்குடையான் மால்களிற்றன் வண்டிரைக்
தாமத் தரிச்சந் திரன்சுவர்க்கி - நாமத்தார் [கும்
பாவேய்ந்த செந்தமிழா மென்னப் பாந்ததே
கோவேந்தர் செல்வக் குழாம்.

(இ - ள்.) மா முத்தம் - பெருமுத்துகளாற் செய்யப்பட்ட, வெள் குடையான் - வெண்கொற்றக் குடையையுடையானும், மால் களிற்றன் - மதமயக்கத்தையுடைய யானைச்சேனையை யுடையானு மாகிய, வண்டு இரைக்கும் - வண்டுகள் ஒலிக்கின்ற, தாமத்து - மலர் மாலையணிந்த, அரி - இந்திரனை ஒத்த, சந்திரன் சுவர்க்கி - சந்திரன் சுவர்க்கியினது, நாமத்து ஆர் - பெயரைப் பொருந்திய, பா வேய்ந்த - செய்யுள்களை அழகாகச்செய்த செந்தமிழ் என்ன - செந்தமிழைப் போல, கோ வேந்தர் - சோவாகிய அரசர்களது, செல்வக்குழாம் - சிறப் பாகிய கூட்டம், பாந்தது - பாவி எழுந்தது, எ-று.

(வி - வை.) திருவேங்கடம், குமரியாறு, கீழ்கடல், குடகாடு என்னும் நான்செல்லைக்குள் சந்திரன் சுவர்க்கிமேல் செய்த செய்யுள் வழங்கும் செந்தமிழ் பெருகி யெழுந்தாற்போலச் சுயம்வரத்தைக்குறி த்து அரசர் கூட்டம் எழுந்ததென்க இது எடுத்துக்காட்டுவமை பா - வெண்பா, ஆசிரியப்பா கலிப்பா, வஞ்சிப்பாவை யுணர்த்தும் சிறப்புப் பெயராகாமல் செய்யுளென்னும் பொதுப்பெயராய்நின்றது; "காட்டிய யாப்புத் தூக்குக் கவிசெய்யுள் கவிதை பாவே, பாட்டெனப் பகும்" என்னும் நிகண்டாலு முணர்க; இது முதனிலைத் தொழிலாகுபெயர்;

தொழிலடியாகப் பிறந்த பெயருமாம்; பா - பகுதி (பாவுதல்), இ-வினைமுதற்பொருண்மை விகுதி புணர்ந்துகெட்டது; பாவுதலுடையதென்பது பொருள். ஆம் - அசை. குழாம்-பண்பாகுபெயர். முத்தமென்பதில் அம் சாரியை. மூத்தவெண்குடை என்பதற்கு முத்துக்குச்சுகளமைந்த வெண்குடை யெனினும் பொருந்தும்; முத்தம் - கருவியாகுபெயர். (௫௭)

> செந்தடையும் வண்டுறைதார்ச் செய்யாள் வளர்மார்பன்
> கந்தடையும் வேழக் கடைத்தலைவாய் - வந்தடைந்த
> பூவேந்தர் தங்கள்கிளை பொன்னகரி லீண்டிற்றே
> கோவேந்தன் மாதைக் குறித்து.

(இ - ள்.) செந்து அடையும் - புஷ்பத்தின் பராகம் படிகின்ற, வண்டு உறை - வண்டுகள்வசிக்கின்ற, தார் - மலர்மாலையணிந்த, செய்யாள் - திருமகள், வளர் மார்பன்-தங்குகின்ற மார்பையுடைய விதர்ப்பராசனது, கந்து அடையும்-கட்டுத்தறியை அடைகின்ற, வேழம் யானைகளையுடைய, கடைத்தலைவாய் - தலைவாயிலில், கோ வேந்தன் - கோவேந்தனாகிய அவ்வீமராசனது, மாதைக்குறித்து - மகளைக்கருதி, வந்து அடைந்த - வந்து சேர்ந்த, பூவேந்தர் தங்கள்கிளை - பூமியிலுள்ள அரசர் கூட்டம், (தலைவாயிலிடம்பெறாமல்) பொன் நகரில்-அழகிய குண்டினபுரத்தில், ஈண்டிற்று - நெருங்கியது, எ - று.

(வி-ரை.) செந்து-அணு; அது பூந்துகளின்மேலது. செய்யாள்-பண்படியாகப் பிறந்தபெயர்; செம்மை - பகுதி, ஆள்-பெண்பால்விகுதி, "ஈறுபோதல்" என்பதனால் மைகெட்டு, "முன்னின்ற மெய்திரிதல்" என்பதனால் பகுதியீற்று மகரம் யகரமாகி, "தனிக்குறில் முன்னொற்று உயிர்வரின் இரட்டும்" என்பதனால் யகரம் இரட்டி முடிந்தது. செம்மை-நடுநிலைமை; தீமையுள்ள இடத்துச் சேராளென்பதும்பொருள். கடைத்தலை - இலக்கணப்போலி. தாரென்னும் விசேடணம் மார்புக்

காக்குக. ஈண்டிற்று-ஒன்றன்படர்க்கை இறந்தகாலவினைமுற்று; ஈண்டு-பகுதி, இன் - இறந்தகால இடைநிலை, று - ஒன்றன்படர்க்கை விகுதி, உகரக்கேடும் னகரத்திரிபும் சந்தி. (௫௮)

புள்ளுறையுஞ் சோலைகளும் பூங்கமல வாவிகளும்
உள்ளும் புறமு மினிதுறைந்தார் - தெள்ளரிக்கட்
பூமகளைப் பொன்னைப் பொருவேல் விதர்ப்பன்றன்
கோமகளைத் தம்மனத்தே கொண்டு.

(இ-ள்.) தெள் - குற்றமற்ற, அரி - செவ்வரிகளைப் பொருந்திய, கண் - கண்களையுடைய, பூமகளை - திருமகளை ஒத்தவளை, பொன்னை - பொன்னை ஒத்தவளை, பொரு - போர்செய்கின்ற, வேல் - வேலைத் தாங்கிய, விதர்ப்பன்தன் - விதர்ப்பராசனுடைய, கோமகளை - சிறந்த புத்திரியை, தம்மனத்துக்கொண்டே-தம்மனத்தில் அடையப்பெற்றே, புள் உறையும் - பறவைகள் வசிக்கின்ற, சோலைகளும் - சோலைகளிலும், பூங்கமல வாவிகளும் - தாமரைமலர்களையுடைய தடாகங்களிலும், உள்ளும் - (சிலர்) உள்ளிடத்தும், புறமும் - (சிலர்) புறத்திடத்தும், இனிது உறைந்தார் - சுகமாய் வசித்தார்கள், எ-று.

(வி - ரை.) சோலைகளில் உள்ளும், வாவிகளில் புறமும் உறைந்தாரென முறை நிரனிறையாகக் கொள்க. புள்ளுறைதலை வாவிக்குங் கொள்க. முன்னுள்ள உம்மைகளிரண்டும் எண்ணுப்பொருளோடு இழிவு சிறப்பில் வந்தன. பின்னுள்ளன எண்ணுப்பொருளன. பறவைகள் வசிப்பதற்குரிய அவ்விரண்டிடங்களும் இனியன ஆதற்குக் காரணம் விதர்ப்பன்தன் கோமகளைத் தம்மனத்துக் கொண்டமை. பூமகளை, பொன்னை, கோமகளை என ஒரு பொருண்மேல் வந்தபெயர்கள் கொண்டென்னும் ஒரு முடிக்குஞ்சொல்லைக் கொண்டன. மனத்தேயென்னுந் தேற்றேகாரத்தைக் கொண்டென்பதனோடு கூட்டுக. நகரத்திடம் போதாமையால் இவ்விடங்களிலும் சிற்சிலர் வசித்தனரென்க. கொண்டு-இறந்தகால வினையெச்சம்; கொள் - பகுதி, ட் - இறந்தகால இடைநிலை,

உ - வினையெச்சவிகுதி, ளகரம் டகரமாதல் சந்தி, அது ணகரமாதல் மெலித்தல் விகாரம். இனிது - குறிப்புவினையெச்சம்; இனி - பகுதி, த் எழுத்துப்பேறு, உ-வினையெச்சவிகுதி; இது இனிமையென்னும் பண்புப்பெயரடியாகப் பிறந்தது; தெரிநிலைவினையெச்சம் இனித்தென வரும். (௫௧)

வழிமேல் விழிவைத்து வாணுதலா ணாம
மொழிமேற் செவிவைத்து மோகச் - சுழிமேற்றன்
னெஞ்சோட வைத்தயர்வான் கண்டா னெடுவானில்
மஞ்சோட வன்னம் வர.

(இ-ள்.) வழிமேல் - அன்னஞ்சென்ற வழியில், விழி வைத்து - பார்வையை வைத்து, வாள் நுதலாள் - ஒளிதங்கிய நெற்றியையுடைய தமயந்தியினது, நாமமொழிமேல் - பெயராகிய சொல்லில், செவி வைத்து - கேட்குந்தொழிலைவைத்து, மோகச்சுழிமேல் - மோகமாகிய நீர்ச்சுழியில், தன் நெஞ்சு ஓடவைத்து - தன்மனத்தை ஓடும்படிவைத்து, அயர்வான் - மயங்குகின்ற நளராசன், நெடு வானில் - பெரிய ஆகாயத்தில், மஞ்சு ஓட - (தன் சிறைக்காற்றால்) மேகங்கள் விலகிச்செல்லும்படி, அன்னம் வரக்கண்டான் - அன்னம் வரப்பார்த்தான், எ - று.

(வி-ரை.) நாமமொழி - பண்புத்தொகைநிலைத்தொடர்மொழி. அன்னம் வந்து அவளது இணக்கமாகிய சொல்லைச் சொல்லவேண்டுவோனாதலால், 'வழிமேல்விழிவைத்து, நாமமொழிமேல் செவிவைத்து' எனக் காரணகாரியமுறையே வைத்தாரென்க. நாமமொழி யென்பதற்கு அச்சத்தைத் தருகின்ற சொல்லென வுரைப்பினும் பொருந்தும் தன்னை மணப்பளோ? மணக்கமாட்டாளோ? என ஐயப்பட்டுக்கொண்டிருப்பவனாதலால். மணப்பேனென்னுஞ் சொல்தரும் களிப்பினும் மணக்கேனென்னுஞ் சொல்தரும் துன்பம் பெரிதாகக் கொண்டவனாதல்பற்றி 'நாம மொழி' என்றார். இது ஈறுதிரிந்த உரிச்சொற்றொடர்நிலைத்தொடர். விழியென்னும் கண்ணின்பெயர் அதன் காரியமாகிய பார்வைத்தொழி

லுக்காதலால் காரணவாகுபெயர். செவியும்இது. தன்னியல்பிற் செல்லு மனத்தை ஓடவைத்தென்றது இலக்கணை. (௬௦)

முகம்பார்த் தருணோக்கி முன்னிரந்து செல்வர்
அகம்பார்க்கு மற்றோரைப்போல - மிகுங்காதல்
கேளா விருந்திட்டா னன்னத்தைக் கேளாரை
வாளால் விருந்திட்ட மன்.

(இ-ள்) கேளாரை - பகைவரை, வாளால் - தன்வாளினால், விருந்திட்ட - (பறவைகளுக்கு) விருந்துசெய்த, மன் - நளராசன், செல்வர் முகம் பார்த்து - செல்வருடைய இனிய முகத்தைப் பார்த்து, அருள் நோக்கி - அருள்காரணமாக உண்டாகும் இன்சொல்லை ஆராய்ந்து, அகம் பார்த்து - உள்ளக்கருத்தைத் தெரிந்து, முன் இரக்கும் - எதிர்நின்று யாசிக்கும், அற்றோரைப்போல-பொருளில்லாரைப்போல, அன்னத்தை - அன்னத்தினிடத்து, மிகும் காதல்-(தன்மேல் தமயந்தி) மிகுகின்ற ஆசையை, கேளா - கேட்காநின்று, இருந்திட்டான் - இருந்தனன், எ-று.

(வி-ரை.) தூரத்தில் தம்மைக் கண்டபோது இனியமுகத்தையுடையராதலைக்கண்டு நெருங்கிய அளவில், அருள்காரணமாக உண்டாகும் இன்சொல் சொல்லலை அறிந்து, இக்குறிகளால் உட்கருத்தைத் தெரிந்து இரக்கவுடன்படுதலால் முன்னிரந்து அகம்பார்க்கும் என்பதில் தொடர்மொழிகளைப் பின்முன்னாக நிறுத்தி, விகுதி பிரித்துக் கூட்டி உரைக்க. உவமையில் கூறிய விசேடணத்தைப் பொருளுக்குங் கூட்டி, அன்னத்தினுடைய இனிய முகத்தைப் பார்த்து, தனக்கு இனிமையாகத் தேறுதல் சொல்லுதலை அறிந்து இவைகளால் அதனதுட் கருத்தை அறிந்து தன்மேல் தமயந்தி கொண்ட காதலைப் பலமுறை கேட்டுக்கொண்டிருந்தன னென்க. அருள் தான்காரணமாக உண்டாகும் இன்சொல்லின்மேலது. அற்றோரென்றது பொருளில்லாரை

முன்னே செல்வவென்றமையால். கேளா-கேளாநின்றென்பதன் திரிபு அன்னத்தை - உருபுமயக்கம். கேளார் - எதிர்மறை வினையாலணையும் பெயர்; இதில் கேட்டல் தன்காரணமாகிய மதித்தலின்மேலது. விருந்தை ஏற்றுக்கோடற்பொருள் ஊனுண்ணும் பறவைகளாதலால் அது வருவித் துரைக்கப்பட்டது. இருந்திட்டான் - ஆண்பாற்படர்க்கை இறந்தகாலவினைமுற்று; இரு - பகுதி, த் - சந்தி, து - சாரியை, இடு பகுதிப்பொருள்விகுதி, சந்தித்தகரம் நகரமாதல் மெலித்தல் விகாரம், உகரக்கேடு சந்தி, அனைத்துமொருபகுதி, ஆன்-ஆண்பாற்படர்க்கைவிகுதி, பகுதி ஒற்றிரட்டியது சந்தி, அதுவே காலங்காட்டியது, உகரக்கேடு சந்தி. (சுக)

> அன்னக் குலத்தி னரசே யழிகின்ற
> என்னுயிரை மீள வெனக்களித்தாய் - முன்னுரைத்த
> தேமொழிக்குத் தீதிலவே யென்றான் றிருந்தாரை
> ஏமொழிக்கும் வேலா னெடுத்து.

(இ - ள்.) திருந்தாரை - பகைவர்களை, ஏமம் ஒழிக்கும் - செருக்கை நீக்குகின்ற, வேலான் - வேலைத்தாங்கிய நளன், அன்னக்குலத்தின் அரசே - அன்னக்குலத்தினது அரசே, அழிகின்ற என் உயிரை - (தமயந்தியை அடையப்பெறாமையால்) அழிகின்ற எனதுயிரை, மீள - அழியாது நிலைபெறும்படி, எனக்கு அளித்தாய் - எனக்குத் தந்தாய்; முன் உரைத்த - (மாதர்களுக்குள்) முதலில் சொல்லப்பட்ட, தே மொழிக்கு - தேன்போலுஞ் சொல்லையுடைய தமயந்திக்கு, தீது இலவே என்றான் எடுத்து - தீமைகள் இல்லனவாவென்று எடுத்து வினவினான், எ-று.

(வி-ரை.) என்னுயிரை எனக்களித்தாயென்றது தன்மேல் தமயந்தியைக் காதல்கொள்ளும்படிச் செய்ததை. முன்னுரைத்தலாவது அழகினாலும், நற்குண நற்செய்கைகளாலும் அறிவுடையோரால் யாதர்

களுக்குள் முதன்மையாக எடுத்துச்சொல்லப்படுதல்; உரைத்த - செயப்பாட்டு வினையாகிய இறந்தகாலப் பெயரெச்சம். தமயந்தியைக் காணுமுன் அவளுடைய சொல்லைக்கேட்டு உயிர்தரித்தானாதலால் 'தேமொழி' என்றான். இது உவமைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். மெல்லினமுதன்மொழி வந்தமையால் தேமொழியெனத் தேனென்னுஞ்சொல் ஈறுகெட்டது; தேன் மொழியென ஈறு கெடாதும் வரும் தீது - பண்புப்பெயர்; து - பகுதிப்பொருள்விகுதி; இவ்விகுதியை முழுதென்பதிலுங் காண்க. இது பால்பகா அஃறிணைப் பெயராதலாகிய ஒ-ாதுமை இல் என்னும் பண்மை வினையால் நீங்கினது. தீதிலவேயென்றது க்ஷேமமா என்றபடி. வம மென்பதில் அம்மென்பது தொகுத்தல்விகாரம். திருந்தார் - எதிர்மறைவினையாலணையும்பெயர்; திருந்து - பகுதி, ஆ-எதிர்மறைவிகுதி, உகரக்கேடுசந்தி,அனைத்துமொருபகுதி,ஆர்-பல்லோர்படர்க்கைவிகுதி, விகுதி ஆகாரக்கேடு முதற்குறை. திருந்தாரை - உருபுமயக்கம்; பசுவைப் பால்கறந்தானென்பதிற்போல வமொழிக்கு மென்பதை ஒரு சொல்லாகக் கொள்ளின் திருந்தாரையென்பது உருபுமயக்கமன்று. ()

கொற்றவன்ற னேவலினாற் போயக் குலக்கொடிபா
லுற்றதுவு மாங்கவடா னுற்றதுவு - முற்று
மொழிந்ததே யன்ன மொழிகேட் டரசற்
கழிந்ததே யுள்ள வறிவு.

(இ - ள்.) கொற்றவன்தன் - நளராசனுடைய, ஏவலினால் - கட்டளையால், போய் - சென்று, அக்குலக் கொடிபால் - உயர்குடியிற் பிறந்த பூங்கொடியை ஒத்த அத்தமயந்தியினிடத்து, உற்றதுவும் - தான் சேர்ந்ததையும், ஆங்கு - (இவனுடைய அழகுமுதலியவற்றைச்) சொல்லியகாலத்தில், அவள் உற்றதுவும் - அவளடைந்த காதற்றன்பத்தையும், முற்றும் - முழுதும், அன்னம் மொழிந்தது - அன்னஞ்சொல்லியது, மொழி கேட்டு - அச்சொல்லைக்கேட்டு, அரசற்கு-நளராசனுக்கு, உள்ள அறிவும் - இருந்த அறிவும், அழிந்தது - கெட்டது, ...

(வி - ரை.) சுக - ஆம் செய்யுளில் தான் சென்ற காரியம் பயன் பட்டதென்பதற்குத் தமயந்திகொண்ட மிக்ககாதலைக் கூறியது; இச் செய்யுளில் தான்போய் அவளைக்கண்டு பேசியதையும், இவன்மேற் கொண்ட காதலையும், அதனால் அவளடைந்த அவத்தையையும் கூறிய தென்க. உள்ள அறிவாவது - தமயந்தியினுடைய அழகைக் கேள்விப் பட்டகாலத்தில் ஒழிந்ததுபோக மிகுதியாயுள்ள அறிவு; அஃது ஐம்புல வுணர்வு. இதனீற்றில் இறந்ததுதழீஇயதனோடு இழிவுசிறப்பில் வந்த உம்மை தொகுத்தலாயிற்று அன்னமொழி என்பதை அன்னம் மொழி எனப் பிரித்துப் பொருளுரைத்தலே அன்றி, அன்ன மொழி எனப் பிரித்து, அப்படிப்பட்ட சொல்லை என உரைத்தலுமாம்; இங்ஙனம் கொள்கையில் அன்னம் தோன்றா எழுவாயென்க. கொற்றவன்- தொழிலடியாகப் பிறந்தபெயர்; கொற்றம் - பகுதி, அன் - ஆண்பாற் படர்க்கை விகுதி, மகரக்கேடும் வகரத்தோற்றமுஞ் சந்தி; கொற்றம் - தொழிற்பெயர்; கொல் - பகுதி, து - சாரியை, அம் - புடைபெயர்ச்சி விகுதி, லகர தகரங்கள் றகரமாதலும், உகரங் கெடுதலும் சந்தி. உற்ற தென்னும் இரண்டில் முன்னது இறந்தகாலத் தொழிற்பெயர்; பின்னது அக்கால வினையாலணையும் பெயர்; இவற்றினீற்றுக் குற்றியலுகரம், [நன் - உயிர் - சூ - கசு] இல் கெட்டே வருமென்னாமல் நடு மென்றமையால் கெடாமல், பொதுவிதியால் வகர உடம்படுமெய் பெற்றன. தன் - சாரியை. தான், ஏ - அசை. (சுரு.)

கேட்ட செவிவழியே கேளா துணர்வோட
வோட்டை மனத்தோ டுயிர்தாங்கி - யீட்டுங்
குழியிற் படுகரிபோற் கோமான் கிடந்தான்
தழலிற் படுதளிர்போற் சாய்ந்து.

(இ - ள்.) கேட்ட-(தமயந்தியின் செய்தியைக்) கேள்விப்பட்ட, செவி வழியே காதின்வழியே, உணர்வுகேளாது ஓட-அறிவு (தன்னைக்) கேளாமல் ஓடியதனால், கோமான் - நளராசன், ஓட்டை மனத்தோடு

உடைந்ததாகிய மனத்துடனே, உயிர் தாங்கி - உயிரைத்தாங்கி, மீட்டும் - மேலும், தழலில் - தீயில், படு தளிர்போல - விழுந்த தளிரைப் போல, சாய்ந்து - (படுக்கையிலே) சாய்ந்து, குழியில் - படுகுழியில், படு கரிபோல - அகப்பட்ட யானையைப்போல, கிடந்தான் - (செயலற்றுக்) கிடந்தனன், எ-று.

(வி - ரை.) அன்னமொழிந்ததைக் கேட்டது செவியாதல்பற்றி மற்ற பொறிகளினின்றும் பிரிக்கப்பட்ட ததுவாதலால் ஏ பிரிநிலை. கேளாதோடவென்பது இலக்கணை; தன்வசத்தில் நில்லாமல் ஐம்புலவுணர்வும் தாமே நீங்கவென்பது கருத்து. மீட்டென்பது சாய்ந்து, கிடந்தா னென்பவற்றைச் சார்ந்து நின்றமையால் வினைமாற்றுப் பொருளது. உம்மை இறந்தது தழீஇயது. உயிர் தாங்கப்பட்டபோது மனமும் தாங்கப்பட்டதெனக் கொள்ளின் ஒடுருபு உடனிகழ்ச்சிப் பொருளது; இவ்வாறு கொள்ளாக்கால் விசேடணப் பொருளதென்க. ஓட்டை - பண்பாகுபெயர். ஓட்டை மனம் - இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடர். உணர்வு - சாதியொருமையாதலால், கேளாதென்டதை வினைமுற்று வினையெச்சமானதெனக் கொள்ளினும் அமையும்; வினையெச்சத்துக்கு உகரவிகுதி, த்-எழுத்துப்பேறு; வினைமுற்றுக்குத் துவ்விகுதி என்க. கரி - கரமுடையதென்பது. (சுஅ)

> கோதை சுயம்வரநாள் கொற்றவனுக் குற்றுரைப்ப
> ஏதமிலாக் காட்சியர்வந் தெய்தினார் - போதில்
> பெடையோடு வண்டுறங்கும் பேரொலிநீர் நாடன்
> அடையாத வாயி லகம்.

(இ - ள்.) கோதை - தமயந்தியினது, சுயம்வர நாள் - சுயம்வரத்துக்குரியநாளை, கொற்றவனுக்கு - அரசனுக்கு, உற்று உரைப்ப-நெருங்கிச் சொல்வதற்கு, ஏதம் இல்லாக் காட்சியர்-குற்றமற்ற அறிவுடைய தூதர்கள், போதில் - தாமரைமலரில், பெடையோடுவண்டு உறங்கும்-

பெடையுடனே ஆண்வண்டு உறங்குகின்ற, பேர் ஒலி நீர் - பேரோசையையுடைய நீர்வளமுள்ள, நாடன்-நிடதநாட்டையுடையானது, அடையாத-மூடப்படாத, வாயிலகம் - வாசலில், வந்து எய்தினார் - சென்று சேர்ந்தார்கள், எ-று.

(வி - ரை.) பகைவரில்லான், குறையிரப்போர் காணலுக்கு எளியனென்பதைக் குறிப்பிக்க 'அடையாதவாயில்' என்றார். கோதை-சினையாகுபெயர். ஏதமில்லா - எழுவாய்த் தொடர்நிலைத்தொடர். இல்லாக்காட்சி - பண்புத்தொகைநிலைத்தொடர்; இதில் ஆ - சாரியை; உரையாசிரியர்களி லொருவர் அத்தொகைநிலை யென்று கூறி, இல்லாமையாகிய காட்சியென விரிப்பர்; இல்லாத என்னும் எதிர்மறைக் குறிப்புப்பெயரெச்சம் இல்லா என ஈறு தொக்கதெனக் கொண்டு, இல்லாக் காட்சி குறிப்புப் பெயரெச்சத் தொடர்நிலைத்தொடரென்று மமையும். காட்சியர் - தொழிலடியாகப் பிறந்த பெயர். பொழுதென்பதன் மரூஉவாகியபோது தமக்குரிய பெரும்பொழுது, சிறுபொழுது தவறாமல் மலர்கின்ற மலர்களுக்குக் காலவாகுபெயராய் நின்றது; அது தலைமை பற்றித் தாமரைமலர்க்காயிற்று. நீர்க்குப் பேரொலி மதகு முதலியவற்றினின்றும் ஒழுகுதலால் உளதாயது. (சுரு)

காவலன்றன் றூதர் கடைக்கா வலர்க்கறிவித்
தேவலிற் போ யிதென் றியம்புதலு - மாவிற்
பொலிந்தமேதர் பூட்டென்றான் பூவாளி பாய
மெலிந்தமேதாள் வேந்தன் விரைந்து.

(இ-ள்) காவலன்றன் தூதர்-வீமராசனுடைய தூதர்கள், கடைக்காவலர்க்கு - வாயில் காப்பவர்க்கு, அறிவித்து - (தாங்கள் வந்த செய்தியைத்) தெரிவித்து, ஏவலின் - (நளராசனுடைய) கட்டளையினால், போய் - உள்ளேசென்று, ஈது என்று-இன்னதென்று, இயம்புதலும் - சொல்லுதலும், பூவாளி-மலரம்புகள், பாய - பாய்ந்ததினால், மெலிந்த-

இளைத்த, தோள்வேந்தன் விரைந்து - தோள்களையுடைய அவ்வரசன் விரைந்து, மாவின் - குதிரைகளினால், பொலிந்த - விளங்கிய, தேர் பூட்டு என்றான் - தேர்பூட்டென்று (சாரதிக்குக்) கட்டளையிட்டான், எ-று.

(வி - ரை.) விரைந்தென்பதற்கு நளன் வினைமுதலானால் அது என்றானென்னும் வினைகொண்டது; சாரதி ஆனால் பூட்டென்னும் வினைகொண்டதென்க. கடைக்காவலர் - செயப்படுபொருளில்வந்த ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர் ஆதலால் ககரமிக்கது. இயம்புதலும் - இறந்தகாலவினையெச்சம்; இதில் உம் விகுதி காலத்தையும், வினையெச்சப்பொருண்மையையும் உணர்த்தியது. ஏவலினென்னும் ஐந்தனுருபு ஏதுப்பொருளது. மாவினென்பது செயப்படுபொருளில் வந்தது. பூட்டு - பிறவினையாகிய ஏவலொருமைவினை; பூண் - தன் வினைப்பகுதி, டு - பிறவினைப்படுத்தும் விகுதி, ணகரம் டகரமாதல் சந்தி, இவ்வாறு முடிந்துநின்ற பூட்டு-பகுதி, ஆய் - ஏவலொருமை எதிர்காலவிகுதி, உகரக்கேடு சந்தி, பூட்டாயென்பது விகுதி கெட்டு நின்றது. வாளி - பண்படியாகப்பிறந்தபெயர்; வாள்-பகுதி, (கூர்மை.)

> கெட்ட சிறுமருங்குற் கிழ்மகளிர் நீள்வரம்பி
> லிட்ட பசுங்குவளை யேரடித்த - கட்டி
> களையத்தே னூறுங் கடனாட னூர்க்கு
> விரையத்தே ரூரென்றான் வேந்து.

(இ - ள்.) கெட்ட - இளைத்த சிறுமருங்குல் சிறிய இடையை யுடைய, கீழ்மகளிர் - இழிகுலப்பெண்களாகிய பள்ளப்பெண்கள் நீள் வரம்பில் - நீண்டவரப்புகளில், இட்ட - (களைபிடுங்கி) எறிந்த பசு குவளை - ஈரமாகிய குவளைமலர்கள், ஏர் அடித்த - (உழவர்) ஏரடித்ததனாலுண்டாகிய, கட்டி - மண்ணாங்கட்டிகள், களைய - கரையும்படி, தேன் ஊறும் - தேன்சுரக்கின்ற, கடல் - கடலைச்சார்ந்த, நாடன் - விதர்ப்பதேசத்தரசனது, ஊர்க்கு - ஊருக்கு, விரைய - விரைவாக,

தேர் ஊர் என்றான் - தேரை நடத்தென்று சொல்லினான், வேந்து - நளராசன், எ-று.

(வி - ரை.) கீழ் - பண்பாகுபெயர். கீழ்மகளிரென்றது கடைசியரை. வரம்பும் அவ்வாகுபெயர். மக-பகுதி, அள் - பெண்பால் விகுதி, பகுதி அகரங் கெட்டதெனின் கடைக்குறை. விகுதி அகரங் கெட்டதெனின் முதற்குறை, அல்லது ளகரமெய் பெண்பாற்படர்க்கைவிகுதி; இங்ஙனம் முடிந்துநின்ற மகள் இர் என்னும் பல்லோர்படர்க்கை விகுதி பெற்று நின்றது. ஏரடித்த என்னும் இறந்தகாலப் பெயரெச்சம் சுட்டபுண் என்பதுபோலச் செய்வதாதி அறுபொருட் பெயருளடங்காத கட்டியென்னும் பிறபெயர் கொண்டது. குவளை-முதலாகுபெயர். (சுஎ)

> சடைச்செந்நெல் பொன்விளைக்குந் தன்னாடு பின்னாக்
> கடற்றானை முன்னாகக் கண்டான் - அடற்கமைந்த
> வில்லியரும் பொற்றாம வீமன் றிருமகளாம்
> நல்லுயிரும் வாழு நகர்.

(இ-ள்.) சடைச்செந்நெல் - சடைபோலத் தாள்களடர்ந்த செந்நெற்பயிர், பொன் விளைக்கும்-பொன்போன்ற கதிர்களை விளைக்கின்ற, தன் நாடு பின் ஆக-தனது நிடதநாடு பின்னாகவும், கடல் தானை-கடலை ஒத்தசேனை, முன் ஆக-(தனக்கு) முன்னே செல்லவும், அடற்கு அமைந்த - போருக்குத் தகுந்த, வில்லியரும் - வில்வீரரும், பொன் தாமம் - அழகிய மலர்மாலையணிந்த, வீமன் திருமகள் ஆம் - வீமராசனுடைய செல்வப்புத்திரியாகிய, நல் உயிரும் - தன் உரிய உயிரும், வாழும் நகர்-வாழ்கின்ற நகரத்தை, கண்டான் - சென்று கண்டனன், எ - று.

(வி-ரை.) வீமன் றிருமகளையே தனதுண்மையாகிய உயிராகக் கருதி யிருக்கின்றமையால் அவள் 'நல்லுயிர்' என்னப்பட்டாள். நல்லுயிரென்பதில் நல் நற்றாயென்பதிற்போல உரிமையை யுணர்த்திற்று.

விளக்கும் - பிறவினையாகிய எதிர்காலப் பெயரெச்சம்; தன்வினை பிற வினைகளுக்குப் பொதுவாகிய விளையென்னும் பகுதி இங்குப் பிற வினைக்குரியது, க்-சந்தி, கு-சாரியை, உம் - எதிர்காலப் பெயரெச்ச விகுதி, உகரக்கேடு சந்தி. தன்வினையில் விளையு மெனவரும். அடல்-தொழிற்பெயர்; அடு-பகுதி, அல் - புடைபெயர்ச்சிவிகுதி, உகரக்கேடு சந்தி. வில்லியர்-பல்லோர் படர்க்கைப்பெயர்; வில்-பகுதி, ல்-சந்தி, இ-ஆண்பாற்படர்க்கை விகுதி; இவ்வாறு முடிந்த வில்லி தன் பன்மையை யுணர்த்த அர் என்னும் பல்லோர் படர்க்கை விகுதியும், அதுபற்றிவந்த சந்தியும் பெற்றுநின்றது. (௬அ)

நெற்றித் தனிக்க ணெருப்பைக் குளிர்விக்குங்
கொற்றத் தனியாழ்க் குலமுனிவன் - உற்றடைந்தான்
தேனாடுந் தெய்வத் தருவுந் திருமணியும்
வானாடுங் காத்தான் மருங்கு.

(இ-ள்.) நெற்றி-(சிவனது) நெற்றியிலுள்ள, தனி கண் நெருப்பை - ஒப்பற்ற கண்ணினது நெருப்பை, குளிர்விக்கும் - (தன்னிசையால்) குளிரச்செய்யும், கொற்றம் - வெற்றியமைந்த, தனி யாழ் - ஒப்பற்ற மகதியென்னும் யாழையுடைய, குலமுனிவன்-சிறந்த நாரதமுனிவன், தேன் நாடும் - வண்டுகள் நாடிச்செல்கின்ற, தெய்வத்தருவும் - தெய்வத்தன்மையுள்ள கற்பகத்தருக்களையும், திரு உம்-சங்கநிதி பதுமநிதிகளையும், மணியும் - சிந்தாமணியையும், வான் நாடும் - சுவர்க்கலோகத்தையும், காத்தான் மருங்கு - ஆளுந்தொழிலமைந்த இந்திரன் பக்கத்து, உற்று - மனம்பொருந்தி, அடைந்தான் - சென்றனன், எ-று.

(வி-ரை.) நெற்றிக்கண்ணினெருப்பைக் குளிர்வித்தலாவது தன்னிசையைக் கேட்டவளவில் உள்ள மகிழ்ச்சியால் அக்கண்ணினும் நீர் அரும்பல். குளிர்விக்குமென்னும் பிறவினையாகிய பெயரெச்சம் நின் முகங்காணு மருந்தினேன் என்பதுபோலக் கொற்றமென்னும் செயற் பெயர்கொண்டது. திருவென்றது சங்கநிதி பதுமநிதிகளை; இது காரண

ணத்தைக் காரியமாக வுபசரித்தது. திருமணி யென்னும் உம்மைத் தொகைநிலைத்தொடர் ஒருமொழிபோல நின்று எண்ணும்மை பெற்றது. கற்பகத்தருக்களைந்தாவன:—சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பகமென்பன. (௬௧)

வீரர் விறல்வேந்தர் விண்ணாடு சேர்கின்றார்
ஆரு மிலரென் றையுற்று - நாரதனார்
நன்முகமே நோக்கினா னாகஞ் சிறகரிந்த
மின்முகவேற் கையான் விரைந்து.

(இ-ள்.) நாகம் - மலைகளை, சிறகு அரிந்த-சிறகுவெட்டிய, மின் - பிரகாசிக்கின்ற, முகம் - கூர்மையையுடைய, வேல் - வச்சிராயுதத்தைத் தாங்கிய, கையான் - கையையுடைய இந்திரன், வீரர் விறல் வேந்தர் - வீரர் வெற்றியையுடைய அரசர் இருவரிலும், விண் நாடு-சுவர்க்கத்தில், சேர்கின்றார் - சேர்கின்றவர், ஆரும் இலர் என்று - ஒருவருமில்லையென்று, ஐயுற்று - சந்தேகப்பட்டு, (வாயால் வினவாமல்) நாரதனார்-நாரதமுனிவருடைய, நல் முகமே - நல்ல முகத்தையே, விரைந்து நோக்கினான் - விரைவாகப் பார்த்தான், எ - று.

(வி-ரை.) வீரர் விறல்வேந்தரென்பதனீற்றில் இருவருமென்னுஞ் செவ்வெண்ணின் தொகையோடு முற்றும்மை விகாரத்தால் தொக்கது. முகமே என்னும் பிரிநிலை ஏகாரத்தால் வாயால் வினவாமை பெறப்பட்டது. ஐயுற்று - ஒருசொல்லின் தன்மையது; இது இறந்தகாலவினையெச்சம்; ஐயமென்னும் பெயர்ச்சொல்லை வினைப்படுத்த உறு என்னும் உரியடியாகப் பிறந்த முதனிலை புணர்ந்தபோது, நிலைமொழி கடைக்குறையாய் நின்ற ஐயுறு-பகுதி, உ-வினையெச்சவிகுதி, பகுதி ஒற்றிரட்டலும், உகரக்கேடும் சந்தி. ஆர்-யாவரென்னும் வினாப்பெயரின் மரூஉ; உம்மை முற்றும்மையாதலால் யா எஞ்சாமைப்பொருளது. நாரதனாரென்றது உயர்வினால் வந்த பால்வழுவமைதி. இவ்வாறு உயர்

திணைப்பெயரின் ஒருமை விகுதிமேல் பன்மை விகுதி வருதலையும், பன்மைவினையோடு முடிதலையும், ஆசிரியர் தொல்காப்பியனர் "இயற் பெயர் முன்னர் ஆரைக்கிளவி பலர்க்குரி யெழுத்தின் வினையொடு முடிமே" என்னுஞ் சூத்திரத்தில் ஒன்றெனமுடித்த லென்னும் உத்தியால் கொள்ளவைத்தார். நாகஞ்சிறகரிந்த என்பதில் சிறகரிந்த என் பதை ஒரு வினையாகக்கொண்டால், நாகத்தையென விரித்து, இரண் டாம் வேற்றுமைப்புணர்ச்சி யென்க. சிறகை யரிந்த என இரண்டா வதை விரிக்கின் நாகத்தின்கண் என ஏழாவதையும், சிறகின்கண் என ஏழாவதை விரிக்கின் நாகத்தை என இரண்டாவதையும் விரிக்க. [நன் - பெயர் - சூ-கூ]. வீரர் விறல்வேந்தர் விண்ணாடு சேர்தல் - போர்முக த்தில் அஞ்சாது நின்று போர்செய்து உயிரைவிடின் சுவர்க்கம் பெறு தல். (எ0)

> வீமன் மடந்தை மணத்தின் விரைதொடுத்த
> தாமம் புனைவான் சயம்வரத்து - மாமன்னர்
> போயினா ரென்றான் புரந்தரற்குப் பொய்யாத
> வாயினான் மாதவத்தோர் மன்.

(இ-ள்.) பொய்யாத வாயினன் - பொய்க்காத சொல்லையுடையா னும், மா தவத்தோர் மன் - பெருந்தவத்தின ராசனுமாகிய நாரதமுனி வன், புரந்தரற்கு - இந்திரனுக்கு, வீமன் மடந்தை-வீமராசன் புத்திரியி னுடைய, மணத்தின் - கலியாணத்தினது, விரை தொடுத்த-வாசனை யைச்சேர்ந்த, தாமம் புனைவான் - மாலையை அணிந்துகொள்ளும்படி, சயம்வரத்து - சயம்வரத்துக்கு, மா மன்னர் - பெருமையாகிய வெற்றி யரசர், போயினார் என்றான்-போயினாரென்று சொல்லினன், எ-று.

(வி-ரை.) எனவே தமயந்தியினுடைய சுயம்வரத்தின் மாலை பெறும் முயற்சியுடையாரன்றி, போரின் வெற்றிபெறும் முயற்சியில ரென்று குறிப்பாக விடைகூறினன். மன்னர்களைக் கூறவே அவர்களி டத்துள்ள வீரர்களைக் கூறவேண்டாதாயிற்று. வாய்-கருவியாகுபெயர்.

அருளால் சொல்லினும், கோபத்தால் சொல்லினும், அவ்வப்பயனைத் தர்தேவிடுதலால் 'பொய்யாத வாய்' என்றார். பொய்யாத வாயினனென் பதைக் கருவிப்பொருளதாகிய மூன்றும் வேற்றுமை விரியெனவைத்து, என்றானென்னும் வினைகொண்டதெனினும் பொருந்தும். புரந்தரன் - பகைவருடலைச் சேதிப்பவன். சயம்வரம் - வடமொழித்திரிபு ()

> அழகு சுமந்திளைத்த வாகத்தாள் வண்டு
> பழகு கருங்கூந்தற் பாவை - மழகளிற்று
> வீமன் குலத்துக்கோர் மெய்த்தீப மற்றவளே
> காமன் றிருவுக்கோர் காப்பு.

(இ-ள்.) (வீமராசன் புத்திரி) அழகு சுமந்து - பேரழகைச் சுமப்பதினால், இளைத்த ஆகத்தாள் - இளைத்த உடலினள், வண்டு - (மணத்தை விரும்பி) வண்டுகள், பழகு - விட்டு நீங்குதலில்லாத, கரு கூந்தல் பாவை - கருமையாகிய கூந்தலையுடைய பிரதிமைபோன்றவள், மழ களிறு - இளமையாகிய யானைச்சேனையுடைய, வீமன் குலத்துக்கு - வீமராசனுடைய குலத்துக்கு, ஓர் மெய்த்தீபம் - ஒப்பற்ற மெய்ம்மையாகிய தீபம்போன்றவள், அவளே - அப்பெண்ணே, காமன் திருவுக்கு - மன்மதனுடைய செல்வத்துக்கு, ஓர் காப்பு - அழியாமல் சிறந்த காவலானவள் என்றனன், எ-று.

(வி - ரை.) என்றனனென்பது சொல்லெச்சம். சுமந்தென்றதனால் அழகு பேரழகென்பதும், வண்டு பழகென்றதனால் இயற்கை மணமுள்ள கூந்தலென்பதும், அவளே என்னும் பிரிநிலை ஏகாரத்தால் மங்கையர்களுக்கெல்லாம் சிறந்தவளென்பதும் விளங்குகின்றன. வீமராசன் குலத்தை இவளால் யாவரும் அறிதலால் 'தீபம்' என்றும், நெய் திரிகுறையினும், காற்று வீசினும் இலதாகும் தீபம்போலாமையால் ஓர் மெய்யென அடைகொடுத்துத் தீபமென்றும், அவளது கட்டழகைக் கண்டு புருடர்கள் யாவரும் காமனது வசப்படுதலால் 'காமன் றிருவுக்கோர் காப்பு' என்றுங் கூறினன். சுமந்து - காரணப்பொருட்

டாகிய இறந்தகால வினையெச்சம். பாவை-உவமையாகுபெயர். காப்பு - தொழிலாகுபெயர். (எஉ)

மால்வரையை வச்சிரத்தா லீர்ந்தானும் வானவரும்
கோல்வளைதன் மாலை குறித்தெழுந்தார் - சால்புடைய
விண்ணாடு நீங்கி விதர்ப்பன் றிருநகர்க்கு
மண்ணாடு நோக்கி மகிழ்ந்து.

(இ - ள்.) (நாரதமுனிவன் சொல்லியதைக்கேட்ட) மால் வரையை - பெரிய மலைகளை, வச்சிரத்தால்-வச்சிராயுதத்தினால், ஈர்ந்தானும்-சிறகரிந்த இந்திரனும், வானவரும் - அக்கினி யமன் வருணனாகிய தேவர்களும், கோல் வளைதன் - அழகிய வளையலணிந்த தமயந்தியினது, மாலை குறித்து - சுயம்வரமாலையைக் கருதி, சால்பு உடைய - (எல்லாச் செல்வமும்) நிறைதலையுடைய. விண் நாடு நீங்கி - சுவர்க்கத்தினின்று நீங்கி, விதர்ப்பன் திருநகர்க்கு - வீமராசனுடைய சிறப்பாகிய நகரத்திற் செல்லுதற்கு, மண் நாடு நோக்கி - மண்ணுலகத்தை நோக்கி, மகிழ்ந்து எழுந்தார் - களித்தெழுந்தார்கள், எ-று.

(வி - ரை) இந்திரன் அரசனாதலால் அவனை எடுத்துக் கூறி, அக்கினி முதலிய மூவரையும் அச்சிறப்பின்மை கருதி 'வானவர்' என்றார். கோலமென்பதில் அம் தொகுத்தல்; கோலெனத்தனித்து வழங்காமை யால். வரை-பண்பாகுபெயராய்க் கணுவை யுணர்த்திற்று; அது மூங்கிலுக்குச் சினையாகுபெயர்; அது மலைக்குத் தானியாகுபெயர். சால்பு - உரிச்சொலடியாகப்பிறந்த தொழிற்பெயர். நாடு உலகத்தின்மேல் நின்றது. ஈர்ந்தான் - ஆண்பாற்படர்க்கை யிறந்தகால வினையாலணையும் பெயர்; வினைமுற்றுப் பெயரென்னலாகாதா எனின் பெயரெச்சம் பெயராதலும், வினையெச்சம் பெயராதலும் உண்டாயின் என்னலா மென்க; இலக்கணக்கொத்தார் வினைமுற்றுப் பெயரென்றாரெனின், அவர் கருத்தறியாமல் வினாவினாய்; வினை: முதனிலை, தொழிற்பெயர், வினைமுற்று, பெயரெச்சம், வினையெச்சமென ஐந்து வகைப்படுமெ

ன்று கூறி, முதனிலை இன்ன ஆகும், தொழிற்பெயர் இன்ன ஆகும், வினைமுற்றுப்பெயர் இன்ன ஆகுமெனக் கூறியதே அன்றி, வினையாலணையும் பெயரென்னலாகாது, வினைமுற்றுப்பெயரென்னுங் குறியீடே கூறல்வேண்டு மென்றமையாலும், இந்நாள்வரையும் வினைமுற்றுப்பெயரென்பது ஒருவரும் வழங்காமையாலும் என்னலாகாதென்க; நம்போலியர் கூறினுமென்னெனின், "கங்கையாடி, சாருணி, தேரோட்டி" என்பவற்றில் முறையே வினைமுதற்பொருண்மை, செயப்படுபொருண்மை, கருவிப்பொருண்மையாகிய பெயர்விகுதி யென்னுமல் அவர் கூறியபடி வினைமுற்றுப் பெயர்களினீறு இரமாயின வென்ன உடம்படின் என்னலாமென்க. அவர் கூறியதும் பிறர் மதமென்க. (எக)

> பைந்தெரியல் வேல்வேந்தன் பாவைபாற் போயினதன்
> சிந்தை கெடுத்ததனைத் தேடுவான் - முந்தி
> வருவான்போற் றேர்மேல் வருவானைக் கண்டார்
> பெருவானிற் றேவர் பெரிது.

(இ - ள்.) பைந்தெரியல் - பசுமையாகிய மலர்மாலை யணிந்த, வேல் வேந்தன் - வேலைத்தாங்கிய வீமசேனனுடைய, பாவைபால் - புத்திரியாகிய தமயந்தியினிடத்து, போயின - சென்ற, தன் சிந்தை கெடுத்து - தன் சிந்தையை யிழந்து, அதனைத் தேடுவான் - அதைத் தேடும்படி, முந்தி வருவான் போல - முற்பட்டு வருபவனைப்போல், தேர்மேல் வருவானை - தேரின்மேல் வருகின்ற நளனை, பெருவானில் - பெருமையாகிய சுவர்க்கத்திலுள்ள, தேவர் பெரிது கண்டார் - (இந்திரன் முதலிய) தேவர்கள் மிகுதியாகக் கண்டார்கள், எ-று.

(வி - ரை.) மாலைக்குப் பசுமையாவது ஈரம் நீங்காமை. தேடுவான்-வான்விகுதிக் காரியப்பொருட்டாகிய எதிர்கால வினையெச்சம். வினைமுற்று வினையெச்ச மானதெனக்கொண்டு, தேடுவானுகி என

உரைத்தலுமாம். முந்தி - பண்புப்பெயரடியாகப் பிறந்த இறந்தகால வினையெச்சம்; முந்து - பகுதி, உகரத்தின் திரிபாகிய இ - விகுதி, உகரக்கேடு சந்தி; பிந்தியென வினையெச்சமுண்டோ எனின், இது கிராமியமாவதன்றி, உயர்ந்தோர் நூலுள் அருகியும் வாராமையால் அது குற்றமென்க. பெரிது - வினையெச்சக்குறிப்பு. (எச)

காவற் குடைவேந்தைக் கண்ணுற்று விண்ணவர்கோன்
ஏவற் றொழிலுக் கிசையென்றான் - ஏவற்கு
மன்னவனு நேர்ந்தான் மனத்தினால் மற்றதனை
இன்னதென வோரா திசைத்து.

(இ - ள்.) காவல்-(உயிர்களுக்குக்) காவலாந்தலையுடைய, குடைவேந்தை - குடையையுடைய நளராசனை, விண்ணவர் கோன்-தேவர்களரசன், கண்ணுற்று - கண்டு, ஏவல் தொழிலுக்கு-(எங்களால்) ஏவப்படுதலாகிய தொழிலுக்கு, இசை என்றான் - உடன்படென்று கேட்டுக்கொண்டனன்; மன்னவனும்-அரசனும், அதனை-இந்திரன் சொல்லியதை, இன்னது என - இப்படிப்பட்டதென்று, மனத்தினால் - தன் மனத்தில், ஓராது - ஆராய்ந்து துணியாமல், இசைத்து - (இசைவேனென்று) வாயாற்சொல்லி, ஏவற்கு - அத்தொழிலுக்கு, நேர்ந்தான் - உடன்பட்டான், எ-று.

(வி - ரை.) மனத்தினால் - உருபுமயக்கம். ஏவற்றொழில் - இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடர்; இங்ஙனமன்றி, ஏவப்படுந் தொழிலைச் செய்தற்கு என உரைப்பின், செயப்படுபொருளின்கண்வந்த ஆறாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடரெனினுமொக்கும். உம்மை-ஒருபுடை யிறந்தது தழீஇய எச்சவும்மை. இன்னது-இடைச்சொலடியாகப் பிறந்த குறிப்புமுற்று; இன் - பகுதி, ன் - சந்தி, அ - சாரியை, து - ஒன்றன் படர்க்கை வினைமுற்றுவிகுதி; இன்ன எனப் பெயரெச்சத்திலும் இன் என னகரம் நித்தியமாய் வருதலால் இ என்பது பகுதியன்று. ஓராது - எதிர்மறைவினையெச்சம்; ஓர் - பகுதி,

ஆ - எதிர்மறைவிகுதி, அனைத்துமொருபகுதி, த் - எழுத்துப்பேறு, உ - வினையெச்சவிகுதி. கண்ணுற்று-ஒரு சொல்லின் தன்மையதாகிய இறந்தகாலவினையெச்சம். (௭௦)

செங்கண் மதயானைத் தேர்வேந்தே தேமாலை
யெங்களிலே சூட்ட வியல்வீமன் - மங்கைபாற்
றூதாக வென்றானத் தோகையைத்தன் னாகத்தாற்
கோதாக வென்றானக் கோ.

(இ - ள்.) செம் கண் - சிவந்தகண்களையுடைய, மதயானை - மதயானையையும், தேர் வேந்தே - தேரையுமுடைய அரசனே, தேன் மாலை - மணமமைந்த மாலையை, எங்களில் சூட்ட - எங்களில் (ஒருவருக்குச்) சூட்டும்படி, இயல் வீமன் மங்கைபால் - நற்குணமுள்ள வீமராசனது புத்திரியினிடத்து, தூது ஆக என்றான் - தூதுவனாகக்கடவையென்று (இந்திரன்) சொல்லினான்; அக்கோ - அச்சொல்லைக்கேட்ட நளராசன், அத்தோகையை - தன்னுயிராகக் கருதியிருந்த தமயந்தியை, தன் ஆகத்தால் - தன்மனத்தால், கோதாக - கோதுபோல, வென்றான் - வெற்றிகொண்டான், எ-று.

(வி - ரை.) தமயந்தியைக் கோதாக வென்றதாவது அவளைத் தன் உயிர்போலக் கருதிச்செய்த காதலை ஒழித்தல்; கோதாகவென்றானென்பதைக் கோதாக என்றானெனப் பிரித்து, கோதுபோல ஆகக்கடவளென்று கருதினானெனினுமமையும். ஆகம்-இடவாகுபெயர். ஆக-இரண்டனுள் முன்னது வியங்கோள் வினை; பின்னது முறையே உவமவுருபாகிய செயவெனெச்சமும், மேலைவினைமுற்றுமாம். தோகை - கலாபம்; அது மயிலுக்குச் சினையாகுபெயர்; அது பெண்ணுக்கு உவமையாகுபெயர். கோது - சாரநீக்கியபொருள்; அதுபோலக் கருதலாவது அவளுடைய அழகுமுதலியவற்றையும், தன்மேல் கொண்ட காதலையும் மதியாமை. (௭௧)

தேவர் பணிதலைமேற் செல்லுந் திரிந்தொருகால்
மேவுமிளங் கன்னிபால் மீண்டேகும் - பாவிற்
குழல்போல நின்றுழலுங் கொள்கைத்தே பூவி
னிழல்போலுந் தண்குடையா னெஞ்சு.

(இ - ள்.) பூவின் - பூமியிலுள்ளோர்க்கு, நிழல் - நிழலைத்தரு கின்ற, தண் குடையான் நெஞ்சு - தண்மையாகிய குடையையுடைய நளனது மனம், தேவர் பணி-தேவர்களுடைய கட்டளையை, தலைமேல்-தலைமேல் தாங்கி, செல்லும்-போகும்; ஒருகால் - ஒருமுறை, திரிந்து-மாறி, மேவும் - (தன்னால்) விரும்பப்படும், இளங்கன்னிபால் - இளங் கன்னியாகிய தமயந்தியினிடம், மீண்டு ஏகும்-மீளச்செல்லும்; பாவில்-பாவினிடத்தில், குழல்போல - நெய்குழல்போல, நின்று - (அங்கங்கு) நின்று, உழலும் - திரிகின்ற, கொள்கைத்தே - செய்கையையுடை யதே, எ-று.

(வி - ரை.) தலைமேலென்பதனீற்றில் தாங்கியென்னுஞ் சொல் எஞ்சிநின்றது. பூ, நெஞ்சு - இடவாகுபெயர். தலைமேல் தாங்குத லாவது சிறப்பாக ஏற்றல். மீண்டு - இறந்தகால வினையெச்சம்; மீள் - பகுதி, ட் - இறந்தகால இடைநிலை, உ - வினையெச்சவிகுதி, ளகரம் டகரமாதல் சந்தி, அது ணகரமாதல் மெலித்தல்; இது மீள என்பதன் திரிபு. பணி - முதனிலைத் தொழிற்பெயர்; செயப்படுபொருண்மை விகுதியாகிய ஐகாரம்புணர்ந்து கெட்ட தொழிலடியாகப் பிறந்த பெய ரெனினும் பொருந்தும். அங்கங்கென்றது தேவர்களுடைய கட்டளை யையும், தமயந்தியையும், ஏ - இரக்கப்பொருளது. போலும் - அசைச் சொல். உடையானது தன்மையைக் குடையின்மேலேற்றிக் கூறியது ஓர் மரபுவழுவமைதி. (எஎ)

ஆவ துரைத்தா யதுவே தலைநின்றேன்
தேவர்கோ னேயத் திருநகரிற் - காவல்

கடக்குமா றென்னென்றான் காமநீ ராழி
யடக்குமா றுள்ளத் தவன்.

(இ-ள்.) காமநீர் ஆழி - ஆசையாகிய நீர்வளமுள்ளகடலை, அடக்கும் ஆறு - (பெருகாமல்) அடங்கச் செய்யும்படி, உள்ளத்தவன் - ஊக்கமுடைய நளன், தேவர்கோனே - தேவராசனே, ஆயது - (உங்களுக்கு) வேண்டியதை, உரைத்தாய் - சொல்லினாய்; அதுவே - அவ்வேவலிலேயே, தலைநின்றேன் - சிறப்பாக நின்றேன்; அத் திருநகரில் - அந்த அழகிய நகரத்திலுள்ள, காவல் - காவலாளர்களை, கடக்கும் ஆறு - கடந்துசெல்லும் விதம், என் என்றான் - யாதென்று கேட்டான், எ-று.

(வி - ரை.) ஆயது - ஒன்றன்படர்க்கை எதிர்காலவினையாலணையும்பெயர். அதுவே யென்பதில் ஏழாம்வேற்றுமையுருபு தொக்கது. ஏ - பிரிநிலை; இதனால் அவளிடத்து விருப்பங்கொண்டு செல்லுதலொழிந்தே னென்னும் பொருள் போந்தது. தலைநின்றேனென்பது ஒருசொல்லின் தன்மையது. காவல் - தன்னைச் செய்பவருக்காதலால் காரியவாகுபெயர்; தொழிலாகுபெயருமாம். உள்ளத்தவன் - ஈறுதிரிந்த குறிப்பு வினையாலணையும் பெயர். (எஅ)

வார்வெஞ் சிலையொழிய வச்சிரத்தான் மால்வரையைப்
போர்வெஞ் சிறகறுத்த பொற்றோளான் - யாருமுனைக்
காணார்போய் மற்றவளைக் காணென்றான் கார்வண்டின்
பாணாறுந் தாரானைப் பார்த்து.

(இ - ள்.) வார் - நீண்ட, வெம் சிலை ஒழிய - கொடுமையாகிய வில்லினாலல்லாமல், வச்சிரத்தால் - வச்சிராயுதத்தால், மால் வரையை - பெரியமலைகளை, போர் - போர்செய்தற்குரிய, வெம் சிறகு அறுத்த - கொடுமையாகிய சிறகறுத்த, பொன் தோளான் - அழகிய தோளையுடைய இந்திரன், கார் வண்டின் - கருமையாகிய வண்டுகளினது, பாண் நாறும் - இசை தோன்றுகின்ற, தாரானைப் பார்த்து - மாலையணி

ந்த நளனைப்பார்த்து, உன்னை யாரும் காணார் - உன்னை எவர்களும் காணார்கள்; போய் அவளைக் காண்-நீபோய் அவளைக் காண், என்றான்- என்று சொல்லினான், எ-று.

(வி - ரை.) வார்வெஞ்சிலை என்பதில் சிலை முதனிலைத் தொழிற் பெயரெனக்கொண்டு, நீண்ட கொடுமையாகிய ஓசை நீங்கும்படி என வுரைப்பினும் பொருந்தும்; ஓசையாவது மலைகள் அசுரருக்கும் அரக் கருக்கும் இடங்கொடுத்துப் பறந்து விழுவதினால் மக்கள் செய்யும் கூக் குரல்; இவ்வாறன்றிச் சிலை யென்பதைக் கருவியாகுபெய ரெனக் கொண்டு, நீண்ட கொடுமையாகிய மைந்நாகமலையென உரைத்தலு மாம். யார்·யாவரென்பதன் மரூஉ. யாருமுனைக் காணா ரென்றது எவர் களுக்கும் நீ தோன்றாயென்பதை. மற்று-அசை. (எக)

> இசைமுகந்த வாயு மியறெரிந்த நாவுந்
> திசைமுகந்தா லன்ன தெருவும் - வசையிறந்த
> பொன்னாடு போந்திருந்தாற் போன்றதே போர்விதர்ப்ப
> நன்னாடர் கோமா னகர்.

(இ-ள்.) போர் - போரில் சிறந்த, விதர்ப்ப நல் நாடர் - விதர்ப்ப மாகிய நல்லதேசத்தாருக்கு, கோமான் நகர் - அரசனுடைய குண்டின புரம், (தன்னிலுள்ள) இசை முகந்த வாயும் - கீர்த்தியை முற்றும் பெற்ற வாயிலாலும், இயல் தெரிந்த நாவும்-(சிற்பநூலில் சொல்லிய) இலக்கணந் தோன்றிய மத்திய பிரதேசத்தாலும், திசைமுகந்தால் அன்ன-திக்குகளைத் தன்னுளடக்கினால் போன்ற, தெருவும் - பெருந் தெருக்களினாலும், வசை இறந்த - நிந்தையில்லாத, பொன்நாடு - சுவர்க்கம், போந்து இருந்தால் போன்றது - வந்து தங்கியதுபோல (நளனு க்குக்) காணப்பட்டது, எ-று.

(வி - ரை.) போந்து - இறந்தகால வினையெச்சம்; புகு - என்ப தன் மரூஉ ஆகிய போ - பகுதி, த்-சந்தி, த்-இறந்தகால இடைநிலை

உ-வினையெச்சவிகுதி, சந்தித் தகரம் நகரமானது மெலித்தல்; இயற்கையாகிய போ என்பது போய் எனவும், குச்சாரியை பெற்றுப் போகி எனவும் வரும். முகந்த-இறந்தகால வினையெச்சம்; முக-பகுதி, த்-சந்தி, த்-இறந்தகால இடைநிலை, அ-பெயரெச்சவிகுதி, சந்தித் தகரம் நகரமாதல் மெலித்தல் விகாரம். அன்ன-இடைச்சொலடியாகப் பிறந்த செயப்படுபொருள் குன்றாத குறிப்புப்பெயரெச்சம்; அன்-பகுதி, ன்-சந்தி, அ-பெயரெச்சவிகுதி; இதற்குச் செயப்படுபொருள் முகந்தாலென்னும் வினையெச்சத்திலுள்ள முகத்தல் முகத்தல்-மொள்ளல். (௮௦)

தேங்குவளை தன்னிலே செந்தா மரைமலராப்
பூங்குவளை தாமரைக்கே பூத்ததே - ஆங்கு
மதுநோக்குந் தாரானும் வாணுதலுந் தம்மிற்
பொதுநோக் கெதிர்நோக்கும் போது.

(இ - ள்) ஆங்கு - அந்நகரத்துக் கன்னிகாமடத்தில், மது நோக்கும் - (வண்டுகள்) தேனைக்கருதிச் செல்லுகின்ற, தாரானும் - மலர்மாலையணிந்த நளனும், வாள் நுதலும்-ஒளிதங்கிய நெற்றியையுடைய தமயந்தியும், தம்மில்-தங்களில், பொது நோக்கு-பொதுவாகிய பார்வையாக, எதிர் நோக்கும்போது-எதிரில் பார்த்தகாலத்தில், தேன் குவளை தன்னிலே - (தமயந்தியின் கண்களாகிய) மணமுள்ள குவளைமலர்களிலே, செந்தாமரை மலரா - (நளனது கண்களாகிய) செந்தாமரைமலர்கள் மலர்ந்ததனால், பூ குவளை - அவ்வழகிய குவளைமலர்கள், தாமரைக்கே - (மேற்சொல்லிய) செந்தாமரைமலர்களிலே, பூத்தது - மலர்ந்தன, எ-று.

(வி - கை.) பொதுநோக்கு - விருப்பத்தாலன்றி இயற்கையாய் நோக்கும் பார்வை. முன்னுள்ள ஏ இரண்டும் பிரிநிலை. பின்னது ஈற்றசை. பூங்குவளை சாதியொருமையாதலால் பூத்ததென்னும் ஒருமை வினைகொண்டது; தன் என்சாரியை ஒருமைப்பெயர்க்குரியதாதலால்

தேய்ந்தவளையும் அது. தாமரைக்கென்னும் நான்கனுருபு ஏழாவதனிடப் பொருளது. வாணுதல் - பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். நோக்கு-முதனிலைத்தொழிற்பெயர். ()

நீண்ட கமலத்தை நீலக் கடைசென்று
தீண்டு மளவிற் றிறந்ததே - பூண்டதோர்
அற்பின்றாழ் கூந்தலாள் வேட்கை யகத்தடக்கிக்
கற்பின்றாழ் வீழ்த்த கதவு.

(இ-ள்.) தாழ் கூந்தலாள் - நீண்ட கூந்தலையுடைய தமயந்தியானவள், வேட்கை - விருப்பத்தை, அகத்து - உள்ளமாகிய (அறையில்), அடக்கி - வெளிப்படாமல் வைத்து, கற்பின் தாழ் - கற்பாகிய தாழக்கோலை, வீழ்த்த - பூட்டிய, கதவு - (நிறையாகிய) கதவு, நீண்ட கமலத்தை - (நளன் கண்களாகிய) நெடிய தாமரைமலர்களை, நீலக்கடை - நீலோற்பல மலர்போன்ற (தன் கண்களினது) கடைப்பார்வையானது, சென்று - போய், தீண்டும் அளவில் - தீண்டும்போதே, பூண்டது - தான் முன்கொண்டதாகிய, ஓர் அன்பின் - ஒப்பற்ற அன்பினாலே, திறந்தது - திறந்துகொண்டது, எ-று.

(வி-ரை) நிறை - புறத்தே செல்லாமல் மனத்தை நிறுத்துங் குணம். அற்பினென்பதில் பெயரின் னகரம் றகரமானது வலித்தல், உருபின் றகரம் னகரமானது மெலித்தல், இவ்விகாரங்கள் எதுகைத் தொடைநோக்கி வந்தன. கற்பின்றாழ்-உருவகமாதலால் இருபெயரொட்டுப் பண்புத்தொகையென்க; இன் - சாரியை. வீழ்த்த-பிறவினையாகிய. இறந்தகால வினையெச்சம்; விழு என்பதன் மரூஉ ஆகிய வீழ் - பகுதி; இது தன்வினை பிறவினைகளுக்குப் பொதுவாயினும் இங்குப் பிறவினையாய் நின்றது; தன்வினை வீழ்ந்த என்பது. வேட்கை தொழிற்பெயர்; வேள் - பகுதி, கை - புடைபெயர்ச்சி விகுதி, ளகரம் டகரமாதல் சந்தி; இம்முதனிலையடியாக, வேட்ட, வேட்டு, வேட்டானென விணைவிகற்

பங்கள் பிறக்கும் நீலம் கண்ணுக்கு உருவகமாதலால் நீலக்கடை சினைத் தற்கிழமைப்பொருளதாகிய ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். நீலம், கடை-பண்பாகுபெயர். (அஉ)

உய்ஞ்சு கரையேற வொட்டுங்கொ லொண்டொடியாள்
நெஞ்சு தடவு நெடுங்கண்கள் - விஞ்சவே
நீண்டதோ வங்ஙனே யிங்ஙனே நீண்மலராள்
ஆண்டதோண் மன்ன னழகு.

(இ-ள்.) நெஞ்சு தடவு - (நளனுடைய) மார்பைப் பரிசிக்கின்ற, ஒள் தொடியாள் - ஒளியுள்ள வளையலணிந்த தமயந்தியினது, நெடு கண்கள்-நெடிய கண்கள், அங்ஙனே - அம்மார்பினிடத்தே, விஞ்சவே நீண்டதோ - மிகுதியாகவே பதிந்தனவோ, (அல்லதானால்) நீள் மலராள் - பெரிய தாமரைமலரிலுள்ள திருமகள், ஆண்ட - இடமாகச் செய்துகொண்ட, தோள் தோள்களையுடைய, மன்னன் அழகு - அரசனுடைய அழகாகிய கடல், இங்ஙன்-இங்கே, உய்ஞ்சு-தப்பி, கரை ஏற ஒட்டும்கொல்-கரையேறுதற்கு இசையுமோ, எ-று.

(வி-ரை) நளனுடைய மார்பை இடைவிடாது பார்த்துக்கொண்டேயிருந்தன ளென்பதை உணர்த்துதற்கு, அவளுடைய கண்கள் அவன் மார்பில் பதிந்தனவோ? அவனுடைய கட்டழகின் கடல் அவளுடைய கண்களைக் கரையேற விடுக்குமோ எனத் தாம் ஐயங்கொண்டனராகக் கூறினர். நளனுடைய பேரழகை வியந்து கூறுகின்றமையால் இங்ஙனென்னுஞ் சுட்டுப்பெயர் நளன்மேலது. நீண்டது - பன்மையிலொருமைவந்த பால்வழுவமைதி. உய்ஞ்சு-இறந்தகாலவினையெச்சம்; உய்-பகுதி, த்-சந்தி, த் - இறந்தகால இடைநிலை, உ-வினையெச்சவிகுதி, சந்தித் தகரம் நகரமாதல் மெலித்தல் விகாரம்; நகரத்துக்கு ஞகரமும், தகரத்துக்குச் சகரமும் போலியாக வந்தன; மஞ்சன், அஞ்சு என்பவற்றிலுங் காண்க. அங்ஙன், இங்ஙன் என்பன கடைக்குறை. கொல், ஓ-ஐயப்பொருளன. ஏ-தேற்றம். (அங)

மன்னாகத் துள்ளழுந்தி வாரணிந்த மென்முலையும்
பொன்னாணும் புக்கொளிப்பப் புல்லுவனென் - றுன்னா
எடுத்தபே ரன்பை யிடையே புகுந்து
தடுத்ததே நாணுந் தறி.

(இ-ள்.) வார் அணிந்த-கச்சை அழகு பெறச்செய்த, மெல் முலையும் - இளமுலைகளும், பொன் நாணும் - (தரித்துள்ள) பொன்னாணும், மன் ஆகத்துள் - அரசனுடைய மார்பில், புக்கு-புகுந்து, அழுந்தி ஒளிப்ப - அழுந்தி மறையும்படி, புல்லுவன் என்று - அணைவேனென்று, உன்னா - நினைத்து, எடுத்த - தான்கொண்ட, பேர் அன்பை - பேராசையாகிய யானையை, நாண் ஆம் தறி - நாணமாகிய தறி, இடையே புகுந்து - நடுவே புகுந்து, தடுத்தது - தடுத்துவிட்டது, எ - று.

(வி - ரை.) தறியென்றது யானையைத் தடுக்கு மரமாகிய கம்பத்தை. தமயந்தி நளனை அணையும்படி கொண்ட ஆசைப்பெருக்கம் நாணத்தால் ஒழிந்ததென்பது கருத்து. இஃது ஏகதேச வுருவகம். தறி-தொழிலடியாகப்பிறந்த பெயர். தறி-பகுதி, இ-செயப்படுபொருண்மை விகுதி, புணர்ந்துகெட்டது. மென்மை-இளமை. ஒளிப்ப-காரியப் பொருட்டாகிய எதிர்காலச் செயவெனெச்சம்; ஒளி-பகுதி, ப்-சந்தி, ப்-விரித்தல்விகாரம், அ-எதிர்கால வினையெச்ச விகுதி. (௮௪)

காவல் கடந்தெங்கள் கன்னிமா டம்புகுந்தாய்
யாவனோ விஞ்சைக் கிறைவனோ - தேவனோ
உள்ளவா சொல்லென்றா ளூசற் குழைமீது
வெள்ளவா ணீர்சோர விட்டு.

(இ - ள்.) ஊசல் - உஞ்சலைப்போல அசைகின்ற, குழைமீது - குண்டலத்தின்மேல், வெள்ள - கூர்மையாயுள்ள, வாள்நீர்-வாள்போன்ற கண்ணினது தன்மையாகிய கருமை, சோரவிட்டு - விழும்படி விட்டு (அதாவது கடைக்கண்ணாற் பார்த்து), காவல் கடந்து-காவலைத்

தாண்டி, எங்கள் கன்னிமாடம் - எங்களுடைய கன்னிமாடத்தில், புகுந்தாய் - உள்நுழைந்தாய்; யாவனோ - நீ எத்தன்மையனோ; விஞ்சைக்கு இறைவனோ - மந்திரங்களுக்குத் தலைவனோ; தேவனோ - தேவன்தானோ; உள்ள ஆறு சொல் என்றான் - உள்ளபடி சொல்லென்று கேட்டனன், எ - று.

(வி - ரை.) நாணத்தால் கடைக்கண்ணால் பார்த்து வினவுவானாகி, தன் தோழியர்களையும் தன்னொடுபடுத்தி 'எங்கள்' என்றான். ஓ மூன்றனுள் முன்னது உயர்வு சிறப்பிலும், மற்ற இரண்டும் உயர்வு சிறப்போடு வினாவிலும் வந்தன. விஞ்சை-வடமொழிச்சிதைவு. ஆறென்பதில் று தொகுத்தல். வெள்ள-பண்புப் பெயரடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம்; வெண்மையென்னும் பண்புப்பெயர், அகரப்பெயரெச்ச விகுதிப் புணர்ச்சியில், "ஈறுபோதல்" என்பதனால் மையீறு கெட்டு, தனிக்குறில் முன் ஒற்று இரட்டி முடிந்தது; வெண்மை - வெள்வேலென்பதிற்போலக் கூர்மையை யுணர்த்திற்று. இறைவனென்பதில் வகரம் பெயரிடைநிலை. காவல் கடந்து நிலைமொழி அஃறிணைப்பெயராதலாலும், இரண்டாம் வேற்றுமைப் புணர்ச்சியாதலாலும், [நன் - மெய் - சூ - ௨௪] இன்படி லகரந்திரியாமல், [உருபு - சூ - ௧௬] இன்படி விகாரத்தியல்பாயிற்று. முன் பொதுமையாக யாவனென்றும், காவல் கடப்பதற்குச் சாதனம் விஞ்சையாதலால் விஞ்சைக்கிறைவனென்றும், அதனோடு பேரழகையும் உடைமைபற்றி, தேவனென்றும் முறையே வினவப்பட்டான். (௮௫)

தீராத காமத் தழலைத்தன் செம்மையெனும்
நீரா லவித்துக் கொடுநின்று - வாராத
பொன்னாட ரேவலுடன் போந்தவா சொல்லித்தன்
நன்னாடுஞ் சொன்னா னளன்.

(இ - ள்.) தீராத - தணியாத, காமத்தழலை - காமத்தீயை, தன் செம்மை என்னும் - தனது நடுநிலைமையென்று சொல்லப்படும், நீரால்

அலித்துக் கொடுநின்று - நீரிலலவித்துக்கொண்டு நின்று, வாராத - வருதலருமையான, பொன் நாடர் - சுவர்க்கலோகத்தாருடைய, ஏவலுடன் - ஏவிய செய்தியையுடையானாகி, போந்த ஆறு சொல்லி - வந்த விதத்தைச்சொல்லி, தன் நல் நாடும் - தனது நல்ல நாட்டையும், சொன்னான் நளன் - சொல்லினன் நளராசன், எ - று.

(வி - ரை.) செம்மை - இந்த நடுநிலைமைக் காயிற்று; அதாவது தேவர்களுக்குத் தூதுவனாக அமைந்து, தூது சொல்லவந்தகாலத்தில் இவளை விரும்பி நிற்றல் முறைமையன்றென மனத்தை நிறுத்தல். "வாராவிருந்தான்" என்பதுபோல வாராத என்பதில் எதிர்மறை ஆ அருமை குறித்து நின்றது. உடனென்னும் மூன்றுவதன் சொல்லுருபு விசேடணப்பொருளது. ஏவல்-தொழிலாகுபெயர். உம்மை-இறந்ததுதழீஇய எச்சவும்மை. (அசு)

> என்னுரையை யாதென் றிகழா திமையவர்வாழ்
> பொன்னுலகங் காக்கும் புரவலனை - மென்மாலை
> சூட்டுவா யென்றான் றொடையிற்றேன் றும்பிக்கே
> யூட்டுவா னெல்லா முரைத்து.

(இ - ள்.) தொடையில் - (தனது தோளின்) பூமாலையிலுள்ள, தேன் - தேனை, தும்பிக்கே - வண்டுகளுக்கே, ஊட்டுவான் - உண்பிக்கின்ற நளராசன், எல்லாம் உரைத்து - (சொல்லவேண்டிய) யாவற்றையும் சொல்லி, என் உரையை - என்னுடைய சொல்லை, யாது என்று - எத்தன்மையதென்று, இகழாது - அவமதிக்காமல், இமையவர் - தேவர்கள், வாழ் பொன் உலகம் - வாழ்கின்ற சுவர்க்கத்தை, காக்கும் புரவலனை - ஆளுகின்ற அரசனாகிய இந்திரனை, மெல் மாலை சூட்டுவாய் என்றான் - மெல்லிய மலர்மாலை சூட்டென்று சொல்லினான், எ-று.

(வி-ரை.) யமன், அக்கினி, வருணன் மூவரையு மொழித்து, இந்திரனை எடுத்துக் கூறியது, இவன் தன்னைத் தூதுக்கிசையும்படி கேட்

டுக்கொண்டவனுதலாலும், தேவர்களுக்கு அரசனுதலாலும், இவனை இவள் விரும்பல் செய்யினுஞ் செய்புமென் றெண்ணினனுதலாலு மென்க. யாது-வினவடியாகப் பிறந்த ஒன்றன்படர்க்கைக் குறிப்பு வினைமுற்று. மாலையை என இரண்டாவதை விரிக்கின், புரவலனை யென்னும் இரண்டாவதை நான்காவதாகத் திரிக்க. ஏ - பிரிநிலை. சூட்டு வாய்-பிறவினையாகிய ஏவலொருமைவினை; சூடென்னுந் தன்வினைப் பகுதி, தன்னொற்றிரட்டி நின்ற சூட்டு-பகுதி, வ்-உயிர்வரின் உக்குறள் மெய்விட்டுக் கெடுமென்னுமல் ஒடுமென்றமையால் உகரங்கெடாமல், "இஈ ஐவழி" என்னும் பொதுவிதிப்படி வந்தசாகாமல், உடம்படு மெய் யல்லாததாய் வந்த வ் - சந்தி, ஆய் - ஏவலொருமை எதிர்காலவிகுதி; சூட்டாயெனவும் வரும். ஊட்டுவான் - பிறவினையாகிய வினையாலணை யும்பெயர்; உண்-பகுதி, டு-பிறவினைபடுத்தும் விகுதி, ஆ ன் நீளலும், ணகரம் டகரமாதலும் சந்தி; இது இலக்கணை. இமையவர் - மங்கல வழக்கு. (அஎ)

> இயமரநின் றார்ப்ப வினவலைநின் றேங்க
> வயமருதோண் மன்ன வகுத்த - சுயம்வரந்தா
> னின்பொருட்டா லென்று நினைகென்றா ளீள்குடையான்
> றன்பொருட்டா னைவா டளர்ந்து.

(இ-ள்.) நீள்குடையான் தன்பொருட்டு - வளர்கின்ற குடையை யுடைய நளனிமித்தம், கைவாள் - வருந்துமியல்பினளாகிய தமயந்தி, தளர்ந்து-மனந்தளர்ந்து, வயம் மரு - வெற்றியமைந்த, தோள் மன்ன- தோள்களையுடைய அரசனே, இயம்-தோற்கருவி முதலிய வாத்தியங் களும், மரம்-ஊதுகொம்பும், நின்று ஆர்ப்ப - நிலைத்து ஆரவாரிக்க வும், வளை இனம் - சங்கின் கூட்டம், நின்று ஏங்க - நிலைத்தொலிக்க வும், வகுத்த சுயம்வரந்தான் - செய்துள்ள சுயம்வரமானது, நின்பொரு ட்டுத்தான் என்று - உன்னிமித்தமேயென்று, நினைக என்றாள்-நினைக் கக்கடவாயென்று சொல்லினாள், எ-று.

(வி-ரை.) ஆலிரண்டும் அசை. தேற்றப்பொருளதாகிய தானென்னும் இடைச்சொல்லை நின்பொருட்டென்பதனோடு கூட்டுக. வளர்கின்ற குடையென்றது இவனது வளரும் ஆளுகையை. மரம் - கருவியாகுபெயர்; இயந்தைச் சாராநின்றமையால் இது ஊதுகொம்புக்காயிற்று. வளையினமென்னும் ஒன்றன்கூட்டத்தற்கிழமைப்பொருளதாகிய ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர் பின்முன்னாக மாறிநின்றது. மருதோள் - வினைத்தொகை நிலைத்தொடர். (அஅ)

போதரிக்கண் மாதராள் பொன்மாலை சூட்டத்தான்
ஆதரித்தார் தம்மோ டவையகத்தே - சோதிச்
செழுந்தரள வெண்குடையாய் தேவர்களு நீயும்
எழுந்தருள்க வென்றா ளெடுத்து.

(இ-ள்.) போது - தாமரைமலர்போன்ற, அரி - செவ்வரிபடர்ந்த, கண் மாதராள் - கண்களையுடைய தமயந்தி, சோதி - ஒளியமைந்த, செழு தரளம்-செழித்த முத்துகளால்சமைத்த, வெள்குடையாய்-வெண்குடையையுடைய அரசனே, பொன் மாலை சூட்டத்தான்-அழகிய மாலையைச் சூட்டுதற்கே, ஆதரித்தார் தம்மோடு - விரும்பிய அரசர்களோடு, தேவர்களும் நீயும்-அந்நான்கு தேவர்களும் நீயும், அவையகத்து-சபையினிடத்து, எழுந்தருள்க எடுத்து என்றாள் - எழுந்தருளக்கடவீரென்று எடுத்துச் சொல்லினாள், எ-று.

(வி-ரை.) மாதராள்-காரியவாகுபெயராய் நின்ற மாது அர்போலி பெற்று, மாதரென்றாகி, ஆளென்னும் பகுதிப்பொருள் விகுதிபெற்றது. மாதென்பதே பெண்ணொருமையை யுணர்த்தலால் ஆள் பகுதிப்பொருள் விகுதியாயிற்று. தான்-தேற்றப்பொருளது. ஏ-அசை. ஆதரித்தார்-இறந்தகால வினையாலணையும் பெயர். (அக)

வானவர்கோ னேவல் வழிச்சென்று வானுதலைத்
தானணுகி மீண்டபடி சாற்றவே - தேன்முரலும்

வண்டார் நளன்போந்து வச்சிராயு தற்றொழுதான்
கண்டா ருவப்பக் கலந்து.

(இ-ள்.) தேன் முரலும் - பெண்வண்டுகள் ஒலிக்கின்ற, வள் தார்-வளமாகிய மலர்மாலையணிந்த, நளன் - நளராசன், வானவர் கோன் - தேவராசனாகிய இந்திரனது, ஏவல்வழி-ஏவலின்படி, சென்று-போய், வாள் நுதலை - ஒளியாகிய நெற்றியையுடைய தமயந்தியை, தான் அணுகி - தான்சேர்ந்து, மீண்டபடி - திரும்பினவிதத்தை, சாற்ற - சொல்லுதற்கு, போந்து - வந்து, கண்டார் - (தேவர்கள்) கண்டவர்களாகி, உவப்ப - களிக்கும்படி, கலந்து - சேர்ந்து, வச்சிராயுதன் தொழுதான் - வச்சிராயுதத்தையுடைய இந்திரனைப் பணிந்தான், எ - று.

(வி-ரை.) தானணுகி யென்பதைத் தான் நணுகி யெனவும் பிரிக்கலாம். கண்டாரென்னும் வினைமுற்று வினையெச்சமானது. இவ்வினைக்குத் தேவர்கள் தோன்றா எழுவாய். நளன் தமயந்தியினிடத்துப் பேசியதை இவன் சொல்லாமலே இன்னதென உணரவல்லவர்களாதலால் கண்டுவப்பவர்களாயினார்கள். வாணுதல் - பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். கோனென்பதில் னகரம் சாரியை. வச்சிராயுதற் றொழுதான் என்பது நிலைமொழி உயர்திணைப் பெயராதலாலும், இது இரண்டாம்வேற்றுமைத் தொகைநிலைத் தொடராதலாலும், [நன் - உயிர் - ௬ - அ] இன்படி, நிலைமொழியீற்று னகரம் இயல்பாகாமல், [உருபு - ௬ - கசு] இன்படி இயல்பின் விகாரமாயிற்று; வருமொழித் தகரந் திரிந்ததற்கு [மெய் - ௬-ருச]. இங்கு இரண்டனுருபு தொகுதல் தகுதியாயிற்று. ஏ-ஈற்றசை. (௩௦)

விண்ணவர்த மேவலுடன் வீமன் றிருமகள்மால்
நண்ணு புகழ்நளனு நன்குரைத்த - பெண்ணணங்கின்
வன்மொழியுந் தேவர் மனமகிழத் தான்மொழிந்த
மென்மொழியுஞ் சென்றுரைத்தான் மீண்டு.

(இ-ள்.) வீமன் - வீமராசனுடைய, திருமகள்பால்-செல்வப்புத்திரியினிடத்தில், விண்ணவர்தம் - தேவர்களுடைய, ஏவலுடன்-ஏவலையுடையானுகி, நண்ணு - சேர்ந்த, புகழ் நளனும் புகழையுடைய நளராசனும், நன்கு உரைத்த - (தேவர் செய்தியைத் தான்) நன்ருகப்பேசிய, பெண் அணங்கின் - பெண்களுக்குள் தெய்வத்தை ஒத்த தமயந்தியினது, வல் மொழியும் உறுதிச்சொல்லையும், தேவர் மன மகிழ - தேவர்கள் மனம் மகிழும்படி, தான் மீண்டு உம் மொழிந்த - தான் மீளவுஞ்சொல்லிய, மெல் மொழியும் - மெல்லிய சொல்லையும், சென்று-நெருங்கி, உரைத்தான் - சொல்லினுன், எ - று.

(வி-ரை.) திருமகள்பால் நண்ணு புகழாவது தன்னால் பிறர்க்குப் பேறு வருவதாயின் தன் பேற்றை எண்ணுதானென்னும்புகழ். நளனுமென்ற வும்மை உயர்வுசிறப்பு. பெண் - சாதியொருமை. உரைத்த என்னும் பெயரெச்சம் அணங்கென்னும் நிலப்பெயர் கொண்டது; பேசியது அவளிடத்தாதலால். அவள் மனமிளகும்படி பேசியமொழியாதலால் அது மென்மொழியாயிற்று. மீண்டு - மீள என்பதன் திரிபு; இதனீற்றில் இறந்தது தழீஇய எச்சவும்மை தொகுத்தலாயிற்று. தேவர் மனமகிழ்தல் இவனது மெய்ந்நிலைமையைக் கருதி. (கக)

அங்கி யமுதநீ ரம்பூ வணியாடை
யெங்குநீ வேண்டினைமற் றவ்விடத்தே - சங்கையறப்
பெற்று யெனவருண னுகண் டலன்றருமன்
மற்றோரு மீந்தார் வரம்.

(இ-ள்.) வருணன் - வருணனும், ஆகண்டலன்-இந்திரனும், தருமன் - யமனும், மற்றோரும் - திக்கடவுளரும், அங்கி - நெருப்பையும், அமுதம் - அன்னத்தையும், நீர்-நீரையும், அம் பூ - அழகிய மலர்மாலையையும், அணி ஆடை - அழகிய வஸ்திரத்தையும், எங்கு - எவ்விடத்தில், நீ வேண்டினை - நீ விரும்பினுய், அவ்விடத்தே-அவ்விடத்திலே;

சங்கை அற - சந்தேகமில்லாமல், பெற்றாய் என - பெற்றாயென்று, வரம் ஈந்தார் - வரத்தைக் கொடுத்தார், எ - று.

(வி ரை.) ஸ்ரீமகாபாரதத்தில் வருணன்: நீரையும் நல்ல பூமாலையையும் பெறுவாயென்றும்; இந்திரன்: நீ செய்யும் யாகத்தில் கண்ணுக்குத் தோன்றும்படி வந்து அவிபெறுவேனென்றும், உன் வாழ்நாள் முடிவில் உத்தமபதவியை அடைவாயென்றும்; யமன்: மனம் தரு ... தில் நிலைத்திருப்பாயென்றும், வேண்டியவிடத்து அன்னரசம் பெறுவாயென்றும்; அக்கினிதேவன்: விரும்பிய இடத்தில் நெருப்பை..ப்பெறுவாயென்றும், சோதிலோகம் பெறுவாயென்றும் வரங்கொடு..தனர்களென்று உள்ளதென உபபாகவிகள் கூறுவர். தம்முடைய சொல் தவறாமல் பலித்தே விடுமென்னுந் துணிவினால் 'பெற்றாய்' என்றனர்; இது எதிர்காலம் இறந்தகாலமாக வந்த காலவழுவமைதி. இந்திரன் முதலானோர்க்கும் யாகத்தில் சொரிந்த அவியைச் சுத்தஞ்செய்துகொடுக்கும் உயர்வு கருதித் தீக்கடவுளை அவர்களோடு கூட்டாமல் மற்றோருமென்றனர்; மற்றென்னும் பகுதி பிறிதென்னும் பொருளது. (கூஉ)

அங்கவர்கள் வேண்டும் வரங்கொடுக்கப் பெற்றவர்கள்
தங்களொடுந் தார்வேந்தன் சார்ந்தனன்மேல் - மங்கை
வயமருவு கின்ற மனக்கா வலர்க்குச்
சயம்வரந்தான் கண்டதோர் சார்பு.

(இ-ள்.) அங்கு - அவ்விடத்தில், அவர்கள்-அத்தேவர்கள், வேண்டும் - தான் விரும்பத்தகும், வரம் கொடுக்கப்பெற்று-வரத்தைக்கொடுக்கப்பெற்று, மேல் - அதன்பின்பு, மங்கை வயம் - தமயந்தினது வசத்தில், மருவுகின்ற - தங்குகின்ற, மன காவலர்க்கு - மனத்தையுடைய அரசர்கள் வந்து சேர்வதற்கு, சயம்வரம்தான் - சுயம்வரத்தை, கண்டது - தோற்றுவித்ததாகிய, ஓர் சார்பு - ஒப்பற்ற இடத்தில், அவர்கள் தங்களொடும் - அத்தேவர்களோடு, தார் வேந்தன் - பூமாலையணிந்தவன், சார்ந்தனன் - சேர்ந்தான், எ - று.

(வி-ரை.) மேல்மங்கை மேன்மையாகிய மங்கையெனப் பொருள்கொண்டு, பண்புத் தொகைநிலைத்தொடராக்கலும் பொருந்தும். கண்டது - பிறவினையாகிய அஃறிணை ஒன்றன்படர்க்கை இறந்தகால வினையாலணையும்பெயர்; இதில் பிவ் விகுதி தொகுத்தல்; இதனோடு சார்பென்னும் தொழிலாகுபெயர் இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடராகப் புணர்ந்தது. தான் - அசை. இங்குக் காணல் தோற்றல். காண்பித்தல் - தோற்றுவித்தல். பெற்று - செய்தென் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம்; பெறு-பகுதி, உ-வினையெச்சவிகுதி, பகுதி முற்றியலுகரமாதலால் தன்னொற்றிரட்டல் விரித்தல், உகரக்கேடு சந்தி. (கூ௫.)

தூதுவந்த காதலனைச் சொல்லிச் செலவிடுத்த
மாதுவந்து பின்போன வன்னெஞ்சால் - யாதும்
அயிர்த்தா ளுயிர்த்தா ளணிவதன மெல்லாம்
வியர்த்தா ளுரைமறந்தாள் வீழ்ந்து.

(இ-ள்.) தூது வந்த - (தன்னிடத்து) தூதுவனாக வந்த, காதலனை - (தன்னால்) விரும்பப்பட்ட நளராசனை, சொல்லி - (சொல்லுதற் குரியவற்றைச்) சொல்லி, செல்ல விடுத்த - போம்படி விடுத்த, மாது - மாதாகிய தமயந்தி, வந்து பின்போன - (அவனோடு) வந்து (அவன்) பின்னே சென்ற, வல் நெஞ்சால் - வன்மையாகிய மனத்தினால், யாதும் - எதையும், அயிர்த்தாள் - சந்தேகித்தாள்; உயிர்த்தாள் - பெருமூச்சுவிட்டாள்; அணி வதனம் எல்லாம் - அழகிய முகமுழுமையும், வியர்த்தாள் - வெயர்த்தாள்; வீழ்ந்து - (மெய்ம்மறந்து) விழுந்து, உரை உம் மறந்தாள் - பேச்சையுமறந்தாள், எ - று.

(வி-ரை.) நெஞ்சுக்கு வன்மையாவது அன்னம் நளனைக்குறித்துச் சொல்லிய காலத்தில் தன்னையுடையாளைவிட்டு, நளனிடஞ் சென்று, அவன் வந்தபோது இவளிடம் வந்து, அவன் போனபோது அவ

னுடன் சென்றமை. யாதும் அயிர்த்ததாவது நளன் தன்னிடம் வந்ததும், தாமிருவரும் ஒருவரை யொருவர் கண்டதும், ஒருவரோடொருவர் பேசியதும், கனவோ நனவோவென எண்ணல். யாதுமென்னும் உம்மை இழிவுசிறப்போடு முற்றுப்பொருளது. உரை யென்பதனீற்றில் இறந்தது தழீஇய எச்சவும்மை தொகுத்தல். வசனமெல்லாம்-ஒருமையில் பன்மை வந்த பால்வழுவமைதி; எல்லாமென்பது தனித்தனியாக எண்ணப்படும் பொருட்பன்மையை யுணர்த்தும் பெயராய்த் திணையிடங்களுக்குப் பொதுவாய் வருவது; இஃதுணராது இதனை உரிச்சொலென்பா ருளராயின், பால்பகா அஃறிணைப்பெயராய் வாராமையாலும், உரிச்சொல் திணையிடப்பொருளை யுணர்த்தின் ஆகுபெயரென்னல்வேண்டும்; அங்ஙனங் கூறுவா ரின்மையாலும் உரிச்சொலெனல் பெருங்குற்றமென்க. (கூ௦)

உள்ளம்போய் நாண்போ யுரைபோய் வரிநெடுங்கண்
வெள்ளம்போய் வேகின்ற மென்றளிர்போற் - பிள்ளைமீன்
புள்ளரிக்கு நாடன் திருமடந்தை பூவாளி
உள்ளரிக்கச் சோர்ந்தா ளுயிர்.

(இ - ள்.) பிள்ளை மீன் - சிறுமீன்களை, புள் - கொக்குப்பறவைகள், அரிக்கும் - உண்ணுமொழிக்கின்ற, நாடன்-விதர்ப்பராசனுடைய, திருமடந்தை - செல்வப்புத்திரி, பூவாளி - மலரம்புகள், உள்-தன்னுள் (பாய்ந்து), அரிக்க - வருத்துதலால், உள்ளம் போய் - எண்ணம் நீங்கி, நாண் போய் - நாணம் நீங்கி, உரை போய் - பேசுதல் நீங்கி, வரி-செவ்வரிபடர்ந்த, நெடு கண் வெள்ளம் போய் - நெடிய கண்ணீரிழந்து, வேகின்ற-(தீயில் விழுந்த) வேகின்ற, மெல் தளிர்போல - மென்மையாகிய தளிரைப்போல, உயிர் சோர்ந்தாள் - உயிர்ச்சோர்வை யடைந்தாள், எ - று.

(வி-ரை.) நினைப்பென்ப தில்லாமையால் உடைசோர்தலை யறியாமல், பேசுதலொழிந்து, நளன் மறைந்தமையால் அழுதுகொண்

டிருந்த செயல் நீங்கி, மெய்ம்மறந்து கிடந்தாளென்பது கருத்து. ஈறு தொகுக்கப்பட்ட செயவெனெச்சமாகியபோலென்பது சோர்ந்தாளென்னும் வினைகொண்டது. உள்ளமென்பதில் அம் சாரியை; இது இடவாகுபெயர். வெள் - பகுதி, ள்-சந்தி, அம் - பண்புப்பொருள் விகுதி, இவ்வாறு முடிந்துநின்ற வெள்ளமென்னும் பண்புப்பெயர் ஆகுபெயராய் நீரை யுணர்த்திற்று. ஆரித்தலென்பது வேண்டாதவற்றை யொழித்து வேண்டியவற்றைப் பெறுதற்குச் செய்யுந்தொழில். (கடு)

பூவின்வாய் வாளி புகுந்த வழியேயென்
ஆவியார் போனாலு மவ்வழியே - பாவியேன்
ஆசைபோ காதென் றழிந்தா ளணியாழின்
ஓசைபோற் சொல்லா ளுயிர்த்து.

(இ-ள்.) அணி - அழகிய, யாழின் ஓசைபோல - யாழின் இசையைப்போல, சொல்லாள் - பேசுதலையையுடைய தமயந்தி, பூவின்வாய் - பூவாலமைந்த, வாளி - அம்பு, புகுந்தவழியே - நுழைந்தவழியாகவே, என் ஆவியார் - என்னுயிர், போனாலும் - சென்றாலும், அவ்வழியே - உயிர்சென்ற வழியாகவே, பாவியேன் ஆசைபோகாது என்று - பாவியாகிய எனது ஆசை செல்லாதென்று சொல்லி, உயிர்த்து - பெருமூச்சுவிட்டு, அழிந்தாள் - (அறிவு) அழிந்தாள், எ - று.

(வி-ரை.) நளனை அடையப்பெறாமைக் காரணத்தால் உயிர் நீங்கினும் நான் அவன்மேற்கொண்ட ஆசை யொழியேனென்பது கருத்து. உடலினும் சிறந்ததாயிருத்தலேயன்றி, நளன்மேல் விருப்பங்கொள்ளும் பாக்கியமு முடைமைபற்றி 'ஆவியார்' என்றது இனைவழுவமைதி. உம்மை - உயர்வுசிறப்பு. ஈறுதொகுக்தலாய் நின்ற போலவென்னும் செயவென்வாய்பாட் டெதிர்காலவினையெச்சம் சொல்லாளென்னும் தொழிலடியாகப் பிறந்த பெண்பாற் படர்க்கைப் பெயரின் பகுதியாகிய சொல்லென்னும் முதனிலைத் தொழிற்பெயர் கொண்டது. எ இரண்

டும் பிரிநிலை; பாவியேன் - தன்மையொருமைப்பெயர்; பாவியென்னும் இருதிணை முக்கூற்றொருமைப் படர்க்கைப் பெயராகிய பாவி - பகுதி; திணை பாற்பொதுமையையும், படர்க்கை யிடச்சிறப்பையும் நீக்கும்படி என் விகுதி புணர்ந்தது, ய் - சந்தி. தொண்டனேன், பாணரோம் என்பவற்றில் என், எம் விகுதிகள் படர்க்கையிடச் சிறப்பை ஒழித்தல் காண்க. என்று - என்னென்னும் இடைச்சொலடியாகப் பிறந்த இறந்தகாலவினையெச்சம். (கக)

வையம் பகலிழப்ப வான மொளியிழப்பப்
பொய்கையு நீள்கழியும் புள்ளிழப்பப் - பையவே
செவ்வாய வன்றி றுணையிழப்பச் சென்றடைந்தான்
வெவ்வாய் விரிகதிரோன் வெற்பு.

(இ-ள்.) வையம் - பூமி, பகல் இழப்ப - பகற்பொழுதை இழக்கவும், வானம் - ஆகாயம், ஒளி இழப்ப-ஒளி இழக்கவும், பொய்கையும் - தடாகங்களும், நீள் கழியும் - நீண்ட கழிகளும், புள் இழப்ப - பறவைகளை யிழக்கவும், செம் வாய - சிவந்தவாயுள்ள, அன்றில் - அன்றிற் பறவை, பைய - மெள்ள, துணை இழப்ப - சேவலையிழக்கவும், வெம் வாய் - வெப்பம் அமைந்த, விரி கதிரோன்-விரிந்த கிரணங்களையுடைய சூரியன், வெற்பு - அஸ்தமயமலையில், சென்று அடைந்தான் - போய்ச் சேர்ந்தான், எ - று.

(வி-ரை.) வையம் இழப்ப, வானம் இழப்ப, பொய்கையும் கழியு மிழப்ப, அன்றிலிழப்ப என்பது வினைச்செவ்வெண் ஆலதால் தொகை யொடு முற்றும்மை பெறவில்லை. பைய - பண்படியாகப் பிறந்த உடன் பாட்டுக் குறிப்புவினையெச்சம்; இது துணையிழப்ப என்னும் வினை கொண்டது. புட்களாவன: தாமரை வளையங்களையுண்டு அம்மலர்களில் வசிக்கின்ற அன்னமும், மச்சங்களையுண்ணும் கொக்கு முதலியனவும். வாய - சினையடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். செவ்வாய் - பண்

புத் தொகைநிலைத்தொடர்; செம்மையென்னும் பண்புப்பெயர் வா யென்னும் வருமொழிப் புணர்ச்சியில் மையீறுகெட்டு, "முன்னின்ற மெய்திரிதல்" என்பதனால் நிலைமொழியீற்று மகரம் வகரமாகத் திரிந் தது; உயிர் முதன்மொழிப் புணர்ச்சியிலும் செவ்வடியென இவ்வாறு திரியும்; வெவ்வாயென்பதும் இது; செம், வெம் என்னும் முதனிலை கள் பெயர்களாதலால் "எகரம் மெய்யோடேலாது" "ஏ என வருமுயிர் மெய்யீறாகாது" என்பனவற்றோடு மாறுபடச் செ, வெ என்பன முத னிலைகளென்னல் அறியாமைக் குற்றமே ஆம். பகல் - தொழிலாகு பெயர். (கஎ)

மாயிரு ஞாலத் துயிர்காண வானரங்கில்
பாயிருளென் னும் படாம்வாங்கிச் - சேய்நின்
றறைந்தா ரணம்பாட வாடிப்போய் வெய்யோன்
மறைந்தான் குடபால் வரை.

(இ-ள்.) வெய்யோன் - வெப்பமுடைய சூரியன், மா இரு ஞால த்து - மிகப் பெருமையாகிய பூமியில், உயிர் காண - உயிர்கள் காணும் படி, வான் அரங்கில் - ஆகாயமாகிய நாடகசாலையில், பாய்-பரவுகின்ற, இருள் என்னும் - இருளென்று சொல்லப்படும், படாம் வாங்கி - திரைச் சீலையை நீக்கி, சேய் நின்று - தூரத்தில் நின்று, ஆரணம் - (அந்தணர் கள்) வேதங்களை, அறைந்து பாட-சொல்லிப்பாடாநிற்க, ஆடிப் போய்- ஆடிச்சென்று, குடபால் வரை - மேற்றிசை மலையில், மறைந்தான் - மறைந்தனன், எ-று.

(வி-ரை.) மாயிரு - ஒருபொருட்பன்மொழி; இடையே யகர மெய்த் தோற்றம், [நன் - மெய் - சூ - கஃ] ஆல் அமைந்தது. வெய் யோன் - பண்படியாகப்பிறந்த ஆண்பாற்படர்க்கைப்பெயர்; வெம்மை - பகுதி, ஆன் - விகுதிப் புணர்ச்சியில் மையீறுகெட்டதும், முன்னின்ற மகரம் யகரமானதும், யகரம் இரட்டியதும் சந்தி; ஆ ஓ வானது செய்

யுள் வழக்கு. பாலென்பதை எழுனுருபாகக் கொள்ளாமல், இடப்பெய ராகக் கொள்ளின் குடபாலென்பதை இருபெயரொட்டுப் பண்புத் தொகைநிலைத்தொடராகக் கொள்க; விரிந்தால் குடக்காகிய பாலென விரியும். வரை - தானியாகுபெயர். படாமென்னும் ஆடையின் பொ துப்பெயர் இங்குத் திரைச்சீலையின்மேலது. இது தற்குறிப்பேற்ற வணி. (கூஅ)

மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப - முல்லையெனும்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது.

(இ-ள்.) மல்லிகையே - மல்லிகைப்போதே, வெள் சங்கு ஆக - வெண்மையாகிய சங்காக, வண்டு ஊத - வண்டுகள் ஊதவும், வான் கரும்பு - உயர்ந்த கரும்பாகிய, வில்லி - வில்லையுடைய மன்மதன், கணை தெரிந்து - அம்புகளை ஆராய்ந்தெடுத்து, மெய் காப்ப - (தன்) உடம்பைக் காத்துவரவும், முல்லை என்னும் - முல்லைமலரென்று சொல்லப்படும், மென் மாலை - மென்மையாகிய மலர்மாலை, தோள் அசைய - (தன்) தோள்களில் அசையவும், புல் மாலை - சிறிய மாலைக் காலமாகிய, அந்திப்பொழுது - அந்திப்பொழுதென்னும் அரசு, மெல்ல நடந்தது - மெள்ள நடந்தது, எ-று.

(வி-ரை.) மல்லிகை, முல்லை - பொருளாகுபெயர். ஏ இரண்டில் முன்னது பிரிநிலை; பின்னது ஈற்றசை. மெல்ல-பண்படியாகப்பிறந்த உடன்பாட்டுக் குறிப்பு வினையெச்சம். பகலிரவுகளைப்போல நீண்டதல் லாமையால் அந்தியைப் 'புன்மாலை' என்றார். மாலை - பகல் இரவென உணரப்படாத மயக்கத்தைத் தருவதாதலால் காரியவாகுபெயர்; பகலும் இரவும் தம்மிற் கலந்ததெனக் கொள்ளின் தொழிலாகுபெயருமாம்; மால்-பகுதி, ஐ-புடைபெயர்ச்சி விகுதி; மான்றன், மான்று மான்ற னை வினைவிகற்பங்கள் வரும். அந்தி-பகற்காலத்தின் முடிவானதென்

பது; மாலையந்தி - இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடர்; இது ஒருமொழிபோல நிற்க, இதனோடு பொழுதென்பதும் அத் தொகைநிலையாகப் புணர்ந்தது. இடைச்சொற்கிளவியென்பதும் இது. கருப்புவில்லி: கரும்பாகிய வில்லி எனின் பண்புத் தொகைநிலைத் தொடராகவும், கரும்பாற் சமைத்தவில்லி எனின் மூன்றாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடராகவுங் கொள்க. மென்றொடர் வன்றொடராதற்கு [நன் - உயி - கு - டு] இப்புணர்ச்சி விளையென்னும் பொருளடியாகப் பிறந்த பெயரின் வில்லென்னும் முதனிலையின் மாத்திரைக்கே கொள்க (கக)

புற்கென்ற ரந்தி புனைமலர்க்க ணீரரும்ப
நிற்கின்ற தந்தோ நிலங்காப்பான் - முற்கொண்
டடைகின்ற வேந்தர்க்கு மாண்டஞ்சி னோர்க்கும்
இடைநின்ற காலம்போ லின்று.

(இ-ள்.) நிலம் காப்பான் - உலகத்தைக் காக்கும்படி, முற்கொண்டு - முற்பட்டு, அடைகின்ற - வருகின்ற, வேந்தர்க்கும் - அரசர்களுக்கும், ஆண்டு - அவர்கள் வருகையில், அஞ்சினோர்க்கும் - அஞ்சின சிற்றரசர்களுக்கும், இடைநின்ற காலம்போல - இடையில் நின்ற காலத்தைப்போல, இன்று - இத்தினத்தில், புற்கு என்று - புற்கென்னும் நிறமுடையதாய், ஆர் அந்தி - நிறைந்த அந்திப்பொழுதானது, புனை - அலங்கரிப்பதற்குரிய, மலர்க்கண் - மலர்களாகிய கண்களில், நீர் அரும்ப - (தேனாகிய) நீருண்டாக, நிற்கின்றது - நிற்கின்றது, அந்தோ - ஐயோ, எ - று.

(வி-ரை.) போர்க்கு வருகின்ற பேரரசர் நாம் வெற்றிக்கொள்வோமென்னுந் துணிவாற் களிப்பும், அவர்களது வரவையறிந்த சிற்றரசர்கள் இனி நிலவுரிமை யிழப்போமென்னும் அவலத்தால் துன்பமுங் கொள்ள இடமாய், வெற்றிக்கும் தோல்விக்கும் இடையில் நின்ற காலத்தைப்போல் ஒளியும் இருளுங் கலந்ததா யிருந்தமையால் 'புற்

கென்றாந்தி' என்றும், பகலுக்கும் இரவுக்கும் இடையில் சிறிது பொழுது இருப்பதாதலால் 'மலர்க்கணீரரும்ப' என்றும், 'அந்தோ' என்றும் கூறினர். புற்கெனுநிறம்-பொன்மையும் கருமையுங் கலந்த நிறம். அந்தோ - இரக்கக் குறிப்பிடைச்சொல். காப்பான் - காரியப்பொருட்டாகிய பானீற்று எதிர்கால வினையெச்சம். நிலங்காப்பானென்றமையால் வேந்தர் பேரரசரெனவும், அஞ்சினோர் சிற்றரசரெனவுங் கொண்டாம். இன்றென்றது - தமயந்தி விரகநோயடைகின்ற காலத்தை. ()

* பைந்தொடியா ளாவி பருகுவா னிற்கின்ற
அந்தி முறுவலித்த தாமென்ன - வந்ததால்
மையார்வேற் கண்ணாள் வனமுலைமே லாரழலைப்
பெய்வா னமைந்த பிறை.

(இ - ள்.) மை ஆர் - மைதங்கிய, வேல் கண்ணாள் - வேல்போலுங் கண்களையுடைய தமயந்தியினது, வனமுலைமேல் - அழகியமுலைகளின்மேல, ஆர் அழலை - நிறைந்த நிலவாகிய நெருப்பை, பெய்வான்- சொரிவதற்கு, அமைந்த பிறை - ஏற்பட்ட பிறைச்சந்திரன், பைந்தொடியாள் - பசும்பொன் வளையணிந்த தமயந்தியினது, ஆவி பருகுவான் - உயிரையுண்ணும்படி, நிற்கின்ற அந்தி - நிற்கின்ற அந்திப்பொழுது, முறுவலித்தது ஆம் என்ன-சிரித்ததாமென்று சொல்ல, வந்தது- உதித்தது, எ - று.

(வி - ரை.) வேற்கண்ணாள் - சுட்டிப்பொருளது. முறுவலித்தது- இறந்தகாலத் தொழிற்பெயர்; முறுவலென்னும் பெயரடியாகப்பிறந்த முறுவலி - பகுதி, த் - சந்தி, த்-இறந்தகால இடைநிலை, அ - சாரியை, து - புடைபெயர்ச்சி விகுதி. ஆல் - சாரியை. பருகுவானென்பது வானீற்றுக் காரியப்பொருட்டாகிய எதிர்கால வினையெச்சம். பெய்வானென்பதும் இது. பிறை - தொழிலடியாகப் பிறந்த பெயர்; பிற - பகுதி, ஐ - வினைமுதற்பொருண்மை விகுதி, பகுதியீற்று அகரக்கேடு கடைக்குறை. (௮௦௪)

* கூட்டுமை போற்சிறந்த கூரிருளைக் கூன்கோட்டால்
கோட்டுமண் கொண்ட குளிர்திங்கள் - ஈட்டுமணிப்
பூணிலா மென்முலைமேற் போரச் சொரிந்ததே
நீணிலா வென்னு நெருப்பு.

(இ - ள்.) கூட்டு - கூட்டிய, மைபோல - மையைப்போல, சிறந்த - மிகக்கறுத்த, கூர் இருளை - பேரிருளை, கூன் கோட்டால் - வளைவாகிய நுனியினால், கோட்டு - சாயச்செய்து, மண் கொண்ட - பூமியை வசப்படுத்திக்கொண்ட, குளிர் திங்கள் - குளிர்ச்சியாகிய பிறைச்சந்திரன், (தமயந்தியினது) ஈட்டு - தேடத்தகுந்த, மணிப்பூண் - இரத்தினாபரணங்கள், நிலாம் - விளங்குகின்ற, மென் முலைமேல் - மென்மையாகிய முலைகளின்மேல், நீள் நிலா என்னும் நெருப்பு - வளர்கின்ற சந்திரிகையாகிய நெருப்பை, போரச் சொரிந்தது - மிகுதியாகச் சொரிந்தது, எ - று.

(வி - ரை.) கோட்டு என்னும் வினைமுதனிலை வினையெச்சப் பொருள்பட நின்றது. பிறை பூமியைக்கொள்ளல் நிலாவை எங்கும் வீசுதல். கூரிருளைக் கூன்கோட்டால் கோட்டு மண்கொண்ட குளிர் திங்களென்பதற்கு-மிகுந்த இருளை கூனியதந்தத்தினால் கிண்டிவிட்ட குளிர்ந்த பிறைச்சந்திரனாகிய யானையெனவும் உரைக்கலாம். கோடு - தந்தம். கோட்டுமண்கொள்ளல் ஒருசொல்லின் தன்மையது; பொருள்: யானைமுதலியன மதத்துத் தரையைக் கிண்டல். கூட்டு, ஈட்டென்பன வினைத்தொகை வினைச்சொல்லாகக் கொள்ளலே அன்றி, கூட்டும், ஈட்டும் எனவைத்துப் பெயரெச்ச வினைச்சொலாகவுங் கொள்க. நிலாம் - இடையிலுள்ள உயிர்மெய்கெட்டது. பூண் - தொழிலடியாகப் பிறந்த பெயர்; பூண் - பகுதி செயப்படுபொருண்மை விகுதியாகிய இகரம் புணர்ந்துகெட்டது; இவ்வாறு கொள்ளாமல் முதனிலைத்தொழிலாகு பெயராகவுங் கொள்ளலாம். பூணிலாமென்முலை என்பதைப் பூண் இலாத மென்முலையெனப் பதம் பிரித்து, பூண்கள் இல்லாத மென்

முலையென உரைத்தலுமாம். விரகவேதனைபடுகின்றவளாதலால் ஓரணி யும் அணிந்திலளென்பது கருத்து. போர - செயவென் வாய்பாட் டெதிர்கால வினையெச்சம். இச்சொல் போத எனவும் வழங்கும். (கo௨)

> அன்னங்கா ணீங்களுமவ் வாதித்தன் றானும்போய்
> மன்னும் படியகலா வல்லிரவின் - மின்னும்
> மழைத்தாரை வல்லிருட்கும் வாடைக்கு நாங்கள்
> பிழைத்தால்வந் தேனென்னும் பேர்.

(இ - ள்.) அன்னங்காள் - அன்னங்களே, நீங்களும் - நீங்களும், அவ்வாதித்தன்தானும் போய் - அச்சூரியனும் போக, மன்னும்படி - தான் நிலைபெறும்படி, அகலாத நீங்குதலில்லாத, வல் இரவில் - வன்மையாகிய இராவில், மின்னும் - மின்னுகின்ற, மழை-மேகங்களினது, தாரைக்கும் - துளியினின்றும், வல் இருட்கும் - வலிய இருளினின்றும், வாடைக்கும் - வாடையினின்றும், நாங்கள் பிழைத்தால் - நாங்கள் தப்பியிருந்தால், வந்தேன் என்னும் - பிறந்தேனென்று சொல்லப்படும், பேர் - கீர்த்தியுண்டு, எ-று.

(வி - ரை.) தன்னைப்பற்றி வருந்துகின்ற உயிர்த்தோழியரைத் தன்னொடுபடுத்தி 'நாங்கள்' என்றும், அவர்கள் தன்னைப்போல விரகங் கொண்டவர்க ளல்லராதலால் நான் பிழையேனென்னுங் கருத்தால் 'வந்தேன்' என்றும். பிழைத்தலி னருமைகருதிப் 'பேர்' என்றுங் கூறினள். பேரென்னும் எழுவாய்க்கு உண்டென்னும் பயனிலை குறைந்து நின்றது. ஆதித்தன்-அதிதி புத்திரன். அ என்னுஞ் சுட்டு இருளைக் கடிகின்ற உயர்வைச்சுட்டிநின்றது தாரை வல்லிருள் - அஃறிணை யும்மைத்தொகையாதலால் பன்மையீறு பெற்றிலது. இருட்குமென்றவும்மை வாடையென்பதைக் குறித்துவந்த எண்ணும்மை. குவ்வுருபிரண்டும் ஐந்தாவத னீங்கற்பொருளன. போய்-போக என்பதன் திரிபு. அகலாத என்னும் எதிர்மறைப் பெயரெச்சம் ஈறு தொகுத்தலாய் நின்றது; இதனை "சாவவென் மொழியீற்றுயிர் மெய்சாதலும் விதி" என்னும்

விதியை யுபலக்கணமாகக் கொண்டு, இப்பெயரெச்சத்தீறு கெட்டதெனின், தொல் - "சாவ வென்னுஞ் செயவெ னெச்சத், திறுதி வகரங் கெடுதலு முரித்தே" என்னுஞ் சூத்திரத்துக்கு உரையாசிரியரும், நச்சினார்க்கினியாரும், நன் - "சாவவென் மொழியீற் றுயிர்மெய் சாதலும்விதி" என்பதற்கு உரைகாரரும், இவ்வாறு கொள்ளாமையாலும், நன்னூலுரைகாரர் இப்புணர்ச்சி சாவக்குத்தினு னென்பதுபோலச் சிறந்ததல்லாமையால் சாதலும் விதியென்று றென்றமையாலும், இது சாவ என்னும் சொல்லுக்கே கூறிய சிறப்புவிதியாதலாலும், சுழற்றுத் தடி, திரியாச்சக்கரம், உடையாச்சட்டி என எதிர்மறைப்பெயரெச்சம் யாவும் ஈறு கெட்டு வருமாதலாலும், சாவ வினையெச்சம் ஆகலாத பெயரெச்சமாதலாலும், அது உடன்பாடு, இது எதிர்மறையாதலாலும், இது பிரயோகவிவேக விதியெனின், இந்நூல் தொல்காப்பியவுரையிலும், நன்னூலுரையினுஞ் சிறந்ததன்றாதலாலும், இங்ஙனங் கொள்ளல் குற்றமென்க. (௧௦௩)

* செப்பிளங் கொங்கைமீர் திங்கட் சுடர்பட்டுக்
கொப்புளங் கொண்ட குளிர்வானை - இப்பொழுதும்
மீன்பொதிந்து நின்ற விசும்பென்ப தென்கொலோ
தேன்பொதிந்த வாயாற் றெரிந்து.

(இ - ள்.) செப்பு - சிமிழ்போன்ற, இளகொங்கைமீர் - இளமையாகிய முலைகளையுடைய மாதர்களே, திங்கள்சுடர் சந்திரனுடையநிலா, பட்டு-பட்டதனால், கொப்புளங் கொண்ட-கொப்புளங்களைக் கொண்ட, குளிர் வானை - குளிர்ச்சியாகிய ஆகாயத்தை, இப்பொழுதும் - இப்போதும், தேன் பொதிந்த வாயால் - தேன்போலுஞ் சொற்கள் நிரம்பிய வாயினால், தெரிந்து - துணிந்து, மீன் - விண்மீன்கள், பொதிந்து நின்ற - நிறைந்துநின்ற, விசும்பு என்பது - ஆகாயமென்று சொல்லுதல், என்னோ - யாதுகாரணமோ, எ-று.

(வி - ரை.) இப்போது மென்றது உமதருகிலுள்ள வான் நிலாவால் உடல் வெதும்புவதைக் கண்கூடாகக் காணுங்காலத்து மென்

பதை. உம்மை - உயர்வுசிறப்போடு இறந்தது தழீஇயது. செப்பென் பதைப் பெயர்ச்சொலாகக்கொள்ளாமல், வினைத்தொகை வினைச்சொலாகக் கொண்டு, புகழப்படுகின்ற என உரைப்பினும் பொருந்தும். பட்டு-செயவெனெச்சத்திரிபு. கொப்புளமென்னும் பெயரினடியாகக் கொப்புளி, கொப்புளித்தல், கொப்புளித்த, கொப்புளித்து, கொப்புளித்தான் என வினைவிகற்பங்கள் பிறக்கும். குளிர்வாயென்றது நிலாவின் வெப்பத்தைச் சிறப்பித்தற்கு. கொல் - அசை. ஓ-இரக்கப்பொருளது.()

கானுந் தடங்காவுங் காமன் படைவீடு
வானுந்தேர் வீதி மறிகடலும் - மீனக்
கொடியாடை வையமெல்லாங் கோதண்ட சாலை
பொடியாடி கொன்றதெல்லாம் பொய்.

(இ-ள்.) கானும்-காடும், தடம் - தடாகங்களும், காவும் - சோலையும், காமன் படை வீடு-மன்மதனுடைய ஆயுதங்களுள்ள வீடு; வானும்-ஆகாயமும், தேர் வீதி - தேர் ஓடுகின்ற வீதி, மறி கடலும் - அலைகள் மடங்குகின்ற கடலும், மீனம் - மீனெழுதிய, கொடி ஆடை-கொடிச்சீலை, வையம் எல்லாம் - பூமிமுழுமையும், கோதண்ட சாலை - வில்லெடுத்துப் பழகுமிடம்; (ஆதலால்) பொடி ஆடி - மேனி முழுமையும் திருநீற்றையணிந்த சிவன், கொன்றது எல்லாம் - கொன்ற சரித்திர முழுமையும், பொய் - பொய்யாம், எ-று.

(வி - ரை.) மன்மதனுடைய மலரம்புகளில் முல்லைமலர் காட்டிலும், தாமரைமலர் நீலோற்பலமலர் குளத்திலும், மாமலர் அசோகமலர் சோலையிலும் உள்ளன ஆதலால் அவை மூன்றையும் படைவீடாகவும், அவன் தேராகிய தென்காற்று உலாவுவதாகையால் ஆகாயத்தைத் தேரோடும் வீதியாகவும், மகரமீன் உலாவுகின்றதாகையால் கடலைக் கொடிச்சீலையாகவும், எல்லா வுயிர்களையும் எய்பவனாதலால், அவற்றுக்கு இடமாகிய பூமியை வில்லெடுத்துத் திரியுமிடமாகவுங் குறித்தனன். தடம் பெரும்பாலும் காவைச் சார்ந்தேயிருத்தலால் காவோடெண்ணப்

பட்டது; தடங்கா என்பதற்குப் பொருட்புணர்ச்சியிலக்கணம் ௪0௩-ம் செய்யுளில் தாரைவல்லிருளென்பதற் குரைத்தாங் குரைத்துக்கொள்க. வையம் "ஒருமொழி யொழிதன் இனங்கொளற் குரித்தே" என்பத ஞல் மற்ற புவனங்களையுங்கொள்ள நின்றது; வையமெல்லாம், கொன்றதெல்லாம் என்பன ஒருமையில் பன்மைவந்த வழுவமைதி. பொடியாடி என்பதில் இகரவிகுதி வினைமுதற்பொருண்மை விகுதி. (௧0௫)

கொள்ளைபோ கின்ற துயிரென்னுங் கோளரவின்
முள்ளெயிறோ மூரி நிலாவென்னும் - உள்ளம்
கொடிதிரா வென்னுங் குழையுந் தழல்போல்
நெடிதிரா வாய்புலரா நின்று.

(இ - ள்.) நெடிது - நெடுநேரம், இரா - உட்கார்ந்து, வாய்புலரா நின்று - வாய் உலராநின்று, உயிர் - என்னுயிர், கொள்ளை போகின்றது - கொள்ளைபோகாநின்றது, என்னும் - என்கின்றாள்; மூரி - வலியமைந்த, நிலா - பிறைச்சந்திரன், கோள் அரவின் - இராகுக்கோளாகிய பாம்பினது, முள் எயிறோ - முள்போன்ற பல்லோ, என்னும்-என்கின்றாள்; (என்பாலிரங்கிச் செல்லாமையால்) இரா - இராப்பொழுது, உள்ளம் கொடிது - மனம் கொடியது, என்னும் - என்கின்றாள்; தழல் போல - தீயில் விழுந்தாற்போல, குழையும் - சோர்கின்றாள், எ-று.

(வி-ரை) தழல்போல் நெடிதிரா என்பதற்கு, தழல்போல் - தீயிலிருப்பதுபோல, நெடிது இரா - (பூவணையில்) நெடுநேரம் இருந்து, என உரைத்தலுமாம் கொள்ளைபோகின்ற துயிரென்பது முதலியன வற்றைத் தனித்தனிப் பலமுறை கூறுகின்றனளென்ப தணர்த்தற்கு ஆங்காங்கு என்னுமென முடித்துக் கூறினர். என்னும், குழையுமென் னும் செய்யுமென் வாய்பாட்டு நிகழ்கால வினைமுற்றில் உம் விகுதி காலங்காட்டியது. நிலா-பண்பாகுபெயர். இரா உள்ளங்கொடியது [நன்- பொது - ௬ - ௨௬] இல், "சொற்றொறு மிற்றிதன் பெற்றி" என்பத ஞல் வந்த பால்வழுவமைதி. ஓ - உயர்வு சிறப்பொடு ஐயப்பொருளது.

இரா என்னும் செய்யா என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சத்தால் நெடிது காலத்தின்மேலது; இது பண்படியாகப் பிறந்த ஒன்றன் படர்க்கைப் பெயர்; நெடுமை-பகுதி, து - ஒன்றன் படர்க்கை விகுதி, மையீறுகெட்டதும், பகுதியீற்றுகரம் இகரமாதலும் சந்தி. புலராநின்றென்னும் நிகழ்கால வினையெச்சமாகிய சினைவினை என்னுமென்னும் முதல்வினைகளைக் கொண்டது. (௧0௬)

> வெங்கதிரோன் றன்னை விழுங்கிப் புழுங்கியோ
> கொங்கை யனலிற் கொளுந்தியோ - திங்கள்
> விரிகின்ற வெண்ணிலவால் வேகின்றதேயோ
> எரிகின்ற தென்றோ விரா.

(இ-ள்.) இரா - இராப்பொழுதானது, வெம் கதிரோன் தன்னை - வெப்பமாகிய கிரணங்களையுடைய சூரியனை, விழுங்கிப் புழுங்கியோ - விழுங்கி (அவனால்) கொதிப்பெடுத்தோ, கொங்கை அனலின் - என் முலைகளின் வெப்பத்தால், கொளுந்தியோ-எரிக்கப்பட்டோ, திங்கள் - சந்திரனது, விரிகின்ற - பரவுகின்ற, வெள் நிலவால்-வெண்மையாகிய நிலாவினால், வேகின்றதோ - வேகாநின்றதினாலோ, எரிகின்றது - எரிகின்றதற்குக் காரணம், என்றோ - யாதோ (அறியேன்), எ-று.

(வி-ரை.) புழுங்கி, கொளுந்தியென்னும் காரணப்பொருளன ஆகிய வினையெச்சம் இரண்டடுக்கி எரிகின்றதென்னும் வினைகொண்டன. எ - ஈற்றசை. முதலிலுள்ள ஓ மூன்றும் ஐயப்பொருளன; மற்றது இரக்கப்பொருளது. கொளுந்தி - செயப்பாட்டிறந்தகால வினையெச்சம்; கொளுந்து - பகுதி, அ-சாரியை, படு-செயப்பாட்டு வினைப்பொருண்மை விகுதி, உகரக்கேடும் பகரத்தோற்றமுஞ் சந்தி, அனைத்து மொருபகுதி, உ-வினையெச்ச விகுதி, பகுதி ஒற்றிரட்டலும் உகரக்கேடும் சந்தி, ஒற்றிரட்டலே காலங்காட்டியது, இதில் படு விகுதி தொகுத்தலாயிற்று. என்-எவனென்னும் வினாவினைக் குறிப்புமுற்றின்

மரூஉ. நிலவு-நிலா என்பதன் விகாரமொழி; இரா என்பதும் இரவு எனவரும். (௧0எ)

ஊழி பலவோ ரிரவாயிற் றோவென்னும்
கோழி குரலடைத்த தோவென்னும் - ஆழி
துயிலாதோ வென்னுஞ் சுடர்மதியங் கான்ற
வெயிலா லுடலுருகா வீழ்ந்து.

(இ - ள்.) சுடர் மதி - ஒளியுள்ள சந்திரன், கான்ற - வீசிய, வெயிலால் - வெப்பமாகிய நிலவால், உடல் உருகா - உடல்மெலிந்து, வீழ்ந்து - விழுந்து, பல ஊழி - பலஊழிகாலத்தால், ஓர் இரவு - இவ்வோரிராத்திரிப்பொழுது, ஆயிற்றோ - சமைந்ததோ, என்னும் - என்று நின்றாள்; கோழி - (சாமமறிந்து கூவுகின்ற) சேவற்கோழி, குரல் அடைத்ததோ - குரல் அடைக்கப்பட்டதோ, என்னும் - என்றுநின்றாள்; ஆழி - கடல், துயிலாதோ - நித்திரிக்காதோ, என்னும் - என்று நின்றாள், எ - று.

(வி - ரை.) மறுநாள் நளனுக்கு மாலைசூடு நாளாதலால் விடியலை நோக்கி யிருப்பவளுக்கு இரா நீண்டதாகத் தோன்ற, 'பல ஊழி இரவாயிற்றோ' என்றும், எண்ணம் அவன்மேலிருத்தலால் கோழியின் குரல் கேளாதவளாய்க் 'கோழிகுர லடைத்ததோ' என்றும், கடல் இரவில் இடைவிடாது ஒலிக்கும் பேரொலியைத் தன் எண்ணம் போந்த போதெல்லாம் கேட்கின்றவளாய், அது 'துயிலாதோ' என்றும் கூறுகின்றாளாயினள். பல ஊழியென்பது ஊழிபலவென்ற பின்முன்னாக நிற்றலால் இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடரில் தழாத் தொடரென்க. இதனீற்றில் மூன்றனுருபு தொகுத்தலாயிற்று. பல - பண்படியாகப் பிறந்த பலவின்படர்க்கைப்பெயர். கோழி - சாதியொருமை. ஆழி-ஆழமுடையதென்னும் பொருளில் ஆழ் - பகுதி; இ - வினைமுதற்பொருண்மை விகுதி; வட்டமா யிருப்பதென்னும் பொருளில்

பண்பாகுபெயர். மதியமென்பதில் அம் சாரியை. கான்ற - காரியப் பொருளதாகிய இறந்தகாலப் பெயரெச்சம்; கால் - பகுதி, ற் - இறந்த கால இடைநிலை, அ - பெயரெச்சவிகுதி, லகரம் றகரமாதல் சந்தி, அது னகரமாதல் மெலித்தல்; இது இலக்கணை. வெயில் - பண்புப் பெயர்; வெம்-பகுதி, இல்-பகுதிப்பொருள் விகுதி, மகரம் யகரமாதல் சந்தி; இது பண்பாகுபெயராய்ச் சூரியனொளியை உணர்த்திற்று; இவ் வில் விகுதியைக் குறில், நெடிலென்பவற்றிலுங் காண்க. நிலவு தமயந்தியின் உடலை வெதுப்புதலால் அதனை 'வெயில்' என்றார். ஒ மூன்றும் வினையோடு இரக்கப்பொருளன. (௧0அ)

* ஆடி வரிவண் டருகே பறக்கவே
வாடி மெலிவாள் வனமுலைமேல் - ஓடிப்
பொறையாகச் சோர்வாள் பொறுக்குமோ காமத்
துறைவா யடங்காத் துயர்.

(இ-ள்.) வரி வண்டு-கீற்றுகளமைந்த வண்டுகள், ஆடி - ஆடிக் கொண்டு, அருகு - தன்பக்கத்தில், பறக்கவே - பறத்தலினாலேயே, வாடி - உடல்வாடி, மெலிவாள் - மெலிகின்றவளும், வனமுலை - அழகியமுலைகள், மேலே ஓடி-மேலே உயர்ந்து, பொறை ஆக-சுமையாதலால், சோர்வாள் - தளர்ச்சியடைபவளுமாகிய தமயந்தி, காமத்துறைவாய் - காமமாகிய துறையில், (உண்டாகிய) அடங்காத துயர்-தணியாத துன்பத்தை, பொறுக்குமோ - சகிக்கவல்லவளோ, எ-று.

(வி-ரை.) பறக்கவே வாடிமெலிதலாவது பறத்தலாலுண்டாகும் காற்றுக்குப் பொறுக்காமல் வாடிமெலிதல். முதலிலுள்ள ஏ ஈற்றசை, மற்றது பிரிநிலை. பொறை - தொழிலடியாகப் பிறந்தபெயர்; பொறு-பகுதி, ஐ-செயப்படுபொருண்மை விகுதி, உகரங்கெடுசந்தி. பறக்க, ஆக என்னும் இரண்டெச்சமுங் காரணப்பொருளனவாகிய இறந்தகாலச் செயவெனெச்சம். இ-எதிர்மறை. (௧0௯)

ஈர மதியே யிளநிலவே யிங்ஙனே
சோர்குழலின் மீதே சொரிவதெவன் - மாரன்
பொரவளித்தான் கண்ணி யுனக்குப் புலரா
இரவளித்தா னல்லனோ வின்று.

(இ - ள்.) ஈரமதியே - குளிர்ச்சியாகிய சந்திரனே, மாரன்-மன்மதன், இன்று - இத்தினம், பொர - போர்செய்யவே, கண்ணி - தும்பைமாலையை, உனக்கு அளித்தான் அல்லனோ - உனக்குக் கொடுத்தான்; புலராத - விடியாத, இரவு அளித்தான் அல்லனோ-இராவையே கொடுத்தான்; (அவ்விரண்டும் பெற்று) இளநிலவே-மென்மையாகிய நிலாவையே, இங்ஙனே - என்னிடத்திலேயே, சோர்குழலின் மீது - அவிழ்ந்த கூந்தலின்மேலிடத்து, சொரிவது எவன்-பொழிவது யாது காரணம், எ-று.

(வி - ரை.) சந்திரனே! போர்செய்தற்காகத் தும்பைமாலையையும், அப்போர் நெடும்பொழுது செய்வதற்கு விடியாத இராவையும் மன்மதனால் கொடுக்கப்பெற்றுவந்த நீ வேறு கன்னிகளிடத்திலும் செல்லாமல் என்னொருத்தியினிடத்திலேயேநின்று போராடுவதென்னவென்றாளென்பது கருத்து. அம்மாலையையும், காலத்தையும் பெறாவிடின் என்னொருத்தியையே பொருதல் தகுதியென்பது குறிப்பெச்சம். முன்னுள்ள ஏ இரண்டும் பிரிநிலை. பின்னதொன்றும் ஈற்றசை. அல்லனோ என இரண்டெதிர்மறையாற்கூறல் தேற்றப்பொருள்படுதற்காதலால் அத்தேற்றத்தைப் பொர, இரவென்பவற்றோடு சேர்த்துப் பொருள் கூறினாம். (கக0)

தாங்கு நிலவின் றழல்போய்த் தலைகொள்ளத்
தேங்குழல்சேர் வண்டு சிறைவெதும்ப - ஓங்குயிர்ப்பின்
தாமங் கரியாத் தனியே தளர்கின்றாள்
யாமங் கரியாக வின்று.

(இ - ள்.) தாங்கு - தான் ஏற்கின்ற, நிலவின் தழல் - நிலாவாகிய தீ, போய் - மேலெழுந்து, தலை கொள்ள-தலையைப் பற்றியதனால், தேன் குழல் - மணமமைந்த கூந்தலில், சேர்வண்டு - மொய்த்த வண்டுகள், சிறை வெதும்ப-சிறைகள் வேகவும், ஓங்கு உயிர்ப்பின்-நீளுகின்ற சுவாசத்தால், தாமம் கரியா - பூமாலைகள் கரிந்துபோகவும், இன்று - இத்தினம், யாமம் கரி ஆக - இராப்போது சாட்சியாக, தனியே தளர்கின்றாள் - ஒன்றியாகவே தளர்கின்றாள், எ-று.

(வி-ரை.) கரியா என்னும் செய்யாவென்னும் வாய்பாட்டுவினையெச்சம் கரியவென்பதன் திரிபு. தாமம் புறத்துறுப்பொன்றாதலால், அதன் வினையாகிய கரியாவென்னுஞ் சினைவினை தளர்கின்றாளென்னும் முதல்வினை கொண்டதெனினும் பொருந்தும். யாமங்கரியாகத் தனியே தளர்கின்றாளென்றமையால், தோழியர் துயின்றனர்களென்பது விளங்கிற்று. ஏ - பிரிநிலை. தாங்கு நிலவு-வினைத்தொகை நிலைத்தொடர்; தாங்கும் நிலவெனப் பதம் பிரிக்கின் பெயரெச்சத்தொகாநிலைத் தொடரென்க. (௧௧௧)

மையுற்ற கண்ணருவி வார வளைசோரக்
கையிற் கபோலத் தலம்வைத்து - மெய்வருந்தித்
தேனிருந்த பூங்கணையே தீயாகத் தேமொழியாள்
தானிருந்து செய்வா டவம்.

(இ-ள்.) தேன் மொழியாள் - தேனினினிமைபோலும் இனிமையாகிய சொல்லையுடையாள், மை உற்ற-மைதங்கிய, கண் அருவி - கண்களினது நீர்ப்பெருக்கு, வார-ஒழுகவும், வளை சோர - (உடல்மெலிந்ததனால்) வளையல்கள் கழலவும், கையில்-உள்ளங்கையில், கபோலத் தலம் வைத்து-கன்னத்தினது இடத்தைவைத்து, தேன் இருந்த-வண்டுகள் மொய்த்த, பூ கணையே-புஷ்பபாணங்களே, தீயாக-தீயைப்போல, தான் இருந்து - தான் அதிலிருந்து, மெய் வருந்தி - உடல்வருந்தி, தவம் செய்வாள் - தவத்தைச்செய்வாள், எ-று,

(வி - ரை.) மன்மதனுக்கு அம்புகள் மலராதலால் அணையிற் பரப்பியமலர் 'பூங்கணை' என்னப்பட்டது. கருதிய ஒன்றை அடையும்படி தீயிலிருந்து, கண்களில் ஆநந்தக் கண்ணீர் வடிய உடல் மெலியா நின்று தவஞ்செய்வாரைப்போல, நளனை அடையுங்கருத்துடையாளாய்ப் பூவணையிலிருந்து கண்ணீர்வடிய, கையினின்றும் வளையல்கள் கழலும்படி உடல் இளைத்து வருந்துகின்றனளாதலால், அவளிருப்பைத் தவச்செயலாகக் குறித்தனர். கபோலத்தலம் - ஒற்றுமைப்பொருளதாகிய ஆறாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். பூங்கணை-மூன்றாம் வேற்றுமை யுருபும்பயனும் உடன் தொக்க தொகைநிலைத்தொடராகவும், பண்புத்தொகைநிலைத்தொடராகவும் கொள்ளக்கிடந்தது; விரிந்தால் பூவாற்சமைத்தகணை, பூவாகிய கணையென முறையே விரியும். (ககஉ)

அள்ளிக் கொளலா யடையத் திரண்டொன்றாய்க்
கொள்ளிக்கும் விள்ளாத கூரிருளாய் - உள்ளம்
புதையவே வைத்த பொதுமகளிர் தங்கள்
இதயமே போன்ற திரா.

(இ-ள்.) இரா-இராக்காலமானது, அள்ளிக்கொளல் ஆய்-அள்ளிக் கொள்ளுதற்குத் தகுதியுடையதாகி, அடைய-உலகமுற்றும், ஒன்றாய்த் திரண்டு - ஒரு தன்மையதாய்த் திரண்டு, கொள்ளிக்கும் - தீக்கொள்ளியினாலும், விள்ளாத - பேதிக்கப்படாத, கூர் இருளாய்-மிக்க இருளையுடையதாகி, பொதுமகளிர் - வேசியர்கள், தங்கள் உள்ளம் - தங்கள் கருத்தை, புதையவே வைத்த - பிறருக்குத் தோன்றாமலேவைத்த, இதயமேபோன்றது - மனத்தையே ஒத்திருந்தது, எ - று.

(வி-ரை.) பொதுமகளிர் இதயம்போலுதலாவது அவர்களுடைய மனம் இன்னதென யாவருக்கும் அறியக்கூடாததுபோல உலகப் பொருள்களில் ஒருபொருளுந் தோன்றாதபடி இருளடர்ந்ததாயிருந்த தென்பது. கொளலாய், ஒன்றாய்; இருளாய் என்பன [illegible]

மாகக் கூறுவதோர் மரபுவழுவமைதி. அடையவென்பது செயவெனெச்சமாயினும் இங்கு எஞ்சாமைப்பொருளது. கொள்ளி - தொழிலடியாகப் பிறந்த பெயர்ச்சொல்; கொள் - பகுதி, ள் - சந்தி, இ - செயப்படுபொருண்மைவிகுதி; பொருள் தீயால்கொள்ளப்பட்டதென்பது. நான்கனுருபு மூன்றுவதன் கருவிப்பொருளில் வந்தது. உள்ளம் - இடவாகுபெயர். ஏ இரண்டில் முன்னது தேற்றம்; பின்னது பிரிநிலை. (கக௩)

ஊக்கிய சொல்ல ரொலிக்குந் துடிக்குரலர்
வீக்கிய கச்சையர் வேல்வாளர் - காக்க
இடையாமங் காவலர்கள் போந்தா ரிருளின்
புடைவா யிருள்புடைத்தாற் போன்று.

(இ - ள்.) இடையாமம் காவலர்கள் - நடுச்சாமத்தில் காவல் செய்வோர், ஊக்கிய சொல்லர் - உரத்த சொல்லையுடையாராய், ஒலிக்கும் - ஒலிக்கின்ற, துடிக்குரலர்-பறையினது ஓசையையுடையாராய், வீக்கிய கச்சையர் - இறுகக்கட்டிய கச்சையுடையாராய், வேல் வாளர் - வேலையும் வாளையுமுடையாராய், காக்க - (நகரத்தைக்) காவல்செய்யும்படி, இருளின்புடை - இருளில், வாய் - அமைந்த, இருள் புடைத்தால்போன்று - இருள் தடித்து உருக்கொண்டாற்போன்று, போந்தார் - வந்தார்கள், எ - று.

(வி-ரை) புடைத்தல் - பருத்தலாதலால், அதற்குத் தடித்து உருக்கோடலென்றும். இடையாமங் காவலர்கள் கறுப்புச்சட்டை அணிந்தவராதலால் 'இருள்புடைத்தாற் போன்று' என்றார். இவ்வாறன்றி, இருளின்வாய்ப்புடை - வந்த இருளினது தாடையில், இருள்புடைத்தால் போன்று - வேறு இருள் அறைந்தாற்போன்று என உரைப்பினும் பொருந்தும். அக்காவலர்கள் பறையடிக்குமொலி வந்த இருள் தமயந்தியை வருத்துவதைச் சகிக்காமல் வேறிருளானது அவ்விருளின் தாடையில் அறையும் ஒலிபோல இருந்ததென்பது கருத்து. வாய்ப்புடை யென்னும் பண்புத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறும்வேற்றுமைத்தொகை

நிலைத்தொடராக நின்ற சொற்றொடர் புடைவாயென நிற்றலால், அவ்வேற்றுமைத் தொகையில் தழாத்தொடராய், இலக்கணப்போலியாயிற்று. புடை - பக்கம். சொல்லார்முதலிய நான்கு குறிப்பு வினைமுற்றுக்களும் வினையெச்சமாய்ப் போந்தாரென்னும் வினை கொண்டன. (கக௪)

சேமங் களிறுபுகத் தீம்பாலின் செவ்வழியாழ்
தாமுள் ளுறைபுகுதத் தார்வண்டு — காமன்றன்
பூவாளி யைந்திற் புகத்துயில் புக்கதே
யோவாது முந்நீ ருலகு.

(இ-ள்.) களிறு - யானைகள், சேமம் புக - காவலிடத்திற்சேர, தீம்பாலின் - மதுரமாகிய பால்போலும் இனிமையினையுடைய, செவ்வழி யாழ் - செவ்வழி என்னும் இராகத்தினைப் பாடுதற்கிசைந்த வீணைகள், உறை உள்புகுத - உறையிற்சேர, தார் வண்டு - (மாந்தர் அணிந்துள்ள) மாலையிற் படிந்திருந்த வண்டுகள், காமன்றன் - மன்மதனுடைய, ஐந்து - ஐந்தாகிய, பூவாளியில்புக - புஷ்பபாணங்களிற்சேர, முந்நீர் - கடலாற் சூழப்பட்ட, உலகு - உலகத்திலுள்ளவர்கள், ஓவாது - (தூங்குதற்குரிய காலந்) தவறாமல், துயில் புக்கது - தூக்கத்தில் அமர்ந்தனர், எ - று.

(வி-ரை.) புக, புகுத என்னும் அகரவீற்று வினையெச்சங்கள் உடனிகழ்ச்சிப்பொருளில் வந்தமையின் நிகழ்காலங் குறித்தன. புகுத என்பதில் புகு-பகுதி. தீம்பாலின்: இதில் இன் ஐந்தனுருபு ஒப்புப்பொருளது. இனிமை என்னும் பொதுத்தன்மை தொக்கு நின்றமையின் இது தொகையுவமமாம். உள்உறை என்பதை உறையுள் எனமாற்றுக. உள் - ஏழனுருபு. பூவாளி ஐந்தில் ஐந்து பூவாளியில் என இயைக்க. ஐந்துவாளி, பூவாளி எனக் கூட்டுக; இவற்றுள் முன்னது பண்புத்தொகைநிலைத்தொடர், பின்னது இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடர். காமனுக்குரியபூவாளிஐந்தாவன:-தாமரை,மா,அசோகம், முல்லை, நீலோற்பலம் என்பவை; இவையாமென்பதை, "குடைகவித்த

நன்கஞ்சங் கோதறு சூதப்பூ, கடியு மசோகந் தளவு காவி - படையெடு த்து, வாங்காச் சமர்விளைக்கு மாரனுக் கெப்போதுமங்கை, நீங்காக் கணையாகினை'' என்றதனாலறிக. முந்நீர்-மூன்றாகிய நீர்மையை (தன்மையை) புடையது என்றாதலின் பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர்; கடலுக்கு மூன்றாகிய நீர்மை: ஆக்கல், அளித்தல், அழித்தல் என்பன. மூன்றுவகையாகிய நீரையுடையது என்றுங் கூறுவர், மூன்றுவகை நீராவன:-ஆற்றுநீர், ஊற்றுநீர் வேற்று நீர் என்பன. உலகு - இடவாகுபெயர். உலகு என்று கூறியதற்கேற்பப் புக்கது என்று கூறினர். புகுதல் ஈண்டு அமர்தல்; இஃது இலக்கணை.

> ஊன்றின் றுவகையா னுள்ள வுயிர்புறம்பே
> தோன்றுங் கழுதுந் துயின்றதே - தான்ற
> னுரைசோராச் சோர வுடல்சோர வாயி
> னிரைசோரக் கைசோர நின்று.

(இ - ள்.) ஊன் தின்று - மாமிசத்தைப் புசித்து, உவகையால் - (அதனாலான) சந்தோஷத்தினால், உள்ள உயிர்-அகத்தில் உள்ள மூச்சு, புறம்பே-வெளியில், தோன்றும் கழுதும் - காணும்படியுள்ள பேயும், தன் உரை - தன்சொல், சோரச் சோர - மிகவுந் தளரவும், உடல் சோர- தேகந்தளரவும் வாயின்-வாயினின்று, இரை சோர-உணவு விழவும், கை சோர-கை சோரவும், நின்று துயின்றது - நின்று தூங்கியது, எ-று.

(வி-ரை.) புறம்பே தோன்ற என்றமையால் உள்ள உயிர் என்றதற்கு அகத்தேயுள்ள உயிர் எனப் பொருள் கூறப்பட்டது. உயிர் - முதனிலைத் தொழிற்பெயர்; இதனடியாக உயிர்த்தல், உயிர்த்த, உயிர்த்து, உயிர்த்தான் என வினைவிகற்பங்களுண்டாதலறிக. புறம்பு என்பது பலபொருள் ஒருமொழியாகிய பெயர்ச்சொல்; இது புறம் என்பதற்குரிய பொருளினும் வேறான பொருள்களை யுடையதாதலின் புறம் என்பதனோடு பகுதிப்பொருள் விகுதியாகிய பகரவுகரஞ் சேர்ந்து வந்ததன்று. கழுதும் என்பதிலுள்ள உம்மை, இரவெல்லாம் துயிலா

மல் திரியுங் கழுதுந் துயின்றது என்னும் பொருளையும், மற்றப் பிராணிகள் துயின்றதே யன்றிக் கழுதுந் துயின்றது என்னும் பொருளையுந் தருதலின் உயர்வுசிறப்போடுகூடிய எச்சப்பொருளது. ஈண்டு உயர்வு சிறப்புக் குறவருமருளுந்குன்று என்பதிற் போன்றது. கழுது மற்றைய பிராணிகளைப்போல் இரவில் துயிலாமல் திரிவதா யிருத்தலாற்றான் அதன் துயிலை மேலைச்செய்யுளில் 'மூங்கீருலகுந்துயில்புக்கது' என்றதனுள் அடக்காமல் வேறாகக் கூறினர். சோரச்சோர என்னும் அடுக்கு மிகுதிப்பொருளது. வாயின் இரை - ஐந்தன்றொகை. கழுதும் நின்று துயின்றது என்க. (கககூ)

> அன்றி லொருகண் டுயின்றொருக ணார்வத்தா
> லின்றுணைமேல் வைத்துறங்கு மென்னுஞ்சொ - லின்று
> தவிர்ந்ததே போலாற்றிச் சாம்புகின்ற போதே
> யவிழ்ந்ததே கண்ணீ ரவட்கு.

(இ - ள்.) அன்றில் - ஆண் அன்றில், ஒருகண் துயின்று-ஒரு கண்ணால் தூங்கி, ஆர்வததால் - அன்பினால், இன்துணைமேல் - தனக்கினிய (வாழ்க்கைத்) துணையாகிய பெட்டையின்மீது, ஒருகண் - மற்றொருகண்ணை, வைத்து உறங்கும்-வைத்துக்கொண்டு உறக்கங்கொள்ளும், என்னும் சொல-என்று உலகத்தவர் சொல்லும்சொல்லை, இன்று தவிர்ந்ததேபோல-இப்பொழுது நீங்கியதையே ஒப்ப, (துணை) அாற்றி-(அப்பெட்டையன்றில்) கூவி, சாம்புகின்றபோதே - ஒடுங்குகின்ற அக்கணத்திலேயே, அவட்கு - அத்தமயந்திக்கு, கண் நீர் அவிழ்ந்தது-கண்களினின்று நீர் பெருகிற்று, எ-று.

(வி-ரை.) அன்றிற்பறவைகளில் ஆணும் பெண்ணும் ஒன்றைவிட்டொன்று பிரிதலைச்சகியா; ஆகையால் அப்பெடையன்றில் தன்காதற் சேவல் தன்னைப் பிரிந்தாற்போ லாற்றியதனால் தமயந்திக்குத் தன்காதலன் தன்னிடமுற்றுப்பிரிந்தநினைவுண்டாய்க்காதன்மிகுதியினால்அவட்குக்கண்ணீர்பெருகியது. அன்றில்சொல்லைத் தவிர்ந்ததேபோல என்க. சொல்லைத்தவிர்தலாவது அன்றில் ஒருகண்ணைத் தன்பெடையின்மீது

வைத்துக்கொண்டே உறங்கும் என்று உலகத்தவர்கள் அதன் இயற்கை யுணர்ந்து சொல்லுஞ் சொல்லின்படி யன்றி விலகியிருத்தல். தவிர்ந் ததேபோல என்றமையின் ஆண் அன்றில் அங்ஙனந் தவிரவில்லை எனவும் பெட்டையன்றில் அச்சத்தாலோ, மற்றெக்காரணத்தாலோ அரற் றியது ஆண் அன்றில் அச்சொல்லைத் தவிர்ந்தாற்போல் தோன்றிற் றெனவுங் கொள்க. இங்ஙனமன்றிச் சொல் என்றதை எழுவாயாக்கி, (அன்றிலொருகண் ணின்றொருகண் ணுர்வத்தால், இன்றுணைமேல் வைத்துறங்கும் என்று உலகத்தவர்கள் சொல்லும்) சொல் தவிர்ந்ததே போல-சொல்பிழைத்துப்போனதே ஒப்ப என்றுரைப்பினுமாம். சொல் பிழைத்தலாவது அச்சொற்குக் காரணமாகிய அன்றிலின் இயல்பு தவிர் தல். இது காரியத்தைக் காரணமாகக் கூறிய உபசாரவழக்கு. வேறு அச்சமுதலியவற்றாலன்றிச் சொல் தவிர்ந்ததேபோல என்னும் பொ ருள் தருதலின் தவிர்ந்ததே என்பதிலுள்ள ஏகாரமும், சிறிது நேரம் பொறுத்தன்றி அப்பொழுதே என்னும் பொருள் தருதலின் போதே என்பதிலுள்ள ஏகாரமும் பிரிநிலைப் பொருளன. அவிழ்ந்ததே என்பதிலுள்ள ஏகாரம் அசை. சொல்லும் என்னும் எதிர்காலப் பெய ரெச்சம் எதிர்காலங் காட்டாமல் ஈண்டுத் தமிழ் வழக்குப்பற்றி முக் காலத்திற்குப் பொதுவாய் நின்றது. என்னெனின் அச்சொல் எப் பொழுதுஞ் சொல்லப்படுகின்றமையின். (கஎ)

ஏழுலகுஞ் சூழிருளா யென்பொருட்டால் வேகின்ற
வாழ்துயர மேதென் றறிகிலேன் - பாழி
வரையோ வெனுநெடுந்தோண் மன்னோவோ தின்னு
மிரையோ விரவுக் கியான்.

(இ-ள்.) ஏழ் உலகும் - ஏழுலகங்களும், சூழ் இருளாய் - சூழ்ந்த இருளையுடையனவாய், என் பொருட்டால் - எனக்காக, வேகின்ற-வே கின்றதனாலாகிய, ஆழ் துயரம் - மிக்கதுன்பத்திற்குக்காரணம், ஏது என்று-எதுவென்று, அறிகிலேன் - அறியேன்; பாழி - பருமையுடைய,

வரையோ - மலையோ, என்னும் - என்று ஐயப்படும்படியான, நெடுந் தோள்-நீண்டதோள்களையுடைய, மன்ன - மன்னனே, யான் - நான், இரவுக்கு-(இந்த) இராத்திரிக்கு, தின்னும்-தின்னுதற்குரிய, இரையோ- தீனியோ, எ-று.

(வி-ரை.) ஏழுலகும் என்றது உபலக்ஷணத்தாற் பதினன்குலகை யும் உணர்த்தியது. இதில் உம்மை முற்றுப்பொருளது இருள் ஆய் என்றதற்கு உடையன என்னுஞ் சொல்லெச்சமாக வருவித்து இரண்ட னுருபை இடையிற் பெய்து பொருளுரைக்கப்பட்டது. என்பொருட் டால் என்பதில் பொருட்டால் என்பது குவ்வுருபும் ஆக என்பதுஞ் சேர்ந்து எனக்காக, அவனுக்காக என்றுவருவதுபோலப் பொருட்டு என்னுஞ் சொல்லுருபும், ஆல் என்பதுஞ் சேர்ந்துவந்த நான்கனுருபு. இது ஏதுப்பொருளது. வேகின்ற ஆழ்துயரம் என்பதில் வேகின்ற என்பது காரணப்பொருளில்வந்த நிகழ்காலப்பெயரெச்சம். ஆழ்துயரம் என்பது வினைத்தொகைநிலைத்தொடர். அறிகிலேன் என்பதில் அறி - பகுதி, கு - சாரியை, உகரக்கேடு சந்தி, இல் - எதிர்மறைவிகுதி, அனைத்துமொருபகுதி, என் - தன்மையொருமை வினைமுற்றுவிகுதி. தமயந்தி தனக்குத் தீச்சுடர்போலத் தோன்றும் சந்திரகிரணங்கள் எங்கும் பரவியிருத்தலைக்கண்டு பதினன்குலகமும் அவற்றால் வேகின்ற தாக எண்ணி 'ஏழுலகும் வேகின்ற' என்றும், தன்னை எரித்தற்காக வந்த சந்திரகிரணங்களாகிய தீச்சுடரில் ஏழுலகும் வேகின்றதாக வெண்ணி 'என்பொருட்டால் வேகின்ற' என்றும், வேகின்ற துன்பத்தினின்றுந் தப்பமுடியாமல் இருள் சூழ்ந்தமை துன்பமிகுதற்குக் காரணமாயிற் றென்பான் 'சூழ் இருளாய் வேகின்ற ஆழ் துயரம்' என்றுங் கூறினன் என்க. வரையோ என்பதில் ஓ ஐயப்பொருளது. மன்னவோ என்பதில் ஓ இரக்கப்பொருளது. இரையோ என்பதில் ஓ வினைப்பொருளது. ()

கருவிக்கு நீங்காத காரிருள்வாய்க் கங்கு
அருவிப் புகுந்த தானதை - பருகிக்கார்

வண்டுபோ கட்ட மலர்போன் மருண்மாலை
யுண்டுபோ கட்ட வுயிர்க்கு.

(இ-ள்.) கார் வண்டு-கருமையாகிய வண்டுகள், பருகிப்போகட்ட-குடித்துவிட்டுப் போய்விட்ட, மலர்போல-பூவைப்போல, மருள் மாலை-மயக்கத்தைச் செய்யு மாலைப்பொழுது, உண்டு - உண்ண, போகட்ட - (சாரம்) நீங்கிய, உயிர்க்கு - என் உயிரைக் குடித்தற்கு, கருவிக்கும் - ஆயுதங்களுக்கும், நீங்காத - போகாத, கார் இருள்வாய் - கருமையாகிய இருட்டில், ஊதை - காற்று, கங்குல் - இருட்டை, உருவி-ஊடுருவிக் கொண்டு, புகுந்தது - வந்தது, எ-று.

(வி - ரை ) இக்காலத்திற் போய்விட்ட என்பதுபோல அக்கா லத்திற் போகட்ட என்பது வழக்காறுடையதா யிருந்தது; போ-பகுதி, கு - சாரியை, உகரக்கேடு சந்தி, அடு - பகுதிப்பொருள் விகுதி, போகடு - அனைத்துமோர்பகுதி. மருள்மாலை என்பது மருளைச் செய்யு மாலை என்றுதலால் இரண்டனுருபும் பயனும் உடன்றொக்க தொகை நிலைத்தொடர்; எல்லாப் பிராணிகளு மயங்கு மாலை எனக் கொண்டால் காரணப்பொருளதாகிய காலங்காந்தபெயரெச்சத்தொடர். உண்டு-எதுப் பொருளதாகிய செயவென்னெச்சத்திரிபு. கருவிக்கு-இதில் கு என்னு நான்கன் உருபு எதுப்பொருளது. காரிருள், கார் வண்டு என்பன அல் வழிப்புணர்ச்சிப் பண்புத்தொகைநிலைத்தொடர். (கககூ)

எழுந்திருக்கு மேமாந்து பூமாந் தவிசின்
விழுந்திருக்குந் தன்னுடம்பை மீளச் - செழுந்தாளத்
தானோடு சேர்க்குந் துணையேது மில்லாதே
நாணோடு நின்றழியு நைந்து.

(இ-ள்.) பூ மாந்தவிசின் - பூக்களையும் மாந்தளிர்களையும் பரப்பிய ஆசனத்தினின்று, ஏமாந்து - (நளமகாராஜனது உருவெளித்தோற்றத் தைக் கண்டு) சந்தோஷித்து, எழுந்திருக்கும் - எழுந்திருப்பாள்; விழு

ந்து இருக்கும் - (அம்மன்னனைக் காணாமையால்) மீண்டும் அதில் விழுந்துகிடப்பாள்; மீள - மறுபடியும் எழுந்து, தன் உடம்பை - தன் தேகத்தை, செழும் தாளம் - செழுமையாகிய முத்துக்களைப் பதித்த, தூணோடு - தூணிற்பொருந்த, சேர்க்கும் - சேர்ப்பாள்; நாணோடு - (அங்ஙனஞ் செய்த தன் செய்கையினால் தனக்குண்டான) வெட்கத்தினால், நின்று - அசையாமல் நின்று, ஏதும் துணை இல்லாது - ஒரு துணையும் இல்லாமையால், நைந்து அழியும் - மிகுதியும் வருந்துவாள், எ - று.

(வி-ரை.) தன்னுடம்பைத் தூணிற்பொருந்தச் சேர்த்து அதனா லுற்ற நாணத்தினால் அசைவற்று நின்று துணையேது மில்லாமையி னால் நைந்து அழிவாள் என இயைத்துக்கொள்க. நைந்து அழிவாள் என்னும் இவ்வொருபொருட் பன்மொழி மிகுதிப்பொருளன. எழுந் திருக்கும், விழுந்திருக்கும், சேர்க்கும் என்பன பலர்பாலொழிந்த மற் றைய நாற்பாற்படர்க்கையில்வரும் செய்யும் என்னும் வாய்பாட்டு வினை முற்று; "செய்யுநிகழ் வெதிர்வும்" என்றபடி நிகழ்காலத்தையும் எதிர் காலத்தையும் உணர்த்தும் இவற்றின்உம்விகுதியும், அழிவாள் என்பதி லுள்ள எதிர்கால முணர்த்தும் வகர இடைநிலையும் அந்நிகழ்கால எதிர் காலங்களை யுணர்த்தாமல் அச்சமயந் தனக்குண்டாயிருந்ததன்மையினால் தமயந்தி அங்ஙனம் பல்காற்புரிந்தனள் என்னும் பொருளை யுணர்த்தின வென்க. அச்செய்கைகளால் நாணமுற்றாள் மீண்டும் அங்ஙனம் புரிந்த தென்னெனின் காதன்மீக் கூர்ந்தார்க்கு அக்கால் ஒரு நிமிடமும் ஒன் றும் ஞாபகத்தில் நில்லாமை இயல்பன்றே? ஆகையினால் அவளும் அன்னதன்மை யெய்திய அக்கால் புரிந்தனள் என்க. தூணோடு என் பதில் மூன்றனுருபு ஏழனுருபோடு மயங்கியது. மீள என்பது மறுபடி என்னும் பொருளதாதலின் இடைச்சொல். ஈண்டு எழுந்துநின்று என்றது இசையெச்சம். காதன்மீக்கூர்ந்தார்க்குப் புத்திமயக்கத்தினால் எழுதல் விழுதல் முதலியன இயல்பாகலின் எழுந்திருக்கு மென்ற தற்கு அங்ஙனம் பொருள் கூறாது உருவெளித்தோற்றங் கண்டு எழுந்

திருக்கும் என்று பொருள் கூறியதென்னெனின் 'ஏமாந்து' என்றத
னாற் கூறப்பட்டதென்க. ஏமாப்பு - மகிழ்ச்சி. அச்சமயம் அவளது
மகிழ்ச்சிக்குக் காரணம் உருவெளித்தோற்றமேயாம். தாளத்தூண் -
இரண்டனுருபும்பயனு முடன்றொக்க தொகைநிலைத்தொடர். நாளோடு
என்பதில் உடனிகழ்ச்சிப்பொருளதாகிய ஓடு உருபு ஈண்டு ஏதுப்
பொருளில் வந்தது. (கஉ0)

விரிகின்ற மெல்லமளி வெண்ணிலவின் மீதே
சொரிகின்ற காரிருள்போற் சோரும் - புரிகுழலைத்
தாங்குந் தளருந் தழலே நெடிதுயிர்க்கு
மேங்குந் துயரோ டிருந்து.

(இ-ள்.) வெண்நிலவின்மீது - வெண்மையாகிய சந்திரிகையின்
மேல், சொரிகின்ற-சொரியப்படுகின்ற, காரிருள்போல்-கருமையாகிய
இருட்டைப்போல, விரிகின்ற - நாள்தோறும் பரப்பப்படுகின்ற, மெல்
அமளி-மென்மையாகிய படுக்கையின்மேல், சோரும் - அவிழ்ந்து விழு
கின்ற, புரி குழலை - சுருண்ட கூந்தலை, தாங்கும் - கையிலேந்துவாள்;
தளரும் - சோர்வாள்; தழலே - நெருப்பே என்னும்படி, நெடிது உயிர்க்
கும் - பெருமூச்செறிவாள்; துயரோடு இருந்து - துயரத்துடன் உட்
கார்ந்து, ஏங்கும் - வருந்துவாள், எ - று.

(வி-ரை.) படுக்கையின்மேல் கூந்தல் அவிழ்ந்து விழுதல் வெள்
ளிய சந்திரிகையின்மேல் இருட்டைச் சொரிந்தாற் போலிருந்ததென்ற
மையின் அமளி என்றது மேலே வெண்டுகில் பரப்பப்பெற்ற படுக்கை
யென்க. மெல்லமளி என்றமையின் இலவம்பஞ்சு மெத்தை என்க.
விரிகின்ற என்பது விரிக்கப்படுகின்ற என்னுஞ் செயப்பாட்டு வினைப்
பொருளில் வந்த செய்வினை; ஈண்டு நிகழ்காலம் நாடோறும் விரிக்கப்
படுதலை யுணர்த்திற்று. தாங்கும், தளரும், ஏங்கும் என்பனவு முற்கூறிய
படி இங்ஙனம் பன்முறைப் புரியாநின்றனள் என்னும் பொருளைத்
தந்தனவென்க. புரிகுழல் - வினைத்தொகை நிலைத்தொடர்; புரிவாகிய

குழல் எனின் பண்புத்தொகை நிலைத்தொடர். இப்பொருளில் புரி என்பது முதனிலைத் தொழிற்பெயர். தழலே என்றவிடத்துப் போல என்னும் சொல்லைத் தந்துரைத்தது சொல்லெச்சம். (கஉக)

உடைய மிடுக்கெல்லா மென்மேலே யோச்சி
விடிய மிடுக்கின்மை யாலோ - கொடியன்மேன்
மாகாதல் வைத்ததோ மன்னவர்த மின்னருளோ
வேகாத தென்னோ விரா.

(இ-ள்.) உடைய - தனக்குள்ள, மிடுக்கு எல்லாம் - வன்மைமுழுதையும், என்மேல் ஓச்சி - என்மீது செலுத்தி (அதனால்), விடிய-விடிதற்கு, மிடுக்கு இன்மையாலோ - வன்மையில்லாமற் போய்விட்டதனாலோ, கொடியன்மேல்-கொடியவனாகிய மன்மதன்மீது, மா காதல் - மிக்ககாதலை, வைத்ததோ - வைத்திருக்கின்றதோ, மன்னவர்தம் - நளமகாராஜனது, இன் அருளோ - இனிய அருளினாலோ, இரா - இரவானது, ஏகாதது-போகாததற்குக் காரணம், என்னோ-இவற்றுள் யாதோ, எ - று.

(வி-ரை.) உடைய - குறிப்புப்பெயரெச்சம்; உடை - பகுதி. ஓச்சி என்னும் இறந்தகால வினையெச்சம் ஈண்டுக் காரணப் பொருளதாய் நின்றது. ஓகாரங்கள் நான்கனுள் முன்னுள்ள மூன்றும் ஐயப் பொருளன. மற்றொன்று அசை. (கஉஉ)

மயங்குந் தெளியு மனநடுங்கும் வெய்துற்
றுயங்கும் வறிதே யுலாவும் - வயங்கிழைபோய்ச்
சோருந் துயிலுந் துயிலாக் கருநெடுங்க
ணீருங் கடைசோர நின்று.

(இ-ள்.) மயங்கும் - மருளுவாள்; தெளியும் - தெளிவுகொள்ளுவாள்; மனம் நடுங்கும் - மன நடுங்குவாள்; வெய்து உற்று - (தேகத்திற் கொதிப்பேறப்பெற்று (அதனால்), உயங்கும் - வாடுவாள்; வறிது -

வீணாக, உலாவும் - (சுற்றித்) திரிவாள்; வயங்கு - பிரகாசிக்கின்ற, இழை - ஆபரணங்கள், போய் - (தேகமெலிவால்) நீங்க, (அதுகண்டு) சோரும் - தளருவாள்; துயிலாத - (தான் துயிலவெண்ணினும்) துயில் கொள்ளாத, நெடு - விசாலமாகிய, கரும் கண் - கருவிழியையுடைய கண்ணினது, கடை - கடையில், நீர் சோர நின்று - நீரொழுகநின்று, துயிலும் - உறங்குவாள், எ-று.

(வி-ரை.) மனமுருகும் - திணைவழுவமைதி. வெய்து என்பதில் து - அரிது என்பதிற்போலப் பகுதிப்பொருள் விகுதி. வெய்துற்று என்பதற்குத் தேகம் வெப்பமுடையதாக என்று பொருள் கொள்ளுதலுமாம். இப்பொருளில் து-ஒன்றன்படர்க்கை விகுதி; கருமை என்னும் பண்பு பண்பியை யுணர்த்தியது இலக்கணை. நீரும் என்பதிலுள்ள உம்மை அசை. துயிலாத நெடுங்கருங்கட் கடைநீர் சோரநின்று துயிலுமென இயைக்க. (கஉக)

விழுது படத் திணிந்த வீங்கிருள்வாய்ப் பட்டுக்
கழுதும் வழிதேடுங் கங்குற் - பொழுதிடையே
நீருயிர்க்குங் கண்ணோடு நெஞ்சுருகி வீழ்வார்த
மாருயிர்க்கு முண்டோ வரண்.

(இ-ள்.) கழுதும் - பிசாசும் விழுதுபட - விழுதுதோன்றும்படி, திணிந்த - வன்மையுற்ற, வீங்கு இருள்வாய் - பெருகிய இருட்டில், பட்டு - அகப்பட்டு (அதனால்), வழிதேடும்-வழியைத்தேடுகின்ற, கங்குல் பொழுதிடை - இராக்காலத்தில், நெஞ்சுருகி - மனங்கரைந்து, நீர் உயிர்க்கும் - நீரைச்சொரிகின்ற, கண்ணோடு - கண்களுடன், வீழ்வார்தம்-அழிகின்ற காதலருடைய, ஆருயிர்க்கும்-அருமையாகிய உயிர்க்கும், அரண் உண்டோ - காத்தற்குரியபொருள் உள்ளதோ, எ-று.

(வி-ரை.) பலகாட்பட நின்று முதிர்ந்த ஆலமரங்கள் விடுதல் போல விழுதுவிட்ட வீங்கிருளென்க. ஆலமரங்கள் விட்டவிழுது

பூமியிலுன்றி அவை வன்மை யுறுதற்குக் காரணமாதல்போல அவ் விருள் விட்டவிழுதாம் பூமியிற் பதிந்து அது வன்மையுறுதற்குக் காரண மாயிற்றென்பார் 'விழுதுபடத் திணிந்த இருள்' என்றார். இரவிற்றடை யின்றித் திரியுங் கழுதும் என்னுங் பொருள்தரலின் கழுதும் என்பதி லுள்ள உம்மை உயர்வுசிறப்புப் பொருளது. கங்குற்பொழுது என் பது கங்குலாகிய பொழுதென்றாதலின் இருபெயரொட்டுப் பண்புத் தொகைநிலைத்தொடர். கங்குற் பொழுதிடை நெஞ்சுருகி நீருயிர்க்குங் கண்ணோடு வீழ்வார் என இயைக்க. கண்ணோடு என்பதில் ஓடு உருபு அடைமொழிப் பொருளது. அரண் - முதனிலைபெறாத் தொழிற் பெயர்; காவல் என்பது பொருள். அது தொழிலாகுபெயராய்க் காத்தற் குரியபொருளை யுணர்த்திற்று. காத்தற்குரியதென்னும் பொருள் தருத லின் உயிர்க்கும் என்பதிலுள்ள உம்மையும் உயர்வுசிறப்புப் பொரு ளது. புன்னெறியினாலன்றி நன்னெறியினாலான காதலுடையார்தம் உயிரென்பார் 'ஆருயிர்' என்றார். (கஉச)

பூசுரர்தங் கைம்மலரும் பூங்குமுத முமுகிழ்ப்பக்
காசினியுந் தாமரையுங் கண்விழிப்ப - வாச
மலர்ந்தமேதங் கோதையா ளாழ்துயரத் தோடு
புலர்ந்ததே யற்றைப் பொழுது.

(இ - ள்.) பூசுரர்தம் - பிராமணர்களுடைய, கைம்மலரும்-கையா கிய மலர்களும், பூங்குமுதமும் - அழகாகிய ஆம்பன்மலர்களும், முகிழ்ப்ப - குவியவும், காசினியும் - பூமியிலுள்ளோரும், தாமரையும் - தாம ரைப்பூவும், கண் விழிப்ப - கண் திறக்கவும், அற்றைப்பொழுது - அன் றைய இராக்காலம், வாசம் - நல்லமணம், அலர்ந்த-பரவின, தேங்கோ தையாள் - தேனையுடைய மாலையையணிந்த தமயந்தியினது, ஆழ் துய ரத்தோடு - மிக்கதுன்பத்தோடு, புலர்ந்தது - நீங்கிற்று, எ-று.

(வி - ரை.) பூசுரர் - பூதேவர்கள்; பூமியிலுள்ளவர்களில் தேவர் களைப்போற் கல்வி முதலியவுற்றாற் சிறந்தவர்கள். அங்ஙனம் பண்டைக்

காலந்தொட்டுச் சிறந்து விளங்கினவர்கள் பிராமணர்களாதலின் அவர் களைப் பூதேவரென்றல் பண்டையவழக்கு; "ஒருகோடி பூதேவருங் கைதொழுங்கோவை" என்றதுங்காண்க. சுரர்-சுராவை (அமுதத்தை) உண்பவர்கள் தேவர்கள். குமுதம், தாமரை என்பன முதலாகு பெயர் கள். முகிழ்ப்ப:முகிழ்-பகுதி, ப்-சந்தி, ப்-விரித்தல் விகாரம், அ-விகுதி. கண்விழிப்ப என்றதற்கு மனிதர் கண் திறக்கவும், தாமரைப்பூ மலரவும் எனப் பொருள்கொள்க. பரசுராமரால் காசிபமுனிவருக்குத் தானஞ் செய்யப்பட்டதாகலின் பூமிக்குக் காசினி என்னும் பெயருண்டாயிற்று. இரவுப்பொழுது நீங்கிற்று என்பதைப் பொழுதுவிடிந்தது என்பது உலகவழக்காதலின் 'பொழுது புலர்ந்தது' என்றதற்கு இராப்பொழுது நீங்கிற்று எனப் பொருளுரைக்கப்பட்டது. பொழுதுவிடிந்தது இனி நாம் விரைவில் நமது காதலராகிய நளச்சக்கரவர்த்தியை அடைவோம் என்று தமயந்தி மகிழ்ந்தாள் என்பது கருத்து. பூசுரர்தங் கைகள் எதற் காகக் குவிந்தனவெனின் காலைச்சந்தியில் சூரிய நமஸ்காரஞ் செய்தற் பொருட்டென்க. குமுதமும் முகிழ்ப்ப என்றதில் மகரம் விரித்தல் விகாரமாய்த் தோன்றிநின்றது. (கஉ௫)

வில்லி கணையிழப்ப வெண்மதியஞ் சீரிழப்பத்
தொல்லை யிருள்கிழிபத் தோன்றினான் - வல்லி
மணமாலை வேட்டிடுதோள் வாளரசர் முன்னே
குணவாயிற் செங்கதிரோன் குன்று.

(இ - ள்.) வல்லி - கொடியையொத்தவளாகிய தமயந்தியினது, மணமாலை-கலியாணமாலையை, வேட்டிடு - விரும்பிய, தோள்-தோள் களினுடைய, வாள் அரசர்முன் - ஒளியையுடைய அரசர்களுக்கு முன் பாக, செங்கதிரோன் - செம்மையாகிய கிரணங்களையுடைய சூரியன், வில்லி - சிறந்தவில்லாளியாகிய மன்மதன், கணை இழப்ப - தனக்குரிய பாணங்களையிழக்கவும், வெண்மதியம் - வெண்மையாகிய நிறத்தினை யுடைய சந்திரன், சீர் இழப்ப-தனது சிறப்பை இழக்கவும், தொல்லை -

(தமயந்தியின்) துன்பத்திற்குக் காரணமாகிய, இருள் கிழிய - இருள் பிளவுபடவும் (ஒழியவும்), குணவாயில் குன்று - கிழக்குத்திசையிலுள்ள மலையில், தோன்றினான் - உதயமானான், எ-று.

(வி-ரை.) இணைவிழைச்சுக்குரிய இரவு நீங்கியபின் மன்மதன் செய்யத்தக்கது யாதொன்று மின்மையின் 'வில்லி கணையிழப்ப' என்றார். கவிபாடுதலிற் சிறந்தோனையே கவிஞன் என்பதுபோல விற்போரிற் சிறந்தோனையே வில்லியென்பர்; ஆகையினால் வில்லி என்றதற்குச் சிறந்த வில்லாளியாகிய மன்மதன் என்று பொருள் கூறப்பட்டது. தொல்லை இருள் என்றதற்குச் சூரியன்தான் உதித்தற்குமுன் இருந்த இருள் என்றுரைப்பினுமாம். வேட்டு: வேள்-பகுதி, து-சாரியை, ளகர தகரங்கள் டகரமானது சந்தி, உகரக்கேடு சந்தி, இடு-துணைவினை விகுதி, அனைத்து மோர்பகுதியாய் நின்ற வேட்டிடு என்பது தோள் என்பதோடுகூடி வினைத்தொகைநிலைத்தொடராயிற்று. தோள்வாளரசர் என்றதற்குத் தோளையும், வாளையுமுடைய அரசர் என்றுரைத்தலுமாம். (கஉக)

முரைசெறிந்த நாளேழு முற்றியபின் கொற்ற
வரைசெறிந்த தோண்மன்னர் வந்தார் - விரைசெறிந்த
மாலை துவள முடிதயங்க வால்வளையுங்
காலை முரசுங் கலந்து.

(இ-ள்.) முரசு எறிந்த - (மங்கைசுயம்வர நாளேழென்று) பேரிகை அடித்துத் தெரிவிக்கப்பட்ட, எழுநாளு முற்றிய-எழுநாளுமுடிந்த, பின் - பின்னாளில், கொற்றம் வரை செறிந்த - வெற்றியினையுடைய மலையையொத்த, தோள் மன்னர் - தோள்களையுடைய அரசர்கள், விரை செறிந்த - வாசனைபொருந்திய, மாலை துவள - மாலைகள் அசையவும், முடி தயங்க - (தங்கள் சிரங்களிலுள்ள) கிரீடங்கள் பிரகாசிக்கவும், வால் வளையும் - வெண்மையாகிய சங்குகளின் ஒலியும், காலை முரசம் - காலை வேளைகளில் அடிக்கப்படும் பேரிகைகளின் ஒலியும், கலந்து -

ஒன்றோடொன்று கலந்து ஒலிக்கவும், வந்தார் - (சுயம்வரமண்டபத்திற்கு) வந்தனர், எ-று.

(வி-ரை.) வளை, முரசு என்பன பொருளாகு பெயர்களாய் அவற்றின் ஒலிகளை யுணர்த்தின. கலந்து என்றவிடத்து ஒலிக்கவும் என்னுஞ் சொல்லை வருவித்தது சொல்லெச்சமென்க. (கஉஏ)

மன்றலந்தார் மன்னர் நடுவணைய வந்திருந்தான்
கன்று குதட்டிய கார்நீல - முன்றிற்
குறுவிழிக்கு நேர்நாடன் கோதைபெருங் கண்ணின்
சிறுவிழிக்கு நோற்றிருந்த சேய்.

(இ-ள்.) கன்று - ஆண்கன்றுகள், குதட்டிய - (வாயிற்கொண்டு) குதப்பியுமிழ்ந்த, கார் நீலம் - கருங்குவளை மலர்கள், முன்றில் - வாசலில், குறு விழிக்கும் - (நன்றாக மலர்ந்து பாராமல்) சிறிதேவிழித்துப் பார்க்கும், நேர் நாடன் - தன்மையையுடைய நாட்டையுடையவனாகிய, கோதை - தமயந்தியினுடைய, பெருங்கண்ணின் - விசாலமாகிய கண்ணினது, சிறு விழிக்கு - கடைக்கண்பார்வையைப் பெறுதற்கு, நோற்றிருந்த - முற்பிறப்பில் தவம்புரிந்த, சேய் - (வீரத்தினாற்) சுப்பிரமணியனை யொத்தவனாகிய நளமகாராஜன், வந்து - (அச்சுயம்வர மண்டபத்துக்கு) வந்து, அம் - அழகினையும், மன்றல் - வாசனையினையுமுடைய, தார் - மாலையினையணிந்த, மன்னர் நடு - அரசர்களின் நடுவில், அணைய இருந்தான் - யாவர்க்குஞ் சமீபமாக வீற்றிருந்தான், எ - று.

(வி-ரை.) நாடன் சேய் எனக்கூட்டி இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடர் என்க. கண்ணின் கடையைக் கடைக்கண் என்பது மரபாகலின் கண்ணின் சிறுவிழி என்றதற்குக் கண்ணினது கடைக்கண் எனப் பொருள் கூறப்பட்டது; அது உறுப்புத் தற்கிழமையாகிய ஆறன்றொகை. சிறுவிழி - கடைக்கண்; இதில் விழி என்பது முதனிலைத் தொழிற்பெயர்; இது தொழிலாகுபெயராய்க் கண்ணை

யுணர்த்தியது. சிற என்பது அவ்வாகுபெயர்ப் பொருளாகிய கண்ணை விசேஷித்து நின்றது; ஆகையால் அது பண்புத்தொகை நிலைத்தொடராய் ஒருசொற்றன்மை யெய்திக் கண்ணின் கடையை யுணர்த்தியது. குதட்டிய: குதட்டு-பகுதி, உகரக்கேடு சந்தி, இன் - இறந்தகால இடைநிலை, இதில் னகரமெய் கெட்டது கடைக்குறை, யகரமெய் தோன்றியது சந்தி, அ-விகுதி. நோற்றிருந்த: நோல்-பகுதி, து-சாரியை, லகர தகரங்கள் றகரமானது சந்தி, உகரக்கேடு சந்தி, இரு - துணைவினை விகுதி, த் - சந்தி, அது ந் ஆனது மெலித்தல் விகாரம், த் - இறந்தகால இடைநிலை, அ - விகுதி. செய்போல்வாளைச் செய் என்றதோர் உபசார வழக்கு. (கஉஅ)

நித்திலத்திற் பொற்றோடு நீலமணித் தோடாக
மைத்தடங்கண் செல்ல வயவேந்தர் - சித்த
மருங்கே வரவண்டின் பந்தர்க்கீழ் வந்தா
ளருங்கேழ் மணிப்பூ ணணங்கு.

(இ - ள்.) வயவேந்தர் - வெற்றியையுடைய அரசர்களுடைய, நித்திலத்தின் பொன் தோடு - முத்துக்களையுடைய அழகிய காதணிகள், நீலமணித்தோடு ஆக - நீலமணிகளைப் பதித்த காதணிகளைப்போலக் கறுத்துத்தோன்றும்படி, மைத்தடங்கண்-(தன்)மையைத் தீட்டப்பெற்ற விசாலமாகிய கண்கள், செல்ல-(அவர்கள்பாற்) போக, சித்தம்-அவ்வரசர்களுடைய மனங்கள், மருங்கே - தன்பக்கத்தில், வண்டின்வா - வண்டுகளைப்போலத் (தன்னைத்தொடர்ந்து) வர, அருங்கேழ் - மற்ற வற்றிற்கில்லாத ஒளியினையுடைய, மணி - இரத்தினங்களைப் பதிக்கப்பெற்ற, பூண் அணங்கு - ஆபரணத்தினை அணிந்த தமயந்தி, பந்தர்க்கீழ்-(அங்கு இடப்பட்டிருந்த) பந்தலின்கீழ், வந்தாள்-வந்தனள், எ-று.

(வி-ரை.) கண்செல்ல, சித்தம்வர, அணங்கு பந்தர்க்கீழ் வந்தாள் என்க. தமயந்தி அங்கு வந்த அரசர்களைப் பார்த்துக்கொண்டே வந்த

ளள் என்பார் 'நித்திலத்தின் பொற்றோடு நீலமணித் தோடாக, மைத் தடங்கண் செல்ல' என்றார். நித்திலத்தின் தோடுகள் நீலமணித்தோடுக ளாகத் தோற்றுதற்குக் காரணம் அவளது கருவிழியின் ஒளி அவற்றிற் பாய்ந்தமை. ஆக, வர என்பவற்றுள் அகர விகுதி காரியப்பொருளில் வந்தமையின் எதிர்காலத்தையும், செல்ல என்பதில் அகரம் காரணப் பொருளில் வந்தமையின் இறந்தகாலத்தையு முணர்த்திற்றெனக. ()

பேதை மடமயிலைச் சூழும் பிணைமான்போற்
கோதை மடமானைக் கொண்டணைந்த - மாதர்
மருங்கின் வெளிவழியே மன்னவர்கண் புக்கு
நெருங்கினவே மேன்மே னிறைந்து.

(இ - ள்.) பேதை - எளிமையினையுடைய, மடம் - இளமையாகிய, மயிலை - மயிலை, சூழும் - சுற்றுகின்ற, பிணை மான்போல்-பெண் மான்களைப்போல, கோதை - (கையிலே) மாலையினையுடைய, மடம் - இளமையினையுடைய, மானை-தமயந்தியை, கொண்டு அணைந்த-அழைத்துக்கொண்டு வந்த, மாதர் - பெண்களினுடைய, மருங்கின் - இடுப்பினது, வெளிவழியே - வெளியான இடத்தின் வழியாக, மன்னவர் கண் - அரசர்களுடைய கண்கள், மேல் மேல்-(முந்திப்பார்க்கவேண்டி) ஒருவர் கண்களின்மேல் ஒருவர் கண்களாக, புக்கு-சென்று, நிறைந்து - அவ்விடைவெளிகளில் நிரம்பி, நெருங்கின - நெருக்கமுற்றன, எ-று.

(வி-ரை.) மயிலை மான்கள் சூழ்தல்போலத் தமயந்தியைத் தோழியர்கள் சூழ்ந்தனர்கள் என்பது முன் இரண்டடியின் கருத்து. கார்காலமுற்றவாறே களிகொண்டு தன் அழகிய கலாபங்களால் தன்னை அலங்கரித்துக்கொண்டு தன் இயல்பான அழகிய சாயலுடன் செல்லு மயிலைப்போலத் தன் சாதற்கரிய காலமுற்றமையால் தமயந்தி தன் இயற்கை யழகு விளங்கக் களிகூர்ந்து அழகிய ஆடையாபரணங்களை யணிந்துகொண்டு இயல்பான தன் அழகிய சாயலுடன் சென்றனள் என்

பார் அவளுக்கு மயிலையுவமையாகவும், அன்று அவள்கொண்ட பொலிவு என்றும் அவளோடு பழகியுள்ள தோழியர்களு மருண்டு மருண்டு பார்க்கும்படி இருந்தது என்பார் அவர்களுக்குப் பெண்மானை யுவமையாகவுங் கூறினர். அன்று தன் இயல்பான அழகிய சாயலுடன் சென்றனளென்றதென் ? அதற்கு முன் அவ்வியற்கைச் சாயலை யிழந்திருந்தனளோவெனின், ஆம். இழந்திருந்தனள். அதனை "மயங்குந்தெளியும்" என்னும் 123-ம் செய்யுளில் "வறிதேயுலாவும்" என்றதனால் அறிக. மான்களுடன் மானன்றி மயில் செல்லாதாகையினால், 'மடமானைக்கொண்டணைந்த' என்றார். "மானைக்காட்டி மானைப்பிடிப்பாரைப்போல்" என்னும் பழமொழியையும் ஈண்டுக் கவனிக்க. ஒரு கன்னிகையானவள் சுயம்வரத்தில் தான் விரும்பிய புருடனது மார்பை அலங்கரிக்க ஒரு மாலைகொண்டு செல்லுதல் வழக்கம். ஆகலின், ஈண்டுக் 'கோதை' என்றது அன்று தமயந்தி அவ்வாறு கையிலேந்திச் சென்ற மாலையை என்க. சிறந்த பெண்களுக்கு மார்பும், புட்டமும் அகன்று இடை சிறுத்திருக்குமாகலின் அவ்வித மாதர்கள் ஒருவரோடொருவர் நெருங்கிச் செல்கையில் அவர்களின் இடைகளின் பக்கத்திற் சந்தாக இடைவெளி தோன்றும். அவ்வித இடைவெளிகளின் வழியாக அரசர்கள் தமயந்தியைப் பார்த்தார்கள் என்பதும், அவ்விடைவெளியானன்றி அவளைப் பார்க்கமுடியாவண்ணந் தோழியர்கள் நெருக்கமாகச் சூழ்ந்திருந்தனர் என்பதும் இதன் கருத்து. இவ்விருமாதர்களின் இடைவெளியின் வழியாக அநேக அரசர் நெருங்கிப் பார்த்தனர் என்பார் 'மன்னவர்கண் மேன்மேல்புக்கு நெருங்கின' எனவும், ஒருபாலுள்ளார் பார்த்துக்கொண்டிருக்கும் இடைவெளியின் வழியாக மற்றொருபாலார் வந்து அங்ஙனம் நெருங்கிப்பார்க்கவெண்ணினும் இடம் பெற்றிலர் என்பார் 'நிறைந்து' எனவுங் கூறினர். மருங்கின் வெளி என்றதும், வெளிவழி என்றதும் ஆறன்றொகைகள். ஆக என்பது சொல்லெச்சமாகத் தொக்குநின்றது. மருங்கின் வெளி என்றதில் இன் அல்வழிக்கண்வந்த சாரியை எனவும், அது பண்புத்தொகைநிலைத்தொடர் எனவுங்கொண்டு அதற்கு மருங்காகிய வெளியெனப் பொருள் கூறலாகாதோவெனின், மருங்

செல்லாம் வெளியாயிருப்பின் மன்னவர்கண்கள் மேல்மேல் புக்கு நெருக்குண்ண வேண்டியதின்று; ஈண்டு மன்னவர்கண்கள் மேன்மேற் புக்கு நெருக்குண்டனவெனக் கூறியிருத்தலின் ஈண்டு மருங்கை வெளியாகக் கூறுதல் பொருத்த முடைத்தன்று; ஆகலின் அங்ஙனம் பொருள் கூறலாகாதென்க. (கநO)

> மன்னர் விழித்தா மரைபூத்த மண்டபத்தே [துச்
> பொன்னின் மடப்பாவை போய்ப்புக்காள் - மின்னிறத்
> செய்யதாள் வெள்ளைச் சிறையன்னஞ் செங்கமலப்
> பொய்கைவாய்ப் போவதே போன்று.

(இ-ள்.) மின் நிறத்து மின்னலினது நிறத்தை யொத்த, செய்ய - செந்நிறத்தினையுடைய, தாள் - கால்களையும், வெள்ளைச்சிறை - வெண்மையாகிய இறகுகளையுமுடைய, அன்னம் - அன்னப்பறவையானது, செங்கமலம்-(மலர்ந்த) செந்தாமரைப் பூக்களையுடைய, பொய்கைவாய்-தடாகத்தில், போவதே போன்று - செல்லுதலையேயொக்க, பொன்னின் - (அழகினால்) இலக்ஷ்மியைப்போன்ற, மடம் - இளமைப்பருவத்தினையுடைய, பாவை - தமயந்தி, மன்னர் - அரசர்களது, விழித்தாமரை - கண்களாகிய தாமரைகள், பூத்த-மலர்ந்துள்ள, மண்டபத்து-சுயம்வரமண்டபத்தில், போய்ப்புக்காள்-சென்று புகுந்தனள், எ - று.

(வி-ரை.) மின்னிறத்து - ஆறன் றொகைநிலைத்தொடர்; மின்னல்போன்ற நிறத்தினையுடைய என்று பொருள்கூறுவது பொருத்தமுடைத்தன்று; என்னெனின் மின்னல்போன்ற நிறத்தினையுடையஎன்பது 'செய்ய' என்பதைத்தழுவாமல் 'தாள்' என்பதைத்தழுவி 'மின்னல் போன்ற செந்நிறத்தினையுடைய தாள்' என்று பொருளாம்; ஆகவே, 'செய்ய' என்றது மிகையாமாகலின். மின்னலினது நிறம்போன்ற எனின் அது 'செய்ய' என்பதைத் தழுவி அக்குற்றம் படாமல் நேரே பொருள்படுதல் காண்க. செய்யதாள் - குறிப்புப்பெயரெச்சத்தொடர்.

வெள்ளைச்சிறை - பண்புத்தொகை நிலைத்தொடர்; வெள்ளை நிறத்தினை யுடைய சிறை எனின் இரண்டனுருபும் பொருளுந்தொக்க தொகை யாம். பொய்கைவாய் என்பதில் வாய் ஏழனுருபு போவதே என்பதில் ஏ பிரிநிலை. மண்டபத்தே என்பதில் ஏ அசை. போன்று-வினையெச்ச வுவமவுருபு. இதனை, இச் சகம்புகழு நச்சினார்க்கினியார், தொல்காப் பியம், பொருளதிகாரம் உவமவியலில் "அவைதாம், அன்னவேயப்ப' என்னுஞ் சூத்திரவுரையில் "அவை இடைச்சொல்லாகித் தொக்குவரு வனவும், தொகாதே நிற்பனவும், வினைச்சொல்லாகி வேறுபட நிற்ப னவுமெனப் பலவாம்' என்றதனாற் கண்டுகொள்க. விழித்தாமரை-உரு வகமாகலின் இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடர். மடம்- இளமை; இது இளம்பருவத்தினை யுணர்த்தலின் பண்பாதபெயர். பொன்னின் என்பதிலுள்ள ஐந்தனுருபாகிய இன் உவமப்பொருளது. பாவைபோல்வாளைப் பாவை என்றது உவமையாகுபெயர். பொன்னிற் பாவை என்பதற்குப் பொன்னினாற் செய்த பாவைபோல்வாள் எனப் பொருள்கூறி அன்மொழித்தொகைப்பெயர் என்னலாகாதோ எனின், ஆகாது; என்னெனின், பொன் என்னு நிலைமொழி வருமொழியாகிய பாவை என்பதை விசேடித்து நிற்பினும் அப்பாவை என்பது தனிநின் றும் ஆகுபெயரான் பெண்களை யுணர்த்தலினென்பது. (கஙக)

> வடங்கொள் வனமுலையாள் வார்குழன்மே லோடு
> நெடுங்கட் கடைபார்த்து நின்று - னிடங்கண்டு
> பூவாளி வேந்தன்றன் பொன்னாவம் பின்னேயிட்
> டேவாளி நாணின்மே லிட்டு.

(இ - ள்.) பூவாளி - (ஐந்துவகைப்) பூக்களாகிய பாணங்களை யுடைய, வேந்தன் - (மன்மதனாகிய) அரசன், தன் பொன் ஆவம் - தனது அழகிய அம்பறாத்தூணியை, பின் இட்டு - முதுகின் பக்கந் தொங்கக்கட்டி, ஏ-பாணங்களை, வாளி-ஒளியினையுடையதாகிய, நாணி ன்மேல் - (வில்லிற்பூட்டிய) கயிற்றின்மேல், இட்டு - இட்டு வைத்து,

இடம் கண்டு - (தக்க) இடத்தினைத் தெரிந்துகொண்டு, வடம் கொள்-முத்துமாலையை அணிந்த, வனமுலையாள் - அழகாகிய கொங்கைகளையுடைய தமயந்தியினது, வார் குழன்மேல்-நீண்ட கூந்தலின்மீது, ஓடும்-விரைந்து செல்கின்ற, நெடும் - விசாலமாகிய, கட்கடை - கண்களின் கடைகளை, பார்த்து நின்றான் - எதிர்நோக்கிநின்றான், எ-று.

(வி-ரை.) தமயந்தி எவர்மீது தன் கட்கடையைச் செலுத்துகின்றாளோ அவர்மீது பாணங்களையெய்ய மன்மதன் சித்தமாயிருந்தான் என்பது கருத்து. 'பூவாளிவேந்தன் இவளது கட்கடைபார்த்து நின்றான்' என்றமையின் இவள் பெண்சக்கரவர்த்தினி என்றவாறாயிற்று. முலையாள் கண் என இயைக்க. 'வார்குழன்மேல் ஓடும்' என்றதும், 'நெடும்' என்றதும் இடைப்பிறவரல். கட்கடை - உறுப்புத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறன்றொகை. வார்குழைமேல் என்றும் பாடமுண்டு; இப்பாடத்திற்கு, மேன்மையாகிய குண்டலங்களையணிந்த காதுகளின் மேல் என்று பொருள்கொள்க. நாணின்மேல்என்பதில் இன்-சாரியை, மேல்-ஏழனுருபு. (கடஉ)

மன்னர் குலமும் பெயரும் வளநாடு
மின்ன பரிசென் றியலணங்கு - முன்னின்று
தார்வேந்தன் பெற்ற தனிக்கொடிக்குக் காட்டினாள்
தேர்வேந்தர் தம்மைத் தெரிந்து.

(இ - ள்.) இயல்-நல்ல லக்ஷணங்களையுடைய, அணங்கு-தெய்வப் பெண்போல்வாள் ஒருதோழி, தேர்வேந்தர்தம்மை-(அங்கு வந்துள்ள) தேர்ச்சேனையையுடைய அரசர்களை, தெரிந்து - (நன்றாய்த் தனக்குள் முன்னே) தெரிந்துகொண்டு, (பிறகு) தார்வேந்தன் - வெற்றி மாலையினையுடைய அரசனாகியவீமன், பெற்ற - ஈன்ற, தனிக்கொடிக்கு - ஒப்பற்ற பூங்கொடிபோல்பவளாகிய தமயந்திக்கு, முன்னின்று-முன்னே நின்று, மன்னர் - அவ்வரசர்களுடைய, குலமும் - வமிசங்களும், பெயரும்-புகழும், வளநாடும் - நீர் நிலவளப்பத்தினையுடைய நாடுகளும்,

இன்ன பரிசு-இத்தன்மையையுடையன, என்று-என்றுசொல்லி, காட்டினாள் - முறையாகக் காட்டினார், எ-று.

(வி - ரை.) ஈண்டுக் குலம் என்றது சூரிய சந்திர வமிசங்களை, சாதியையன்று; அதனைப் பின் ஒவ்வோ ரரசரையும் பற்றித் தனியே கூறுஞ் செய்யுட்களா லுணர்க. பெயர் என்றது புகழை, இவர்க்கிது பெயர் என்பதன்று. இதனையும் பின்வருஞ் செய்யுட்களாலுணர்க. இயல் அணங்கு என்பதற்குச் சரஸ்வதி என்றும் சிலர் பொருள் கூறுவர். அஃது இக்காண்டத்தின் 150-ம் செய்யுளில் "காவலரைத்தன் சேடிக் காட்டக்கண்டு' என்றதனோடு மாறுகொள்ளுதலின் பொருந்தாது. சிலர் அதற்குஞ் சமாதானமாகச் சரஸ்வதிசேடியின் உருவங்கொண்டுவந்திருந்தனள் என்பர். அக்கூற்றுக்கு இந்நூலில் ஆதாரமின்மையின் அஃது அன்னோரால் பிறிதோர் கற்பனையை இந்நூலிற்புகுத்தக் கூறப்படுங் கூற்றேயன்றி நூலிற்குத்தகக் கூறப்படுவதன்றென விடுக்க. பரிசையுடையனவற்றைப் பரிசு என்றது ' இல்லதெ னில்லவண் மாண்பானால்" என்பதிற்போலக் குணியைக் குணமாகக் கூறியதோ ருபசார வழக்கு. சொல்லி என்றது சொல்லெச்சம். இயலணங்கு 'தேர்வேந்தர் தம்மைத் தெரிந்து தனிக்கொடிக்கு இன்ன பரிசென்று காட்டினள்' என்றதனால் "ஒருவர் ஒருவிஷயத்தைத் தாமுன் னுணர்ந்து பிறகு பிறர்க்குணர்த்தப் புகுதல்வேண்டும்" என்னு நீதிதோன்றுதலறிக. தெரிந்து என்பது தெரிவித்து என்னும் பிறவினைப்பொருளது எனக்கொள்ளுவார்க்கு செய்யுண்முழுதும் இடர்ப்பாடின்றிப் பொருள்கொள்ள வியையாமையும், அங்ஙனங் கொள்ளும்பொருளும் இத்துணைச் சிறவாமையு முய்த்துணர்க. பெற்ற கொடி, தனிக்கொடி என இயைக்க. ()

பொன்னி யமுதப் புதுக்கொழுந்து பூங்கமுகின்
சென்னி தடவுந் திருநாடன் - பொன்னிற்
சுணங்கவிழ்ந்த பூண்முலையாய் சூழமரிற் றன்னோர்
கணங்கவிழ்ந்த வேலனிவன் காண்.

இதுமுதல் பதினாறு செய்யுட்களால் அரசர்களைப்பற்றித் தமயந்தியின் சேடி கூறுவதாகக் கூறத்தொடங்கிய இவ்வாசிரியர் தமது தேசாபிமானத்தால் தமிழ்நாட்டு வேந்தரை முன்னே கூறவெண்ணிச் சூரிய வமிசத்தரசரை முன்னே கூறு மாபின்படி அவ்வமிசத்தரசனாகிய சோழனை முற்கூறி, அதற்கடுத்தவமிசமாகிய சந்திரவமிசத்திற் பிறந்தவனும் தமிழை வளர்த்தவனுமாகிய பாண்டியனை அச்சோழனுக்குப் பின்னரும், அச்சந்திர வமிசத்திற்குப் பிந்தியதாகிய அக்கினி வமிசத்திற் றோன்றிய சேரனைப் பாண்டியனுக்குப் பின்னருங் கூறிப் பிறகு வடநாட்டு மன்னரைக் கூறத்தொடங்கிக் கதாநாயகனும், அக்காலத்து எவரினுமேலான சக்கரவர்த்தியாய் விளங்கியவனுமாகிய நளன் சந்திர வமிசத்தானகையால் அம்மேன்மைதோன்ற முன்னே சந்திரவமிசத்து அரசர்களைக் கூறக்கருதி அச்சந்திரவமிசத்திற்றோன்றிய யயாதிக்குச் சுக்கிரனுடைய பெண்ணாகிய தேவயானை என்பவள் வயிற்றிற் பிறந்த யது, துருவசு என்னும் இருவரும், விடவருவா என்னும் அசுரவேந்தன்மகள் சன்மிட்டை என்பவள் வயிற்றிற் பிறந்த ருகு, அநு, பூரு என்னு மூவருமாகிய ஐவர் மைந்தர்களில் கண்ணன் திருவவதரித்த யதுமரபை முன்னும், அவனருள் வழிப்பட்ட பாண்டவர்கள் தோன்றி விளங்கிய பூரு மரபை அதன் பின்னுமாக முறையே கூறி மற்றைய அரசர்களை இவ்வரையறையின்றிக் கூறுகின்றனர்.

(இ - ள்.) பொன்னின் - பொன்போல, சுணங்கு அவிழ்ந்த - தேமல்படர்ந்த, பூண் - ஆபரணங்களை யணிந்த, முலையாய் - கொங்கைகளையுடைய இளவரசியே, இவன்-இம்மன்னன், சூழ் அமரில் - நெருங்கிய போரில், துன்னார் கணம்-பகைவர்களது கூட்டம், கவிழ்ந்த - அழிதற்குக் காரணமாகிய, வேலன் - வேலையுடையவனாகிய, பொன்னி - காவேரியாற்றினது, புது - புதிய, அமுதம் - (உயிர்களைப் பேணலில்) அமுதம்போல்வதாகிய வெள்ளத்தினது, கொழுந்து - அலைகள், பூங்கமுகின் - அழகிய பாக்குமரத்தினது, சென்னி - உச்சியை, தடவும் -

தொடுகின்ற, திருநாடன் - செல்வத்தினையுடைய சோழநாட்டைத் தனக்குரிமையாகவுடையவன், எ-று.

(வி - ரை.) சுணங்கவிழ்ந்த எழுவாய்த்தொடர். பூண் - பூணப்படு என்னுஞ் செயப்பாட்டு வினைப்பொருளதாகிய முதனிலைத் தொழிற் பெயர்; அஃது அவ்வாகுபெயராய்ப் பூணப்படும் ஆபரணங்களை யுணர்த்தியது. சூழ் அமர்-வினைத்தொகைநிலைத்தொடர். அமர் - முதனிலைத் தொழிற்பெயர்; நெருங்கல் என்பதுபொருள்; அஃது ஒருவரையொருவர் நெருங்கி (எதிர்த்து) பொருதலை யுணர்த்தியது துன்னார் - பகைவர்; அஃது ஒருவரோடொருவர் பொருந்தாமல் மாறுபட்டவர் என்னும் பொருளது துன்னார்கணம்-ஒன்றன்கூட்டத் தற்கிழமைப்பொருளதாகிய ஆறன்றொகை. வேலன் நாடன் என இயைக்க; இஃது இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடர்; வேலனாகிய நாடன் என்றும். இவன் நாடன் என இயைந்து வாக்கியமுடிதல் காண்க. காண்-முன்னிலையசை. அமுதப் புதுக்கொழுந்து என்பது புது அமுதக்கொழுந்து என இயைக்கப்பட்டது. காவேரியில் வெள்ளம்வருகையில் அதன் அலைகள் பாக்குமரத்தின் உச்சியைத் தடவும்படி அவ்வளவு உயர்ந்துவரும்என்பது முதலிரண்டடியின்கருத்து. இச்செய்யுளிற் சோழனது பராக்கிரமத்தையும், சோழநாட்டின் சீர்வளப்பத்தையுங் கூறினர். முன்னிரண்டடியில் எத்தகையினரையுந் தனக்குக் கீழ்ப்படுத்துஞ் செல்வப்பெருக்கினையுடையவன் என்னும்பொருள் குறிப்பாகத் தோன்றுதல் அறிக. பொன்னில் என்பதைப் பூண் என்பதற்கேனும், முலையாய் என்பதற்கேனும் விசேஷணமாக்கிப் பொருள் கூறுதலுமாம். முலையாய் என்பதற்கு விசேஷணமாக்குங்கால் லக்ஷ்மியெனப் பொருள்கொள்க. (கஙச)

போர்வாய் வடிவேலாற் போழப் படாதோருஞ்
சூர்வாய் மதாரிக்கட் டோகாய்கேள் - பார்வாய்ப்
பருத்ததோர் மால்வரையைப் பண்டொருகாற் செண்டாற்
றிரித்தகோ விங்கிருந்த சேய்.

(இ - ள்.) போர்வாய் - அமரில், வடி வேலால் - கூரியவேலினு லும், போழப்படாதோரும்-பிளக்கப்படாத திறலமைந்த வீரரும், சூர் வாய்-(கண்டமாத்திரத்தில்) அச்சத்தையடையும், மதர்-மதர்த்த, அரி-செவ்வரியினையுடைய, கண்-கண்களையுடைய, தோகாய்-இளவரசியே, கேள் - நான் சொல்வதைக்கேள், இங்கிருந்த சேய் - இங்குவீற்றிருக் கின்ற அரசகுமாரன், பார்வாய்-பூமியில், பண்டொருகால்-முன்னொரு காலத்தில், பருத்தது-பருமையாகியதாகிய, ஓர்-ஒப்பற்ற, மால்வரையை-பெரியமேருமலையை, செண்டால் - செண்டினால், திரித்த - சுழலச் செய்த, கோ - அரசனுவன், எ-று.

(வி - ரை ) சூர் - முதனிலைத் தொழிற்பெயர்; அஞ்சுதல் என் பதுபொருள். இதனடியாகச் சூர்தல், சூர்ந்த, சூர்ந்து, சூர்ந்தது என வினைவிகற்பங்க ளுண்டாம். சூர்வாய் - இரண்டன்றொகை. வாய் என்பதைக் கண் என்பதனோடு இயைக்க. இது காரியப்பொருளதா கிய காலங்கரந்த பெயரெச்சத்தொடர். மதர் என்பதனைக் கண் என்பதனோடியைத்து வினைத்தொகை நிலைத்தொடரெனக் கொள்க. அதனை முதனிலைத் தொழிற்பெயராகக் கொள்ளின் மதர்ப்பினை யுடைய கண் என்றும்; இப்பொருளில் அத்தொடர் இரண்டனுரு பும் பொருளு முடன்றொக்கதொகை. போர்வாய், பார்வாய் என்பவற் றின் வாய் ஏழனுருபு. தோகை என்னுஞ் சினைப்பெயர் அவ்வாகுபெய ராய் மயிலையுணர்த்த, அஃது உவமையாகுபெயராய் அதுபோலுஞ் சாயலையுடைய பெண்ணை யுணர்த்திற்று; அது விளிவேற்றுமையை யேற்றுத் தோகாய் என்றாயிற்று. இருக்கின்ற என்பது இருந்த என இயல்பினால் நிகழ்காலம்இறந்தகாலமாயிற்று. சேய் என்பதற்குச் சுப்பிர மணியர் எனக்கொண்டு வீரத்தினாற் சுப்பிரமணியரைப்போன்ற பாண்டி யனைச் சேய் என்றது உபசாரவழக்கு என்பதுமாம். வேலாலும் என் னும் உயர்வுசிறப்பும்மை செய்யுள்விகாரமாகத் தொக்குநின்றது.

மேருமலையைச் செண்டால் திரித்தபாண்டியன் உக்கிரகுமார பாண்டியன் என்பர். இவன் நளன் காலத்திருந்த பாண்டியனுக்கு வெகு

காலம் பிற்பட்டவனேனும் இந்நூலாசிரியருக்கு முற்பட்டவனாகலின் இங்ஙனங் கூறினார். ஓரரசனைப் புகழுங்கால் அவன் மரபில் முன்னிருந்தோர் புகழையும் பின்னிருந்தோர் புகழையும் அவன் புகழாகவைத்துக் கூறுவது புலனெறி வழக்கு.

உக்கிரகுமாரபாண்டியன் செண்டால் மேருமலையைத் திரித்த கதை வருமாறு:—ஒருகால் பாண்டிநாட்டில் மாரிவறந்து பஞ்சமுண்டாயிற்று. அதனாற் குடிகள் மிக வருந்தித் தம்மரசனாகிய உக்கிரகுமார பாண்டியனுக்குத் தெரிவித்தனர். அவன் மிகுதியுங் கவலைகொண்டு அந்நகரில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியுள்ள சோமசுந்தரக்கடவுளின் சந்நிதியிற் சென்று அவர் திருமுன் தன் குறையை விண்ணப்பித்து மீண்டு தன் அரண்மனையடைந்து அன்றிரவு வருத்தமிகுதியினால் தரையிற்படுத்துத் தூங்கினன். அப்போது சோமசுந்தரக்கடவுள் அவன் கனவில் ஒரு சித்தராகித் தோன்றி "இப்பொழுது ஒருவருடம் வரையினும் மழைபெய்யாது" எனவும், "மேருமலையில் ஒரு பெருங்குகையில் மிக்கதோர் சேமநிதி இருக்கின்றது நீ அங்குச்சென்று மேருமலையின் செருக்கை நின் கைச்செண்டாலடக்கி அந்நிதியைக் கொண்டுவந்து நின்னாட்டுக் குடிகளின் வறுமையைப் போக்குவாய்" எனவுங் கூறி மறைந்தனர். உடனே அரசன் விழித்தெழுந்து நாற்பாற் சேனைகளும் தன்னைச் சூழ்ந்து, அம்மலையை அணுகி அம்மலையரசனை விளித்தனன். அவன் உடனே வருதலைத் தவிர்ந்து தாமதிக்க, அரசன் சினமிகுந்து தன் கைச் செண்டால் அம்மலையைப் புடைக்க, உடனே அம்மலையரசன் விரைந்து வணங்கித் தன் குற்றத்தைப் பொறுக்கும்படி வேண்டி அந்நிதியுள்ள இடத்தைக் காட்டி அந்நிதியைக் கொண்டுபோகும்படி கூறினன். அரசன் மகிழ்ந்து அந்நிதியைக் கொண்டுவந்து அதனால் தன் குடிகளின் துன்பத்தைப் போக்கி மகிழ்வித்தனன் என்பது திருவிளையாடற்புராணக் கதை. (கடு)

வென்றி நிலமடந்தை மென்முலைமேல் வெண்டுகில்போற்
குன்றருவி பாயுங் குடநாட - னின்றபுகழ்

மாதே யிவன்கண்டாய் மானத் தனிக்கொடியின்
மீதே சிலையுயர்த்த வேந்து.

(இ - ள்.) நின்ற புகழ் - நிலையாகிய கீர்த்தியினையுடைய, மாதே - இளவரசியே, இவன்-இவ்வரசன், வென்றி - வெற்றியினையுடைய, நில மடந்தை - பூதேவி, மெல் முலைமேல் - தன்மென்மையாகிய கொங்கைகளின்மீது போட்டுக்கொண்ட, வெள் துகில்போல்-வெண்மையாகிய மேலாடையைப்போல, குன்று - குன்றுகளினின்று, அருவி பாயும் - அருவி பாயப்பெற்ற, குடநாடன் - மேல்நாட்டையுடையவனாகிய, மானம் - மேன்மையாகிய, தனி - ஒப்பற்ற, கொடியின்மீது - கொடியின்மேல், சிலை உயர்த்த - வில்லை எற்றிய, வேந்து - (சேர) அரசனாவான், எ-று.

(வி - ரை.) நாடன் வேந்து என இயைத்து இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடரெனக் கொள்க; இது நாடனாகிய வேந்து என்றும். நிலமடந்தை என்பது நிலமாகியமடந்தை என்றுதலின் இதுவும் இருபெயரொட்டுப் பண்புத்தொகையாம். நிலமடந்தைக்கு வென்றியாவது மாந்தர் அகழ்தன்முதலாக எவ்வகைத் துன்பங்களை இயற்றினும் அவற்றையெல்லாம் பொறுத்து அவர்களைக் காத்தல். இதனை, "அகழ்வாரைத் தாங்கு நிலம்போல்" என்றதனாலறிக. வில்லை எற்றுதலாவது வில்லின் உருவத்தை எழுதிவைத்தல். வில்லின் உருவத்தை வில் என்றது பொருளாகுபெயர். எழுதிய என்பதனை உயர்த்த என்றது இலக்கணை. (கங்சு)

ஆழி வடிம்பலம்ப நின்றானு மன்றொருகா
லேழிசைநூற் சங்கத் திருந்தானு - நீள்விசும்பி
னற்றேவர் தூது நடந்தானும் பாரதப்போர்
செற்றானுங் கண்டாயிச் சேய்.

(இ - ள்.) ஆழி - முந்நீர்க்கண், வடிம்பலம்ப நின்றானும் - வடிம் பலம்ப நின்றவனும், அன்று ஒருகால்-முன்னொருநாள், ஏழ் இசை - எழுவகையாகிய சுரங்களைப்பற்றிக் கூறும், நூல் சங்கத்து-நூலை வல் லவர்களுடைய சபையில், இருந்தானும் - தலைவனாக இருந்தவனும், நீள் விசும்பின் - விசாலமான விண்ணுலகிலுள்ள, நல் தேவர் - நல்ல தேவர்களின் அமிசமாய்த்தோன்றிய பாண்டவர்களுக்கு, தூது நடந் தானும்- தூதாக நடந்தவனும், பாரதப்போர்-பாரதயுத்தத்திலே, செற்றா னும்-பகைவர்களை அழித்தவனும், இச்சேய் - வீரத்தினாற் சுப்பிரமண் ணியனையொத்த இந்த அரசனேயாவன், எ-று.

(வி - ரை ) இம்மன்னன் யதுவமிசத்திற் றோன்றியவன். ஆழி வடிம்பலம்ப நின்ற பாண்டியனைப் பற்றிப் பத்துப்பாட்டில் மதுரைக் காஞ்சியில் "பொலந்தார் மார்பி னெடியோ னும்பல்" என்னும் அறுபத் தோராம் அடிக்குப் "பொன்னாற்செய்த தாரையணிந்த மார்பினையு முடைய வடிம்பலம்ப நின்ற பாண்டியன்வழியில் வந்தோனே" என்று நச்சினார்க்கினியர் கூறிய உரையானும், புறநானூற்றில் "ஆவு.ழானி யற் பார்ப்பன மாக்களும்" என்னும் ஒன்பதாஞ் செய்யுளிலுள்ள "முந் நீர்விழவினெடியோன்" என்பதற்குக் கூறப்பட்ட விசேஷ உரையில் "முந்நீர்க்கண் வடிம்பலம்ப நின்றானென்ற வியல்பால் நெடியோனெ ன்றானென்ப" என்று கூறியதனானும் அறிக. இதிற்பொதிந்த கதை யை வல்லார்வாய் கேட்டுணர்க.

"ஆழிவடி யம்பலம்ப நின்றானும்" எனவும் பாடமுண்டு. இப்பாட த்திற்கு, ஆழி - கடலில், வடி அம்பு - கூர்மையாகிய தன்பாணங்களை, அலம்ப-கழுவும்படி, நின்றானும் - வெற்றிபெற்று நின்றவனும் என்று பொருள்கொள்க. இதிற்குறித்த கதையாவது - இந்த வமிசத்திற் றோன் றிய கீர்த்திமானான கார்த்தவீரியார்ச்சுனன் தன்னாற் சிறையிலிடப்பட்ட இராவணனை மீட்கும்படி நருமதையாற்றங்கரையில் தன்னைவந்து எதிர் த்த இராக்ஷதர்களை அழித்து அவர்களையழித்த பாணங்களைக் கடலிற் கழுவினன் என்பது.

ஏழிசைநூற் சங்கத்திருந்த கதையாவது - அக்கார்த்தவீரியார்ச்சுனன் தேவவிருடியாகிய நாரதருக்கும், விசுவாவசு என்னுங் கந்தருவனுக்கும் இசைப்போர் நடந்தபோது சபைத்தலைவனாக வீற்றிருந்தான் என்பது.

தூதுநடந்த கதையாவது-கண்ணன் பாண்டவர்களின் பொருட்டுத் துரியோதனன்பால் தூதுசென்றமை.

பாரதப்போர் செற்றகதையாவது - அப்பாண்டவர்களுக்கும் துரியோதனாதிகளுக்கு நடந்தபோரில் கண்ணன் பாண்டவர்களின் பக்கமிருந்து அவர்களின் பகைவர்களாகிய துரியோதனாதியரையழித்தமை.

இசை நூல் - இரண்டனுருபும்பயனு முடன்றொக்கதொகை. நூலையறிந்தவர்களை நூல் என்றதோருபசாரம். தேவர்களின் அமிசமானவர்களைத் தேவர்கள் என்றது காரியத்தைக் காரணமாகக்கூறிய உபசாரவழக்கு. ஆக என்பது சொல்லெச்சம். பாரதப்போர் என்பது பாரதநூலிற் சொல்லப்பட்ட போராதலின் ஏழாம்வேற்றுமை யுருபும் பயனு முடன்றொக்கதொகை. பாரதர்களது (பரதனது வமிசத்திற் பிறந்த பாண்டவ துரியோதனாதியரது) போர் எனக்கொள்ளின் ஆறன்றொகை என்க. இப்பொருளில் அத்தொடர் பாரதர் போர் எனப் பிரிக்கப்படும். அது "சிலவிகாரமா முயர்திணை" என்றதனால் நிலைமொழியீற்று ரகர வொற்றுக் கெட்டு, வருமொழி முதலொற்று மிக்கது. செற்றான் என்பதிற் செறு பகுதி. (கடஎ)

தெரியி னிவன்கண்டாய் செங்கழுநீர் மொட்டை
யரவின் பசுந்தலையென் றஞ்சி - யிரவெல்லாம்
பிள்ளைக் குருகிரங்கப் பேதைப்புட் டாலாட்டும்
வள்ளைக் குருநாடர் மன்.

(இ-ள்.) தெரியில் - நீ அறியவேண்டின், இவன் -இந்தமன்னன், பிள்ளைக்குருகு - நாரைக்குஞ்சு, செங்கழுநீர் மொட்டை - செங்கழுநீரி

னது அரும்பை, அரவின்-பாம்பினது, பசுந்தலை என்று-பசுமையாகிய தலை என்று எண்ணி, அஞ்சி இரங்க - பயந்து வருந்த, பேதைப்புள் - பெண் நாரையானது, இரவு எல்லாம் - இராமுழுதும், தாலாட்டும் - தாலாட்டுகின்ற, வள்ளை - வளப்பத்தினையுடைய, குருநாடர் - குருநாட்டினருக்கு, மன் - அரசனுவன், எ-று.

(வி-ரை.) பிள்ளைக்குருகு - பண்புத்தொகைநிலைத்தொடர். முற் பிள்ளைக்குருகு என்றதனுற் பேதைப்புள் என்றதற்குப் பெண்நாரை என்று பொருள் கூறப்பட்டது. வள்ளை-பண்புப்பெயர்; இதில் ஐ-பகுதிப்பொருள்விகுதி; இதனை வள்+ஐ எனப் பிரித்து வளப்பத்தினையும் அழகினையுமுடைய என்று கூறுதலுமாம். வள்ளை என்பது ஒருவகைப் பாட்டினையுங் குறிக்கும்; அதற்கு உலக்கைப்பாட்டு என்றும் பெயர்; ஆகையால், வள்ளைப்பாட்டின் ஒலிமிக்க என்றும் பொருள் கூறலாம்; இப்பொருளில் வள்ளை என்பது அப்பாட்டுப் பாடுதலா லுண்டாகும் ஒலியைக் குறித்தலாற் காரணவாகுபெயர். குருநாடர் மன் - நான்கன் ருெகை. கண்டாய் - முன்னிலையசை. (கஙஅ)

தேமருதார்க் காளை யிவன்கண்டாய் செம்மலர்மேற்
காமருசங் கீன்ற கதிர்முத்தைத் - தாமரைதன்
பத்திரத்தா லேற்கும் படுகர்ப் பழனஞ்சூழ்
மத்திரத்தார் கோமான் மகன்.

(இ - ள்.) தேன் மரு-தேன்பொருந்திய, தார்-மாலையினை அணிந்த, காளை இவன் - காளையாகிய இந்த மன்னன், சங்கு-சங்குகள், செம்மலர்மேல் - செந்தாமரைமலர்மீது, ஈன்ற - பெற்ற, காமம் மரு - (யாவரும்) விரும்புதல் பொருந்திய (விரும்புகின்ற), கதிர் முத்தை - பிரகாசத்தினையுடைய முத்துகளை, தாமரை - தாமரைக்கொடி, தன் பத்திரத்தால் - தன் இலையினுல், ஏற்கும் - ஏந்திக்கொள்ளுகின்ற, படுகர் - பள்ளமாகிய, பழனம் - வயல்கள், சூழ் - சூழ்ந்த, மத்திரத்தார் -

மத்திரதேசத்தவர்களுடைய, கோமான் - அரசனுடைய, மகன்-பிள்ளை, எ-று.

(வி-ரை.) தேன் - வாசனை என்பதுமாம்; தேன் என்பது "தேன்மொழி மென்மை மேவினிறுதி யழிவும்" என்றதனால் னகர மெய்கெட்டு மரு என்பதோடு கூடித் தேமரு என்றாயிற்று. தேம் என்பதற்கு வாசனை என்னும் பொருளுண்மையின் அப்பொருளில் அச்சொல்லின் ஈற்று மகரங் கெட்டுத் தேமரு என்றாயிற்று என்பதுமாம். தேம் என்பதற்கே தேன் என்னும் பொருள் உண்டென்பர்; அங்ஙனமாயின் "தேன்மொழி மென்மைமேவி னிறுதியழிவும்" என்றது பயனில் கூற்றாம். காளைபோல்வானைக் காளை என்றது உவமையாகு பெயர். காளை இவன் - இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடர். காமம் என்பது கடைக்குறைந்து காம் என நின்று 'மவ்வீறொற்றழிந் துயிரீறொப்பவும்' என்றதனால் ஈற்று மகரங்கெட்டுக் கா என நின்று, மரு என்னும் வருமொழியின் முதலெழுத்து மென்மையாதலின் "எண்மூ வெழுத்தீற் றெவ்வகை மொழிக்கு, முன்வரு ஞநமய வக்க ரியல்பும்" என்றதனால் இயல்பாய்க் காமரு என்றாயிற்று; இது எழுவாய்த்தொடர். (கக.க)

அஞ்சாயன் மானே யிவன்கண்டா யாலவாய்
வெஞ்சாறு பாய விளைந்தெழுந்த - செஞ்சாலிப்
பச்சைத்தாண் மேதிக் கடைவாயிற் பாலொழுகும்
மச்சத்தார் கோமான் மகன்.

(இ-ள்.) அம் சாயன் - அழகாகிய சாயலையுடைய, மானே - இளவரசியே, இவன் - இந்த மன்னன், ஆலைவாய் - ஆலையிலுள்ள, வெம் - (யாவரும்) விரும்புதலையுடைய (விரும்புகின்ற), சாறு - (கரும்பினது) சாறானது, பாய - பாய்தலால், எழுந்து விளைந்த - ஓங்கிவளர்ந்த, செஞ்சாலி - செந்நெற்பயிரினது, பச்சைத்தாள்பால் - பசுமையாகிய

தாள்களினின்று வரும் பாலானது, மேதி - எருமைகளுடைய, கடை வாயில்-கடைவாயிலே, ஒழுகும் - ஒழுகுகின்ற, மச்சத்தார்-மச்சநாட்டா ருடைய, கோமான் - அரசனுடைய, மகன் - புதல்வன், எ-று.

(வி - ரை.) வெம் - விருப்பம்; வெஞ்சாறு - இரண்டனுருபும் பொருளு முடன்றொக்கதொகை. பாய என்பது காரணப்பொருளதாத லின் இறந்தகால முணர்த்தியது. செஞ்சாலி - செந்நெற்பயிர்; இது பண்புத்தொகை நிலைத்தொடர். செஞ்சாலித்தாள், பச்சைத்தாள் என இயைக்க. வாய்க்கடை என்பது கடைவாய் என நின்றமையின் இலக் கணப்போலி; இது தழாத்தொடராகிய ஆறும்வேற்றுமைத்தொகை. வாயில் - இதில் இல் ஏழனுருபு. தாள்பால் மேதிக்கடைவாயில் ஒழுகும் என இயைக்க. தாள்பால்-ஐந்தனுருபும்பொருளு முடன்றொக்கதொகை; இது விரியின் தாளினின் றொழுகும்பால் என்றும். தனது தாளினின் றும் வரும்பால் எருமையின் கடைவாயில் ஒழுகும்படி செந்நெற்பயிர் உயர்ந்து வளர்ந்திருக்கின்றது என்பது கருத்து. இதனால் அந்நாட்டின் நீர் நிலவளப்பங்கள் கூறப்பட்டனவென வறிக. (கரு0)

வண்ணக் குவளை மலர்வெளவி வண்டெடுத்த
பண்ணிற் செவிவைத்துப் பைங்குவளை - யுண்ணு
தருங்கடா நிற்கு மவந்திநா டாளு
மிருங்கடா யானை யிவன்.

(இ - ள்.) இவன் - இம்மன்னன், அருங்கடா - அருமையாகிய எருத்துமாடு, வண்ணம் - அழகினையுடைய, குவளைமலர் - நீலோற்பல மலரை, வெளவி - கௌவி, வண்டு - (அதிலிருந்த) வண்டுகள், எடுத்த- பாடத்தொடங்கிய, பண்ணில் - இராகத்தில், செவி வைத்து - காதை வைத்து, பைங்குவளை - அப்பசுமையாகிய நீலோற்பலமலர்களை, உண் ணுது நிற்கும் - உண்ணாமல்நிற்கின்ற, அவந்திநாடு - அவந்திநாட்டை, ஆளும் - ஆளுகின்ற, இரும் - மிகுதியாகிய, கடா யானை - மதத்தினை யுடைய யானையைப்போன்றவன், எ-று.

(வி - ரை.) அருங்கடா-உணர்ச்சியிலும், உழுதல் முதலிய செய்தொழிலிலும் பிறநாட்டுக் கடாக்களுக்கில்லாத மேன்மையினையுடைய கடா. அருங்கடா குவளைமலரைவவ்விப் பண்ணிற் செவியை வைத்து அப் பைங்குவளைபை யுண்ணுதுநிற்கும் நாடு என்க. வண்ணக்குவளை - இரண்டனுருபும் பொருளும் உடன்றொக்கதொகைநிலைத்தொடர்; இதனைப் பண்புத்தொகைநிலைத்தொடர் எனக்கொண்டு வண்ணமாகிய குவளையென்பதுமாம். பைங்குவளை என்பது பசுமையாகிய குவளை என்றாம்; இதிற் பசுமை சாம்புலாமையை யுணர்த்திற்று; குவளை மலர் என்பதற்குக் குவளையினது மலர் என்பது பொருள். இஃது உறுப்புத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறன்றொகை; இதிற் குவளை என்பது முதலின் பெயர். பைங்குவளை என்பதிற் குவளை முதலாகு பெயராய் மலரை யுணர்த்திற்று. செவியாற் பண்ணைக்கேட்டு என வேண்டுவதனைப் பண்ணிற் செவிவைத்து என்றது ஒரு பொருளைப் பற்றி மிகுதியும் எண்ணுகின்றவனை அவன் அவ்விஷயத்திலேயே மனம் வைத்திருக்கின்றான் என்பதிற் போன்றதோர் உலகவழக்கு. கடாயானை - இரண்டனுருபும்பொருளு முடன்றொக்க தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. (கசக)

விடக்கதிர்வேற் காளை யிவன்கண்டாய் மீனின்
றொடக்கொழியப் போய்நிமிர்ந்த தூண்டின் - மடற்கமுகின்
செந்தோடு பீறித்தேன் செந்நெற் பசுந்தோட்டில்
வந்தோடு பாஞ்சாலர் மன்.

(இ - ள்.) விடம் - விஷத்தினையும், கதிர் - பிரகாசத்தினையுமுடைய, வேல் வேலை ஏந்திய, காளை - காளைபோல்வானாகிய, இவன்- இம்மன்னன், மீனின் தொடக்கு-மீனினது இரை, ஒழிய - தன்னிடத்திலிருந்து நீங்க, போய் நிமிர்ந்த - மிகவுநிமிர்ந்த, தூண்டில்- தூண்டிலானது, மடல் கமுகின் - மடலையுடைய பாக்குமரத்தினது, செந்தோடு - செம்மையாகிய (பூ) இதழ்களை, பீறி - கிழிக்க, தேன் - (அப்

பூவிலுள்ள) தேனானது, செந் நெல் - செந்நெற்பயிர்களினுடைய, பசுந் தோட்டில் - பசுமையாகிய இதழ்களில், வந்து ஓடும் - வந்துபாயும், பாஞ்சாலர் மன் - பாஞ்சாலநாட்டினர்களுடைய அரசன், எ-று.

(வி - ரை.) மீனின் தொடக்கு - பொருட்பிறிதின்கிழமைப் பொருளதாகிய ஆறன்தொகை; மீனினது இரை என்பது பொருள். தொடக்கு என்பது தொடக்கப்படுதல் என்னும் செயப்பாட்டு வினைப் பொருளில் வந்த செய்வினையாகிய முதனிலைத்தொழிற்பெயர்; இது விகுதிபெறின் தொடக்கல், தொடக்குதல் என்றாம்; கட்டுதல் என்பது அதன் பொருள்; ஈண்டு அது பொருத்தப்படுதல் என்னும் பொருளது. தொடங்கல் என்பதற்கு ஆரம்பித்தல் என்பது பொருளாகலின் தொடக்கல் என்பதற்கும், தொடங்கல் என்பதற்கும் வேறுபாடுண்மையறிக; ஈண்டு அது தொழிலாகுபெயராய் இரையை யுணர்த்துகிறது; மீனுக்காகப் பொருதப்படுதலை யுடையது என நான்கன் றொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைப்பெயராய் மீனுக்காகத் தூண்டிலிற் பொருத்தப் படும் இரையை யுணர்த்திற்றென்பதுமாம். போய் நிமிர்ந்த என்பது மிகவுநிமிர்ந்த என்னும் பொருளது. கமுகின்தோடு, செந்தோடு என இயைக்க. பீறி - காரணப்பொருளதாகிய செயவெனெச்சத்திரிபு. ()

> அன்னந் துயிலெழுப்ப வந்தா மரைவயலிற்
> செந்நெ லரிவார் சினைபாமை - வன்முதுகிற்
> கூனிரும்பு தீட்டுங் குலக்கோ சலநாடன்
> றேனிருந்த சொல்லாயிச் சேய்.

(இ - ள்.) தேன் இருந்த - இனிமைபொருந்திய, சொல்லாய் சொல்லையுடைய இளவரசியே, இச்சேய் - சுப்பிரமணியனைப்போல்வா னாகிய இம்மன்னன், அன்னம் - அன்னப்பறவையானது, துயில் எழுப்ப - தூக்கத்தினின்று எழச்செய்ய, (எழுந்து) அம் தாமரை - அழகாகிய தாமரைக்கொடிகளையுடைய, வயலில்-கழனிகளில்,செந்நெல்

அரிவார் - செந்நெற்பயிர்களை அறுக்கின்றவர்கள், சினை ஆமை - சினையையுடைய ஆமையினது, வன் முதுகில் - வலிவாகிய முதுகிலே, கூன் இரும்பு - (அறுப்பறுக்கும்) கத்தியை, தீட்டும் - தீட்டுகின்ற, குலம் - மேன்மையாகிய, கோசலநாடன் - கோசலநாட்டை யுடையவன், எ-று.

(வி - ரை) எழுப்ப எழுந்து அரிவார் என்க. எழுப்ப - காரணப் பொருளதாகிய செயவெனெச்சம். எழுந்து என்பது சொல்லெச்சம். அரிவார் - வினையாலணையும் பெயர்; இதிலுள்ள வகரவொற்றிடைநிலை எதிர்காலத்தை யுணர்த்தாமல் முக்காலத்தினு மொத்தியல் பொருளை யுணர்த்தியது. இது தீட்டும் என்னும் பெயர் எச்சத்தோடியையும். ஆமை முதுகு, வன்முதுகு என இயைக்க. கூன் இரும்பு - கூனலாகிய இரும்பினாலாகியது என்றுதலின் பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். தேனினது இனிமை என்பது குணப்பண்புத் தற்கிழமைப்பொருளதாகிய ஆறும்வேற்றுமையாகலானும், குணகுணிகளுக்குக் காரிய காரண சம்பந்தம் (அதாவது குணங் காரியமும், குணிகாரணமுமாகுஞ் சம்பந்தம்) உடைமையானும் தேன் என்பது காரணவாகுபெயராய் அதனது இனிமையை யுணர்த்தியது என்க. மணியின்கண் ஒளி என்பதிற்போலத் தேனின்கண் இனிமை எனக்கொள்ளின் இனிமைக்குத் தேன் தற்கிழமையிலான இடமாய் நிற்றலின் தேன் என்பது இடவாகுபெயராய் இனிமையை யுணர்த்தியது என்பதுமாம். (கசரு)

புண்டரிகந் தீயெரிவ போல்விரியப் பூம்புகைபோல்
வண்டிரியுந் தெண்ணீர் மகதயர்கோ - னெண்டிசையிற்
போர்வேந்தர் கண்டறியாப் பொன்னவம் பின்னுடைய
தேர்வேந்தன் கண்டாயிச் சேய்.

(இ-ள்.) இச்சேய் - சுப்பிரமணியனைப்போன்ற இந்த மன்னன், புண்டரிகம்-செந்தாமரைப்பூக்கள், எரிவ தீபோல்-எரிந்துகொண்டிருப் பனவாகிய நெருப்புக்களைப்போல, விரிய - மலர, பூம்புகைபோல் -

(அவற்றினின்று எழும்) அழகிய புகையைப்போல, வண்டு-(அம்மலர்களின்மேல் மொய்த்துக்கொண்டிருந்த) வண்டுகள், இரியும்-பறந்தோடும், தெள் நீர்-தெளிவாகிய நீரையுடைய, மகதயர் - மகதநாட்டிலுள்ளவர்களுடைய, கோன் - அரசனாகிய, எண்டிசையில் - எட்டுத்திக்கிலுமுள்ள, போர் வேந்தர் - போரில்வல்ல அரசர்களும், கண்டு அறியா - பார்த்திராத, பொன் ஆவம் - அழகாகிய அம்பறாத்தூணியை, பின் உடைய - தன் பின்பக்கத்தே தொங்கவிட்டுள்ள, தேர் வேந்தன்-தேர்ச்சேனையையுடைய மன்னன், எ - று.

(வி-ரை.) பொன்னாவம் பின்னுடைய வேந்தன், தேர்வேந்தன் என இயைக்க. இச்சேய் மகதயர்கோனாகிய வேந்தன் எனக் கூட்டுக. புண்டரிகம் என்பது வெண்டாமரையின் பெயராயேனும் தீயெரிவ போல் என்ற குறிப்பாற் செந்தாமரையை யுணர்த்தியது. அது முதலாகு பெயராய் அதன் பூவை யுணர்த்தியது. 'போர்வேந்தர் கண்டறியாப் பொன்னாவம் பின்னுடைய,தேர்வேந்தன்' என்றது அவன் போர்க்களத்திற் புறங்காட்டியோடாத வீரன் என்பதைக் குறித்தற்கு. எந்த அரசர்களும் பார்த்தறியாத அவ்வளவு அழகான அம்பறாத்தூணியையுடையவன் என்பதுமாம். மகதயர் என்பதில் யகரமெய் விரித்தல் விகாரம்; மகதர் எனவும் பாடமுண்டு. பலவிடங்களில் தீ எரிதல்போல என்பார் 'தீ எரிவபோல்' என்றார். அதனை எரிவ தீ என இயைக்க. அது தழாத் தொடராகிய அல்வழிப்புணர்ச்சி இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடர். எரிவ - வினையாலணையும் பெயர். எண்டிசையிலும் என்பதன் முற்றும்மை தொக்கது விகாரம். உள்ள - சொல்லெச்சம். வேந்தர்களும் என்பதன் உயர்வு சிறப்பும்மை தொக்கதும் அவ்விகாரமே என்க. (கசச)

**கூன்சங்கின் பிள்ளை கொடிப்பவளக் கோடிடறித்**
**தேன்கழியில் வீழத் திரைக்கரத்தால் - வான்கடல்வந்**
**தந்தோ வெனவெடுக்கு மங்கநா டாளுடையான்**
**செந்தேன் மொழியாயிச் சேய்.**

(இ-ள்.) செங்தேன் மொழியாய்-செவ்விய தேன்போலும் இனிய மொழியையுடைய இளவரசியே, இச்சேய்-சுப்பிரமணியனைப்போன்ற இம்மன்னன், கூன் - கூனலாகிய, சங்கின்பிள்ளை-சங்குகளின்பிள்ளைகள், கொடி - கொடியாகிய, பவளக்கோடு - பவளங்களின் நுனிகளால், இடறி - தடுக்கப்பட்டு, தேன் கழியில் - (புஷ்பமுதலியவற்றினின்றும் பெருகிவருந்) தேனையுடைய கழியில், வீழ - விழ, வான் கடல் வந்து - மேன்மையாகிய கடலானது வந்து, அந்தோ என - ஐயோ என்றிரக்க முற்று, திரைக்கரத்தால் - (தன்) அலைகளாகிய கைகளால், எடுக்கும் - எடுக்கின்ற, அங்கநாடு - அங்கதேசத்தை, ஆள் உடையான் - ஆளுதலையுடையவன் (ஆள்கின்றவன்), எ-று

(வி-ரை.) சங்கின்பிள்ளை கழியில் வீழ வான்கடல் வந்து திரைக்கரத்தால் எடுக்கும் என்றமையின் இந்நாடு கடலின் சமீபமானதென்று தோன்றுகின்றது. இந்நாட்டுக்குக் கூறிய இவ்விசேஷணத்தால் இந்நாட்டிலுள்ள செல்வர்கள் துன்பத்துட்பட்டு வருந்தும் எளியவர்களிடம் இரக்கங் காட்டி ஆதரிக்கும் பெருந்தகைமையாளர் என்பது தோன்றுதல் அறிக. இவ்வாசிரியர் இந்நாட்டைப்பற்றிக் கூறக் கருதிய போது பாரதப்போர் வீரர்களுள் ஒருத்தனாகிய இந்நாட்டின் அரசனாயிருந்த கர்னனது வள்ளன்மை ஞாபகத்துக்கு வர இங்ஙனம் இக்கற்பனையைக் கூறியிருப்பரெனத் தோன்றுகின்றது. அந்தோ - இரக்கக் குறிப்பிடைச்சொல். இடறி என்பது இடறப்பட்டு என்னுஞ் செயப்பாட்டு வினைப்பொருளில் வந்த செய்வினையாகிய வினையெச்சம். திரைக்கரம் - இருபெயரொட்டுப் பண்புத் தொகைநிலைத்தொடர். (கசரு)

வெள்வாளைக் காளைமீன் மேதிக் குலமெழுப்பக்
கள்வார்ந்த தாமரையின் காடுழக்கிப் - புள்ளோடு
வண்டிரியச் செல்லு மணிநீர்க் கலிங்கர்கோன்
றண்டெரியற் றேர்வேந்தன் றான்.

(இ - ள்.) தண் தெரியல் - குளிர்ச்சியாகிய மாலையினையும், தேர் - தேர்ச்சேனையையுமுடைய, வேந்தன்-(இந்த) அரசன், காளை - எவ்வள

பருவத்தினையுடைய, வெள்வாளைமீன் - வெண்மையாகிய வாளைமீன்கள், மேதிக்குலம் - எருமைகளின் கூட்டங்களை, எழுப்ப-எழச்செய்ய (அவை), கள் வார்ந்த-தேன் ஒழுகுகின்ற, தாமரையின் காடு-தாமரைக் கொடிகளின் கூட்டத்தை, உழக்கி - அழித்து, புள்ளோடு - பறவைகளும்,வண்டு(ஒடு)-வண்டுகளும், இரிய-பறந்தோடும்படி,செல்லும்-செல்லுதற்குக் காரணமாகிய, மணி நீர் - முத்துகளைக்கொழிக்கு நீரினையுடைய, கலிங்கர்கோன் - கலிங்கநாட்டினருடைய அரசன், எ-று.

(வி-ரை.) வாளைமீன் இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத் தொடர். மேதிக்குலம் - ஒன்றன்கூட்டத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறன்றொகை. எழுப்ப - காரணப்பொருளில் வந்த செயவெனெச்சம். கள்வார்ந்த - எழுவாய்த்தொடர். தாமரையின்காடு என்பதும் ஒன்றன்கூட்டத் தற்கிழமைப்பொருளதாகிய ஆறன்றொகை. புள்ளோடு வண்டோடு என்க. ஒடு - எண்ணிடைச்சொல். பறவைகளும் வண்டுகளும் என்பது பொருள். மணிநீர் என்பதும் நீர்க்கலிங்கம் என்பதும் இரண்டனுருபும்பயனு முடன்றொக்க தொகைகள் நீர்க்கலிங்கர் என்பதில் தொக்க இரண்டனுருபு அங்குத் தொக்க உடைய என்பதையும், அது வருமொழியாகிய கலிங்கர் என்பதன் பகுதியாகிய கலிங்கம் என்னும் இடப்பெயரையுங்கொண்டு முடிந்தன. எழுப்ப என்பது வேறு வினை முதல்வினையாகிய உழக்கி என்பதையும் அது தன் வினை முதல் வினையாகிய செல்லும் என்பதையும் அது நீர் என்பதையுங்கொண்டு முடிந்தன.இவ்விதச் செய்கைகளெல்லாம் உண்டாதற்குக் காரணமாகிய நீர்வளப்பத்தினையுடையது அந்நாடு என்பது கருத்து. மேதிக்குலம் எழுப்ப வாளைமீன் இங்ஙனம் செல்லும் என்பதுமாம். (கசகூ)

அங்கை வரிவளையா யாழித் திரைகொணர்ந்த
செங்கண் மகரத்தைத் தீண்டிப்போய்க் - கங்கையிடைச்
சேல்குளிக்குஞ் சேக்கயர்கோன் றெவ்வாடற் கைவரைமேல்
வேல்குளிக்க நின்றானிவ் வேந்து.

(இ-ள்.) அம் கை - அழகாகிய கையிலணிந்த, வரி - கீற்றுகளை யுடைய, வளையாய் - வளையலையுடைய இளவரசியே, இவ்வேந்து - இம் மன்னன், சேல் - சேல்மீன்கள், ஆழித்திரை - கடலின் அலைகளால், கொணர்ந்த-(கரைக்குக்) கொண்டுவரப்பட்ட, செம் கண்-செந்நிறமாகிய கண்களையுடைய, மகரத்தை - முத்லையை, தீண்டிப்போய் - தீண்டிச் சென்று, கங்கையிடை-கங்கையில், குளிக்கும்-மூழ்கும், கேகயர்கோன் - கேகயநாட்டிலுள்ளாருடைய அரசனாகிய, தெவ்-பகைவருடைய, ஆடல்-வல்லமையினையுடைய, கைவரைமேல் - கைகளாகிய மலைகளின்மீது, வேல் குளிக்க - தன் ஆயுதங்கள் பதிய, நின்றான் - (போர்க்களத்தில் வெற்றியுடன்) நின்றவன், எ - று.

(வி-ரை.) ஆழித்திரை - உறுப்புத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறன்தொகை. திரைகொணர்ந்த-மூன்றும்வேற்றுமைத் தொகைநிலைத் தொடர்; கொணர்ந்த - செயப்பாட்டு வினைப்பொருளில் வந்த செய் வினைப் பெயரெச்சம். செங்கண்-பண்புத்தொகைநிலைத்தொடர். தெவ்-பகை; அது பண்பாகுபெயராய்ப் பகைவர்களை யுணர்த்தியது. கையை வரைபாக உருவகஞ் செய்தமையின் கைவரை என்பது இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடர். வேந்து - இறைமை; அதுவும் பண் பாகுபெயராய் அரசனை யுணர்த்தியது. (கசஎ)

மாநீர் நெடுங்கயத்து வள்ளைக் கொடிமீது
தானேகு மன்னந் தனிக்கயிற்றிற் - போநீள்
கழைக்கோ தையரேய்க்குங் காந்தார நாடன்
மழைக்கோதை மானேயிம் மன்.

(இ-ள்.) மழை - மேகத்தையொத்த, கோதை - கூந்தலையுடைய, மானே-இளவரசியே, இம்மன்-இவ்வரசன், மாநீர்-மிக்க நீரினையுடைய, நெடு கயத்து - விசாலமாகிய குளத்தில், வள்ளை கொடிமீது - வள்ளைக் கொடியின்மேல், ஏகும் அன்னம் - போகின்ற அன்னப்பறவை, தனிக் கயிற்றில் - தனிமையாகிய கயிற்றின்மேலே, போம்-போகின்ற, நீள் -

நீண்ட, கழைக்கோதையர்-மூங்கிலில் ஏறியாடும் தொம்பரச்சிகளை, ஏய்க்கும்-ஒக்கும், காந்தார நாடன்-காந்தாரநாட்டையுடைய மன்னன், எ-று.

(வி-ரை) மாநீர் உரிச்சொற்றொடர். கயத்து ஏகும், கொடிமீது ஏகும் என்க. போகும் என்பது ஈற்றுயிர்மெய்கெட்டுப் போம் என்றாயிற்று; அது கோதையர் என்னும் பெயரைக்கொண்டது என்க. கழைக்கோதையர் - கழையிலேறி யாடுங்கோதையர் என்றாதலின் ஏழனுருபும் பொருளும் உடன்றொக்கதொகைநிலைத்தொடர் கழை மூங்கில். மழை - குளிர்ச்சி; அது பண்பாகுபெயராய் நீர்த்திவலைகளை யுணர்த்த, அது காரியவாகுபெயராய் மேகத்தையுணர்த்தியது. மேகத்தினாற் பொழியப்படுவது நீர்த்திவலையாதலின், மேகம் காரணமும், நீர்த்திவலை காரியமுமாமென்க. மான் என்பது முதலாகுபெயராய் அதன் கண்ணை யுணர்த்த, அது உவமையாகு பெயராய்ப் பெண்ணின்கண்ணை யுணர்த்த, அது சினையாகுபெயராய்ப் பெண்ணை யுணர்த்தியது. (கசஅ)

அங்கை நெடுவேற்க ணாயிழையாய் வாவியின்வாய்ச்
சங்கம் புடைபெயரத் தான்கலங்கிச் - செங்கமலப்
பூச்சிந்து நாட்டேறல் பொன்விளைக்குந் தண்பணைசூழ்
மாச்சிந்து நாட்டானிம் மன்.

(இ-ள்.) அம் கை-(வீரர்களுடைய) அழகிய கையிலேயுள்ள, நெடு-நீண்ட, வேல் கண்-வேலைப்போன்ற கண்களையும், ஆய் இழையாய்-ஆய்ந்து செய்யப்பட்ட ஆபரணங்களையுமுடைய இளவரசியே, இம்மன்-இந்த அரசன், வாவியின்வாய்-தடாகங்களில், சங்கம்-சங்குகள், புடைபெயர-(தானிருந்த) இடத்தைவிட்டுப்போக, செங்கமலப்பூ-செந்தாமரைப்பூக்களால், சிந்தும் - சொரியப்படுகின்ற, நாள் தேறல் - புதியதேனானது, பொன் விளைக்கும் - நெற்பயிரை விளைக்கின்ற, தண் பணை - குளிர்ச்சியாகிய வயல்கள், சூழ்-சூழ்ந்த, மா - மேன்மையாகிய, சிந்துநாட்டான் - சிந்துநாட்டையுடைய அரசன், எ-று.

(வி-ரை.) வாவியின்வாய் என்பதில் வாய் ஏழனுருபு. புடைபெயர - ஐந்தன்றொகை. பெயர என்பது காரணப்பொருளதாதலின்

இறந்தகால முணர்த்தியதென்க. சிந்தும் என்பது சிந்தப்படும் என்னும் செயப்பாட்டு வினைப்பொருளதாகிய செய்வினைப் பெயரெச்சம். ஈண்டு இது முக்காலத்திற்கும் பொதுவாய் நின்றது. நாள் - பொழுது. நாட்டேறல் என்பது அப்பொழுதே உண்டான தேறல் என்னும் பொருளைத் தருதலின் ஏழனுருபும்பொருளு முடன்தொக்கதொகை. பொன் உண்டாதற்குக் காரணமாகிய நெல்லைப் பொன் என்றது இலக்கணை.()

காவலரைத் தன்சேடி காட்டக்கண் டீரிருவர்
தேவர் நளனுருவாச் சென்றிருந்தார் - பூவரைந்த
மாசிலாப் பூங்குழலாள் மற்றவரைக் காணாநின்
றூசலா டுற்றா ளுளம்.

(இ-ள்.) ஈர் இருவர் தேவர் - (இந்திரன்முதலிய) நான்கு தேவர்கள், நளன் உருவா(க) - நளனது உருவத்தைப்போன்ற உருவத்தையுடையவர்களாய், சென்று - போய், இருந்தார்-(அச்சுயம்வரமண்டபத்தில்) வீற்றிருந்தனர்; பூ வரைந்த-மலர்களையணியப்பெற்ற, மாசு இலாத-குற்றமில்லாத, பூங்குழலாள் - அழகாகிய கூந்தலையுடைய தமயந்தி, காவலரை-அரசர்களை, தன் சேடி-தன்னுடைய தோழி, காட்ட - (இங்ஙனம் இன்னார் இன்னமாண்பினர் என்று சொல்லிக்) காண்பிக்க, கண்டு - (அவர்களைப்) பார்த்து, மற்று - பிறகு, அவரை - நளனுருக் கொண்டு வீற்றிருந்த) அத்தேவர்களை, காணா-கண்டு, நின்று - (திகைத்து) நின்று, மனம் - மனமானது, ஊசல் ஆடு - ஊசலாடுதலை, உற்றாள்-பொருந்தினாள், எ-று.

(வி-ரை.) பூங்குழலாள் காவலரைத் தன் சேடிக் காட்டக்கண்டு (அங்கு) நளனுருவாச் சென்றிருந்தாராகிய ஈருவர் தேவர்களாகிய அவரைக்கண்டு என்றியைத்துப் பொருள்கோடலுமாம். இங்ஙனங்கொள்ளுங்கால் அவரை என்பதற்கு முன்னம் தமயந்தியின்பால் நளனைத் தூதாக அனுப்பியவர்களை என்க. ஆக என்பது ஈறு தொகுத்தலாய் ஆ என நின்றது. பூவரைந்த - இரண்டன்றொகை. காணா - செய்யா

என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். இதில் ஆ விகுதி. உளம் ஊசலாடுற்றாள் என இயைக்க; இது அஃறிணை உயர்திணையோடு மயங்கிய திணைவழுவமைதி. (கடு0)

பூணுக் கழகளிக்கும் பொற்றொடியைக் கண்டக்கா
ணுணுக்கு நெஞ்சுடைய நல்வேந்தர் - நீணிலத்து
மற்றேவர் வாராதார் வானவரும் வந்திருந்தார்
பொற்றேர் நளனுருவாய்ப் போந்து.

(இ - ள்.) வானவரும் - தேவர்களும், பொன் தேர் - அழகாகிய தேரையுடைய, நளன் உருவாய் - நளனது உருவம்போன்ற உருவமுடையவர்களாய், வந்து-(தேவலோகத்தினின்றும்) வந்து, போந்திருந்தார் - அச்சுயம்வர மண்டபத்தினுட்புக்கு வீற்றிருந்தனர் (என்றால்), பூணுக்கு - ஆபரணங்களுக்கு, அழகு அளிக்கும் - அழகைக்கொடுக்கும், பொற்றொடியை-(அத்)தமயந்தியை. கண்டக்கால்-கண்டால்(உடனே), நாண் உகும் - வெட்கங்கெடும், நெஞ்சு உடைய - மனமுடையவர்களாகிய, நீள் நிலத்து - பெரிய பூமியில் உள்ள, நல் வேந்தர்-எவ்வனபருவமுடைய அரசர்களில், வாராதார் ஏவர் - வாராதவர் எவர், எ-று.

(வி-ரை.) அவள் மற்றைய மாதரைப்போலச் செயற்கையழகை வேண்டாத பொலிவினையுடையாள்என்பார்'பூணுக் கழகளிக்கும் பொற்றொடி' என்றார். பொற்றொடி - பொன்னாலாகிய தொடியையுடையாள் என்றதலின் மூன்றன்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். பூண்கள் அவளை யடையின் அவளது இயற்கையழகைத் தாம் பெற்று அவளது உருவமாகவே விளங்கும் என்பதை உதாரணமுகத்தால் விளக்குவார்போலப் பொன்னாலாகிய வளையலின் பெயராகிய பொற்றொடி என்பதை அன்மொழித்தொகையாய் அவள் பெயரே யாகும்படி பூணுக்கழகளிக்கும் என்பதன் பக்கத்தில் வைத்தார். உகும் என்பது எதுகை நோக்கி விரித்தல் விகாரம் பெற்று உக்கும் என்றாயிற்று. கண்டக்கால் நாண் உக்கு நெஞ்சுடைய நல்வேந்தர்

என இயைத்துக் கண்டால் உடனே வெட்கங்கெட்டு வெற்று மன முடையவர்களாகும் எவ்வண பருவமுள்ள வேந்தர் என்பதுமாம். இப் பொருளில் உகு என்பது ஒற்றிரட்டி இறந்தகால வினையெச்ச மாயிற் றெனக் கொள்க. ஈண்டு நன்மை என்பது கலவியில் தோன்றும் இன் பத்தை யுணர்த்தியதோ ராகுபெயர். அது கலவியில் அவ்வின்பந் தோ ன்றுதற்குக் காரணமாகிய எவ்வனபருவத்தை யுணர்த்தியது இலக்கணை. நீணிலத்து வேந்தர் என இயைக்க. வேந்தர் எவர் என்பது வேந்தரில் எவர் என்னும் பொருளது, ஆகலின் ஏழன்தொகை. மற்று - அசை. கானவரும் வந்து போந்திருந்தார் என இயைக்க. போந்து என்பதில் புகு என்பதன் மரூஉவாகிய போ பகுதி. (கருக)

மின்னுந்தார் வீமன்றன் மெய்ம்மரபிற் செம்மைசேர்
கன்னியா ளாகிற் கடிமாலை - யன்னந்தான்
சொன்னவனைச் சூட்ட வருளென்றாள் சூழ்விதியின்
மன்னவனைத் தன்மனத்தே வைத்து.

(இ - ள்.) சூழ் விதியின் - (எல்லா உயிர்களையுஞ்) சூழ்ந்த ஊழி னுக்கு, மன்னவனை - இறைவனாகிய கடவுளை, தன் மனத்தே வைத்து- தனது உள்ளத்திலே தியானித்துக்கொண்டு, (அக்கடவுளை நோக்கி) யான் - நான், மின்னும் - பிரகாசிக்கின்ற தார் - மாலையையணிந்த, வீமன்தன் - வீமராஜனுடைய, மெய் மரபில் - சத்தியத்தினையுடைய குலத்திலுதித்த, செம்மைசேர்-செம்மையாகிய குணங்கள் பொருந்திய, கன்னியாகில் - கன்னிகையாயிருந்தால், அன்னம் சொன்னவனை - அன்னப்பறவை சொல்லிய அந்த நளமகாராஜனுக்கு, கடிமாலை-வாசனை யினையுடைய (இச்சுயம்வர) மாலையை, சூட்ட - சூட்டும்படி, அருள்- அருள்புரிவாய், என்றாள் - என்று வேண்டினாள், எ-று.

(வி - ரை.) விதியின் மன்னவன் - நான்கன்தொகை. முன்னைப் பிறப்பில் ஒருவனாற்செய்யப்பட்ட நல்வினை தீவினைகள் அவனைத் தம் பயனை நுகர்விப்பான் அதற்கேற்ற வகைகளிற் செலுத்துதலின் அவ ற்றை விதி என்ப; இதனை "ஊழ்கூட்டும்படியன்றிக் கூடாவாம்"

என்றதனாலறிக. ஒருவன் முற்பிறப்பில் எம்முறையில் அவற்றைச் செய்கின்றானோ அம்முறையே அவை தம்பயனை அவன் மறுபிறப்பில் நுகரும்படி செய்தலின் அவற்றை ஊழ் என்றுங் கூறுவர். ஈண்டு ஒருவன் என ஆண்பான்மேல்வைத்துக் கூறியவற்றை "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குறித்தே" என்னு முபலக்ஷணத்தால் மற்றைய பால்களுக்குங் கொள்க. ஊழ் - முறைமை. வைத்து என்றாள் என்க. மெய்ம்மரபு - இரண்டன் உருபும் பொருளுந் தொக்க தொகை. யான் தோன்றியதுஞ் சத்தியமுடைய குலமாகவும், யானுஞ் சத்திய முதலிய நற்குணங்கள் உடையவளாகவும் இருப்பின் இவர்களில் உண்மையான நளனையறிந்து அவனுக்கே யான் மாலைசூட்ட அருள்வாய் என்று கடவுளை வேண்டினாள் என்பது இதன் கருத்து. செம்மை என்பது செம்மையாகிய குணங்களை யுணர்த்தியது இலக்கணை. கடிமாலை - உரிச்சொற்றொடர். தான் - அசை. சொன்னவன் - வினையாலணையும் பெயர். ஐ என்னும் இரண்டனுருபு நான்கனுருபோடு மயங்கியது. ()

கண்ணிமைத்த லானடிகள் காசினியிற் றோய்தலால்
வண்ண மலர்மாலை வாடுதலா - லெண்ணி
நறுந்தா மரைவிரும்பு நன்னுதலே யன்று
ளறிந்தா ணளன்றன்னை யாங்கு.

(இ - ள்.) நறுந்தாமரை - அழகாகிய தாமரைமலர்களால், விரும்பும் - (தம்மிடம் பொருந்தி இருக்கவேண்டுமென்று) விரும்பப்படும், நல் நுதலே அன்னாள் - திருமாமகளையே ஒத்தவளாகிய தமயந்தி, ஆங்கு - அவ்விடத்திலேயே, எண்ணி - (இவர்களுள் நளன் இன்னான் என்று எப்படித் தெரிந்துகொள்வதென) யோசித்து, கண் இமைத்தலால் - கண்கள் இமைகொட்டுதலாலும், அடிகள் பாதங்கள், காசினியில் - பூமியில், தோய்தலால் - படிதலாலும், வண்ணம் - அழகாகிய, மலர் மாலை - மலராலாகிய மாலைகள், வாடுதலால் - வாடுதலாலும், நளன்தன்னை அறிந்தாள் - நளனை அறிந்தனள், எ - று.

(வி-ரை.) தமயந்தி, "நான் உத்தமக் குடியிற் பிறந்தவளாயும், உத்தம குணங்களை யுடையவளாயு மிருப்பின் நளனை நானறியும்படி அருள் புரிதல்வேண்டும்" என்று விதியின் மன்னவனுகிய கடவுளை வேண்ட அவ ரருளால் அவளுக்கு உண்டான இந்த யூகத்தினுல் நளனையறிந்தாள் என்பது இதன் கருத்து. தேவர்களுக்குக் கண்ணிமைத்தலும், அடிகள் காசினியிற் றோய்தலும் இல; அவை மாந்தர்க்கே யுளவாம் கண் இமைத்தல், அடிகள் தோய்தல், மாலை வாடுதல் என்பன எழுவாய்த் தொடர்கள். இவற்றுள் தொழிற்பெயர்கள் பயனிலைகளாயின இப்பெயர்களைற்ற ஆல் உருபுகள் ஏதுப்பொருளன. நறுந்தாமரை - பண்புத்தொகைநிலைத் தொடர்; இவை விரியின் நறுமையாகிய தாமரை என்றும். திருமாமகள் தம்பால்வந்து வீற்றிருக்க வேண்டுமென விரும்புதல் அவள் வீற்றிருத்தலால் தமக்குப் பெருமையுஞ் செவ்வியு மிருமென்பது கருதி. "கேட்குந போலவுங் கிளக்குந போலவும், இயங்குந போலவு மியற்றுந போலவு, மஃறிணை மருங்கினு மறைப படுமே" என்பதுபற்றி 'நறுந் தாமரை விரும்பும்' என்றார் இது செய்யாததைச் செய்ததுபோலச் சொன்னது. நன்னுதல்-பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெயர்; இது விரியின் நன்மையாகிய நெற்றியை யுடையாள் என்றும். நுதல் - நெற்றி. ஏ - பிரிநிலைப்பொருளது. ()

விண்ணரச ரெல்லாரும் வெள்கி மனஞ்சுளிக்கக்
கண்ணகன் ஞாலங் களிகூர—மண்ணரசர்
வன்மாலை தம்மனத்தே சூட வயவேந்தைப்
பொன்மாலை சூட்டினாள் பொன்.

(இ - ள்.) பொன் - திருமாமகளைப் போன்றவளாகிய தமயந்தி, விண் அரசர் எல்லாம் - விண்ணுலகின் அரசர்கள்யாவரும், வெள்கி - வெட்கமுற்று, மனம் சுளிக்க - (வெளித்தோன்றுமல்) மனதிலேயே சினங்கொள்ளவும், கண் அகல் - இடம் அகன்ற, ஞாலம் - பூமியிலுள்ளவர்கள், களிகூர - மிக்க களிப்பினையடையவும், மண் அரசர் - மண்

நாடுகளின் அரசர்கள் யாவரும், தம் மனத்து-தம்முடைய மனங்களில், வன் மாலே - வலியமயக்கத்தை, சூட - கொள்ளவும், வயம் வேந்தை - வெற்றியையுடைய நளச்சக்கரவர்த்திக்கு, பொன் மாலே - (தன்கையி லிருந்த) அழகாகிய சுயம்வரமாலேயை, சூட்டினுள் - (கழுத்திற்) போட்டாள், எ-று.

(வி - ரை.) முன் நளன் தமக்குத் தூதாகச் சென்றதனுலும், தமது கோபம் அவனிடம் செல்லாதென் றுணர்ந்தவர்க ளாதலாலும் தம்மனத்தெழுந்த சினத்தைப் புறந்தோன்ருமல் மறைத்துக்கொண்டனர் என்பார், 'விண்ணரசர் மனஞ்சுளிக்க' என்ருர் எல்லாம் என்றது அங்கு வந்தவர்களேயன்றி வாராத விண்ணரசர்களேயுங் குறித்தது என்பதுமாம். ஞாலம் - பூமி, அது இடவாகு பெயராய்ப் பூமியிலுள்ள மனிதர்களேக் குறித்தது. (கூச)

திண்டோள் வயவேந்தர் செந்தா மரைமுகம்போய்
வெண்டா மரையாய் வெளுத்தவே - யொண்டாரைக்
கோமாலே வேலான் குலமாலே வேற்கண்ணுள்
பூமாலே பெற்றிருந்த போது.

(இ - ள்.) ஒள் - ஒளியையும், தாரை - கூர்மையையுமுடைய, கோ - சிறந்த, மாலே - மாலேயினே அணிந்த, வேலான் - வேலேயுடைய நளச்சக்கரவர்த்தி, குலமாலே-(வீமமகாராஜனது) குலத்துக்குப் பூமாலே யையொத்த, வேல் கண்ணுள் - வேல்போன்ற கண்ணேயுடைய தமயந்தியினது. பூமாலே - பூக்களாலாகிய மாலேயை, பெற்று இருந்தபோது - அடைந்து (அங்கு) வீற்றிருந்தபோது, திண் தோள்-வலிவாகிய தோளாலாகிய, வயம் - வெற்றியினேயுடைய, வேந்தர் - அரசர்களுடைய, செந்தாமரை முகம் - செந்தாமரைபோன்றிருந்த முகங்கள், போய் - மாறி, வெண்டாமரையாய் - வெண்டாமரையைப்போல, வெளுத்த - வெண்ணிறமுடைந்தன, எ-று,

(வி - ரை.) மாலை என்னுஞ் சொற்கள் மூன்றுஞ் சொற்பொருட் பின்வருநிலையணி; அது முன்வந்த சொல்லே பின்னும்வந்து முன் வந்த சொல்லின் பொருளையே தருவது. 'வேலான் வேற்கண்ணாள் பூ மாலை பெற்றிருந்தபோது' என்றதற்கு வேலானாகிய நளன் (தன்) வேல்போலுங் கண்ணையுடைய தமயந்தியினது பூமாலை பெற்று வீற் றிருந்தபொழுது என்றுரைப்பதுமாம். போது - பொழுது என்பதன் மரூஉ. தோள்வயம் என்பது தோளினாலாகிய வயம் என்றாதலின் மூன்றனுருபும்பொருளு முடன்தொக்கதொகை. தாமரைமுகம் - உவமைத்தொகைநிலைத்தொடர். போய் என்பது மாறி என்னும் பொரு ளைத் தந்தது இலக்கணை. வெண்டாமரையாய் என்பது வெண்டாமரை யைப்போல் என்றாதலில் அதில் ஆய் உவமையுருபு. வெளுத்த என்பது சாரியை பெறின் வெளுத்தன என்றாம். (கஙு)

மல்லன் மறுகின் மடநா குடனாகச்
செல்லு மழவிடைபோற் செம்மாந் - துமெல்லியலாள்
பொன்மாலை பெற்றதோ ளோடும் புறப்பட்டா
னன்மாலை வேலா னளன்.

(இ - ள்.) நன்மாலை - அழகாகிய (வெற்றி) மாலையையணிந்த, வேலான் - வேலையுடையவனாகிய, நளன் - நளச்சக்கரவர்த்தி, மல்லல் மறுகில் - (மாடமாளிகைகளின்) வளப்பத்தினையுடைய வீதியில், மடம் நாகு - இளமைப் பருவத்தினையுடைய பசு, உடன் ஆக - உடன்வர, செல்லும் - போகின்ற, மழவிடைபோல் - இளமைப்பருவத்தினை யுடைய எருதைப்போல(காளையைப்போல), மெல் இயலாள்-மென்மை யாகிய தன்மையினையுடைய தமயந்தியினது, பொன் மாலை அழகாகிய மாலையை, பெற்ற தோளோடும் அடைந்த தோளுடனே, செம்மாந்து- களிப்புற்று, புறப்பட்டான் - (தமயந்தி உடன்வரச் சுயம்வர மண்ட பத்தினின்றும்) வெளியிற்போந்தான், எ-று.

(வி-ரை.) மாலை என்னுஞ் சொல்லிரண்டுஞ் சொற்பொருட் பின் வருநிலையணி. மல்லன்மறுகு, மடநாகு என்பன இரண்டன் உருபும் பொருளுந் தொக்க தொகைகள். மழவிடை - உரிச்சொற்றொடர்; இது இளமைப் பருவத்தினையுடைய எருது எனப் பொருள்படினும் இதில் மழ என்பது உருபேலாமையின் உரிச்சொல் லெனப்பட்டது. ஆக என்பது ஈண்டுவர என்னும் பொருளை யுணர்த்தியது. மடநாகுடனாக என்ற உவமையால் தமயந்தி உடன்வந்தாள் என்பது பெறப்பட்டது. வேலான் நளன் என்பது இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத் தொடர்; இது வேலானாகிய நளன் என்றும். (கசுக)

வேலை பெறுவமுதம் வீமன் றிருமடந்தை
மாலை பெறுதகலும் வானாடர் — வேலை
பொருங்கலிநீர் ஞாலத்தைப் புன்னெறியி லாக்கு
மிருங்கலியைக் கண்டா ரெதிர்.

(இ-ள்.) வேலை பெறு அமுதம் - கடல்பெற்ற அமுதமாகிய, வீமன் திருமடந்தை - வீமனுடைய செல்வப்புத்திரியாகிய தமயந்தியினுடைய, மாலை பெறாது - மாலையைப்பெறாமல், அகலும் - (பூமியை விட்டுப்) போகும், வான்நாடர் - தேவர்கள், வேலை - கரையை, பொரும் - மோதுகின்ற, கலிநீர் - ஓசையையுடைய (அலை) நீரையுடைய கடலாற் சூழப்பட்ட, ஞாலத்தை - பூமியிலுள்ளாரை, புல் நெறியில் - இழிவான வழிகளில், ஆக்கும் - (வறுமையினாற்) புகச்செய்கின்ற, இரும் கலியை - பெருமையினையுடைய கலிபுருடனை, எதிர் கண்டார் - எதிரே பார்த்தார் கள், எ-று.

(வி-ரை.) 'வேலை பெறுவமுதம்' என்பது தண்டியலங்காரத்தின் படி விலக்குருவகத்தின்பாற்படும்; இதனைக் குறைவுதன் செய்கை யுருவகமெனக் கூறுவர் பிறர். அமுதம்போல்வாளை அமுதம் என்றது ஆகுபெயர். அமுதம் மடந்தை என இயைக்க; இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடர்; விரிப்பின் அமுதமாகிய மடந்தை என

ரும். வீமன் றிருமடந்தை என்பதற்கு வீமராஜனுடைய அழகிய புத்திரி என்பதுமாம். கலிநீர் - இரண்டனுருபும் பொருளும் உடன்றொக்க வேற்றுமைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக்காரணப் பெயர்; இது கலியையுடைய நீரையுடையது என்றும். வேலைபொருங் கலிநீர் ஞாலம் என்பதைப் பொருங்கலிநீர் வேலை ஞாலம் என இயைத்து, (கரையை) மோதுகின்ற ஒலியினையுடைய கடலாற் சூழப்பட்ட பூமி என்று கூறுதலுமாம். இப்பொருளில் வேலை என்பதற்குக் கடல் என்பது பொருள். இதில் பொரும் என்ற இடத்துக் கரையை என்பது வருவிக்கப்பட்டதென்க. பொருநீர், ஒலிநீர் என்றியையும். நீர் என்பது வேலை என்பதோடியையும். புன்னெறியி லாக்குதலாவது மனிதர்களுக்குவறுமையினையுண்டாக்கி அவர்களைத் தாழ்ந்ததொழில்களையேனும், தீத்தொழில்களையேனுஞ் செய்வித்தல். இருங்கலி என்றது பிறகுறிப்பு; என்னெனின், ஞாலத்தைப் புன்னெறியிலாக்கும் பெருமையையுடைய கலி என்றமையினால் அச்சிறுமையாகிய செயலையுடைய கலி என்னும் பொருள் தோன்றலின். இருங்கலி-உயிர்களுக்குத் துன்பத்தைத் தருங்கலி என்பதுமாம். இருமை-பெருமை, துன்பம். (கஙஎ)

ஈங்குவர வென்னென் றிமையவர்தங் கோன்வினவத்
தீங்கு தருகலியுஞ் செப்பினு - னீங்கள்
விருப்பான வீமன் றிருமடந்தை யோடு
மிருப்பான் வருகின்றேன் யான்.

(இ - ள்.) ஈங்கு வரவு - இங்கே வருதற்குக் காரணம், என் என்று-யாது என்று, இமையவர்தம்கோன் - தேவர்களுக்கு அரசனாகிய இந்திரன், வினவ - கேட்க, தீங்கு தரும் - தீமையை விளைவிக்கின்ற, கலியும் - கலிபுருடனும், நீங்கள் விருப்பான-நீங்கள் விரும்பிய, வீமன் திருமடந்தையோடு - வீமமகாராஜனுடைய அழகிய புத்திரியாகிய தமயந்தியுடன், இருப்பான் - (அவளது சுயம்வரமாலையைப் பெற்று)

இருக்க, யான் வருகின்றேன் - (இங்கு) நான் வருகின்றேன், செப்பினான் - (என்று) சொன்னான், எ-று.

(வி - ரை.) இங்கு என்பது சுட்டெழுத்து நீண்டு ஈங்கு என்றாயிற்று. தீங்குதரும் - இரண்டன்றொகை. விருப்பான - ஒரேசொல்; இதில் விருப்பு என்னு முதனிலை திரிந்த தொழிற்பெயரோடு அதனை வினைத்தன்மை யடைவிக்கவந்த ஆ என்னுந் தெரிநிலைப்பகுதி சேர்ந்த விருப்பா பகுதியாயிற்று. செப்பினான் - திசைச்சொல்; தெலுங்கு மொழி; செப்பு - பகுதி. இருப்பான் - எதுப்பொருளதாகிய எதிர்கால வினையெச்சம்; இதிற்பான்விகுதி. வருகின்றேனியான்-இதன் இடையிலுள்ள இகரம் "தன்னொழி மெய்ம்முன் யவ்வரி னிகரந், துன்னு மென்றுதுணிநரு முளரே" என்ற நன்னூல் மெய்யீற்றுப்புணரியல் மூன்றாஞ் சூத்திரத்தின்படி தோன்றியது. என்று என்பது சொல்லெச்சம்.

மன்னவரில் வைவே னளனே மதிவதனக்
கன்னி மணமாலை கைக்கொண்டா - னுன்னுடைய
வுள்ளக் கருத்தை யொழித்தே குகியென்றான்
வெள்ளைத் தனியானை வேந்து.

(இ-ள்.) தனி - ஒப்பற்ற, வெள்ளை யானை வேந்து - (ஐராவதம் என்னும்) வெள்ளை யானையையுடைய அரசனாகிய இந்திரன், மன்னவரில் - அரசர்களுக்குள், வை வேல் - கூரியவேலையேந்திய, நளனே - நளமகாராஜனே, மதி வதனம் - சந்திரனைப்போன்ற முகத்தையுடைய, கன்னி - (அந்தத்) தமயந்தியின், மணமாலை - மணமாலையை, கைக்கொண்டான் - பெற்றான்; உன்னுடைய - உனது, உள்ளக்கருத்தை - மனவிருப்பத்தை, ஒழித்து ஏகுதி - விட்டுப்போ, என்றான் - என்று அக்கலிபுருடனை நோக்கிச் சொன்னான், எ-று.

(இ-ள்.) நளனே என்பதில் ஏகாரம் பிரிநிலைப்பொருளது, ஒழுக்கத்திலும் வீரத்திலுஞ் சிறந்தவனாகிய நளன் கைக்கொண்டபின் மற்

றவர் எத்துணை முயற்சிசெய்யினும் பயன்படாது என்பான் 'மன்னவ ரில் வைவே னளனே கைக்கொண்டான்' என்றான். வேந்து-இறைமை; அது பண்பாகுபெயராய் அரசனை யுணர்த்தியது. (கதிக)

விண்ணரசர் நிற்க வெறித்தேன் மணமாலை
மண்ணரசற் கீந்த மடமாதி - னெண்ணங்
கெடுக்கின்றேன் மற்றவடன் கேள்வனுக்குங் கீழ்மை
கொடுக்கின்றே னென்றான் கொதித்து.

(இ - ள்.) கொதித்து - (கலிபுருடன் அதைக்கேட்டு) மிக்ககோப முடையவனாய், விண்ணரசர் நிற்க - விண்ணுக்கு அரசர்களாகிய நீங்கள் இருக்க, வெறி தேன் - வாசனையையும் தேனையுமுடைய, மண மாலை - மணமாலையை, மண் அரசற்கு - மண்ணரசனாகிய நளனுக்கு, ஈந்த - சூட்டிய, மடமாதின் - (அந்த) அறிவின்மையையுடைய தமயந்தியின், எண்ணம்-விருப்பத்தை, கெடுக்கின்றேன்-அழிக்கின்றேன்; மற்று - பின்னும், அவள்தன் - அவளுடைய, கேள்வனுக்கும் - நாயகனாகிய நளனுக்கும், கீழ்மை கொடுக்கின்றேன் - தாழ்வை யுண்டாக்குகின்றேன், எ - று.

(வி-ரை.) மணமாலை - ஈண்டு மணத்தலைத் தெரிவிக்கு மாலை என்று கலிஞ் இரண்டனுருபும்பயனு முடன்றொக்கதொகை; இது மணத்தில் (கலியாணத்தில்) இடுமாலை என்றுமாம். ஈந்த - தெலுங்குநாட்டுச் சொல்லாகிய திசைச்சொல். கொடுக்கின்றேன் - உண்டாக்குகின்றேன். கேள்வன் என்பதிற் கேள் பகுதி; இதற்குச் சுற்றம் என்பது பொருள். கேள்வன் - சுற்றமுடையோன்; பெண்களுக்குத் தந்தைமுதலிய எவரினு நாயகனே சிறந்த சுற்றமுடையனாதலின் அவனே கேள்வன் எனப்படுவன்; இதனைக் "கொண்டானிற் றுன்னிய கேளிர் பிறரில்லை" என்றதனாலறிக. (கசO)

வாய்மையுஞ் செங்கோல் வளனு மனத்தின்கட்
டூய்மையு மற்றவன் றோள்வலியும் - பூமா

னெடுங்கற்பு மற்றவற்கு நின்றுரைத்துப் போனா
னடுங்கொற்ற வச்சிரத்தா னாங்கு.

(இ - ள்.) அடும் - (பகைவரைக்) கொல்லுகின்ற, கொற்றம் - வெற்றியினையுடைய, வச்சிரத்தான் - வச்சிராயுதத்தினையுடையஇந்திரன், ஆங்குநின்று - அவ்விடத்தில்நின்று, அவன் - அந்த நளச்சக்கரவர்த்தியினுடைய, வாய்மையும் - சத்தியத்தையும், செங்கோல் - நீதியாகிய ஆளுகையினாலாகிய, வளனும் - செல்வப்பெருக்கையும், மனத்தின்கண் - அவனது மனத்திற் பொருந்திய, தூய்மையும் - பரிசுத்தமான எண்ணங்களையும், தோள் வலியும் - அவனுடைய புயங்களின் வன்மையையும், பூ மான் - செந்தாமரைப்பூவில் வீற்றிருக்குந் திருமாமகளைப்போன்றவளாகிய தமயந்தியினுடைய, நெடுங்கற்பும் - மேன்மையாகிய கற்பையும், அவற்கு - அக்கலிபுருடனுக்கு, உரைத்து - சொல்லி, போனான் - சென்றான், எ - று.

(வி-ரை.) செங்கோல் வளன் என்பது செங்கோலினாலாய வளன் என்றாதலின் மூன்றனுருபும்பொருளு முடன்றொக்கதொகை. வளன் - செழுமை; அது காரணவாகுபெயராய்ச் செழுமைக்குக் காரணமாகிய செல்வத்தை யுணர்த்தியது; இதனைப் பண்பாகுபெய ரென்னலாகாது; என்னெனின், நீலம் என்னும் பண்பு பண்பியாகிய மலரில் இருப்பதுபோல வளம் என்னும் பண்பு செல்வத்திலிராமல் செல்வத்தினா லுண்டாவதாயிருத்தலின் என்பது. செழும்பொருள், வளநிதி என்பன பண்புத்தொகையாகக் கொள்ளப்படுமே எனின், அவற்றன் செழுமை வளம் என்பன மிகுதி என்னும் பொருள்தந்து என்னலவைப் பண்பாய் அவை மிகுதியாகிய பொருள், மிகுதியாகியநிதி என்றாம்; இஃது அன்னதன்மையின் அது வினாவன்றென்க. வளம் என்பதில் மகரத்துக்கு னகரம் போலியாய் வளன் என்றாயிற்று. தூய்மை என்பது பண்பாகுபெயராய்த் தூய்மையாகிய எண்ணங்களை யுணர்த்தின; தூய்மையாகிய எண்ணங்களாவன நல்ல எண்ணங்கள்.

மற்றவன் என்பன இரண்டனையும் மற்று அவன் எனப் பிரித்து அவற்றுள் மற்று என்பனவற்றை அசை எனக் கொள்க. இரண்டாவதை ஒருசொல்லாகவே கொண்டு மற்றவனுக்கு - நளனுக்கு விரோதியாகிய அக்கலிபுருஷனுக்கு என்று பொருள் கூறுதலுமாம். தோள்வலி - ஆறன்றொகை. பூமான்-பூவில் வீற்றிருக்கு மான் என்றாதலின் ஏழன்றொகை. மான் என்பது மும்மடியாகுபெயராய்ப் பெண்ணை யுணர்த்தியது; இதன் விளக்க முன்னே கூறப்பட்டது. அது பூ என்னுங் குறிப்பால் திருமாமகளை யுணர்த்தியது; அது உவமையாகுபெயராய்த் திருமாமகள் போன்ற தமயந்தியை யுணர்த்தியது. நெடுங்கற்பு என்பதில் நெடுமைஎன்பது மேன்மை என்னும் பொருளது. கற்பு என்பது கற்பித்தல் என்னும் பிறவினைப் பொருளதாகிய செய்வினைத் தொழிற்பெயர்; அது தொழிலாகுபெயராய்க் கற்பிக்கப்படுகின்ற நெறியை யுணர்த்த, அது இடவாகுபெயராய் அந்நெறியில் ஒழுகும் ஒழுக்கத்தினை யுணர்த்தியது. இதனைத் தொல்காப்பியம், கற்பியலில், "கற்பெனப்படுவது" என்னு முதற்சூத்திரவுரையில் "அது கொண்டானிற் சிறந்த தெய்வமின்றெனவும், அவனை இன்னவாறே வழிபடுக வெனவும் இருமுதுகுரவர் கற்பித்தலானும், அந்தணர் திறத்துஞ் சான்றோர் தேஎத்தும், ஐயர்பாங்கினும் அமரர்ச் சுட்டியும் ஒழுகும் ஒழுக்கந் தலைமகன் கற்பித்தலானுங் கற்பாயிற்று" என்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறினமையான் அறிக. வச்சிரத்தான் ஆங்குநின்றுரைத்துப் போனான் என இயைக்க. (க௬க)

செருக்கதிர்வேற் கண்ணியுடன் றேர்வேந்தன் கூட
விருக்கத் தரியே னிவரைப் - பிரிக்க
வுடனாக வென்றா னுடனே பிறந்த
விடநாக மன்னான் வெகுண்டு.

(இ - ள்.) உடனே பிறந்த-(தான் தோன்றுகையில்) தன்னுடன் தோன்றிய, விடம் - விஷத்தினையுடைய, நாகம் அன்னான் - பாம்பை

யொத்தவனாகிய கலிபுருடன், வெகுண்டு - (அதைக்கேட்டுக்) கோபி த்து, செரு - போர்செய்தலையுடைய, கதிர் - பிரகாசமாகிய, வேல் - வேலைப்போன்ற, கண்ணியுடன் - கண்களையுடைய இத் தமயந்தியோடு, தேர் வேந்தன் - தேர்ச்சேனையையுடைய இந் நளமகாராஜன், கூட இரு க்க - சேர்ந்திருக்க, தரியேன் - (நான் அதைப்பார்த்துப்) பொறுத்துக் கொண்டிரேன்; இவரைப் பிரிக்க - (நான்) இவர்களைப் பிரித்துவிடுத ற்கு, உடனாக - நீங்கள் சம்மதிப்பீர்களாக, என்றான் - என்று சொன் னான், எ - று.

(வி - ரை.) செரு - போர்; செருவேல், கதிர்வேல் என இயை க்க. வேற்கண் - உவமைத்தொகை. இருக்கத்தரியேன் - இருத்தலைக் கண்டு தரியேன்; இதில் இருக்க என்பது தொழிற்பெயர்ப் பொருளில் வந்த செயவென் வினையெச்சம். உடனாக - ஒருசொல்; சம்மதிப்பீர்க ளாக என்பது; இஃது இருதிணை ஐம்பால்களுக்கும் பொதுவாமேனும் ஈண்டுயர்திணைப் படர்க்கைப் பலர்பாலின்மேலது. நாகங்களுக்கு விஷம் பிறந்த சிலதினங்களின் பிறகு சூரியகிரணங்களின் உஷ்ணத்தால் உண்டாம் என்பவேனும் அவ்விஷத்திற்குக் காரணமாகிய பொருள் அவற்றின் உடலில் அவை பிறக்கையில் உடனுண்டாகியே இருக்கின் றது; அது சில தினங்களின்பின் சூரியனது உஷ்ணத்தால் வெளிப் படுதலையே அங்ஙனங் கூறுகின்றனர். அது எதுபோலுமெனின், குழந் தைகளுக்குப் பல் சிலதினங்களின்பின் உண்டாயினும் அதற்குக்காரண மாகிய பொருள் குழந்தைகளின் உடலில் உடன் தோன்றி யிருக் கும்; அதுபோலுமென்பது. அது தோன்றவே 'உடனே பிறந்த விட நாகம்' என்றார். நாகமன்னன் - இரண்டன்தொகை. அன்னான் வெகுண்டு - எழுவாய்த்தொடர். வெகுண்டு என்பதில் வெகுள் பகுதி. அன்னான் வெகுண்டு என்றான் என இயைக்க. (கசஉ)

வெங்கதிரோன் றானும் விதர்ப்பன் றிருமடந்தை
மங்கலநாள் காண வருவான்போற் - செங்குமுதம்

வாயடங்க மன்னற்கும் வஞ்சிக்கு நன்னெஞ்சிற்
றீயடங்க வேறினன் றேர்.

(இ-ள்.) வெங்கதிரோன்-சூரியன், தானும்-தானும், நாள்-எவற்றி னும் புதுமையாகிய, விதர்ப்பன்-விதர்ப்பராஜனுடைய, திருமடந்தை - செல்வபுத்திரியாகிய தமயந்தியின், மங்கலம் காண - கலியாணமாகிய சுபகாரியத்தைப்பார்க்க, வருவான்போல்-வருகின்றவனைப்போல, செங் குமுதம் - செவ்வல்லிப்பூக்களின், வாய் அடங்க இதழ்கள் குவியவும், மன்னற்கும் - நளச்சக்கரவர்த்திக்கும், வஞ்சிக்கும் - தமயந்திக்கும், நல் நெஞ்சில் - நன்மையாகிய மனத்தில் தோன்றியுள்ள, தீ அடங்க-விரக மாகிய தீத்தணியவும், தேர் ஏறினன் - தேரில் ஏறிப்புறப்பட்டான், எ - று.

(வி-ரை.) சூரியன் நளனுக்கும் தமயந்திக்கும் நன்மை செய்யக் கருதி, அது தன் குமாரனாகிய கலிபுருடனுக்குத் தோன்றாவண்ணம் மற்ற அரசர்களைப்போலக் கலியாணத்தைப் பார்க்க வருகின்றவனைப் போலவந்து, அக்கலிபுருடனுடைய கருத்துக்கிணங்க நளனுக்கு ஒரு தீங்கிழைப்பவனைப்போல அவன் குலமுதல்வனாகிய சந்திரனுடைய காயகியாகும் செவ்வல்லியாகிய மங்கையின் வாயை யடக்கித் தன் கருத் தின்படி அந் நளதமயந்திகளுக்கு விரகதாபத்தை நீக்குதலாகிய நன்மை யைப் புரியவெண்ணித் தேரிலேறிப் புறப்பட்டான் என்பார் "வெங்கதி ரோன் றானும் திருமடந்தை, மங்கலங்காண வருவான்போல் - செங் குமுதம், வாயடங்க மன்னற்கும் வஞ்சிக்கு நன்னெஞ்சிற், றீயடங்கத் தேரேறினன்" என்றார். செங்குமுதம் வாயடங்கும்படி செய்ய வெண் ணியதும் "ஈரமதியே யிளநிலவே யிங்ஙனே, சோர்குழலின்மீதே சொரிவதெவன்" என்று தமயந்தி தனக்கு இன்சொற்கூறி வேண்டி வருந்தும்படி செய்த சந்திரனுக்கு வருத்தமுண்டாக்குதற் பொருட்டே யாகலின் அதுவும் அந் நளதமயந்திகளுக்குத் தன் கருத்தின்படி நன் மைசெய்தற்பொருட்டேயாமென்க. தமயந்தியானவள் தளர்ச்சி நீங்கிச்

சுகத்தில் மன்னுதற்குப் பற்றுக்கோடாயினன் என்பார் 'மன்னற்கும் வஞ்சிக்கும்' என்றார்; வஞ்சி - ஓர்கொடி; கொடிகள் பற்றுக்கோடின்றேல் தளர்ச்சியுறுமென்க. மன்னன் என்பதற்கு உலக மன்னுதற்கு (மாந்தர் துன்பநினின்று நீங்கி நிலைபெறுதற்கு)க் காரணமானவன் என்பது பொருள்; ஈண்டுத் தமயந்தி சுகத்தில் மன்னுதற்குக் காரணமானவன் என்க மன்னன் என்பதற்குத்தமயந்தியை அடையப்பெற்றதனால் தன் அரசச்செல்வம் உலகில் பரம்பரையாக மன்னப்பெற்றவன் என்றலுமாம்; என்னை, சந்ததியின்றேல் அச்செல்வம் அவனோடு முடியுமாகலின். இப்பொருளில் வஞ்சி என்பதற்கு அவனது அவ்வரசச் செல்வம் உலகிற் பரம்பரையாகப் படர்ந்து விளங்குதற்குக் காரணமானவள் என்று பொருள்கொள்க. என்னை, அவனது அவ்வரசச்செல்வம் உலகில் மன்னுதற்குக் காரணமான சந்ததியுண்டாதல் இவள்மூலமாகவாகலின். இப்பொருள்களெல்லாம் அவர் தம்மை வேறுவகைக் குறியீடுகளாற் கூறாமல் 'மன்னற்கும் வஞ்சிக்கும்' என்று கூறிய குறிப்பாற் கொள்ளப் பெற்றனவென்க.

இச்செய்யுளாற் சூரியோதயங் கூறினார்; ஆகலின், தமயந்தி நளச்சக்கரவர்த்திக்குச் சுயம்வரமாலை சூடினதும், கலிபுருடன் சபதங்கூறிச் சென்றது முன்னாள் நிகழ்ந்த செய்திகள் என்க. இந்திரன் நளச்சக்கரவர்த்தியைக் கண்டதும், நளச்சக்கரவர்த்தி இந்திரன்முதலிய தேவர்பொருட்டுத் தமயந்தியிடந் தூது சென்றதும் அதற்கு முன்னாட் செய்தி என்க. அதனை "நன்னுபுகழ் நளன் பெண்ணணங்கின், வன்மொழியுந் தேவர்மனமகிழத்தான்மொழிந்த,மென்மொழியுஞ்சென்றுரைத்தான்" என்றபின்"வையம்பகலிழப்ப வெவ்வாய் விரிகதிரோன் வெற்புச்சென்றடைந்தான்" என்றமையாலும், பிறகு அவ்விரவில் தமயந்தியடைந்த விரகவேதனையைக் கூறிப் "பூசுரர்தங் கைம்மலரும்" என்னுஞ் செய்யுளாற் சூரியோதயங் கூறுதலாலு மறிக. அங்ஙனமாயின் பூசுரர்தங் கைம்மலர் என்னுஞ் செய்யுளுக்குப்பின் உள்ள "முரைசெறிந்த நாண்முமுற்றியபின் சாற்ற, வளைசெறிந்த தோண்மன்னர் வந்தார்" என்

னுஞ் செய்யுளின் கருத்து யாதெனின், அந்நாளின் முன்னுளோடு மூரசறைந்த ஏழுநாள் முற்றினவென்பதே. அது எசனுற் பெற்ற பொருளெனின், "வாசமலர்ந்ததேங் கோதையா ளாழ்துயரத் தோடு, புலர்ந்ததே யற்றைப் பொழுது" என்றதனுற் பெற்றதென்க. இஃது இன்னும் விரிக்கிற் பெருகுமென விடப்பட்டது.

தானும் என்பதிலுள்ள உம்மை உயர்வுசிறப்போடு இறந்தது தழீஇநின்ற எச்சப்பொருளது. விசர்ப்பன் திருமடந்தை நாண் மங்கலங்காண வருவான்போல் என இயைக்க. மங்கலங்காண நாள் வருவான் போல் என இயைத்து, மங்கலங்காண விடியற்காலத்தே வருவான் போல் என்றுரைத்தலுமாம். மதுரைக்காஞ்சியில் 223-வது அடியில் 'நாள் ஈண்டிய' என்றதற்கு விடியற்காலத்தே வந்துதிரண்ட என்று ஆசிரியர் நச்சினுர்க்கினியர் பொருள் கூறியிருப்பதை ஈண்டுக் கவனிக்க. வருவான் - வினையாலணையும் பெயர். அடங்க என்னும் அகரவீற்று வினைபெச்ச மிரண்டும் காரியப்பொருளனவாகலின் எதிர்கால முணர்த்தின. செங்கதிரோன் தானும் வருவான்போல் செங்குமுதம் வாயடங்க, மன்னற்கும் வஞ்சிக்கு நெஞ்சிற் றீயடங்கத் தேரேறினுன் என இயைக்க. (கசு௬)

இன்னுயிர்க்கு நேரே யிளமுறுவ லென்கின்ற
பொன்னழகைத் தாமே புதைப்பார்போன் - மென்மலருஞ்
சூட்டினுர் சூட்டித் துடிசே ரிடையாளைப்
பூட்டினுர் மின்னிமைக்கும் பூண்.

(இ-ள்.) இளமுறுவலே - இவளுடைய புன்னகையே, இன் உயிர்க்கு - (எங்களுடைய) இனிய உயிர்க்கு, நேர் - சமமாகும், என்கின்ற - என்று ஆடவர்கள் சொல்கின்ற, பொன் - திருமாமகளையொத்த தமயந்தியினது, அழகை - அழகினை, தாமே புதைப்பார்போல் - தாமாகவே புதைக்க உற்றவர்கள்போல, துடி சேர் இடையாளை - உடுக்கையைப்

போன்ற இடையையுடைய தமயந்திக்கு, மெல் மலரும்-மென்மையாகிய மலராலாகிய மாலையையும், சூட்டினார் - (தோழியர்கள்) சூட்டினார்கள்; சூட்டி - அங்ஙனஞ் சூட்டி, மின் இமைக்கும் - மின்னலைப் போலப் பிரகாசிக்கின்ற, பூண் ஆபரணங்களையும், பூட்டினார்-(பிறகு) பூட்டினார்கள், எ - று.

(வி-ரை) நேரே என்பதிலுள்ள ஏகாரத்தைப் பிரித்து இளமுறுவல் என்பதன் ஈற்றிற்கூட்டி இளமுறுவலே இன்னுயிர்க்கு நேர் என இயைக்க. மலர் என்பது கருவியாகுபெயராய் மாலையை யுணர்த்தியது. மலரும் என்பதன் உம்மை எதிரதுதழுவிய எச்சப்பொருளது. சூட்டினார், சூட்டி என்பன பிறவினைகள்; இவற்றிற்குத் தன்வினைகள் சூடினார், சூடி என்பன. இடையாளை - நான்கனுருபோடு இரண்டனுருபு மயங்கியது தோழியர்கள் தமயந்திக்கு மலர்மாலைகளையும் ஆபரணங்களையும் அணிவித்தமை அவளுக்குக் கண்ணெச்சிற் படாமல் (திருஷ்டி தோஷந் தாங்காமல்) தாமாகவே அவளது அழகை மறைத்தாற்போலிருந்தது என்பது இதன் கருத்து. இயற்கையழகிற் சிறந்தார்க்கு மிகுதியாக ஆபரணங்களைப் பூட்டுதலால் அவ்வியற்கையழகு மறைபடும் என்பதை இதனால் விளக்கினார். இதனை "உமிழ்சுடர்க் கலன்கணங்கை யுருவினை மறைப்ப தோரார்" என்று கவிச்சக்கரவர்த்தியார் பாலகாண்டத்திற் கோலங்காண்படலத்தில் அருளியதனாலறிக. பூண் - பூணப்படுதல் என்னும் செயப்பாட்டு வினைப்பொருளதாகிய செய்வினை முதனிலைத்தொழிற்பெயர்; இது தொழிலாகுபெயராய்ப் பூணப்படும் ஆபரணங்களை யுணர்த்தியது. (கசு௪)

கனிமொழிந்த நாளிற் கடிமணமுஞ் செய்தா
ரணிமொழிக்கு மண்ண லவற்கும் - பணிமொழியார்
குற்றேவல் செய்யக் கொழும்பொன் னறைபுக்கார்
மற்றெவரு மொவ்வார் மகிழ்ந்து.

(இ-ள்.) கணி - சோதிடனால், மொழிந்த - குறித்துச் சொல்லப்பட்ட, நாளில் - நாளாகிய அன்றைத்தினத்தில், அணி மொழிக்கும் - அழகாகிய மொழியினையுடைய தமயந்திக்கும், அண்ணலவற்கும் - ஈகைக்குணமுடைய நளச்சக்கரவர்த்திக்கும், கடிமணமும் - கலியாணமும், செய்தார் - செய்தார்கள்; மற்று எவரும்-வேறு யாரும், ஒவ்வார் - தமக்கு ஒப்பாகாத அவ்விருவரும், பணி மொழியார் - வணக்கமான மொழியையுடைய தோழிப்பெண்கள், குற்றேவல் - சிறிய ஏவல் தொழில்களை, செய்ய - செய்தபின்பு, கொழும் பொன் - மிக்க அழகாகிய, அறை புக்கார் - அறையிற் சென்றார்கள், எ-று.

(வி-ரை.) சோதிடர் சுயம்வரத்தின் மறுதினமே நாள் குறித்தனர் எனவும், அத்தினமே அவர்களுக்கு வீமராஜர் கடிமணம் புரிவித்தனர் எனவுங் கொள்க. அங்ஙனம் ஏன் கொள்ளவேண்டுமெனின், அங்ஙனங் கொள்ளாவிடின் சுயம்வரம் நடந்தபிறகு அஸ்தமனங் கூறி உதயங் கூறுவார் "விதர்ப்பன் திருமடந்தை மங்கலநாள் காணவருவான்போல்" என்றது பயனில் கூற்றெனவேண்டிவருமாகலின் என்பது. கணிமொழிந்த - மூன்றன்தொகை. மொழிந்த - மொழியப்பட்ட என்னுஞ் செயப்பாட்டு வினைப்பொருளில் வந்த செய்வினை. கடிமணமும் என்பதன் உம்மை இறந்ததுதழீஇய எச்சப்பொருளது, சுயம்வரம் புரிவித்ததேயன்றிக் கடிமணமுஞ் செய்தார் என்றதலின். செய்தார் - யார் செய்தார் எனின் பெற்றோரும், மற்றைய சுற்றத்தாரும், ஏனைச் சான்றோரும் என்பது. அண்ணலவன்: அண்ணல் - பகுதி, அ - சாரியை; மற்றைச் சந்திவிகுதிகளை யறிந்துகொள்க. பணிமொழி - பண்புத்தொகைநிலைத்தொடர்; இதிற் பணி என்பது முதனிலைத்தொழிற்பெயர். அதனை முதனிலையாகக் கொள்ளின் வினைத்தொகைநிலைத்தொடராம். இங்ஙனங் கொண்டால் அத்தொடர்க்கும் பணிந்த மொழியையுடையார் என்று பொருள் சொல்லவேண்டும். குற்றேவல் - குறுமையாகிய ஏவல் என்றதலின் பண்புத்தொகைநிலைத்தொடர். ஏவல் என்பது விகுதிபெற்ற தொழிற்பெயர்;

அந்து ஏவுதலாற் செய்யப்படுந் தொழில்களை யுணர்த்தலின் காரணவாகு பெயர்; என்னை, ஏவுதல் காரணமும், ஏவியவற்றைச் செய்தல் காரியமு மாகலின். செய்ய - இது உடனிகழ்ச்சிப் பொருளதாதலின் நிகழ்கால முணர்த்தியது. கொழும்பொன்-பண்புத்தொகைநிலைத்தொடர்; ஆயின் மிக்க அழகு என்று பெயரெச்சத் தொடராகப் பொருள் கூறிய தென்னை எனின் சொற்சுருங்குதல் வேண்டிக் கூறப்பட்டதென்க. இங்ஙனமே பரிமேலழகர் 'நற்றாள்' 'பெருங்கடல்' என்பனவற்றிற்கு 'நல்லதாள்' 'பெரியகடல்' எனப் பெயரெச்சமாகப் பொருள் கூறுதல் காண்க. கொழுமை-வளமை; அஃது ஈண்டு மிகுதியின்மேலது. கொழும் பொன்னறை - நிறஞ்சிறந்த பொன்னாற்செய்த அறை எனின் உயர்வு நவிற்சியாம். ஒவ்வார் - ஒவ்வாத அவ்விருவருமெனச் சுட்டை யிடைப் பெய்துரைக்க. 'மற்றெவரு மொவ்வார் மகிழ்ந்து அறைபுக்கார்' என்க.

செந்திருவின் கொங்கையினுந் தேர்வேந்த னாகத்தும்
வந்துருவ வார்சிலையைக் கால்வளைத்து—வெந்தீயு
நஞ்சுந் தொடுத்தனைய காம மலர்வாளி
யஞ்சுந் தொடுத்தா னவன்.

(இ - ள்.) செந்திருவின் - அழகாகிய திருமாமகளையொத்த தம யந்தியினுடைய, கொங்கையினும் - தனங்களினும், தேர் வேந்தன் - தேர்ச் சேனையையுடைய நளமகாராஜனது, ஆகத்தும் - மார்பினும் வந்து உருவ - புகுந்து ஊடுருவிச் செல்லும்படி, வார் சிலையை - நீள மாகிய வில்லை, கால் வளைத்து-நுனியைப்பற்றி வளைத்து, வெம் தீயும்- வெப்பமாகிய தீயையும், நஞ்சும்-விஷத்தையும், தொடுத்தனைய - தொ டுத்தாற்போன்ற, காமம் - அச்சத்தைத் தருகின்ற, மலர்வாளி அஞ் சும் - (ஐந்துவகை) மலர்களாகிய பாணங்கள் ஐந்தையும், தொடுத்தான் (அவ்வில்லில்) பூட்டி எய்தான், அவன் - அந்த மலர்வாளிகளுக்குரிய னாகிய மன்மதன், எ - று.

(வி - ரை.) செந்திரு-பண்புத்தொகை நிலைத்தொடர். செம்மை-ஈண்டு அழகை யுணர்த்தியது. வந்து என்பது ஈண்டுப் புகுந்து என்னும் பொருளைத் தந்தது இலக்கணை. வெந்தீயும் நஞ்சும் தொடுத்தனைய வாளி, மலர்வாளி என இயைக்க. அஞ்சு என்பது ஐந்து என்பதன் போலி. அவன் என்பதன் அகரச்சுட்டு மலர்வாளிகளைச் சுட்டியது. ()

ஒருவ ருடலி லொருவ ரொதுங்கி
யிருவ ரெனுந்தோற்ற மின்றிப்—பொருவெங்
கனற்கேயும் வேலானுங் காரிகையுஞ் சேர்ந்தார்
புனற்கே புனல்கலந்தாற் போன்று.

(இ-ள்.) பொரு - போர்புரிகின்ற, வெம் கனற்கு-வெப்பமாகிய நெருப்பை, ஏயும் - ஒத்திருக்கும், வேலானும் - வேலையுடைய நளச்சக்கரவர்த்தியும், காரிகையும் - தமயந்தியும், புனற்கே - நீரிலேயே, புனல் கலந்தாற்போன்று - நீர் கலந்ததுபோல, ஒருவர் உடலில்-ஒருவர் தேகத்தில், ஒருவர் ஒதுங்கி - ஒருவர் மறைந்து, இருவர் எனும் தோற்றம் - இருவர் என்று சொல்லுதற்குரிய தோற்றம், இன்றிச் சேர்ந்தார் - இல்லாமற் கலந்தார்கள், எ - று.

(வி-ரை.) அப்போடு உப்புச் சேரின் உப்புரு மறைந்து ஒன்றுபட்டுத் தோன்றுமேனுஞ் சுவை மாறுபடும். நீரோடு பால்சேரின் சுவை மாறுதலோடு நிறமு மாறுபடும். பிறவும் அன்னதன்மையவேயாம். புனலோடு புனல் சேரின் அங்ஙனம் ஒருவகையினும் வேறுபடாமல் ஒன்றுபட்டுத் தோன்றும். நன்னீரோடு உவர்நீர் சேரின் சுவை வேறுபடாதோவெனின் 'புனற்கே புனல்கலந்தாற்போன்று' என்றமையின் அங்ஙனங் கொள்ளுதற் கிடனின்றென்க. அன்றியும் புனற்குச் சுவை வேறுபாடு மண்முதலிய பொருள்களின் சேர்க்கையா லுண்டாவனவேயாம். அதனை "நிலத்தியல்பா னீர்திரிந்தற்றாகும்" என்றதனாலறிக. புனற்கு இன்சுவையொன்றுமே யுளதென்பார். ஆங்கிலர் புனற்குச்

சுவையின்றென்பர். அன்றியும் புனலிற் புனல் கலக்கையில் எதனில் எது கலந்தது என்பது தோற்றாது; புனலில் மற்றைப்பொருள் கலக்கிற் றோற்றுமென்க. குணம், ஒழுக்கம், அன்பு முதலியவற்றாற் சிறிதும் வேறுபாடில்லாதாரது கூட்டமே ஒரு சிறிதும் வேறுபாடின்றித் தோன்றும். எவ்வகையிலாயினுஞ் சிறிதேனும் வேறுபட்டவராயின் அவரது இயைபு வேறுபட்டுத் தோன்றிச் சுவை மாறுபடுமென்பது. இதனை "அதுவே, தானே யவளே" என்னும் இறையனாரகப்பொருள் இரண்டாஞ் சூத்திரத்தானும் அதன் உரையானு முணர்க. நளதமயந்திகள் எவ்வகையினும் வேறுபாடின்றி யொத்தவர்களாதலின் அங்ஙனமே வேறுபாடின்றிக் கூடினார்கள் என்பார் 'புனற்கே புனல்கலந்தாற் போன்று, ஒருவருடலி லொருவ ரொதுங்கி, இருவரொனுந் தோற்றமின்றிச் .....சேர்ந்தார்' என்றார். இவர் இவருடலிற் கலந்தார் என்பதுந் தோன்றாமற் றம்மிற் கலந்தார் என்பார் 'ஒருவருடலி லொருவ ரொதுங்கி' என்றார். ஒருவருடல் - ஆறன்றொகை. கனற்கு என்பதில் இரண்டனுருபோடும் புனற்கு என்பதில் ஏழனுருபோடு நான்கனுருபு மயங்கியதென்க. (கசுஎ)

குழைமேலுங் கோமா னுயிர்மேலுங் கூந்தன்
மழைமேலும் வாளோடி மீள—விழைமேலே
யல்லோடும் வேலா னகலத் தொடும்பொருதாள்
வல்லோடுங் கொங்கை மடுத்து.

(இ - ள்.) குழைமேலும் - காதுகளின்மீதும், கோமான் - நளச்சக்கரவர்த்தியினுடைய, உயிர்மேலும் - உயிரின்மீதும், கூந்தல் - கூந்தலாகிய, மழைமேலும் - மேகத்தின்மீதும், வாளோடி மீள - தன் கண்ணாகிய வாள்விரைந்து சென்று திரும்பும்படி, இழைமேல் - நூலேணியின்மீது, அல் ஓடும் - மதிலின்மேல் ஏறி விரைந்துசெல்ல வல்லவனாகிய, வேலான் - வேலாயுதத்தையுடைய அந்நளச்சக்கரவர்த்தியினுடைய, அகலத்தொடு - மார்பில், வல் ஓடும் - சொக்கட்டான்காய் தோற்றோ

இம்படியான, கொங்கை-ஸ்தனங்களை, மடுத்து-நிறைத்து, பொருதாள்-அவனுடன் (கலவிப்) போர் புரிந்தாள், எ-று.

(வி-ரை.) வாள்போன்ற கண்ணை வாளென்றது உவமையாகு பெயர். கண்கள் காதளவு கடைபரந்து நின்றனவென்பார் 'குழைமேல் வாளோடி மீள' எனவும், நளச்சக்கரவர்த்தியைக் காதன்மீக்கூற்றால் அவனது உயிரையே பருகிவிடுபவள்போலப் பார்த்தனள் என்பார் 'கோமான் உயிர்மேல் வாளோடி மீள' எனவும், கலவிப்போரில் அவிழ்ந்து தொங்குங் கூந்தலை யடிக்கடி பார்த்துக்கொண்டனள் என்பார் 'கூந்தன் மழைமேல் வாளோடிமீள' எனவும். அக்காலத்து மலர்களணியப் பெற்றிருந்த அக்கூந்தலினின்று தேன் திவலைகள் துளித்துக்கொண்டிருந்தன என்பார் 'கூந்தன்மழை' என்றுங் கூறினார். வீரர் பகைவர்களின் கோட்டை மதிலின்மேல் ஏறுதலை 'எயிற்பாசி' என்பர். இஃது உழிஞைத்திணையின் துறைகளுள்ஒன்று. இதனைப்புறப்பொருள் வெண்பாமாலை உழிஞைப் படலத்திலுள்ள 'உடல்சினத்தார் கடியரண, மிடல் சாய மேலிவர்ந் தன்று'' என்னுங் கொளுவினாலும் அதனுரையாலு மறிக. இழைமேல் என்றவிடத்து ஏறி என்னுஞ் சொல்லை வருவித்தது சொல்லெச்ச மென்க. இழை - நூல், அது காரணவாகுபெயராய் நூலேணியை யுணர்த்தியது. அகலத்தொடும் என்பதில் உம்மை சாரியை எனவும், ஒடு என்னு மூன்றனுருபு நான்கனுருபோடு மயங்கிய தெனவுங் கொள்க. தமயந்தி என்னும் எழுவாய் தொக்கு நின்றது. மடுத்துப் பொருதாள் என்க. (கசுஅ)

வீரனக லச்செறுவின் மீதோடிக் குங்குமத்தி
னீர விளவண்ட விட்டதே—நேர்பொருத
காராரு மெல்லோதிக் கன்னியவள் காதலெனு
மோரா றுபாய வுடைந்து.

(இ - ள்.) நேர் பொருத - நேர்நின்று கலவிப்போர்புரிந்த, கார் ஆரும் - மேகத்தையொத்த, மெல் ஓதி - மென்மையாகிய கூந்தலை யுடைய, கன்னி அவள் - இளமைத் தன்மையை யுடையவளாகிய அத் தமயந்தியினுடைய, காதல் எனும் - ஆசையாகிய, ஓர் ஆறு - ஒப்பற்ற ஆறானது, உடைந்து - (நாணமாகிய) மடையுடைய, பாய - பாய்தலால், வீரன் - வீரனாகிய நளமகாராஜனுடைய, அகலச்செறுவின்மீது - மார் பாகிய வயலில், ஓடி - (அவ்வாற்றின் வெள்ளம் பெருகி) ஓடி, குங்கும த்தின் - குங்குமமாகிய, ஈரம் - குளிர்ந்த, இளவண்டல் - இளம்பத மாகிய கஞ்சல், இட்டது - உண்டாயிற்று, எ-று.

(வி-ரை.) அகலச்செறு - உருவகம்; இது இருபெயரொட்டுப் பண்புத்தொகை, அகலமாகிய செறு என்றும்.ஓடி என்னும் வினையெச் சத்தின் கர்த்தாவாகிய வெள்ளம் என்பது அவாய்நிலையான் வருவிக் கப்பட்டது. குங்குமத்தின் என்பதில் இன்சாரியை தவிர்வழி வந்தது. குங்குமமாகிய வண்டல் என்க. இதுவும இருபெயரொட்டுப் பண்புத் தொகை என்க. சர்க்கரையினாலாகிய பாகு, மணலாலாகிய மேடு என்ப வற்றிற்போலக் குங்குமத்தினாலாகிய வண்டல் எனக்கொண்டு குங்கு மத்தின் வண்டல் என்பதை மூன்றனுருபும்பயனு முடன்றொக்க தொகை என்பதுமா'. வண்டலிடல் - வண்டலுண்டாதல். இட்டது என்பது ஈண்டு இலக்கணையால் உண்டாயிற்று என்னும் பொருளைத் தந்தது. கன்னியவள் என்பதும் இருபெயரொட்டுப் பண்புத்தொ கையே, கன்னியாகிய அவள் என்றுதலின். இதிற் கன்னி என்பது கலியாணமாகாதவள் என்னும் பொருளைத் தராமல் இளமைத் தன் மையை யுடையவள் என்னும் பொருளைத் தந்ததென்க. நளச்சக்கர வர்த்தியினிடத்துத் தமயந்திக்குண்டான காதலானது ஒப்பில்லாதது என்பார் 'காதலெனு மோராறு' என்றார். ஓராறு - ஒப்பற்ற ஆறு. பாய என்பது காரணப்பொருளில் வந்தமையின் இறந்தகால முணர்த் தியது. உடைந்து - செயவென் னெச்சத்திரிபு. ஈண்டும் நாணமாகிய மடை என்பது அவாய்நிலையான் வருவிக்கப்பட்டது. என்னை யிது

அவாய்நிலையாமாறெனின் எது உடைந்தது என்பார்க்கு ஈதுடைந்தது என்னும் விடை வேண்டி நிற்றலின் என்பது. (கஅக)

கொங்கை முகங்குழையக் கூந்தன் மழைகுலையச்
செங்கயற்க ணோடிச் செவிதடவ—வங்கை
வளைபூச லாட மடந்தையுடன் சேர்ந்தான்
விளைபூசற் கொல்யானை வேந்து.

(இ - ள்.) விளை பூசல் - உண்டாகின்ற போரில், கொல் - பகைவர்களைக் கொல்லுகின்ற, யானை-யானைச் சேனையையுடைய, வேந்து-நளச்சக்கரவர்த்தி, கொங்கை முகம் - (தமயந்தியினுடைய) தனங்களினுடைய நுனிகள் (காம்புகள்), குழைய - குழையவும், கூந்தல் மழை - (அவளது) கூந்தலாகிய மேகங்கள், குலைய-குலையவும், கயல்-கயன்மீனையொத்த, செம் கண் - செவ்வரிபரந்த கண்கள், ஓடி - விரைந்து சென்று, செவி தடவ - காதைத் தடவவும், அம் கை - (அவளுடைய) அழகிய கைகளில் அணியப்பெற்றுள்ள, வளை - வளையல்கள், பூசல் ஆட - மிகவும் ஒலிக்கவும், மடந்தையுடன் - அத்தமயந்தியுடன், சேர்ந்தான் - கூடினான், எ-று.

(வி - ரை.) கொங்கைமுகம் - உறுப்புத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறன்றொகை. குழைய, குலைய, தடவ, ஆட என்பன செவ்வெண். இது வினையொடு வந்த செவ்வெண். இது வினைச்செவ்வெண் ஆகலின் தொகை பெறவில்லை. பெயர்ச் செவ்வெண்ணாயின் "சாத்தனுங் கொற்றனு மிருவரும் வந்தார்" என்பதிற்போலத் தொகை பெறுமெனக் கொள்க. மேற்காட்டிய செயவென் வாய்பாட்டகரவீற்று வினையெச்சங்கள் காரியப்பொருளில் வந்தமையின் எதிர்காலங்காட்டின. கயற்கண் - உவமைத்தொகை. செம்மை என்பது ஈண்டுப் பண்பாகு பெயராய்ச் செவ்வரியை யுணர்த்தியது. கை வளை -

உருபும் பயனு முடன்றொக்க எழன்றொகை. பூசலாடல் - பேரொலி செய்தல். ஆடல் என்பது ஈண்டுச் செய்தல் என்னும் பொருளைத் தந்தது இலக்கணை. விளைபூசல், கொல்யானை - வினைத்தொகை நிலைத்தொடர்கள். கொல் என்பது செயப்படுபொருள் குன்றாவினை யாதலின் அங்குப் பகைவரை என்னுஞ் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. வேந்து - பண்பாகுபெயர். (கஎ0)

> தையல் தளிர்க்கரங்க டன்றடக்கை யாற்பற்றி
> வைய முழுது மகிழ்தூங்கத் — தூய்ய
> மணமுடித்த தறபின் வாணுதலுந் தானும்
> புணர்ந்தான் நெடுங்காலம் புக்கு.

(இ - ள்.) வையம் முழுதும் - பூமியிலுள்ளார் யாவரும், மகிழ் தூங்க - களிப்படைய, தான் - நளச்சக்கரவர்த்தி, தையல்-தமயந்தியினுடைய, தளிர்க்கரங்கள் - தளிரையொத்த கைகளை, தன் - தன்னுடைய, தடக்கையால் பற்றி-விசாலமாகிய கைகளாற் பிடித்து, தூய்ய - குற்றமற்ற, மணம் முடித்ததன்பின் - கலியாணஞ் செய்துகொண்ட பிறகு, வாள் நுதலும்-ஒளியையுடைய நெற்றியையுடைய தமயந்தியும், தானும் - தானும், நெடுங்காலம் - பலநாள்வரையிலும், புக்கு-(அக்குண்டினபுரியிலே) தங்கி, புணர்ந்தான் - இன்பநுகர்ந்தான், எ-று.

(வி - ரை.) தான் தையல் தளிர்க்கரங்கள் பற்றித் 'தூய்ய மணமுடித்ததற்பின்' என்று இயைக்க. தளிர்க்கரம் - உவமைத்தொகை. மகிழ் தூங்க-இரண்டன்தொகை; அன்றி எழன்தொகையாகக்கொண்டு மகிழ்ச்சியிற்பொருந்த என்றுரைத்தலுமாம். மணத்திற்குத் தூய்மையாவது மணத்தற்குரிய இருவரில் ஒருவரேனும், அவ்விருவருமேனுங்

காதலற்றவராயிராமல் இருவரும் ஒத்த காதலுடையவரா யிருத்தல். வாணுதலும் என்னும் பெண்பாலும், தானும் என்னும் ஆண்பாலும் விரவிப் பன்மைமுடிபையேற்காமல் 'திணைபால் பொருள்பலவிரவின' என்னுஞ் சூத்திரத்தின்படி ஈண்டுச் சிறப்பினால் 'புணர்ந்தான்' என்னும் ஆண்பால் முடிபை யேற்றன. புணர்ந்தார் எனப் பன்மை முடிபாகப் பாடங் கூறுவாருமுளர். அது புணர்ந்தான் எனப் பின்னடியை யமைக்கக் கருதியே 'மணந்தான்' என முன்னடியை யமைத்தனர் என்பதை நோக்காமையாற் கூறப்படும் பாடபேதமென்க. புதுமணப் பிள்ளைகள் தங்கள் வீட்டிலிருந்து இன்பநுகர்தலைவிடத் தங்கள் மாமியார் வீட்டிலிருந்து இன்பநுகர்தலை அதிகமாக விழைதல் இயல்பு. அதனை விளக்குவார் 'தான் கரங்கள்பற்றி மணமுடித்ததற்பின் வாணுதலுந் தானு நெடுங்காலம்புக்குப் புணர்ந்தான்' என்றார். (௧௭௧)

சுயம்வரகாண்ட முற்றிற்று.

---

ஆ. வெண்பா ௧௭௧.

இரண்டாவது

# * கலிதொடர் காண்டம்.

கலி-வடமொழிப்பெயர்ச்சொல், தொடர்-வினைத்தொகை வினைச்சொல், காண்டம்-சமூகத்தை யுணர்த்தும் வடமொழிப் பெயர்ச்சொல், என மூன்றுசொல் இரண்டுசந்தியாய் முன்னது எழுவாய்த்தொகாநிலைத்தொடராய்த் தொடரென்னும் வினைத்தொகையோடும், பின்னது வினைத்தொகைநிலைத்தொடராய்க் காண்டமென்னும் பெயரோடும் முடிந்தன. பொருள் யாதோ எனின், கலிபுருடன் நளராசனைப் பற்றுகின்ற செய்திக்கூட்டத்தை யுடைய தென்பது பொருள். எனவே கலிதொடர்காண்டம் என்பது வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை நிலைத்தொடராய் இப்படலத்துக்குக் காரணக் குறியாயிற்றும். தொடரென்பதை வினைத்தொகை வினைச்சொல்லாகக் கொள்ளாமல் முதனிலைத் தொழிற்பெயராகக்கொண்டு கலிபுருடன் தொடர்தலைபுணர்த்துங்காண்டமென வுரைக்கலாகாதோ எனின், தொடரென்பது முதனிலைத்தொழிற்பெயராயின் தொடர்க்காண்டமென வேற்றுமொழிக் ககரமிகுதல் வேண்டும். அஃதில்லாமையால் அவ்வாறுரைத்தல் குற்றமெங்க.

> மூங்கை மறைநூன் முடியெனலாந் தண்குருகூர்ச்
> செந்தமிழ் வேத சிரமெனலா—நந்தும்
> புழைக்கைக்கு நேயப் பொதுவர் மகளிர்க்கு
> மழைக்கைக்கு முன்செல் லடி.

(இ - ள்.) நந்தும் - (முதலையினால்) வருந்திய, புழைக்கைக்கும் - யானைக்கும், நேயம்-தன்பினையுடைய, பொதுவர்-இடையர்களுடைய, மகளிர்க்கும் - பெண்களுக்கும் (எதிரில்), அழைக்கைக்குமுன்-(அந்த யானையும் அப்பெண்களும்) தம்மைக் கூப்பிடுதற்கு முன்னே, செல்

* இத்தொடரின் இலக்கணக்குறிப்பு, மகாவித்துவான் கோ - இராஜகோபாலப்பிள்ளையவர்களால் எழுதப்பட்டது.

அடி - சென்ற திருவடிகளை, முந்தை - (எல்லாக்கலைகளுக்கும்) முதன்மையாகிய, மறை நூல் - வேதமாகிய கலையினது, முடி எனல் ஆம் - முடி என்று சொல்லுதல் தகுதியாம், தண் - குளிர்ச்சியையுடைய, குருகூர் - திருக்குருகூரில் தோன்றிய, செந்தமிழ்-செவ்விய தமிழ்ப்பாவிலாகிய, வேதம் - வேதத்தினது, சிரம் எனல் ஆம் - சிரம் என்று சொல்லுதல் தகுதியாம், எ-று.

(வி-ரை.) அவ்வடிகளை இங்ஙனம் அவ்விரு வேதங்களின் முடிக ளென்று கூறுதலன்றி வேறுவகையாகக் கூறுதலாகாது என்பார் 'முடி எனல் ஆம்', 'சிரம் எனலாம்' என்றார். இங்ஙனங் கூறுதலாம் எனவே 'வேறுவகையாகக் கூறுதலாகாது' என்னும் பொருள் தானே போதருதல் அறிக. முற்கூறப்பட்டது வடமொழி வேதமும், பிற்கூறப் பட்டது தென்மொழி வேதமுமாம் என்பது அவற்றிற்குக் கூறப்பட்ட அடைமொழிகளாலேயே நன்கு விளங்கும். அவற்றுள் வடமொழி வேதம் தன்னகத்துப்பொருளைப் பிறர் எளிதில் ஓதியுணராதபடி மறைத்துக்கொண்டிருப்பது என்பார் அதனை 'மறை' என்றார். தென்மொழி வேதமங்ஙனமன்றி எளிதில் ஒதியுணர்தற் குரியதாம் என்பார் 'வேதம்' என்றார். அன்றியும் வடமொழி வேதம் தர்க்கம் வியாகரண முதலிய வற்றைப்போல வருந்தி யோதுதற்குரியதாம் என்பார் 'மறைநூல்'என்றார் தென்மொழிவேதம் அங்ஙனமன்றி எளிதில் ஓததற்குரியதாம் என்பார் 'செந்தமிழ்வேதம்' என்றார். ஈண்டுச் செம்மை என்னும் அடை எளிதிற் பொருளுணர்தலாம் என்பதனை யுணர்த்தவந்ததென்க. அன்றியும் வடமொழிவேதம் இப்பொழுது வழக்காறற்ற மொழியில் இருப்பதாம் என்பார் 'முந்தைமறை' என்றார். தென்மொழிவேதம் இப்பொழுது வழக்காற்றிலுள்ள மொழியிலிருப்பதாம் என்பார் 'தமிழ்வேதம்' என்றார். வடமொழி வேதம் இன்ன இடத்தில் இன்னார்க்குச் சொல்லப்பட்டது என்பதை அறிதற்குக் கூடாததாம் என்பார் 'முந்தைமறை' என்றார். தென்மொழி வேதம் இன்ன இடத்தில் இன்னரால் இன்னார்க்குச் சொல்லப்பட்டது என்பதை அறிதற்குக் கூடியதாம்என்பார் 'தண்குரு

கூர்-வேதம்' என்றார். இங்ஙனமாயினும் அவ்விரு வேதங்களாலுங் கூறப்
படும் பொருள் ஒன்றேயாம் என்பார் 'அடி மறைமுடி' எனவும், 'அடி
தண்குருகூர் வேதசிரம்' எனவுங் கூறினார். அவ்விரு மறைகளுமுள்ள
மொழிகளிரண்டுந் தம்முள் ஒத்தனவாம் என்பார் வடமொழி வேதத்தை
யும் அதன்பொருளையும் 'மறை' எனவும், 'முடி' எனவும் தமிழ்ச் சொற்க
ளாலும், தென்மொழிவேதத்தையும் அதன்பொருளையும் 'வேதம்' என
வும், 'சிரம்' எனவும் சம்ஸ்கிருதசொற்களாலுங் கூறினார். இத்துணையும்
அவ்விரு வேதங்களாகிய நூலைப்பற்றியும் அவற்றையாக்கியோனைப்பற்
றியும், அவை தோன்றிய இடத்தைப்பற்றியும் அவை வந்த முறைமை
யைப்பற்றியும், அவற்றாலெய்தும் பயனைப்பற்றியும் கூறப்பட்டனவாம்.

இனி அவற்றை யோதுதற்குரிய அதிகாரிகளைக் கூறத்தொடங்கி
'நந்தும்புழைக்கை' எனவும், 'சேயப்பொதுவர் மகளிர்' எனவும் முறைநிர
னிறைப்பொருள்கோளாகக் கூறினார்; இங்ஙனங் கூறியதனால் 'நந்தும்
புழைக்கையை (கஜேந்திரனென்னும் யானையை)ப்போன்றவர்கள் வட
மொழிவேதத்தை ஓதுதற்கும், சேயப்பொதுவர் மகளிரைப் போன்றவர்
கள் தென்மொழி வேதத்தை யோதுதற்கும் உரிய அதிகாரிகளாவார்
என்பது விளங்குமாறறிக. நந்தும் புழைக்கையைப் போன்றவர் வட
மொழி வேதமோதற்கு அதிகாரிகள் என்றமையின் சமுசாரமாகிய
தடாகத்தில் ஆசையாகிய முதலையின்வாயில் அகப்பட்டு வருந்தி அவ்
வருத்தத்தைத் தம்மால் ஆற்றொணாமையால் அதனைப் போக்கிக்கொள்
ளுதற்குரியவழி யாதெனத் தேடுவோர் அவ்வேதமோதுதற்குரிய அதி
காரிகளாயிருப்பார்கள் என்பதும், சேயப்பொதுவர் மகளிரைப்போன்ற
வர்களை தென்மொழி வேதமோதற்குரிய அதிகாரிகள் என்றமையின்
'கருவிலே திருவுடையார்' என்றபடி ஈஸ்வரனிடத்தில் இயல்பினமை
ந்த அன்பினால் அவனையடைய விரும்புவோர் தென்மொழி வேத
போதுதற்குரிய அதிகாரிகளாயிருப்பர் என்பதும் பெறப்படுமாறறிக.
யானையை வேறு பெயரால் கூறாமல் 'புழைக்கை' எனக் கூறினமை
யின் அத்துதிக்கையிலுள்ள துவாரங்களைப்போல இரண்டாயுள்ள கர்ம

வயப்பட்டவர்கள் வடமொழிவேத மோதுதற்குரியவர்கள் என்பதும், நேயமகளிர் என்றமையால் அன்பின் வயப்பட்டவர்கள் தென்மொழி வேத மோதுதற்குரியவர்கள் என்பதும் பெறப்படுதல் அறிக. தம்மை ரக்ஷிக்கப்படு பொருளாகவும், ஈஸ்வரனை ரக்ஷகனாகவும் நினைப்பவர்களும், அவ் வீஸ்வரனிடமிருந்து ஒரு பயனை விரும்புகின்றவர்களுமாகிய அதிகாரிகளே வடமொழிவேத மோதுதற்குரியவர்களா யிருப்பர்கள் என்பார் 'நந்தும் புழைக்கை' என்றார். தம்மை நாயகிகளாகவும் ஈஸ்வரனை நாயகனாகவும் கருதுகின்றவர்களும், ஈஸ்வரனிடத்து வேறு பயனொன்றையுங் கருதாது அவனது அன்பு ஒன்றையே கருதுகின்றவர்களும் ஆகிய அதிகாரிகளே தென்மொழிவேத மோதுதற்குரிய அதிகாரிகளா யிருப்பர்கள் என்பார் 'நேயமகளிர்' என்றார். நம்மை நாமே ரக்ஷித்துக்கொள்ளுதற்குரிய தோளாற்றல் முதலிய நம்மிடத்தேதான் இருக்கின்றன என்று முன்னே மயங்கிப் பிறகு ஓராபத்தினின்றுந் தம்மைக் காப்பாற்றிக்கொள்ளத் தம்மா லாகாதபோழ்து ஈஸ்வரனைப்பற்றி யுய்யக் கருதுவோரே வடமொழி வேத மோதும் அதிகாரிகளா யிருப்பர் என்பார் 'புழைக்கை' என்றார். நாம் எப்பொழுதும் ஈஸ்வரன் வயப்பட்டவர்கள், நமக்கென ஆற்றலொன்றில்லை என்றிருப்பவர்களே தென்மொழிவேதமோதுதற்குரியவர்கள் என்பார் 'மகளிர்' என்றார். விலங்குகளுக்கு மக்களுக்கு முள்ள வாசி வடமொழி வேதமோதும் அதிகாரிகளின் ஞானத்துக்கும், தென்மொழி வேதமோதும் அதிகாரிகளின் ஞானத்துக்கும் உண்டென்பார் 'புழைக்கைக்கும்' மகளிர்க்கும் என்றார். இத்துணையும் வடமொழி வேதமோதும் அதிகாரிகளுக்கும் தென்மொழி வேதமோது மதிகாரிகளுக்கும் உள்ள வாசியைப்பற்றிக் கூறப்பட்டனவாம். வடமொழி வேதம்போலத் தென்மொழிவேதம் 'இன்னார் ஓதுதலாம், இன்னார் ஓதுதலாகாது' என்னும் வரம்புடையதன்றென்பார் 'மகளிர்க்கும்' என்றார். மகளிருமோதுதலாம் எனவே ஆடவரைப்பற்றி வேறு கூற வேண்டாமன்றே. இப்பொருளில் மகளிர்க்கும் என்பதன் உம்மை எச்

சப் பொருளோடு கூடிய இழிவு சிறப்புப் பொருளதாமென்க. இதனுல் அவ்வதிகாரிகளுக்கு வரம்புண்மையும், வரம்பின்மையுங் கூறப்பட்டது.

மூர்த்தமறை - பண்புத்தொகைநிலைத்தொடர். மறைநூல் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடர் நான்முடி, வேதசிரம் என்பன உருப்புத் தற்கிழமைப் பொருளனவாகிய ஆறன்றொகை நிலைத்தொடர்கள். புழைக்கைக்கும், மகளிர்க்கும் என்பவற்றுள் உம்மைகள் எண்ணுப்பொருளன. புழைக்கை என்பது புழையையுடைய கையையுடையது என்றுதலின் இரண்டனுருபும் பொருளுந் தொக்க வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெயர். அடிமுடி எனலாம், அடிசிரம் எனலாம் என இயைக்க. ()

மற்றொருபிரதி.

செக்கர் நெடுவானிற் றிங்க ணிலாத்துளும்பி
யுக்க தெனச்சடைமே லும்பர்நீர்—மிக்கொழுகும்
வெள்ளத்தான் வெள்ளி நெடுங்கிரியான் மெய்யன்ப
ருள்ளத்தா னெங்கட் குளன்.

(இ - ள்.) நெடு - பெரிய, செக்கர் - செந்நிறத்தினையுடைய, வானில் - ஆகாயத்திலே, திங்கள் - சந்திரனுகிய குடத்திலுள்ள, நிலா - சந்திரிகையாகிய நீர், துளும்பி - ததும்பி, உக்கது என - ஒழுகினற்போல, சடைமேல் - (செந்நிறத்தினையுடைய) சடையின்மீது, மிக்கு ஒழுகும் - மிகுந்து ஒழுகுகின்ற, உம்பர்நீர் - வானத்தினின்று வந்த நீரினது (கங்கை நீரினது),வெள்ளத்தான் - பெருக்கினையுடையவனும், நெடு - பெரிய, வெள்ளிக்கிரியான் வெள்ளிமலையையுடையவனும்,மெய் அன்பர்-உண்மையாகிய அன்புடைய அடியவர்களுடைய, உள்ளத்தான் - மனத்தின்கண் எழுந்தருளி யிருப்பவனுமாகிய சிவபெருமான், எங்கட்கு உளன் - எங்களுக்கென்றும் ரக்ஷகனுக இருக்கின்றனன், எ-று.

(வி-ரை.) செக்கர்-பண்புப்பெயர், இதிற் செம்மை-பகுதி, 'ஈறு போதல்' என்றதனால் மையும், 'இனையவும்' என்றதனால் மகரமெய்யுங் கெட்டனும்,ககர ஒற்று தோன்றியதுஞ் சந்தி,(இக்ககரவொற்று வருமெழுத்தை நோக்கிவந்ததாதலின் இதனை 'முன்னின்ற மெய்திரிதல்'என்றதனால் மகரவொற்று திரிந்துவந்தது என்னுதல் தவறும் என்க. செய்ய, சேதாம்பல் என்பவற்றிற்போல வருமெழுத்தை நோக்காது வருவன வற்றையே அங்ஙனங் கூறுதல்வேண்டும்), கு - சாரி, உகரக்கேடுசந்தி, அர் - பகுதிப்பொருள் விகுதி. 'துளும்பி' என்றதனால் நிலா நீராகவும் திங்கள் குடமாகவும் உருவகஞ்செய்து கூறப்பட்டன. பூரணசந்திரனை யன்றே குடமாகக் கூறுவது; சிவபிரானது சடைமேலிருக்கும் பிறைச் சந்திரனைக் குடமாகக் கூறுதலாமோ எனின், குடத்தில் நீர் குறைந் திருத்தல்போலக் கலை குறைந்திருப்பதன்றி அக்கலையையுடைய மண்டலங் குறைந்திருப்பதில்லை ஆகையால் கூறுதலாம் என்க. "சடைமேல் மிக்கொழுகும் உம்பர் நீர் வெள்ளத்தான்" என்றியைத்துப் பொருள்கொள்க. உம்பர் - வானுலகம். உம்பர்நீர் - ஐந்தனுருபும் பொருளும் உடன் தொக்கதொகை. நீர்வெள்ளம் - ஒன்றன் கூட்டத் தற்கிழப் பொருளதாகிய ஆறன்றொகை. (உ)

தவளத் தனிக்குடையின் வெண்ணிழலுந் தையல்
குவளைக் கருநிழலுங் கொள்ளப்—பவளக்
கொழுந்தேறிச் செந்நெற் குலைசாய்க்கு நாடன்
•செழுந்தேரி லேறினான் சென்று.

(இ - ள்.) பவளக்கொழுந்து - பவளக்கொடிகளின் கொழுந்துகள், ஏறி-ஏறி, செந்நெல்-செந்நெற் பயிர்களினுடைய, குலை சாய்க்கும்- கதிர்களைச் சாய்க்கின்ற, நாடன் - நிடதநாட்டையுடைய நளச்சக்கரவர்த்தி, தனி - ஒப்பற்ற, தவளக் குடையின் - வெண்மையாகிய குடையினது, வெண்ணிழலும் - வெண்மையாகிய நிழலும், தையல் - தமயந்தியினுடைய, குவளை - (கண்களாகிய) குவளை மலர்களினுடைய,

கருநிழலும் - கருமையாகிய நிழலும், கொள்ள - (தன்னைச்) சூழ்ந்து கொள்ள, சென்று - போய், செழுந்தேரில் - செழுமையாகிய தேரில், ஏறினான், எ-று.

(வி-ரை.) தேருக்குச் செழுமையாவது விரைந்து செல்லுதற்குரிய குதிரைகள் பூட்டப்பெற்றிருத்தலும், வீற்றிருத்தற்குரிய ஆசனங்கள் செவ்விதி னமைந்திருத்தலும், போரினுஞ் சிதைவுறாத உறுதியுடைய உறுப்புக்களை யுடையதாதலும், மற்றும் போர்முதலியவற்றிற்குரிய பொருள்கள் அமைக்கப்பெற்றிருத்தலுமாம். நளச்சக்கரவர்த்தி பணியாளன் வெண்கொற்றக் குடையைப் பிடித்துவரவும், தன்னிடம் ஆராத காதலையுடைய தமயந்தி தன்னையே நோக்கிக்கொண்டு தன்னுடன் வரவும் சென்று தேரில் ஏறினான் என்பார் 'தவளத்தனிக் குடையின் வெண்ணிழலுந் தையல், குவளைக் கருநிழலுங்கொள்ள, நாடன், செழுந்தேரி லேறினான்', என்றார்.

பகைவரைத் தன்னாட்டிலிருந்து வெல்லுதலேயன்றி அவர்களுடைய நாட்டினுஞ்சென்று அவர்களைவென்று தன்னை வணங்கும்படி செய்யவல்லவீரன் இவன் என்பார் 'பவளக், கொழுந்தேறிச் செங்நெற் குலைசாய்க்கு நாடன்' என்றார். இன்னும் 'பவளக்கொழுந்து' என்கிற குறிப்பால் இவனுக்குறுஞ் சிறிது கோபமும் பகைவரை வணங்கச் செய்யும் என்னும் பொருளுந் தோன்றுதல் அறிக. 'நாடன் வெண்ணிழலும், கருநிழலுங் கொள்ளச்சென்று செழுந்தேரி லேறினான்' என்க. குவளை என்றது உருவகம். (௩)

மங்கையர்கள் வாச மலர்கொய்வான் வந்தடையப்
பொங்கி யெழுந்த பொறிவண்டு—கொங்கோ
டெதிர்கொண் டணைவனபோ லேங்குவன முத்தின்
கதிர்கொண்ட பூண்முலையாய் காண்.

(இ - ள்.) முத்தின் - முத்துமாலையினுடைய, கதிர்கொண்ட - ஒளியினையுடைய, பூண்முலையாய் - ஆபரணங்களையணிந்த பெண்ணே!

மங்கையர்கள் - மாதர்கள், வாசம் மலர் - (நல்ல) மணத்தினையுடைய பூக்களை, கொய்வான்-பறிக்கும்பொருட்டு, வந்து அடைய - (அருகில்) வந்துசேருதலால், பொங்கி எழுந்த-உயர்ந்து கிளம்பின, பொறி வண்டு-புள்ளிகளையுடைய வண்டுகள், கொங்கோடு - தேனோடு, எதிர்கொண்டு அணைவனபோல் - (அவர்களை வரவேற்க அவர்கள்) எதிரே சென்று அவர்களைக் கிட்டுவனபோல, எங்குவன - ஒலிக்கின்றன, காண் - (அவற்றைப்) பார், எ-று.

(வி - ரை.) முத்து - கருவியாகுபெயராய் மாலையை யுணர்த்திற்று. 'முத்தின்கதிர் - பண்புத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறனுருபை; முத்துமாலையின் ஒளி தம்மீது படப்பெற்ற பூண் என்க. பூண் - மற்றைய ஆபரணங்கள். அடைய - இதில் அகரவிகுதி காரணப் பொருளதாதலின் இறந்தகாலத்தில் வந்ததென்க. கொங்கு - வண்டுத் தேன். (௬)

பாவையர்கை தீண்டப் பணியாதார் யாவரே
பூவையர்கை தீண்டலுமப் பூங்கொம்பு—மேவியவர்
பொன்னடியிற் றாழ்ந்தனவே பூங்குழலாய் காணென்றான்
மின்னெடுவேற் கையான் விரைந்து.

(இ-ள்.) மின் - ஒளியினையுடைய, நெடு-நீண்ட, வேல் கையான்-வேலையேந்திய கையையுடைய நளன், பூங்குழலாய் - மலர்களையணிந்த கூந்தலையுடைய தமயந்தியே, பாவையர் - பெண்கள், கை தீண்ட - கையால் தொட்டால், பணியாதார்-வணங்காதவர்கள், யாவர்-எவருளர்; பூவையர்கள் - பெண்கள், கை தீண்டலும் - கையால் தொட்டவுடன், அப்பூங்கொம்பு - அப்பூக்களையுடைய கிளைகள், அவர் - அப்பெண்களினுடைய, பொன் அடியில் - அழகாகிய பாதங்களில், மேவி - விரும்பி, தாழ்ந்தன - வணங்கின, விரைந்து காண் - விரைவாகப்பார், என்றான் - கூறினான், எ-று.

(வி - ரை.) பாவை, பூவை என்பன உவமவாகுபெயர்களாய்ப் பெண்களை யுணர்த்தின. அர் - பலர்பால்விகுதி. ஆடவர் என்பதிற்போன்ற ஆண்பன்மையையும், மகளிர்என்பதிற்போன்ற பெண்பன்மையையும், மாந்தர் என்பதிற்போன்ற அவ்விருபாற்கும் பொதுவாகிய பன்மையையும் தமிழிலக்கணநூலார் பலர்பால் என்றே கூறுபவாகலின் பாவையர், பூவையர் என்பன பெண்பன்மைப் பெயர்களே யாயினும் அவற்றைப் பலர்பால் என்றே கூறுதல்வேண்டும். (௫)

மங்கை யொருத்தி மலர்கொய்வாள் வாண்முகத்தைப்
பங்கயமென் றெண்ணிப் படிவண்டைச்—செங்கையாற்
காத்தாளக் கைம்மலரைக் காந்தளெனப் பாய்தலுமே
வேர்த்தாளைக் காணென்றான் வேந்து.

(இ-ள்.) வேந்து-நளச்சக்கரவர்த்தி, மலர் கொய்வாள்-மலர்களைப் பறிப்பவளாகிய, மங்கை ஒருத்தி - ஒருமாதினது, வாள் முகத்தை - ஒளியையுடைய முகத்தை, பங்கயம் என்று-தாமரைப்பூ என்றெண்ணி, படிவண்டை - (தன்முகத்திற்) படிகின்ற வண்டினை, செம் கையால்-(அவள் தன்) செம்மையாகிய கையினால், காத்தாள்-(படியாதபடி) தடுத்தாள்; அக் கை மலரை - அத்தாமரைப்பூவையொத்த கையை, காந்தள் என-காந்தட்பூவென்றெண்ணி, பாய்தலும் - (அவ்வண்டு அக்கையிற்) பாய்ந்தவுடன், வேர்த்தாளை-(அச்சத்தினால் தேகத்தில்) வெயர்வரும்பப் பெற்றாள் அவளை, காண் என்றான் - நீ பார் என்று தமயந்தியை நோக்கிக் கூறினான், எ - று.

(வி-ரை.) கொய்வாள் மங்கை யொருத்தி என இயைக்க. இது கொய்வாளாகிய மங்கை, மங்கையாகிய ஒருத்தி என்றாம்; ஆதலின் இதிலுள்ள சந்திகள் இரண்டும் இருபெயரொட்டுப் பண்புத்தொகைகள் ஒருத்திமுகம், வாண்முகம் எனக் கூட்டுக. இவற்றுண் முன்னது உறுப்புத்தற்கிழமைப்பொருளாகிய ஆறன்றொகை; பின்னது இரண்டனுருபும்பொருளுமுடன்றொக்கதொகை, செங்கையால் என்பதில் ஆல்

துணைக்கருவிப்பொருளதாகிய மூன்றனுருபு. கையைக் காந்தள் என்று கூறலின் கைம்மலரை என்றது மலர்க்கை என மாற்றி உவமையாக்கிப் பொருள் கூறப்பட்டது. வேந்து - தலைமை; இது பண்பாகுபெயராய் அரசனை யுணர்த்தியது. (அ)

புல்லும் வரிவண்டைக் கண்டு புனமயில்போற்
செல்லு மடந்தை சிலம்பவித்து—மெல்லப்போ
யம்மலரைக் கொய்யா தருந்தளிரைக் கொய்வாளைச்
செம்மலரிற் றேனே தெளி.

(இ - ள்.) செம்மலரில் தேனே - செம்மையாகிய மலர்களில் உள்ள தேன்போன்றவளே, புனம் மயில்போல-காட்டிலுள்ள மயிலைப் போல, செல்லும் மடந்தை - செல்லுகின்ற ஒருமாது, புல்லும் - கலவி புரிகின்ற, வரி வண்டை கண்டு - கீற்றுகளையுடைய வண்டுகளைப் பார்த்து, சிலம்பு அவித்து-(தன் கால்களிலுள்ள) சிலம்புகளின் ஓசையை அடக்கி, மெல்லப்போய் - மெதுவாகச் சென்று, அம்மலரைக் கொய்யாது - (அவ்வண்டுகளுள்ள) மலரைப்பறிக்காமல், அருந்தளிரை-அருமையாகிய தளிர்களை, கொய்வாளை - பறியாநின்றாள் அவளை, தெளி-தெளிவாகப்பார், எ - று.

(வி - ரை.) கலவிக்கு இடையூறுண்டாதலால் நேரிடும் துன்ப மிகுதியை யுணர்ந்தவளாதலின் அங்ஙனம் புரிந்தனள். சிலம்பு என்றது சண்டுசீ சிலம்பின் ஓசையை யுணர்த்தியது. ஓசை குணமாதலாலும் குணத்துக்கும் குணிக்குங் காரணகாரிய சம்பந்த முண்மையாலும் இத னைக் காரணவாகுபெயரென்க. மலர்களிலுள்ள தேன்போலும் எனக் கினியாய்! என்பான் 'செம்மலரிற்றேனே' என்றான். அன்றி மலர்களி லுள்ள தேன் பக்குவமறிந்து அருந்தாமற் கொள்ளுதற் குரியதாயிருப் பது போன்றவள் நீ என்பான் அங்ஙனங் கூறினன் என்பதுமாம். அன்றி அழகினால் திருமாமகளை யொப்பவள் நீ என்பான் அங்ஙனங் கூறினன் என்றலுமாம். அங்ஙனந் தளிர் கொய்வாளது மென்மைத்தன்

மையான மன இயல்பை நன்றாய்க் கவனித்துப்பார் என்பான் 'தெளி' என்றான். (எ)

தொய்த மலரைக் கொடுங்கையி னலணைத்து
மொய்குழலிற் சூட்டுவான் முன்வந்து—தையலாள்
பாதார விந்தத்தே சூட்டினான் பாவையிடைக்
காதார மின்மை யறிந்து.

(இ - ள்.) கொய்த மலரை - தான் பரித்தமலர்களை, கொடுங்கையி னல் அணைத்து - வளைவாகிய அகங்கையாற்பற்றி, மொய் குழலில் - (தன்னுபகியினுடைய) அடர்ந்த கூந்தலில், சூட்டுவான் - சூட்டுதற்கு, முன் வந்து - (அவள்) முன்னேவந்து நின்று, பாவை இடைக்கு - பது மையைப்போன்ற அம்மாதினது இடையைத் தாங்குதற்கு, ஆதாரம் இன்மை அறிந்து - ஆதரவு ஒன்றும் இல்லாமையையுணர்ந்து, தைய லாள் - அப்பெண்ணினுடைய, பாத அரவிந்தத்தில் - அடியாகிய தாமரை யிலே, சூட்டினான்—, எ - று.

(வி - ரை) சூட்டுவான் - வான் ஈற்று எதிர்காலவினையெச்சம். பாவைபோல்வாளைப் பாவை என்றது உவமையாகுபெயர். இடையா னது மிகவுஞ் சிறியதாய் இருத்தலாலும், முன்னே அது கொங்கைக ளாகிய சுமையைச் சுமத்தப்பெற்றிருத்தலாலும், அந்தச் சுமையினால் ஒடிந்துவிடாவண்ணந் தாங்கும் ஆதாரப்பொருள் அதற்கின்மையாலும், இம்மலராகிய சுமையையுங் குழலில் ஏற்றிவைப்பின் அது ஒடிந்து விடும் என்பது கருதிப் பாதத்திற் சூட்டினான் என்பது இதன்கருத்து. மலரோடு மலரைச் சேர்த்தான் என்பான் 'பாதாரவிந்தத்தே சூட்டி னான்' என்றான். (அ)

ஏற்ற முலையார்க் கிளைஞ ரிடும்புலவித்
தோற்ற வமளியெனத் தோற்றுமாற்—காற்றசைப்ப
வுக்க மலரோ டொருத்தவளை முத்தமே
யெக்கர் மணன்மே லிசைந்து.

(இ - ள்.) காற்று அசைப்ப - (மரங்களைக்) காற்று அசைத்த லால், உக்க - (அம்மரங்களிலிருந்து) சிந்தின, மலரோடு - பூக்களோடு, வளை உகுத்த - சங்குகள் சொரிந்த, முத்தம் - முத்துகள், எக்கர் மணல் மேல் - குவியலாகிய மணலின்மீது, இசைந்து - பொருந்தி, ஏற்றம் முலையார்க்கு - வளர்ச்சியையுடைய கொங்கைகளையுடைய மாதருக்கு, இளைஞர் - இளம்வயதுடைய புருடர்கள், இடும் - உண்டாக்கிய, புல வித்தோற்றம் - ஊடலினது விளக்கத்துக்கு (புலவியை அறிதற்குக்) காரணமாகிய, அமளி என - படுக்கையைப்போல, தோற்றும் - விளங் கும், எ - று.

(வி-ரை.) ஆல் - அசை. ஏற்றம் - தொழிற்பெயர். ஏறுதல் என் பது பொருள்; அஃது ஈண்டு வளர்ச்சி என்னும் பொருளைத் தந்தது. அதற்கு மேன்மை எனப் பொருள்கொண்டு ஏற்ற முலையார் என்பத ற்கு மேன்மையாகிய முலையார் என்று பொருள் கூறுதலுமாம். இங்ங னங் கொள்ளுங்கால் அது தொழிற்பண்புப்பெயராமெனக. இடும் என் பது ஈண்டு உண்டாக்கும் என்னும் பொருளது. புலவித்தோற்றம் என்பது தொழிற்பண்புத் தற்கிழமைப் பொருளதாகிய ஆறன்றொகை. இங்ஙனந் தொடரின்படி அதை ஆறன்றொகையாகக் கொண்டு பொருள் கூறியிருப்பினும் அம்மாதாது ஊடலைப் பிறர் அறிதற்கு என்பதை அதன் கருத்தாகக் கொள்க. தோற்றவமளி - இதில் தோற்றம் என் பது தோற்றத்தின் காரணத்தை யுணர்த்தியது இலக்கணை என்க. தம்மீது மலர்களும் முத்துகளுஞ் சிந்தப்பெற்றுள்ள மணற்குவி யல்கள் ஊடிய மாதர்கள் தாமணிந்திருந்த மலர்களையு முத்துகளையும் எறிந்துவிட்டுச் சென்ற படுக்கையைப்போலத் தோன்றிற்று என்பது முதல் இரண்டடிகளின் கருத்து. உக்க-தன்வினையாகிய பெயரெச்சம்; இதிற் பகுதி உகு; இதன் வினைமுதல் மலர். உகுத்த-பிறவினையாகிய பெயரெச்சம்; இதில் பகுதி உகுத்து; இதன் வினைமுதல் வளை. (கூ)

அலர்ந்த மலர்சிந்தி யம்மலர்மேற் கொம்பு
புலர்ந்தசைந்து பூவணைமேற் புல்லிக்—கலந்தொசிந்த

புல்லென்ற கோலத்துப் பூவையரைப் போன்றதே
யல்லென்ற சோலை யழகு.

(இ - ள்.) கொம்பு - மரக்கிளைகள், அலர்ந்த மலர் சிந்தி - மலர்ந்த பூக்களைச்சிந்தி, அம்மலர் மேல் - அந்தப்பூக்களின்மீது, புலர்ந்து அசைந்து - வாடி அசைதலால், அல் என்ற - இருள் என்னும்படி அமைந்த, சோலை அழகு - சோலையினது அழகானது, பூ அணைமேல் - பூக்களைப் பரப்பிய படுக்கையின்மீது, புல்லிக்கலந்து - கட்டியணைத்துப் புணர்ந்து, ஒசிந்த - அதனால் தளர்ச்சியெய்திய, புல் என்ற கோலத்து - ஒளிமழுங்கின அழகினையுடைய, பூவையரை-பெண்களினுடைய அழகை,போன்றது - ஒத்திருந்தது, எ-று,

(வி - ரை.) அசைந்து என்பது ஏதுப்பொருளில்வந்த செயவெனச்சத்திரிபு. புல்லிக்கலந்து என்பதைக் கலந்து புல்லி எனமாற்றி மனமொத்துக்கூடி என்றுரைப்பினுமாம். பூவைபைப்போன்ற பெண்ணைப் பூவை என்றது உவமையாகுபெயர். அதன்மேல் அர் விகுதிபலர்பாலுணர்த்தவந்தது. பூவையர் என்பது பூவையரது அழகையுணர்த்தலின் பொருளாகுபெயரென்க. சோலையினது அழகு பூவையரது அழகைப் போன்றது என்க. (௬0)

கொங்கை முகத்தணையக் கூட்டிக் கொடுங்கையா
லங்கணைக்க வாய்நெகிழ்ந்த வாம்பற்பூக்—கொங்கவிழ்த்தேன்
வார்க்கின்ற கூந்தன் முகத்தை மதியென்று
பார்க்கின்ற தென்னலாம் பார்.

(இ - ள்.) கொங்கு அவிழ் - (எங்கும்) மணம்பரவும்படியான, தேன் வார்க்கின்ற - தேனை ஒழுகவிடுகின்ற, கூந்தல் - கூந்தலையுடைய ஒரு பெண், கொங்கை முகத்து - (தன்) தனமுகட்டில், அணைய - பொருந்தும்படி, கூட்டி - சேர்த்து, கொடுங்கையால் - (தன்) வளைவாகிய அகங்கையால், அங்கு-அத்தன முகட்டில், அணைக்க - அணைத்த

லால்,வாய் நெகிழ்ந்த-இதழ்விரிந்த, ஆம்பல்பூ-அல்லிக்கொடியினது பூவி னது தோற்றம்,முகத்தை-(அப்பெண்ணினது) முகத்தை, மதி என்று-சந்திரன் என்று எண்ணி, பார்க்கின்றது என்னல் ஆம் - (அப்பூ) பார்க்கின்றது என்று சொல்லலாம்படியிருக்கின்றது, பார் - (நீ) நோக்கு எ - று.

(வி-ரை.) அணைக்க-காரணப்பொருளதாகிய செயவென் வாய்பாட்டிறந்தகாலவினையெச்சம். ஆம்பற்பூ - உறுப்புத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறன்றொகை. பூ என்றது ஈண்டுப் பூவினது தோற்றத்தை யுணர்த்தியது இலக்கணை. கூந்தல் என்றது தொகைஎன்பதன்மறுபெயராய்ச் சினையாகுபெயராய்ப் பெண்ணை யுணர்த்திற்று. (கக)

கொய்த குவளை கிழித்துக் குறுநுதன்மே
லெய்தத் தனிவைத்த வேந்திழையாள்—வையத்தா
ருண்ணாக் கடுவிடத்தை யுண்ட வொருமூன்று
கண்ணனைப் போன்றனளே காண்.

(இ - ள்.) கொய்த-பறித்த, குவளை கிழித்து - கருநெய்தற் பூவின் இதழைக்கிழித்து, குறு நுதல்மேல்-சிறிய நெற்றியின்மீது, எய்த - சேரும்படி, தனி வைத்த - தனிமையாக வைத்த, ஏந்து இழையாள் - அணிதற்குரிய ஆபரணங்களை அணிந்த ஒருமாது, வையத்தார் - உலகத்திலுள்ளவர்களால், உண்ணா - உண்ணமுடியாத, கடு விடத்தை-கொடிய விஷத்தை, உண்ட - உட்கொண்டருளிய, ஒரு மூன்று கண்ணனை - மூன்று கண்களையுடைய சிவபிரானை, போன்றனள் - ஒத்தவளானாள், காண் - நீ பார், எ-று.

(வி - ரை.) குவளை என்னுங் கொடியின் பெயர் முதலாகுபெயராய்ப் பூவையுணர்த்த அதுவும் இலக்கணையால் இதழையுணர்த்தியது. வையம் என்பது பூமி என்னும் பொருளை யுணர்த்தாமல் பொதுவாக உலகம் என்னும் பொருளை யுணர்த்திநின்றது. கடுவிடம் - பண்புத்தொகைநிலைத்தொடர். (கஉ)

கொழுநன் கொழுந்தாரை நீர்வீசக் கூசிச்
செழுமுகத்தைத் தாமரைக்கே சேர்த்தாள்—கெழுமியவக்
கோமகற்குத் தானினைந்த குற்றங்க ளத்தனையும்
பூமகட்குச் சொல்லுவாள் போல்.

(இ - ள்.) கொழுநன்-(ஒருபெண்) தன்நாயகன், கொழுந்தாரை-பெரிய நீர்த்தாரைகளை, வீச - (தன்மேல்) எறிய, கூசி-அஞ்சி, கெழுமிய - (தன்பால் அன்பு) மிக்க, அக்கோமகற்கு - சிறந்தவனாகிய அப்புருடனிடத்து, தான் நினைந்த - தான் கருதியறிந்த, குற்றங்கள் அத்தனையும்-குற்றங்களை யெல்லாம், பூ மகட்கு-தாமரைப்பூவில் வீற்றிருக்கும் திருமாமகளுக்கு, சொல்லுவாள்போல்-சொல்லுகின்றவள்போல, செழு முகத்தை - (தன் அழகினது) வளப்பத்தினையுடைய முகத்தை, தாமரைக்கே சேர்த்தாள் - (தாங்கள் நீராடுங் குளத்திலுள்ள) தாமரைப் பூவிற் சேர்த்தனள், எ - று.

(வி-ரை.) செழுமுகம் - பண்புத்தொகை நிலைத்தொடர். ஈண்டுச் செழுமை என்பது அழகினது வளப்பத்தினை யுணர்த்தியது. தாமரைக்கு என்பதில் நான்கனுருபு ஏழனுருபோடு மயங்கியது. தாமரை-முதலாகுபெயராய்ப் பூவையுணர்த்தியது. அவள் தன்நாயகன் வீசிய நீர்த்தாரைகள் படாதபடி தன்முகத்தைத் தாமரைப்பூவிற் பொருந்தச் சேர்த்து அப்பூவில் வீற்றிருக்கும் உலக மாதாவாகிய திருமாமகளிடந் தன்நாயகனுடைய குற்றத்தைச் சொல்லுதல் போன்றிருந்தது என்பது பின்னிரண்டடியின் கருத்து. (௬௩)

பொய்தற் கமலத்தின் போதிரண்டைக் காதிரண்டிற்
பெய்து முகமூன்று பெற்றாள்போ—லெய்த
வருவாளைப் பாரென்றான் மாற்றாரை வென்று
செருவாளைப் பார்த்துவக்குஞ் சேய்.

(இ - ள்.) செரு - போரில், மாற்றாரை - பகைவரை, வென்று - ஜெயித்து, - வாளை வாளாயுதத்தை, பார்த்து - நோக்கி, உவக்கும் -

சந்தோஷிக்கும், சேய் - வீரத்தினால் முருகனைப் போன்றவனாகிய நளச்சக்கரவர்த்தி, மொய்தல் - மகளிர் விளையாட்டுக்குரிய, கமலத்தின் போது இரண்டை - தாமரைக்கொடியினது இரண்டு பூக்களை, காது இரண்டில் - இரண்டு காதுகளில், பெய்து - வைத்துக்கொண்டு, முகமூன்று பெற்றாள்போல் - மூன்றுமுகங்களை யுடையவள்போல, எய்த வருவாளை - நமக்குச் சமீபமாக வருகின்றவளை, பார் என்றான் - பார் என்று சொன்னான், எ - று.

(வி-ரை.) பொய்தற்கமலம் - நான்கனுருபும் பயனும் உடன்றொக்கதொகை. கமலத்தின்போது - உறுப்புத்தற்கிழமைப் பொருளில் வந்த ஆறன்றொகை. பெற்றாள் - வினையாலணையும்பெயர். சேய் - உவமையாகுபெயர். (கசு)

பொன்னுடைய வாசப் பொருட்டு மலரலைபத்
தன்னுடனே மூழ்கித் தனித்தெழுந்த—மின்னுடைய
பூணா டிருமுகத்தைப் புண்டரிக மென்றயிர்த்துக்
காணா தயர்வானைக் காண்.

(இ - ள்.) பொன்னுடைய - மகரந்தங்களினுடைய, வாசம் - வாசனையினையும், பொருட்டு கொட்டையினையுமுடைய, மலர் அலைய - தாமரைமலர்கள் அலையும்படி, தன்னுடன் மூழ்கி - (குளத்து நீரில்) தன்னோடுமுழுகி, தனித்து எழுந்த - (தனக்குமுன்) தனியாய் எழுந்த, மின் உடைய - ஒளியினையுடைய, பூணாள் திருமுகத்தை - ஆபரணத்தினையணிந்த (தன்னாயகியின்) அழகியமுகத்தை, புண்டரிகம் என்று அயிர்த்து - தாமரை என்று ஐயங்கொண்டு, காணாது - (தன்னாயகியைக்) காணாமையால், அயர்வானை - தளர்கின்றவனை, காண் - பார், எ - று.

(வி-ரை.) பொன்னினுடைய என்பது இன் சாரியை தொகுத்தலாய்ப் பொன்னுடைய என்றாயிற்று. பொன் - உவமையாகுபெயராய்ப் பொன்போன்ற மகரந்தங்களை யுணர்த்தியது. வாசத்தையும், பொருட்டையும் உடைய மலர் என்க. ஒருவன் தன்னோடு நீரில் மூழ்கித்

தனக்கு முன்னெழுந்த தன்னாயகியின் முகத்தைத் தாமரையென்று ஐயமுற்றுத் தன் மனைவியைக் காணப்பெறாமல் வருந்தினான் என்பது இதன் கருத்து. இதனால் அவள் முகம் தாமரையோடு சிறிதும் வேறுபடாமல் ஒத்திருந்தது என்பது விளங்குதல் அறிக. வெண்டாமரையின் பெயராகிய புண்டரிகம் என்பது ஈண்டுச் செந்தாமரையை யுணர்த்தியது. நீரில் மூழ்கி உடனே எழுந்தமையினால் அவள் முகம் நீரினால் வெளுத்து வெண்டாமரையைப்போன்றிருந்தது என்னலாகாது. (கரு)

சிறுக்கின்ற வாண்முகமுஞ் செங்காந்தட் கையான்
முறுக்குநெடு மூரிக் குழலுங்—குறிக்கிற்
கரும்பாம்பு வெண்மதியைக் கைக்கொண்ட காட்சி
யரும்பாம் பணைமுலைபா யாம்.

(இ - ள்.) அரும்பு ஆம் - அரும்பையொத்த, பணை முலையாய் - பருத்த தனங்களையுடைய தமயந்தியே! சிறுக்கின்ற-சிறந்திருக்கின்ற, வாள் முகமும் - ஒளியையுடைய முகத்தையும், செம் காந்தள் கையால்- செந்நிறத்தினையுடைய காந்தட்பூப்போன்ற கையினால், முறுக்கும் - முறுக்கப்படும், நெடு - நீளமாகிய, மூரி -நெரிவினையுடைய, குழலும் - கூந்தலையும், குறிக்கின் - மதித்துப்பார்த்தால், கரும்பாம்பு - கருமையாகிய நிறத்தினையுடைய பாம்பாகிய இராகு, வெண்மதியை - வெண்மையாகிய நிறத்தினையுடைய சந்திரனை, கைக்கொண்ட-தன்னுட்கொண்ட, காட்சி ஆம் - தோற்றத்தினை யொக்கும், எ-று.

(வி - ரை.) சிறுக்கின்ற என்பது சிறந்திருக்கின்ற என்றபொருளில் வந்தது. நீராடிய பின்னர் நீரைப் போக்குதற்பொருட்டு மயிரை முறுக்காநின்றாள் என்க. காந்தட்கை-உவமைத் தொகைநிலைத்தொடர். குறிக்கின் என்பதில் குறி - பகுதி, கு - சாரியை; மற்றைய உறுப்புகளை உய்த்துணர்க. கைக்கொள்ளல் - தன்வசமாக்கிக் கொள்ளல். காட்சி - தொழிற்பெயர்; இதில் காண் பகுதி. அரும்பு தனத்தின் வடிவத்திற்கு உபமானமென்க. (கசு)

சோர்புனலின் மூழ்கி யெழுவாள் சுடர்நுதன்மேல்
வார்குழலை நீக்கி வருந்தோற்றம்—பாராய்
விரைகொண் டெழுந்தபிறை மேகத் திடையே
புரைகின்ற தென்னலாம் பொற்பு.

(இ-ள்.) சோர் புனலில் - ஓடுகின்றநீரில், மூழ்கி எழுவாள் - மூழ்கி எழுகின்ற ஒருமாது, சுடர் நுதல்மேல் - பிரகாசமாகிய நெற்றியின்மீது, வார் குழலை - படிந்து தொங்குகின்ற கூந்தலை, நீக்கிவரும் தோற்றம் - விலக்கிக்கொண்டு வருகின்ற அவள் நெற்றியின் தோற்றமானது, மேகத்திடை - மேகத்தினடுவில், விரை கொண்டு எழுந்த - விரைதலைக்கொண்டு எழுந்த (விரைவினுதித்த), பிறை - பிறைச்சந்திரனை, புரைகின்றது என்னல் ஆம் - ஒத்திருக்கின்றது என்று சொல்லும்படியான, பொற்பு - அழகினையுடையதா யிருக்கின்றது, பாராய் - காண், எ-று.

(வி-ரை.) சோர் புனல் - ஓடுகின்ற நதியினீர் என்க. வார் குழல்- வினைத்தொகை நிலைத்தொடர்; அது - வார்ந்தகுழல் என்றும். பாராய்- ஏவலொருமை வினைமுற்று. விரை - முதனிலைத் தொழிற்பெயர்; விரைவு என்பது பொருள். மேகத்திடை என்பது உறுப்புத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறன்றொகை; மேகத்தினது நடுவிடம் என்பது பொருள். உடையதாயிருக்கின்றது என்பது இசையெச்சம். (கஎ)

செழுநீல நோக்கெறிப்பச் செங்குவளை கொய்வாண்
முழுநீல மென்றயிர்த்து முன்னர்க்—கழுநீரைக்
கொய்யாது போவாளைக் கோல்வளைக்குக் காட்டினான்
மைபாரும் வேற்றடக்கை மன்.

(இ-ள்.) மை ஆரும் - கூர்மை பொருந்திய, வேல் தடக்கை மன் - வேலை ஏந்தியகையையுடைய நளமகாராஜன், கோல்வளைக்கு - அணிந்த வளையலையுடைய தமயந்திக்கு, செங்குவளை கொய்வாள் - செங்கழுநீர்மல

ளைப் பறிப்பவனாகி, நோக்கு - (தன்) கண்கள், செழு நீலம்-செழுமை யாகிய நீலநிறத்தை, எறிப்ப-வீசுதலால், முன்னர்க் கழுநீரை - (தன்) முன்னேயுள்ள செங்கழுநீர்ப்பூவை, முழு நீலம் என்று அயிர்த்து-முழு மையாகிய நீலப்பூவென்று சந்தேகித்து, கொய்யாது போவானை-கொய்யா மல் செல்கின்றவனாகிய ஒருமானை, காட்டினான் - காண்பித்தான், எ - று.

(வி-ரை.) செழுநீலம்-பண்புத் தொகைநிலைத்தொடர். நோக்கு - முதனிலைத்தொழிற்பெயர்; இது காரியவாகுபெயராய் நோக்குதற்குக் காரணமாகிய கண்ணை யுணர்த்திற்று. கருவிப்பொருள் விகுதியாகிய அம் என்பதைப் பெற்று நோக்கம் என்று வரும். நோக்கு செழுநீலம் எறிப்ப என்க. ஈண்டு நீலம் என்றது நீலநிறத்தை. கொய்வான் - முற் றெச்சம். முழுநீலம் என்பதும் பண்புத்தொகைநிலைத்தொடரே. இதில் முழு என்றது மலரும் பதத்தை யுணர்த்தியது. ஈண்டு நீலம் என்றது பண்பாகுபெயராய்ப் பூவை யுணர்த்தியது. கோல்வளை - வினைத் தொகைநிலைத்தொடர். மன் - தலைமை; இதுவும் பண்பாகுபெயராய் அரசனை யுணர்த்தியது. (கஅ)

காவி பொருநெடுங்கட் காதலியுங் காதலனும்
வாவியு மாறுங் குடைந்தாடித் — தேவிற்
கழியாத சிந்தையுடன் கங்கைநதி யாடி
யொழியா துறைந்தா ருவந்து.

(இ - ள்.) காவி பொரும் - நீலோற்பலத்தை யொத்த, நெடும் கண் - விசாலமாகிய கண்களையுடைய, காதலியும் - அன்புடைய நாயகியாகிய தமயந்தியும், காதலனும் - அன்புடைய நாயகனாகிய நளச் சக்கரவர்த்தியும், வாவியும் ஆறும்-குளங்களிலும் ஆறுகளிலும், குடைந் தாடி-திளைத்து நீராடி, தேவின்-கடவுளிடத்து, கழியாத சிந்தையுடன்-நீங்காத மனத்தோடு, கங்கை நதியாடி-கங்கைநதியில் மூழ்கி, ஒழியாது-ஒருவரை ஒருவர் விட்டுப் பிரியாமல், உவந்து இருந்தார்-வசித்திருந் தனர், எ - று.

(வி-ரை.) வாவியும் ஆறும் என்றவற்றுள் ஏழனுருபைச் சேர்க்க. கங்கைநதி - இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடர். நிடத நாட்டை நோக்கிச் செல்வோர் இங்ஙனங் குளங்களிலும், கங்கையிலும், பிற நதிகளிலும் நீராடி ஒருவரை யொருவர் பிரியாமல் களிப்புற்றவ ராயினர் என்பது இதன் கருத்து. (௧௯)

நறையொழுக வண்டுறையு நன்னகர்வாய் நாங்க
ளுறையு மிளமரக்கா வொக்கு—மிறைவளைக்கைச்
சிற்றிடையாய் பேரல்குற் றேமொழியாய் மென்முறுவற்
பொற்றொடியாய் மற்றிப் பொழில்.

(இ-ள்.) இறை வளை கை-மேன்மையாகிய சங்கு வளையலையணிந்தகையையும், சிறு இடையாய்-சிறிய இடையையும் உடையவளே, பேர் அல்குல் - பெரிய அல்குலையும், தேம் மொழியாய் - இனிமையாகிய மொழியையும் உடையவளே, மெல் முறுவல் - புன்னகையையும், பொன் தொடியாய்-பொன்னாலாகிய வளையலையும் உடையவளே, இப் பொழில் - இச்சோலை, நறை ஒழுக - தேன் ஒழுகும்படி, வண்டு உறையும் - (மலர்களில்) வண்டுகள் வசிக்கின்ற, நன்னகர்வாய் - பல நலங்களையுமுடைய மாவிந்தநகரில், நாங்கள் உறையும்-நாங்கள் இருக்கும், இளமரக்கா ஒக்கும்-இளமையாகிய மரங்களையுடைய சோலையை ஒப்பாகும், எ-று.

(வி-ரை.) என்று கூறினான் என்பது இசையெச்சம். ஈண்டு நளன் தங்கள் மாவிந்தநகரையுங்குறிக்க நாங்கள் என்று கூறினன். தமயந்தி நளன் ! தன்னோடு தன்காதன் மங்கையரைக்கூட்டி நாங்கள் என்று கூறினான் என்று கொண்டு ஊடல் கொள்கின்றாள். அதனை அடுத்து வரு மூன்று செய்யுட்களால் உணர்க. ஒழுக-காரியப்பொருளதாதலின் எதிர்கால முணர்த்தியது. மற்று - அசை. (௨௦)

கன்னியர்தம் வேட்கையே போலுங் களிமழலை
யின்னளிவா யுள்ளோ ரிடமொரா—மன்னவனே

இக்கடிகா நீங்க ளுறையு மிளமரக்கா
ஒக்குமதோ வென்றா ளுயிர்த்து.

(இ-ள்.) தன் மணி வாயுள் - (தமயந்தி) தன்னுடைய அழகாகிய வாயில், களி மழலை-(கேட்டோர்க்குக்) களிப்பைத்தரு மழலைச்சொற்கள், தடுமாற - குழற, மன்னவனே - அரசனே, இக்கடிகா - இந்த வாசனையையுடைய சோலை, நீங்கள் உறையும் - நீங்கள்வசிக்கும், இளமரக்கா - இளமையாகிய மரங்களையுடைய சோலையை, ஒக்குமதோ - ஒப்பதுவோ, கன்னியர்தம் வேட்கையேபோலும்-(நீர் இங்ஙனங்கூறிய தற்குக் காரணம் முன்னம் உம்மால் அடையப்பட்ட) பெண்களிடத்து உமக்கு உள்ள ஆசைதான்போலும், என்றாள் உயிர்த்து - என்று சொல்லிப் பெருமூச்செறிந்தாள், எ-று.

(வி-ரை.) புகழேந்தியார் தமது புகழைப் புலவர்தம் மனங்களெல்லாம் ஏந்திப் புகழும்படி இச்செய்யுளைச் செய்திருக்கின்றனர். இவர் இதில் தமயந்தியின் உரையாக உரைத்த 'மன்னவனே, இக்கடிகா நீங்க ளுறையு மிளமரக்கா, ஒக்குமதோ' என்றதில் 'இக்கடிகா நீங்களுறையு மிளமரக்கா வொக்குமதோ' என்றதனால் தமயந்தியின் ஆற்றாமையையெல்லாம் ஒருங்கே எவ்வளவு அழகாய் விளக்கி யிருக்கின்றனர் என்பதை யுய்த்துணர்க. இதனாற்றோன்றும் குறிப்புப்பொருளின் இன்பம் இத்தன்மையதாமென்று புறத்தார்க்கு விளங்கப் புகலற்கரியதா மாகலின் அஃது அகப்பொருளாம் இன்பமேயாகும். பலர்க்கும் பொதுவினைமைந்திருத்தலன்றி ஒருபாலமைந்திருத்தல் மன்னர்க்குத்தகுதியன்றாமாகலின் நீர் என்னொருத்தியின்பாலே அமைந்த அன்பினரா யில்லாமல் பல பெண்களிடத்தும் பொதுவினமைந்த அன்பினரா யிருக்கின்றீர் என்பாள் 'மன்னவனே' என்றாள். வெளிப்படைப் பொருளினதாயிச்சொல் ஈண்டு இக்குறிப்புப் பொருளைத் தன்கண் எவ்வளவு அழகாகக் கொண்டிருக்கின்றதென்பதைக் கவனிக்க. சொற்களிற் பொற்றொடி என்றாற்போல்வன குறிப்பாகப் பொருளுணர்த்துவன எனவும்,

மன்னன் என்றாற்போல்வன வெளிப்படையாகப் பொருளை யுணர்த்துவன எனவுங் கொள்க. என்னெனின் பொற்றொடி என்பது வந்தாள் என்னும் வருமொழியின் குறிப்பால் பொன்னாலாகிய தொடியினை யுடையாள் என்னும் பொருளை யுணர்த்தலானும், மன்னன் என்பது அங்ஙனம் யாதொரு குறிப்பும் வேண்டாது அரசன் என்னும் பொருளை யுணர்த்தலானும் முறையே இவை குறிப்பும் வெளிப்படையு மாயினவென்க. இயற்சொல், திரிசொல் என்னும் இருவகைச் சொற்களினும் இக்குறிப்பும் வெளிப்படையுமாகிய சொற்களுண்டு. இவற்றின் விரிவைப் பெரிய சொல்லிலக்கண நூற்களைக் கண்டுணர்க. தமயந்தி தன் காதலனுக்குத் தன்னிடமேயன்றி மற்றுஞ் சில கன்னியரிடத்தும் வேட்கையுற்றுளதுபோலும் என்று தனக்குள் எண்ணிய மாத்திரத்தில் அவளுக்குண்டான வருத்தத்தினால் அவள் வாயிற்சொற்கள் தடுமாறினவென்பார் 'களிமழலை, தன்மணிவா யுள்ளே தடுமாற' என்றார். அம்மொழிகளை அவர் 'கனிமொழிகள்' என்று கூறியிருக்கலாம். அங்ஙனங் கூறாமல் 'களிமழலை' என்று கூறியது இவ்விடத்து மிகவும் மகிழ்ச்சியைத் தருகின்றது. களிமழலை - இரண்டனுருபும் பயனு முடன்றொக்கதொகை. கடிகா - உரிச்சொற்றொடர். மரக்கா - இரண்டனுருபும் பொருளும் உடன்றொக்க தொகை. (உ௬)

தொண்டைக் கனிவாய் துடிப்பச் சுடர்நுதன்மேல்
வெண்டரள மென்ன வியர்வரும்பக்—கெண்டைக்
கடைசிவப்ப நின்றாள் கழன்மன்னர் வெள்ளைக்
குடைசிவப்ப நின்றான் கொடி.

(இ - ள்.) கழல் மன்னர் - வீரக்கழலையணிந்த அரசர்களுடைய, வெள்ளைக்குடை - வெண்மையாகிய குடைகள், சிவப்ப - (அவர்தம் உதிர வெள்ளத்திற்றோய்ந்து) சிவக்கும்படி, நின்றான் கொடி - (வெற்றியுடன்) நின்றவனாகிய வீமராஜனுடைய பெண்ணாகிய தமயந்தி, தொண்டைக் கனிவாய் - கொவ்வைக் கனியைப்போன்ற இதழ்கள்,

துடிப்ப - துடிக்கவும், சுடர் நுதல்மேல்-ஒளியினையுடைய நெற்றியின் மீது, வெள் தாளம் என்ன - வெண்மையாகிய முத்துகளைப்போல; வியர்வு அரும்ப - வியர்வைநீர் தோன்றவும், கெண்டைக்கடை - கயல் மீன்களைப்போன்ற கண்களின் கடைகள், சிவப்ப - சிவக்கவும், நின்றாள் - (கோபத்துடன் அசைவற்று) நின்றாள், எ - று.

(வி - ரை.) ஈண்டுத் தமயந்தியைத் தன்னோடு மாறுபட்ட பகையரசர்களுடைய குடை முதலியனவும் தமது தன்மையின் மாறும்படி செய்யவல்ல வீரனாகிய வீமனது புத்திரி என்ற பொருளின் ஆற்றலால் அவள் தன் சினத்தால் நளச்சக்கரவர்த்தியின் மனத்தின் வன்மைத்தன்மையை மாற்றித் தளர்விக்கவல்ல எழில் நலமுடையாள் என்னுங் குறிப்புப்பொருள் தோன்றுதல் காண்க. தமயந்தி நளனைக் கோபத்தோடு கடைக்கண்ணாற் பார்த்து நின்றனள் என்பார் 'கெண்டைக் கடைசிவப்ப நின்றாள்' என்றார். தொண்டைக்கனி - தொண்டைச்செடியினது கனி. கனிவாய் - உவமைத்தொகை. வாய்-முதலாகு பெயராய் இதழை யுணர்த்தியது. துடிப்ப, அரும்ப, சிவப்ப என்னும் செயவெனெச்சங்கள் ஈண்டுக் காரியப்பொருளன; ஆதலின், இவை எதிர்காலங் குறித்தன. இவற்றின் காரணமாகிய கோபம் என்பது இசையெச்சமாய்த் தொக்குநின்றது. கொடி யென்பது உவமையாகு பெயராய்க் கொடிபோல்வாளை யுணர்த்தியது. கொடிபோலுந் தளருமியல்பினையுடைய அவள் கோபத்தினால் தளர்வின்றி அசைவற்று நின்றனள் என்பார் 'கொடி நின்றாள்' என்றார். இதனால் மென்மையாகிய இயல்பினை யுடையவர்களுக்கும் கோபமுற்றகாலத்தில் வன்மையாகிய இயல்புண்டாய்விடும் என்னும் பொருள் தோன்றுதலறிக. இதுவும் பொருளாற்றலாற் றோன்றிய குறிப்புப்பொருளே. (உஉ)

திங்கள் புலவித் தலையிற் றணித்திருந்த
மங்கை வதன மணியரங்கி—லங்கண்
வடிவாண்மேற் கால்வளைத்து வார்புருவ மென்னுங்
கொடியாடக் கண்டானக் கோ.

(இ-ள்.) தங்கள் புலவித்தலையில் - தங்களது ஊடற்காலத்தில், தனித்து இருந்த - (களைவிட்டுச் சிறிது விலகித்) தனியாய் நின்ற, மங்கை - தமயந்தியின், வதனம் - முகமாகிய, மணி அரங்கில் - (முத்துப்பவழ முதலிய) மணிகளா லலங்கரிக்கப்பட்ட சபையில், அம் கண் - அழகிய கண்களாகிய, வடிவாள்மேல் - கூர்மையாகிய வாள்களின்மீது, வார் புருவம் என்னும் - நீண்ட புருவங்களாகிய, கொடி - பூங்கொடி (பெண்), கால்வளைத்து - நுனியை வளைவுபடுத்தி (காலை வளைத்து), ஓர் கூத்து - ஒரு கூத்தை, ஆடக்கண்டான் - ஆடப்பார்த்தான், எ-று.

(வி-ரை.) புலவித்தலை - ஆறன்றொகை; தலை என்பது ஈண்டுக் காலத்தை யுணர்த்தியது இலக்கணை. புலவித்தலையில் என்பதைத் தலைப் புலவியில் என மாற்றித் தங்களுக்குண்டான முதல் ஊடலில் என் றுரைப்பினுமாம். இப்பொருளில் இது பண்புத்தொகை நிலைத்தொடரம் எனவும், தலைப்புலவி என்னுந் தொடரின் மொழிகள் நிலைமாறிப் புலவித்தலை என்றாயின எனவுங் கொள்க. வதன அரங்கு, மணியரங்கு என இயைக்க. இவற்றுள் முன்னது பண்புத்தொகைநிலைத்தொடர், பின்னது மூன்றனுருபும் பொருளும் உடன்றொக்க தொகை. இரண்ட னுருபும்பொருளுமுடன்தொக்க தொகையாகக் கொண்டு மணிகளை யுடைய அரங்கு என்று பொருள் கூறுதலுமாம். ஈண்டு மணிகளாவன- பற்களாகிய முத்துக்களும், இதழ்களாகிய பவழமும், கண்களாகிய நீலமுமாகும். ஈண்டுக் கண்கள் ஒருவகையில் நீலமணிகளாகவும் ஒரு வகையில் வாள்களாகவுங் கொள்ளப்பட்டன. ஈண்டுக் கால், கொடி என்பன சிலேடைப் பொருள் பயந்துநின்றன. (உ௲)

சில்லரிக் கிண்கிணிமென் றெய்வமலர்ச் சீறடியைத்
தொல்லை மணிமுடிமேற் சூட்டினான்—வல்லை
முழுநீலக் கோதை முகத்தே மலர்ந்த
செழுநீல மாறுச் சிவப்பு.

(இ - ள்.) சில் அரி - சில்லென்னும் ஒலியையும் பருக்கைக் கற்களையுமுடைய, கிண்கிணி - சதங்கையை யணிந்த, தெய்வம் - தெய்வத் தன்மையினையுடைய, மெல் மலர் சீறடி - மென்மையாகிய தாமரை மலரைப்போன்ற (தமயந்தியினது) சிறிய அடிகளை, தொல்லை - பழமையாகிய, மணி முடிமேல் - ரத்தினங்களைப் பதித்த தன் கிரீடத்தின் மீது, சூட்டினான் - (நளன்) சூட்டிக்கொண்டான்; வல்லை - உடனே, முழுநீலக்கோதை - முழுதுங் கருமையாகிய நிறத்தினையுடைய கூந்தலையுடையவளாகிய அத்தமயந்தியினுடைய, முகத்து - முகத்தில், செழு நீலம் - செழுமையாகிய கண்கள், சிவப்பு மாற - (கோபத்தினாலுண்டான) சிவப்புநிறம் நீங்கி, மலர்ந்த - மலர்ந்தன, எ - று.

(வி - ரை.) நளன் தமயந்தியின் கோபத்தைக் கண்டு அவளடியில் வணங்குதலும் அவள் உடனே கோபம் நீங்கி அவனை அன்புடன் பார்த்தாள் என்பது இதன் கருத்துப்பொருள். கூந்தல் என்னும் பொருளதாகிய கோதை என்பது ஈண்டுச் சினையாகுபெயராய்ப் பெண்ணை யுணர்த்தியது. நீலம் என்பது ஈண்டு உவமையாகுபெயராய் நீலமலர் போன்ற கண்களை யுணர்த்திற்றென்க. சில்-ஒலிக்குறிப்பு. கிண்கிணி - கிண்கிண் என்னும் ஓசையையுடையது என்னும் பொருளது. சீறடி - பண்புத்தொகை நிலைத்தொடர்; இது விரியின் சிறுமையாகிய அடி என்றாம். நீலம் என்றதற்கேற்ப மலர்ந்த என்றது ஒருவகைச் சொல்நயமென்க. (உ௪)

> அங்கைவேன் மன்ன னகல மெனுஞ்செறுவிற்
> கொங்கையேர் பூட்டிக் குறுவியர்நீ—ரங்கடைத்துக்
> காதல் வரம்பொழுக்கிக் காமப் பயிர்விளைத்தாள்
> கோதையரின் மேலான கொம்பு.

(இ - ள்.) கோதையரின் - பெண்களுக்குள், மேலான - மேன்மையையுடையவளான, கொம்பு - பூங்கொம்பு போன்றவளாகிய தமயந்தி, அம் கை - அழகிய கையிலேந்திய, வேல் - வேலையுடைய, மன்னன் - நளச்

சக்கரவர்த்தியினுடைய, அகலம் என்னும் - மார்புகள் என்று சொல்லப்படும், செறுவில் - (இரண்டு) வயல்களில், கொங்கை ஏர் பூட்டி - தன் தனங்களாகிய (இரண்டு) ஏர்களைச் செலுத்தி, குறுவியர் நீர்-சிறு வியர்வையாகிய நீரை, அங்கு அடைத்து - அவ்வயல்களிற் பாய்ச்சி, காதல் வரம்பு - காதலாகிய வரம்பை, ஒழுக்கி-ஒழுங்குபடுத்தி, காமப்பயிர் விளைத்தாள் - காமமாகிய பயிரை விளைத்தனள், எ-று.

(வி - ரை.) பிறகு தமயந்தி நளனுடன் கூடி யின்புறுகர்ந்தனள் என்பது இதன் கருத்து பூட்டி என்பது ஈண்டுச் செலுத்தி என்னும் பொருளைத்தந்தது இலக்கணை. ஒழுக்கி-பிறவினை; இது தன்வினையில் ஒழுகி என்றாம். விளைத்தாள் என்பதும் பிறவினையே. கொம்பு-உவமையாகுபெயர். (௨௫)

வேரி மழைதுளிக்கு மேகக் கருங்கூந்தற்
காரிகையுந் தானும்போய்க் கண்ணுற்றான்—மூரித்
திரையேற மென்கிடங்கிற் சேலேற வாளை
கரையேறுங் கங்கைக் கரை.

(இ-ள்.) வேரி மழை - தேனாகிய மழையை, துளிக்கும் - பெய்கின்ற, கருமேகக்கூந்தல்-கரிய மேகம்போன்ற கூந்தலையுடைய, காரிகையும் - தமயந்தியும், தானும் போய் - தானுஞ்சென்று, மெல் கிடங்கில் சேல்-மென்மையாகிய அகழியிலுள்ள சேல்மீன்கள், மூரித்திரை ஏற - வலிய திரைகள் மிகும்படி, ஏற - (தன் கண் வந்து) பாய்தலால், வாளை - (தன் கண் உள்ள) வாளைமீன்கள், கரை ஏறும்-கரையில் ஏறும்படியான, கங்கைக்கரை - கங்கை நதியின் கரையை, கண்ணுற்றான் - பார்த்தான், எ-று.

(வி-ரை.) அகழியில் உள்ள சேல்மீன்கள் வலியதிரை மிகும்படி கங்கையிற் பாய்தலால் கங்கையிலுள்ள வாளைமீன்கள் கரையில் ஏறுகின்ற வென்க. தேன்மழையைப் பெய்யும் கரியமேகம் ஒன்றிருந்தால் அதைப்போன்ற கூந்தல் என்றார் என்க. இஃது இல்பொருளுவமை.

நீர்மழைத்துளிக்கு மேகம் வானிடையிருக்தலால் வேரி மழைத்துளிக்குக் கரிய மேகமொன்று தமயந்தியின் கூந்தலின் வடிவாய் அமைந்தது என்பார் 'வேரிமழைத்துளிக்கு மேகக்கருங்கூந்தல்' என்றார். என்பதுமாம். இப்பொருளில் மேகக்கூந்தல் என்றதற்கு மேகமாகிய கூந்தல் என்று பொருள் கூறுக. இவ்விருபொருளினு மேகக் கருங்கூந்தல் என்பதை கருமேகக்கூந்தல் எனவே இயைக்க. முற்பொருளில் மேகக் கூந்தல் என்பது உவமத்தொகை. பிற்பொருளில் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. திரையேற என்பதில் ஏறவென்பது காரியப்பொருளதாகிய செயவெனெச்சம். சேலேற என்பதில் ஏற என்பது காரணப் பொருளதாகிய செயவெனெச்சம். (உசு)

சூதக் கனியூற லேற்ற சுருள்வாழை
கோதி னறவேற்குங் குப்பியென—மாதரார்
ஐயுற்று நோக்கு மகன்பொழில்சென் றெய்தினான்
வையுற்ற வேற்றானை மன்.

(இ-ள்.) வை உற்ற - கூர்மை பொருந்திய, வேல் தானை மன் - வேலையேந்திய சேனைகளையுடைய நளச்சக்கரவர்த்தி, சூதம் - மாமரங்களினுடைய, கனி ஊறல் - பழங்களின் சாற்றை, ஏற்ற - ஏற்றுள்ள, சுருள் வாழை - சுருளாகிய வாழைக்குருத்துகளை, கோதில்-குற்றமில்லாத, நறவு ஏற்கும் - தேனையேற்றுள்ள, குப்பி என - குப்பி என்று, மாதரார் - பெண்கள், ஐயுற்று நோக்கும்-சந்தேகமுற்றுப் பார்க்கின்ற, அகன்பொழில்- விசாலமாகிய சோலையை, சென்று எய்தினான் - போயடைந்தான், எ - று.

(வி-ரை) ஊறல் - தொழிற்பெயர்; இது தொழிலாகுபெயராய்த் தேனை யுணர்த்தியது. சுருள்-முதனிலைத்தொழிற்பெயர்; இது விகுதி பெறின் சுருட்சி என்றாம். இதனடியாகச் சுருண்ட, சுருண்டு, சுருண்டது என வினைவிகற்பங்க ளுண்டாதலறிக. சுருள் வாழை - சுருட்சியாகிய வாழை என்றுதலாற் பண்புத்தொகையிலைத்தொடர். வாழை

என்பது ஈண்டுக் கருத்தை யுணர்த்தியது இலக்கணை. குப்பி - ஒரு வகை எனம். அகல்பொழில் அகன்பொழில் என்றாயிற்று; இதனை நன்னூல் மெய்யீற்றுப்புணரியலில் "குறிசெறியாலள" என்னும் உசு-ம் சூத்திரத்தில் "பிற" என்ற மிகையில் அடக்குக. இங்ஙனமே அகன் பரப்பு, விழன்காடு எனப் பிறவும் வருதல் காண்க. ஐயம் என்பதில் அம் கெட்டது நீல் என்பதிற்போன்ற கடைக்குறை விகாரம் என்க. (உஎ)

வான்றோய நீண்டுயர்ந்த மாடக் கொடிநுடங்கத்
தான்றோன்று மற்றித் தடம்பதிதான்—வான்றோன்றி
வில்விளக்கே பூக்கும் விதர்ப்பநா டாளுடையா
னல்விளக்கே யெங்க ணகர்.

(இ-ள்.) வான் தோன்றி - மேன்மையாகிய செங்காந்தட்பூ, வில் விளக்கே பூக்கும்-ஒளியையுடைய விளக்கேபோலப்பூக்கின்ற, விதர்ப்ப நாடு - விதர்ப்பநாட்டை, ஆளுடையான் - ஆளுதலையுடைய (ஆள் கின்ற)வனாகிய வீமராஜனுடைய, நல் விளக்கே - நன்மையாகிய விளக் குப்போன்ற புத்திரியே, எங்கள் நகர்-எங்கள் பட்டணம், வான் தோய-ஆகாயத்தையளாவ, நீண்டு உயர்ந்த - மிகவுமுயர்ந்த, மாடக்கொடி - மாடங்களிலுள்ளகொடிகள், நுடங்கத்தோன்றும் - அசைந்தாடாநிற்கக் காணப்படுகின்ற, இத்தடம்பதிதான் - இந்தவிசாலமாகிய பதியேயா கும், எ-று.

(வி - ரை.) தான்றோன்று என்பதிலுள்ள தான் என்பதும், மற்று என்பதும் அசைகள். தடம்பதிதான் என்பதில் தான் தேற்றப்பொரு ளது. வான்றோய நீண்டுயர்ந்த என்பதை மாடத்துக்கேனும், கொடிக்கே னும், அவ்விரண்டுக்குமேனும் அடையாக்குக. விளக்கே பூக்கும் என்ற விடத்துப் போல என்னும் சொல் இசையெச்சமாக வருவிக்கப்பட்டது. பூக்கும் விதர்ப்பநாடு என்க. ஆளுடையான்-இரண்டன்தொகை. ஆள்-முதனிலைத் தொழிற்பெயர்; விகுதிபெறின் ஆளுதல், ஆளல் என்றாம். தமயந்தி தன் கற்புமுதலிய குணங்களால் வீமராஜனுடைய புகழை என்

றும் விளங்கச் செய்தலால் 'விதர்ப்பநாடாளுடையா னன்விளக்கே' என்றுனென்பது. நகர் பதியேயாகும் என வினைமுடிக்க. (உஅ)

பொய்கையும் வாசப் பொழிலு மெழிலருவிச்
செய்குன்று மாறுந் திரிந்தாடித்—தையலுட
னீரண்டாண் டெல்லை கழித்தா னடையலரைக்
கூறிரண்டாக் கொல்யானைக் கோ.

(இ-ள்.) அடையலரை-பகைவர்களை, கூறு இரண்டு ஆ(க)-இரண்டு துண்டாகும்படி, கொல் - கொல்லுகின்ற, யானைக்கோ - யானைச் சேனையையுடைய நளச்சக்கரவர்த்தி, தையலுடன்-தமயந்தியோடு, பொய்கையும்-குளங்களிலும்,வாசப்பொழிலும்-வாசனையினையுடையசோலைகளிலும், எழில் அருவி - அழகினையுடைய அருவிகளிலும், செய் குன்றும்-மனிதர்களாற் செய்யப்பட்ட குன்றுகளிலும், ஆறு-ஆறுகளிலும், திரிந்து ஆடி - சென்றுவிளையாடி, ஆறு இரண்டாண்டு எல்லை - பன்னிரண்டு வருஷத்தின் எல்லையை, கழித்தான் - போக்கினன், எ-று.

(வி-ரை.) நளச்சக்கரவர்த்தி, கலியாணமான பிறகு தமயந்தியுடன் பன்னிரண்டுவருஷம் வரையிலும் இங்ஙனங் களிப்புடன் யாதொரு துன்பமுமின்றி வாழ்ந்திருந்தான் என்பது கருத்து. செய்குன்று-இயற்கையாகத் தோன்றுங் குன்றுகளைப்போலன்றி மனிதராற் செய்யப்படுவது. அரசர்கள் தாங்கள்சென்று விநோதமாகக் காலங்கழித்தற்பொருட்டுச் சோலைமுதலிய இடங்களில் இங்ஙனஞ்செய்விப்பர். கோ-பூண்பாற் பெயர். (உக)

கோல நிறம்விளர்ப்பக் கொங்கை முகங்கருக
நீல நிறமயிர்க்கா னின்றெறிப்ப—நூலென்னத்
தோன்றா நுண்மருங்கு றேன்றச் சுரிகுழலா
ளீன்றாள் குழவி யிரண்டு.

(இ - ள்.) சுரி குழலாள் - சுருண்டகூந்தலையுடைய தமயந்தி, கோலம் நிறம் விளர்ப்ப - (தன் தேகத்தில்) அழகாகிய நிறம் வெளுப்

படையவும், கொங்கை முகம்-தனங்களின்முனை, கருக-கருநிறமடைய வும், மயிர்க்கால் - தேகத்திலுள்ள மயிரின் அடிகள், நீலநிறம் நின்று - நீலநிறத்தை யடைந்து, எறிப்ப - (அந்நீலமாகிய) ஒளியை வீசவும், நூல் என்ன - நூலைப்போல, தோன்றாத - (சிறிது தூரம் இருப்பார் கண்ணுக்குப்) புலப்படாத, நுண் மருங்குல் - சிறிய இடை, தோன்ற - யாவர் கண்ணுக்கும் புலப்படவும் (கருவுற்றிருந்து), இரண்டு குழவி ஈன்றாள் - இரண்டு பிள்ளைகளைப் பெற்றாள், எ-று.

(வி - ரை.) இங்குக் கூறியனவெல்லாங் கருப்பச் சின்னங்கள். கோலநிறம் - பண்புத்தொகைநிலைத்தொடர். சுரிகுழலாள் - வினைத் தொகைநிலைத்தொடர். விளர்ப்ப, கருக, எறிப்ப, தோன்ற என்னும் செயவென் எச்சங்கள் காரியப்பொருளன. இவற்றுக்குக் காரணம் கரு வுற்றிருந்தமையாகலான் கருவுற்றிருந்து என்னுஞ் சொற்கள் இசை யெச்சமாக வருவிக்கப்பட்டன. (௩0)

ஆண்டிரண்டா றெல்லை யளவுந் திரிந்தேயுங்
காண்டகைய வெங்கலியுங் காண்கிலா—னீண்டபுகழ்ச்
செந்நெறியாற் பார்காத்த செங்கோ னிலவேந்தன்
றன்னெறியால் வேறோர் தவறு.

(இ - ள்.) காண் தகைய - எவரிடத்தும் எளிதில் குற்றங் காணுந் தன்மையினையுடைய, வெம் கலியும் - கொடுமையையுடைய கலியும், ஆண்டு இரண்டு ஆறு எல்லையளவும் - பன்னிரண்டு வருஷங்களின் முடிவுவரையினும், திரிந்தும் - (சுற்றித்) திரிந்தும், நீண்ட புகழ்-மிகு ந்த புகழினையும், செம் நெறியால்-தருமமாகிய வழியினால், பார் காத்த- பூமியை ஆண்ட, செங்கோல் - செங்கோலினையுமுடைய, நிலவேந்தன் தன் - நிடதநாட்டரசனாகிய சக்கரவர்த்தியினுடைய, நெறியால் - முறையான ஒழுக்கத்தில், வேறு ஓர் தவறு - பிறகூறப்படுங் குற்றத்தி னும் வேறான ஒரு குற்றத்தையும், காண்கிலான் - பார்த்திலன், எ-று.

(வி-ரை.) காண் தகைய-ஈண்டு எவரிடத்தும் எளிதிற் குற்றம் என்னுஞ் சொற்கள் இசையெச்சமாக வருவிக்கப்பட்டன. வெங்கலியும் என்பதில் உம்மை உயர்வுசிறப்புப்பொருளது. என்னெனின், எவரிடத்தும் எளிதிற் குற்றங்காணும் ஆற்றலுள்ள கலியும் எனக் கலிபுருடனது ஆற்றலின் உயர்வைச் சிறப்பித்து நிற்றலின் என்பது. இங்ஙனமன்றி நல்லோர்கள் அவனிடங் குற்றங் காணாமையேயன்றி எவரிடத்துங் குற்றங்காணும் இயல்பினையுடைய கலிபுருடனுங் கண்டிலன் எனக் கொள்ளின் அஃது இழிவுசிறப்பாம் என்க. திரிந்தும் என்பதில் உம்மையும் அங்ஙனம் இருவகைச் சிறப்பாகவுங் கொள்ளற்குரியதே. கொள்ளுமாறு:—"குறவரு மருளுங் குன்று" என்பதில் என்பதற்கு மலைகளில் அஞ்சாமல் வசிக்குங் குறவரு மருளுங் குன்று எனப் பொருள்கொள்ளுதல்போல எவரிடத்தும் எளிதிற் குற்றங்காணும் ஆற்றலுடைய கலிபுருடன் பன்னிரண்டு வருடங்கள் திரிந்துங் கண்டிலன் எனப் பொருள் கொள்ளின் உயர்வுசிறப்பாம் எனவும், "அவன் அங்தச் சென்றும் உணர்ந்திலன்" என்பதிற்போலக் கலிபுருடன் பன்னிரண்டுவருடங்கள் திரிந்துங் கண்டிலன் எனக் கொள்ளின் இழிவு சிறப்பாம் எனவுங் கொள்க. இரண்டு ஆறு - பண்புத்தொகைநிலைத்தொடர், இரண்டாகிய ஆறு என நிற்றலின். ஓர் தவறு என்பதில் இழிவு சிறப்பும்மை தொக்குநின்றதென்க. (௩௧)

சந்திசெயத் தாள்விளக்கத் தாளின் மறுத் தான்கண்டு
புந்தி மகிழப் புகுந்துகலி—சிந்தையெலாந்
தன்வயமே யாக்கித் தமைய னுடனிருந்தான்
பொன்னசல மார்பற் புகைந்து.

(இ-ள்.) சந்தி செய - சந்தியாவந்தனத்தைச் செய்தலுக்காக, தாள் விளக்க - பாதத்தைக் கழுவுகையில், தாளில் - அப்பாதத்தில், மறு - (உண்டாகிய) குற்றத்தை, புந்தி மகிழ-மனங்களிக்கும்படி, தான் கண்டு-தான் பார்த்து, புகுந்து-(நளராசனிடத்துச்) சேர்ந்து, கலி-கலிபுருஷன்

சிந்தை எல்லாம் - (அவனது) எண்ணங்களை யெல்லாம், தன்வயமே ஆக்கி - தன்வசமாகவே செய்து, பொன் அசல மார்பன் - பொன்மலை போலும் மார்பையுடையானாகிய அந்நளராசனை, புகைந்து - கோபித்து, தமையனுடன் இருந்தான் - (நளனுக்கு) மூத்தோனாகிய புஷ்கரராச னோடு இருந்தான், எ - று.

(வி - ரை.) புட்கரனைத் தமைய னென்றது முறையைப்பற்றி யன்று; மூத்தவனாதலைப்பற்றி. நளனிடஞ் சார்தற்குப் பன்னிரண்டு வருடங்காத்தும் அவனொழுக்கத்தில் ஓர் குற்றமுங் காணாமல் துன்ப முற்றிருந்தவனாதலால் 'புந்திமகிழக்கண்டு' என்றார். செய, மகிழ இவ் வெச்சங்கள் காரியப்பொருளனவாய் நின்றமையால் எதிர்காலத்தை உணர்த்தின. விளக்க என்னும் எச்சம் காரணப்பொருட்டும் காரியப் பொருட்டும் அல்லாமையால் நிகழ்காலத்தை யுணர்த்தியது. ஏ-பிரிநிலை. ஆக்கி-பிறவினையாகிய இறந்தகாலவினையெச்சம்; ஆக்கு-பகுதி, உகரத் தின் திரிபாகிய இ விகுதி, உகரக்கேடு சந்தி. ஆ என்னும் தன்வினைப் பகுதியைப் பிறவினை படுத்தும் விகுதி கு, க்-சந்தி. இவ்வாறன்றிக் குச் சாரியை பெற்று நின்ற ஆகு என்னுந் தன்வினைப்பகுதி, நெடிற் றொடர்க் குற்றியலுகரமாதலால் கூடு கூட்டு, ஏறு ஏற்று என்பனபோ லப் பகுதி ஒற்று இரட்டிப் பிறவினைப்பகுதியானதெனினும் பொருந் தும். சிலர் ஆகு என்பதே தன்வினைப்பகுதி யென்பர். சந்திசெய, மார் பற் புகைந்து என்பன இரண்டாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொ டர்கள். முன்னதில் நிலைமொழி அஃறிணைச் சொல்லாதலால் அத் தொகையில் நன்-உயிர் பு-இ-௪௫-ஆம் சூத்திரப்படி வருமொழிச்சகரம் மிகாமல், உருபு-பு-இ ௧௪-ஆம் சூத்திரப்படி விகாரத்தில் இயல்பாயிற்று; பின்னதில் நிலைமொழி உயர்திணைச் சொல்லாதலால் அத்தொகையில், உயிர்-பு-இ-௯-ஆம் சூத்திரப்படி ஈற்றுனகரம் இயல்பாகாமல், உருபு-பு-இ-௧௪-ஆம் சூத்திரப்படி இயல்பின் விகாரமாயிற்று. மறந்தான் என் னுந் தொடரில் நிலைமொழி அஃறிணைச்சொல்லாயினும் குறிலிணை மொழியாதலால், "இயல்பினும் விதியினும்" என்ற பொதுவிதியை,

உருபு-பு-இ-கச-ஆம் சூத்திரத்தில் விகாரத்தியல்புமென்ற எண்ணின்க ணின்ற இழிவுசிறப்பும்மையால் பெற்று விகாரத்தில் விகாரமாயிற்று. சிந்தை எல்லாம்-ஒருமையிற்பன்மைவந்த வழுவமைதி. அசலம்-அசைத லிலது என்பது பொருள். சந்தி-சந்தித்தல்; அது இரவும் பகலும், பக லும் இரவும் ஒன்று ஒன்றைச் சந்திக்குங்காலத்துக் கானமைபற்றித் தொழிலாகுபெய ரெனப்படும். அச்சந்தி என்னுங் காலத்தின்பெயர் அக்காலத்தில் செய்யப்படும் வந்தனத்துக்காதலால் காலவாகுபெயர். •()

நாராய ணாய நமவென் றவனடியிற்
சேரானை வெந்துயரஞ் சேர்ந்தாற்போற்—பாராளுங்
கொற்றவனைப் பார்மடந்தை கோமானை வாய்மைநெறி
கற்றவனைச் சேர்ந்தான் கலி.

(இ-ள்.) நாராயணாயநம என்று - நாராயணாயநம என்னும் மந்தி ரத்தைச்சொல்லி, அவன் அடியில் - அம்மந்திரத்துக்குரிய இறையவ னது பாதங்களில், சேரானை - சரணடையாதவனை, வெம் துயரம் - கொடிய பிறவித்துன்பங்கள், சேர்ந்தால்போல் - அடைந்தாற்போல, கலி - கலிபுருடன், பார் ஆளும்-தன்னிலத்துள்ளாரை இனிதாகக்காக் கும், கொற்றவனை-அரசனை, பார்மடந்தை-பூமிதேவிக்கு, கோமானை - நாயகனை, வாய்மை நெறி - உண்மையாகிய நல்வழியை, கற்றவனை - தெரிந்தவனை, சேர்ந்தான்-அடைந்தான், எ - று.

(வி-ரை.) நாராயணாயநம என்பதற்குப் பொருள் நாராயணனுக்கு நமஸ்காரமென்பது. உலகபாலருருவாய் நின்று உலகங்காத்தலால் அர சனை அனைவோர்க்குந் தெய்வமென்பர். அதுபற்றிப் 'பார்மடந்தைகோ மான்' எனவும், கலிசேர்தற்குக் காரணமாகிய தாளின்மறு அவனறிந்து செய்ததன்றென்பார் 'வாய்மைநெறிகற்றவன்' எனவுங் கூறினார். என்று- இடைச்சொலடியாகப்பிறந்த இறந்தகால வினையெச்சம்; என் - பகுதி, ற்-இறந்தகால இடைநிலை, உ-வினையெச்சவிகுதி; இச்சொல்லினிடை யே சொல் என்னுஞ்சொல் குறைந்து நிற்பதினால் இதைச் சொல்லெச்ச

மென்னலுமாம். இதைப் பொன்னென்று நினைத்தேன், நீவந்தாயென்று நினைத்தேன் இவற்றில் முறையே பெயரையும் வினையையும் அடுத்து வந்த என்று மேலதுபோல வினையெச்சப்பொருள் தாராமையால் இடைச்சொல்லாம். இவ்விடைச்சொற்குப் பொருள் தானடுத்துவந்த பெயர் வினைகளின் பொருளே ஆம்; தனக்கென வேறு பொருளிலது: சேரார்-எதிர்மறை வினையாலணையும் பெயர்; சேர் - பகுதி, ஆ - எதிர் மறை விகுதி, அனைத்தும் ஒரு பகுதி, ஆர்-விகுதி, விகுதி ஆகாரக்கேடு முகற்குறை. முதலிலுள்ள பார் இடவாகுபெயர். பார்மடந்தை - இரு பெயரொட்டுப் பண்புத்தொகை. கோமானென்பதில் மான் விகுதி. கொற்றவனை, கோமானை, கற்றவனை என ஒருபொருண்மேல் வந்த பலபெயர்கள் சேர்ந்தானென இறுதியில் வந்த ஒரு வினைகொண்டது [நன்-பொது-இ-சக-ஆம் சூத்திரம்]. (௫௫)

நன்னெறியில் சூதா னளனைக் களவியற்றித்
தன்னரசு வாங்கித் தருகின்றேன்—மன்னவனே
போதுவா யென்னுடனே யென்றான் புலைநாருக்
கேதுவாய் நின்றா னெடுத்து.

(இ-ள்.) புலை நரகுக்கு-(உயிர்கள்) இழிவாகிய நரகடைவதற்கு, எதுவாய் நின்றான் - காரணமாய் நிலைத்த கலிபுருடன், மன்னவனே - அரசனே, நல் நெறி இல் - நல்வழியில் (சேர்தல்) இல்லாத, சூதால் - சூதாட்டத்தால், நளனை - நளராசனை, களவு இயற்றி-வஞ்சனைசெய்து, தன் அரசு-அவனது ஆளுந்தன்மையை, வாங்கி-(அவனின்றும்)வாங்கி, தருகின்றேன்-ஈகின்றேன் (ஐயப்படவேண்டுவதில்லை); என்னுடனே போதுவாய் - என்னோடுவாராய், என்றான் எடுத்து - என்று எடுத்துச் சொல்லினான், எ - று.

(வி - ரை.) ஐயப்படவேண்டுவதில்லை யென்பது என் என்னுஞ் சொல்லாற்றலாற் போந்தபொருள். களவு-தொழிற்பெயர்; கள்-பகுதி, அ-சாரியை, வு - தொழிற்பெயர்விகுதி. களவை என இரண்டாம் வேற்

றுமை ஏற்றிக் கூறின் நளனை என்பதிலுள்ள ஐயுருபை நளன்கண் என ஏழாவதாகத் திரித்துக்கொள்க. தன்னரசு - பண்புத்தற்கிழமைப் பொருளில்வந்த ஆறாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். தருகின்றேன் என்பது துணிவுபற்றி எதிர்காலம் நிகழ்காலமாய்வந்த காலவழுவமைதி. போதுவாய் ஏவலொருமை வினைமுற்று; போ - பகுதி (புகு என்பதன் மரூஉ), து-சாரியை, வ்-சந்தி, ஆய்-ஏவலொருமை விகுதி; இவ்விகுதியே எதிர்காலங் காட்டுகின்றமையால் வ் - எதிர்கால இடைநிலையன்று. சந்தி வ் எதிர்கால இடைநிலையானால் போதுவாயென்பது முன்னிலையொருமை எதிர்கால வினைமுற்றாம். புலைநாத - பண்புத்தொகைநிலைத்தொடர். புலை - பண்புப்பெயர்; புல் - பகுதி, ஐ-பண்புப்பெயர் விகுதி. நான்கனுருபு நிமித்தகாரண காரியப்பொருளது. நெறி இல்-எழுவாய்த் தொகாநிலைத்தொடர். இல் சூது-பண்புத்தொகைநிலைத்தொடர்; இன்மையாகிய சூதெனா விரியும். (௩௪)

> புன்னை நறுமலரின் பூந்தா திடையொதுங்குங்
> கன்னி யிளமேதிக் காற்குளம்பு—பொன்னுரைத்த
> கல்லேய்க்கு நாடன் கவறாடப் போயினான்
> கொலலேற்றின் மேலேறிக் கொண்டு.

(இ-ள்.) புன்னை-புன்னைமரத்தினது, நறு மலரின் - மணமாகிய மலர்களினது, பூந்தாதிடை - பொலிவாகிய பராகங்களின்மேல், (பராகங்கள் சிந்திய நிலத்தில்) ஒதுங்கும் - நடக்கின்ற, கன்னி இளமேதி - மிகுதியும் இளமையாகிய எருமையினது, கால் குளம்பு - கால்களினது குளம்புகள், பொன் உரைத்த - (வணிகரால்) பொன்னை உரைக்கப் பெற்ற, கல் ஏய்க்கும் - உரைகல்லை ஒத்திருப்பதற்கிடமாகிய. நாடன்-நாட்டையுடையானாகிய புட்கரன், கொல்-(யாவரையும்) வருத்துகின்ற, லேற்றின்மேல் - (கலியாகிய) எருதின்மேல், ஏறிக்கொண்டு - ஏறிக் கொண்டு, கவறு ஆடப்போயினான்-சூதாட (நிடததேசத்தை நோக்கிப்) போயினான், எ - று.

(வி-ரை.) எய்க்குமென்னும் காரியப்பொருட்டாகிய பெயரெச்சம் நாடனென்னும்பெயரின் பகுதியாகிய நிலப்பெயர்கொண்டது. புன்னை நறுமலர், மலரின் பூந்தாது, மேதிக்கால், சாற்றுளம்பு என்பன உறுப்புத் தற்கிழமைப்பொருளின்கண் வந்த ஆறும் வேற்றுமைத்தொகைநிலைத் தொடர்கள். நறுமலர், பூந்தாது, இளமேதி என்பன பண்புத்தொகை நிலைத்தொடர்கள். கன்னி யிளமேதி என்பதில் கன்னி இள என்பன ஒருபொருட் பன்மொழி [நன்-பொது-இ-சஎ-ஆம் சூத்திரம்]. புன்னையையும், மேதியையுங் கூறவே அவனது நாட்டை நெய்தலும், முல்லையும் நெருங்கியிருக்கின்றன என்பதாயிற்று. மலர்-தொழிலடியாகப் பிறந்த பெயர்; மலர் பகுதி, இ-வினைமுதற்பொருண்மை விகுதி புணர்ந்து கெட்டது. இதுபோல்வன சொன்னிலையாற் பகாப்பதமும், பொருணிலையாற் பகுபதமுமாம். ஏறுகக் கலிபுருடன் நின்றனென நைடதத்தில் சொல்லியிருக்கின்றது. இதைக் குறிப்பிக்கவே ஏற்றுக்கியைபில்லாத கொல் என்னும் அடைகொடுத்துக் 'கொல்லேறு' என்றார். (ருசு)

வெங்கட் சினவிடையின் மேலேறிக் காலேறிக்
கங்கைத் திரைநீர் கரையேறிச்—செங்கதிர்ப்பைம்
பொன்றொழியப் போதும் புறம்பணைசூழ் நன்னாடு
பின்றொழியப் போந்தான் பெயர்ந்து.

(இ-ள்.) வெம் கண்-(உயிர்களுக்குக்) கொடுமையைச் செய்கின்ற, சினவிடையின்மேல் ஏறி - (நளனிடத்துக்) கோபமமைந்த எருத்தின் மேலேறி, பெயர்ந்து - தன்னாட்டினின்று நீங்கி, கால் ஏறி - காற்று வீசுதலால், கங்கைத்திரைநீர்-கங்கையினது அலைநீரானது, கரை ஏறி - கரைகடந்து, செம் கதிர் - சிவந்த கிரணங்களை (வெயில்) வீசுகின்ற, பைம்பொன் - பசும்பொன், ஒழிய-(கரையில்) தங்கும்படி, போதும் - (புகுகின்ற) பாய்கின்ற, புறம் பணை சூழ்-புறத்தில் வயல்களால் சூழப்பட்ட, நல் நாடு - நன்மையாகிய (நிடதமென்னும்) நாடு, பின் ஒழிய - பின் ஆக, போந்தான் - மாவிந்த நகரத்தில் புகுந்தான், எ-று.

(வி - ரை.) முதற்பாட்டில் "பொன்னசல மார்பற் புகைந்து" என்பதற்கியையச் சினவிடைபெனக் கூறியது கலியே விடையாயினா னென்பதைக் குறிப்பித்தற்கென்க. கங்கைத்திரை நீர்போதும் பணை சூழ் நாடென்றமையானும், அந்நாட்டை நல் என்னும் அடைகொடுத் தோதினமையானும் நாடென்றது நிடதநாட்டை எனக்கொள்க. நிடத நாடு பின்னொழியப் போந்தான் என்றது நாட்டெல்லை பின்னாகப் புகுந் தானென்றபடி. பின் என்பது "சந்தசெய" என்னும் பாட்டில் நள னுக்குப் புட்கரனைத் தமையனென்பதற்கேற்கப் பண்பாகுபெய ராய் நளனை யுணர்த்துவதாகக் கொண்டு நன்னாடு பின்னொழிய என்பதற்கு நல்ல நிடதநாட்டைத் தம்பியாகிய நளன் சூதில் ஒழியும் படி எனப் பொருள் கூறினும் பொருந்தும். முன்னுள்ள ஏறி செய வெனெச்சத்திரிபு இவ்வெச்சம் காரணப்பொருட்டு. காலேறி என்பதற்கு வாய்க்காலிலேறி எனப் பொருள் கொள்ளின், அதைப் பொன்னொழிய என்பதன்பின் கூட்டுக. பைம்பொன் என்ப தைப் பதம் பிரிக்கின் பசுமை பொன் எனப் பிரிக்க. திரை - தொழி லடியாகப் பிறந்தபெயர். வினைமுதற்பொருண்மை விகுதியாகிய இ புணர்ந்துகெட்டது. போந்தான் என்பதில் போ என்னும் பகுதி புகு என்பதன் மரூஉ; இம்மரூஉ முகடு மோடு, துவடு தோடு எனப் பெயரிலும் உண்டு. இவ்வாறன்றிச் செல் என்னும் பொருள்படும் போ என்பது பகுதி எனக்கொள்ளின் அது போயினான், போனான், போயான் என வருமேயன்றிப் போந்தானென வாராமையால் குற்ற மாம். (௩௧)

அடற்கதிர்வேன் மன்ன னவனேற்றின் முன்போ
யெடுத்தகொடி யென்னகொடி யென்ன—மிடற்குழு
வெல்லுங் கொடியென்றான் வெங்கலியா லங்கவன்மேற்
செல்லுங் கொடியோன் றெரிந்து.

(இ - ள்.) கதிர் - கிரணங்களைப்பெற்ற, அடல் வேல் மன்னன் - வலியாகிய வேலைத்தாங்கிய நளராஜன், அவன் ஏற்றின் முன்போய் -

அப்புட்கரனுடைய எருதுக்கு முன் சென்று, எடுத்த கொடி - (புட்கரனே நீ) உயர்ப்பிடித்த கொடி, என்ன கொடி என்ன - எதைக்குறித்த கொடியென்று கேட்க, வெம் கலியால் - கொடுமையாகிய கலிபுருடனால், அங்கு - அம்மாவிந்த நகரத்தில், அவன்மேல் செல்லும் - அந்நளனைக்குறித்துச் சென்ற, கொடியோன் - கொடுமையையுடைய புட்கரன், தெரிந்து - ஆராய்ந்து, மிடல் - வலியமைந்த, சூது - சூதாட்டத்தில், வெல்லும் - (பிறரை) வெல்லுகின்ற, கொடி என்றான் - கொடி ஈதாகுமென்று சொல்லினான், எ-று.

(வி-ரை.) தெரிதலாவது எவ்வாறு சொல்லின் இவன் சூதாடுதலில் உடன்படுவானென ஆராய்தல். ஏற்றின் என்பதில் இன் உருபு எல்லைப்பொருளது. இன் என்பதை உருபாகக் கொள்ளாமல் சாரியையாகக் கொண்டு, ஏற்றின்முன் என்பதை இடப்பிறிதின்கிழமைப் பொருளில்வந்த ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடரெனினும் பொருந்தும்; ஏற்றினது முன்னிடமென்பது பொருள். முன்னுள்ள என்ன என்பது எவனென் வினாவினைக்குறிப்பு முற்றின் மரூஉ; என்னையெனவும், என்னெனவும், ஏனெனவும் மரீஇ வழங்கும். பின்னுள்ள என்ன செயவென் வினையெச்சம். ஆடுவோரது வலியைச் சூதின்மேலேற்றி 'மிடற்சூது' என்றார்; இது ஓர் மரபுவழுவமைதி. வெல்லுமென்னும் பெயரெச்சம் செய்வதாகிய அறுபொருட்பெயருமல்லாத வேறு பொருட்பெயராகிய கொடியென்பதைக் கொண்டது. மூன்றனுருபு ஏதுப்பொருளது. இவ்வுருபு செல்லுமென்னும் வினைகொண்டது. செல்லும் என்னும் பெயரெச்சம் இயல்பினால் இறந்தகாலம் எதிர்காலமாக வந்த காலவழுவமைதி. (கஎ)

ஏன்றே மிதுவாயின் மெய்ம்மையே யெம்மோடு
வான்றோய் மடற்றெங்கின் வான்றேற—றான்றேக்கி
மீதாடி வாளைவயல் வீழ்ந்துழக்கு நன்னாடன்
சூதாட வென்றான் றுணிந்து.

(இ-ள்.) வான் - மேகத்தை, தோய் - பொருந்துகின்ற, மடல்-மடல்வளத்தையுடைய, தெங்கின் - தென்னையினது, வான் தேறல் - மிக்கமதுவை, தான் தேக்கி - தான் நிறம்பவுண்டு, மீது ஆடி-(அக்களிப்பால் குதித்து) ஆகாயத்தில் விளையாடி, வாளை - வாளைமீன், வயல் வீழ்ந்து-வயலில்விழுந்து, உழக்கும்-(நீரைக்) கலக்குகின்ற, நல் நாடன்-மிக்கவளமுள்ள நிடதநாட்டையுடையான், இது மெய்ம்மையே ஆயின் - இச்சொல் மெய்ம்மையே ஆனால், என்றோம் - ஏற்றுக்கொண்டோம், எம்மோடு - எம்முடனே, சூது ஆட-சூதாடக்கடவாய், என்றான் துணிந்து - என்று துணிந்து சொல்லினான், எ-று.

(வி-ரை.) இது என்பதைச் சுட்டுப்பெயராகக் கொள்ளாமல் குறிப்பு வினைமுற்றாகக் கொண்டு, இது ஆயின் (நீ பிடித்த கொடி) இத்தன்மையுடையது ஆனால், எம்மோடு சூதாட - எம்மோடு சூதாடுக, மெய்ம்மையே (யான் ஆடுவேனென்றது) உண்மையே, (மாறுபடேன்) எனப் பொருள் கூறினும் பொருந்தும். என்றோம், எம் என்பன உயர்வினால் ஒருமைப்பால் பன்மைப்பாலாய் வந்த பால்வழுவமைதி. கேட்போன் தன்னின் இழிந்தோனாதலால் 'என்றோம்' என்றும், 'எம்மோடு' என்றுங் கூறினான். ஏ - தேற்றம். வான் - இடவாகுபெயராய் மேகத்தை யுணர்த்தியது. ஒருமொழி தானேனும் அடைபெறாமல் வந்ததானால் தன் மிகுதியை யுணர்த்துமாதலால் மடல் என்பதற்கு மடல் வளமெனப் பொருள் கூறப்பட்டது. இவ்வாறே, சிறைப்பறவை என்பது சிறைவளப்பமுடைய பறவை எனவும், எறிதிரை என்பது மிகுதியும் எறிகிற திரை எனவும் பொருள் படுதல் காண்க. வான்றேறல் என்பதை வால் தேறல் எனப் பதம் பிரித்து வெண்மையாகிய மது எனப் பொருளுரைக்கினும் இழுக்காது. வால் என்பது உரிச்சொல்லாதலால், அகன் குளம் என்பதுபோல வல்லினத்தின் முன்னும் லகரம் னகரமாகத் திரிந்ததென்க. தேறல் - தெளிவை யுடையதென்னும் பொருள்படுதலால் தொழிலாகுபெயர். முன்னின்ற தா

னென்பதை நோக்கி வாளையென்பதை ஒரு வாளையெனக் கொள்ளற்க; அது சாதியொருமை. ஆட என்பது வியங்கோள் வினைமுற்று; ஆடு-பகுதி, அ-விகுதி, உகரக்கேடு சந்தி. "விண்ணிடை மதியினை மிகையிதென்னவே" என்னுங் கம்பநாடர் செய்யுளில் என்ன என்பது என்க எனப் பொருள்படுதல் காண்க. என்றோம்: ஏல் - பகுதி, ற் - இடைநிலை, ஓம் - தன்மைப்பன்மை விகுதி, லகரம் றகரமானது சந்தி, அந்த றகரம் னகரமானது மெலித்தல் விகாரம். (௩அ)

> காதல் கவறாடல் கள்ளுண்டல் பொய்ம்மொழிதல்
> ஈதன் மறுத்த லிவைகண்டாய்—போதில்
> சினையாமை வைகுந் திருநாடா செம்மை
> நினையாமை பூண்டார் நெறி.

(இ - ள்.) போதில் - தாமரைப் பூக்களில், சினை ஆமை - சூல்கொண்ட ஆமைகள், வைகும் - தங்குகின்ற, திரு நாடா - செல்வமிக்க நிடதநாட்டை யுடையானே! காதல் - (அயல்மாதர்மேல்) மோகங்கொள்ளுதலும், கவறு ஆடல் - சூதாடுதலும், கள் உண்டல் - கள்ளுண்ணுதலும், பொய் மொழிதல் - பொய்சொல்லுதலும், ஈதல் மறுத்தல்-(ஒருவர்க்குக்) கொடுத்தலை விலக்கலும், இவை-ஆகிய இவையைந்தும், செம்மை - நடுவு நிலைமையை, நினையாமை - நினையாமையை, பூண்டார் - மேற்கொண்டாரது, நெறி-ஒழுக்கங்களாம், எ-று.

(வி-ரை.) இவை என்பதனீற்றில் ஐந்துமென்னுஞ் செவ்வெண்ணின் தொகையோடு முற்றும்மை விகாரத்தால் தொக்கது. கண்டாய்-முன்னிலை யசைச்சொல். போது-தத்தமக்குரியகாலம் பிறழாமல் அவ்வக்காலங்களில் மலரும் மலர்களுக் காயினமையால் காலவாகுபெயர்; அது தலைமைபற்றித் தாமரைமலரை யுணர்த்திற்று. காதல் - ஒன்றின் மேற் சென்று தாக்கும் அவா; இப்பெயரடியாகக் காதலி, காதலித்தல், காதலித்தான், காதலித்த, காதலித்து என வினைவிகற்பங்களும்,

காதலன், காதலி, காதலார் எனப்பெயரும்பிறக்கும். நினையாமை-எதிர் மறைத் தொழிற்பெயர்; நினை-பகுதி, ய்-சந்தி, ஆ-எதிர்மறைவிகுதி, அனைத்து மொருபகுதி, மை-தொழிற்பெயர்விகுதி; இவ்விகுதி நினைத்தமை. நினைக்கின்றமை என இறப்பு நிகழ்வு உடன்பாட்டுத்தொழிற் பெயர்களிலும் வரும். இதுமுதலிய நான்கு பாடல்களும் அமைச்சர்கள் கூற்று. (௩௧)

அறத்தைவேர் கல்லு மருநரகிற் சேர்க்கும்
திறத்தையே கொண்டருளைத் தேய்க்கும்—மறத்தையே
பூண்டுவிரோ தஞ்செய்யும் பொய்ச்சூதை மிக்கோர்கள்
தீண்டுவரோ வென்றார் தெரிந்து.

(இ-ள்.) அறத்தை - அறத்தினை, வேர் கல்லும் - வேர்பறிக்கும் (முற்றுமழிக்கும்); அருநரகில்சேர்க்கும்-மீளாதநரகத்தில்(ஆடினோனை) சேர்க்கும்; திறத்தையே கொண்டு - (வெற்றிபெறும்) வகையையே (தன்னில்) கொண்டு, அருளை தேய்க்கும் - அருளைச் சிதைக்கும்; மறத்தையே பூண்டு - கோபத்தையே மேற்கொண்டு, விரோதம் செய்யும் - (நட்பினைப் பிரியும்படி) பகையை யுண்டாக்கும்; (சூதென்பது) பொய் சூதை - (ஆதலால்) பொய் நிகழ்வதற் கிடமாகிய சூதாட்டக் கருவிகளையும், மிக்கோர்கள்-அறிவில் மிகுந்தோர்கள், தீண்டுவரோ- தொடுவார்களோ தொடார்கள், என்றார் தெரிந்து - என்று ஆராய்ந்து சொன்னார்கள் (மந்திரிகள்), எ-று.

(வி-ரை.) அறத்தை முற்றும்விட்டு நரகடைதற் குரியனாகி வெற்றிப்பொருட்டாக அருளை ஒழித்துக் கோபத்தைக் கொண்டு நட்பைக் கெடுத்துப் பொய்பேசுதற்கு நாணாமல் நிற்பவனாகும் ஆடுவோனது தொழிலைச் சூதின்மேலேற்றி இவ்வாறு கூறினார். வேர்கல்லும் என்பதை ஒரு வினைச்சொல்லாகக் கொள்ளாமல் வேரைக் கல்லுமென இருசொல்லாகக்கொண்டு இரண்டனுருபை விரிக்கின் அறத்தை என்

னும் இரண்டனுருபை ஆறனுருபாகவாவது ஏழனுருபாகவாவது திரித்துக்கொள்க. சேர்க்கும், தேய்க்கும் இவ்வினைமுற்றுகளின் பகுதிகள் தன்வினைக்கும் பிறவினைக்கும் பொதுவாயினும் பிறவினையில் குச்சாரியையும், அதுபற்றிவரும் சந்தியையும் பெற்றுவரும். கல்லுமென்பது முதலிய நான்கு வினைமுற்றுகள் வேறுபல அடுக்கிச் சூதென்னும் ஒருபெயர்ப் பயனிலை கொண்டது. அது எஞ்சி நின்றது. ஓ - எதிர்மறை. ஏ - இரண்டும் பிரிநிலை. (௪0)

> உருவழிக்கு முண்மை யுயர்வழிக்கும் வண்மைத்
> திருவழிக்கு மானஞ் சிதைக்கும்—மருவும்
> ஒருவரோ டன்பழிக்கு மொன்றல்ல சூது
> பொருவரோ தக்கோர் புரிந்து.

(இ - ள்.) ஒன்று அல்ல - (சூதுசெய்யும்செய்கை) ஒன்று அல்லவையாம்; உரு அழிக்கும் - (ஆடுவோனை) அழகழிக்கும் (அதாவது வேற்றுருவமாக்கும்); உண்மை - மெய்ம்மையையும், உயர்வு - உயர்வாகிய அறிவையும், அழிக்கும் - கெடுக்கும்; வண்மை திரு அழிக்கும் - மிகுதியாகிய செல்வத்தை ஒழிக்கும்; மானம் சிதைக்கும்-பெருமையை அழியச்செய்யும்; மருவும் - நட்புக்கொள்ளும், ஒருவரோடு - ஒருவரிடத்திலுள்ள, அன்பு அழிக்கும் - அன்பை நீங்கச்செய்யும்; (ஆதலால்) தக்கோர் - உயர்ந்தோர், புரிந்து - விரும்பி, சூது பொருவரோ - சூதாடுவரோ ஆடார், எ-று.

(வி-ரை.) மேலைச் செய்யுளில் அறத்தை வேர்கல்லு மென்பது முதல் இச் செய்யுளில் அன்பழிக்கு மென்பதீறுக் கூறிய வினைகளைச் சூது செய்வதாகக் கூறியது ஓர் மரபுவழுவமைதி. [நன்-பொதுவியல் ௬-௫அ]. "கேட்குந போலவுங் கிளக்குந போலவும், இயங்குந போலவு மியற்றுந போலவும், அஃறிணை மருங்கினும் அறையப் படுமே." உயர்வு - அறிவின்மேனின்றது. சூதாடலுற்றோர் வயிறாரவுண்ணாராதலால்

அது 'உருவழிக்கும்' என்றார். மூன்றனுருபு ஏழாவத னிடப்பொரு ளது. ஒன்று என்பது எண்ணை யுணர்த்தாமல் செய்கையை யுணர்த்த லால் எண்ணலளவை யாகுபெயர்; அது அல்ல என்னும் பண்படியாகப் பிறந்த குறிப்புவினைமுற்றின் பகுதியோடு எழுவாய்த் தொகாநிலைத் தொடராக நின்றது; இத்தொடரை அல்வழிப்புணர்ச்சி பதினொன்றின் புறத்த தென்னலுமொன்று. சூதாட்டத்தில் தன் பக்கமாயுள்ள கருவி யைக் கொண்டு எதிரியினுடைய கருவிகளை அடித்து ஆடுதலால் பொருதலென்பது அதற்குரிய வினையாயது. ஓ-எதிர்மறை. தக்கோர்- இறந்தகால வினையாலணையும் பெயர்; தகு - பகுதி, ஆர்-விகுதி, பகுதி ஒற்று இரட்டியது விரித்தல் விகாரம், அதுவே காலங்காட்டியது, உக ரக்கேடு சந்தி, விகுதி ஆ ஓவானது செய்யுள் வழக்கு. (சக)

> ஆயம் பிடித்தாரு மல்லற் பொதுமகளிர்
> நேயம் பிடித்தாரு நெஞ்சிடையே—மாயம்
> பிடித்தாரின் வேறல்ல ரென்றுரைப்ப தன்றே
> வடித்தாரி னூலோர் வழக்கு.

(இ - ள்.) ஆயம் - சூதாடுகருவியை, பிடித்தாரும் - பற்றினவ ரும், அல்லல் - துன்பத்துக்குக் காரணமாகிய, பொதுமகளிர் - வேசிய ரிடத்தில், நேயம் பிடித்தாரும்-சிநேகத்தைக் கொண்டவர்களும், நெஞ் சிடை - (புறத்தே தோன்றாமல்) மனத்தில், மாயம் பிடித்தாரின் - வஞ்சனையைக் கொண்டவர்களினும், வேறு அல்லர்-வேறாயினாரல்லர், என்று உரைப்பது அன்றே-என்று சொல்லுதலன்றோ, வடித்தாரின் - முனிவராற் சொல்லப்பட்ட, நூலோர்-நூல்களைக் கற்றவரது, வழக்கு- ஒழுக்கம், எ-று.

(வி-ரை.) முனிவர்கள் உறுதிப்பொருள்களை உள்ளபடி தெளிய உணர்த்தவல்லாராதலால் அவர்களை 'வடித்தார்' என்றார். ஆயம்-காரிய வாகுபெயர். அல்லற் பொதுமகளிர்-அல்லலைத்தருகின்ற பொதுமகளி

ரான இரண்டாம் வேற்றுமை யுருபும் பயனும் உடன்தொக்க தொகை நிலைத்தொடர். மகளிர்: மக - பகுதி, ள் - பெண்பால் விகுதி, அல்லது அர்-விகுதி, விகுதி அகரக்கேடு முதற்குறை, பகுதி அகரங் கெட்டதாகக் கொண்டால் கடைக்குறை, இவ்வாறு நின்ற மகளென்பது இர் பலர்பால் விகுதிபெற்று நின்றது. இப்படி வருவதனை நச்சினார்க்கினியார் ஒருமையில் பன்மைவந்த வழுவமைதியென்பர். இராமாநுச காண்டிகையாரு மவ்வாறே கொள்வர். பெண்டிர், புத்தேளிர் முதலியனவும் இர் விகுதி பெற்றவையாம். பொதுமகளிர் நேயம் என்பதைப் பண்புத்தற்கிழமைப் பொருள்படநின்ற ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடராகவுங் கொள்க. நெஞ்சு - இடவாகுபெயர். வடித்தாரினாலோர் - பொருட்பிறிதின்கிழமைப்பொருட்டாகிய ஆறும்வேற்றுமைத்தொகை நிலைத்தொடர்; இத்தொடரின் இடையே இன் சாரியை விரித்தல் விகாரம்; இவ்வாறுவது வருமொழிப் பகுதியோடு முடிந்தது. வழக்கு- முதனிலைதிரிந்த தொழிற்பெயர். (சஉ)

> தீது வருக நலம்வருக சிந்தையாற்
> சூது பொரவிசைந்து சொல்லினோம்—யாதும்
> விலக்கலிர்நீ ரென்றான் வராலேற மேதி
> கலக்கலைநீர் நாடன் கனன்று.

(இ - ள்.) வரால் ஏற - வரால் மீன்கள் (தம்மேல்) ஏறினதினால், மேதி - எருமைகள், கலக்கு - கலக்குகின்ற, அலை நீர்-அலைகளை எறிகின்ற நீர்வளப்பமுடைய, நாடன் - நிடதநாட்டரசன், (மந்திரிமார்களை நோக்கிக்) கனன்று - கோபித்து, சூது பொர - சூதாட, சிந்தையால் - மனத்தில், இசைந்து - உடன்பட்டு, சொல்லினோம் - சொல்லி விட்டோம்; (ஆதலினால்) தீது - தீமையே, வருக-வரக்கடவது; நலம்- நன்மையே, வருக - வரக்கடவது; யாதும் - யாதொன்றினாலும், நீர் விலக்கலிர் என்றான் - நீங்கள் விலக்காதிருமென்று சொல்லினான், எ - று.

(வி-ரை.) தீது-பண்புப்பெயர்; தீ-பகுதி, து - பகுதிப்பொருள் விகுதி. இவ்விகுதி முழுது முதலிய சொற்களிலுங் காண்க. வருக - வியங்கோள்வினைமுற்று; வா-பகுதி, ரு-விரித்தல் விகாரம், க-விகுதி, பகுதி ஆ அவ்வானது குறுக்கல்விகாரம்; ர்-விரித்தல் விகாரம், உகரம் சாரியை எனினும் ஒக்கும். சிந்தையால் - உருபுமயக்கம். யாதும் என்பதில் மூன்றனுருபு தொகுத்தல் விகாரம் பெற்றது. உம்மை - இழிவு சிறப்பு. விலக்கலிர்: விலக்கு-பகுதி, அல் - எதிர்மறை விகுதி, உகரக் கேடு சந்தி, அனைத்து மொருபகுதி, இர் - முன்னிலைப்பன்மை வினைமுற்று விகுதி. கனன்று: கனல் - பகுதி, ற் - இறந்தகால இடைநிலை, உ-வினையெச்சவிகுதி, லகரம் றகரமானது சந்தி, அது னகரமானது மெலித்தல் விகாரம். (௬௫)

நிறையில் கவறாட னீநினைந்தா யாகின்
திறையிற் கதிர்முத்தஞ் சிந்தும்—துறையில்
கரும்பொடியா மள்ளர் கடாவடிக்கு நாடா
பொரும்படியா தென்றானிப் போது.

(இ - ள்.) திறையின் - (பகைவர் இடுகின்ற) கப்பத்தைப்போல, கதிர் முத்தம் - கிரணங்களமைந்த முத்துகளை, சிந்தும் - (அலைகள்) சிந்துகின்ற, துறையில் - நீர்த்துறையில், கரும்பு ஒடியா - கரும்பை ஒடித்து, மள்ளர் - உழவர், கடா அடிக்கும் - (உழுகிற) ஆணெருமைகளை அடித்தோட்டும், நாடா - நிடதநாட்டையுடையானே! நிறை இல் - எல்லையில்லாத, கவறு ஆடல் - சூதாடுதலை, நீ நினைந்தாய் ஆகின் - நீ கருத்துக்கொண்டாயானால் (நினைந்தால்), இப்போது-இப்பொழுது, பொரும்படி - ஆடும் விதம், யாது - எதைக்குறித்தது, என்றான் - என்று கேட்டான், எ-று.

(வி - ரை.) பொருளை இழக்குந்தோறும் ஆசிவோர்க்கு அவா எல்லையில்லாததன்கணேடுதலால் 'நிறையில் கவறாடல்' என்றான்.

நிறை: நிறு-பகுதி, ஐ-செயப்படுபொருண்மை விகுதி, உகரங்கெடுசந்தி; இப்பகுதிக்குத் தன்வினைப்பகுதி நில் என்பது; இதைப் பிறவினைப்படுத்தியது றவ்விகுதி. பகுதி அவ்விகுதியைப்பெற்றபோது ஈற்றுலகரம் கெட்டது; நிறை என்பதைத் தொழிற்பெயராகக்கொண்டு, இடையே நிறுத்தலில்லாத கவறுடல் எனப் பொருள்கூறினும் பொருந்தும்; அப்போது விகுதியைத் தொழிற்பெயர் விகுதி என்க. இல் கவறு என்னுந்தொடர் பண்புத்தொகைநிலைத்தொடராகிய அல்வழிப் புணர்ச்சியாதலால் நிலைமொழியீற்று லகரம் இயல்பாயிற்று. ஆகின் என்னும் எதிர்கால வினையெச்சம் ஏவல், வியங்கோள் வினைமுற்றொழிந்த மற்ற வினைமுற்றுகளோடு புணர்ந்தால், அவற்றை எதிர்காலவினையெச்சமாக்கும். ஒடியா-செய்யா என்னும் வாய்ப்பாட்டிறந்தகால வினையெச்சம்; ஒடி-பகுதி, ய்-சந்தி, ஆ-வினையெச்சவிகுதி. யாது-வினவிடைச்சொலடியாகப் பிறந்த குறிப்பு வினைமுற்று. போதென்பது பொழுதென்பதன்மரூஉ; போழ்தெனவும் வழங்கும். (சச)

> விட்டொளிர்வில் வீசி விளங்குமணிப் பூணாரம்
> ஒட்டினே னுன்பணைய மோதென்ன—மட்டவிழ்தார்
> மல்லேற்ற தோளானும் வான்பணைய மாகத்தன்
> கொல்லேற்றை வைத்தான் குறித்து.

(இ-ள்.) விட்டு - இடையிட்டு, ஒளிர் - ஒளிர்கின்ற, வில் வீசி - ஒளியை வீசி, விளங்கு - தோன்றுகின்ற, மணி - இரத்தினங்களால் கோக்கப்பட்ட, பூண் ஆரம் - பூணுகிய ஆரத்தை, ஒட்டினேன்-பந்தயப் பொருளாக வைத்தேன், உன் பணையம் - உனது பந்தயப்பொருளை, ஓது என்ன-சொல் என்று கேட்க, மட்டு - தேன், அவிழ்-சிந்துகின்ற, தார் - மலர்மாலையணிந்த, மல்-மல்லுயுத்தத்தை, ஏற்ற - தாங்கிய, தோளானும்-தோளையுடைய புட்கரனும், தன் - தன்னுடைய, கொல் ஏற்றை-(உயிர்களை) வருத்துகின்ற எருதை, வான் பணையம் ஆக - உயர்வாகிய பந்தயப்பொருளாக, குறித்து வைத்தான் - சொல்லிவைத்தான், எ-று.

(வி-ரை.) விட்டொளிர் என்பதற்கு நிலைமொழி விண்டென் பது வலித்தலாய் நின்றதெனக் கொண்டு, மலர்ந்து (விரிந்து) ஒளிர் கின்ற என வுரைப்பினும் பொருந்தும். வில்-சிற்றொளி. பூண்-தொழி லடியாகப் பிறந்த பெயர்ச்சொல். பூண்-பகுதி, ஐ - செயப்படுபொருண் மை விகுதி புணர்ந்து கெட்டுநின்றது. அன்றிப் பூணென்னு முத னிலைத் தொழிற்பெயர் பூணப்படுதலாகிய பொருளுக்குத் தொழிலாகு பெயரானதெனினும் பொருந்தும்; பொருதல் சூதாடலுக்கு உரிய தொழிலாய் நின்றாற்போல ஒட்டுதல் பந்தயம் வைத்தலுக்கு உரிய தொழிலாம். ஒதென்னும் ஏவலொருமை வினைமுற்றில் ஆய் விகுதி புணர்ந்துகெட்டது. அவிழ் என்னும் வினைத்தொகையாகிய காலங்கரந்த பெயரெச்சம் தாரென்னும் இடப்பெயர்கொண்டது. உம்மை-இறந்தது தழீஇய எச்சவும்மை. (சரு)

*காரேயுங் கூந்தலாள் கொங்கைமேற் காதலித்த*
*தாரேயுந் தோளான் றனிமனம்போல்—நேரே*
*தவறாய்ப் புரண்ட தமையனொடுங் கூடிக்*
*கவறாய்ப் புரண்டான் கலி.*

(இ-ள்.) நேரே - நேராக, தவறு ஆய் - (வேதநெறிக்கு) மாறாகி, புரண்ட - தீயநெறியிற்சென்ற, தமையனொடும் கூடி - மூத்தோனாகிய புட்கரன் பக்கத்தில் நின்று, கார் ஏயும் - மேகத்தை ஒத்திருக்கின்ற, கூந்தலாள் கொங்கைமேல் - கூந்தலையுடைய தமயந்தியினது ஸ்தனங் களின்மேல், காதலித்த-விருப்பம் வைத்த, தார் ஏயும்-மலர்மாலை தங்கு கின்ற, தோளான்-தோளையுடைய அப்புட்கரனது, தனி மனம்போல்- (தீமையில்) உவமையில்லாத மனம் புரண்டாற்போல, கவறு ஆய் - பாய்ச்சிகையினுருவமாக நின்று, புரண்டான் - உருண்டான், கலி - கலிபுருஷன், எ - று.

(வி-ரை.) போல் என்பது போல என்னுஞ் செயவெனெச்சத் திறு தொக்குநின்றது; அன்றி இடைச்சொலடியாகிய முதனிலை செய

வெனெச்சப்பொருள் படுதலால் அவ்வெச்சமாயிற்றெனவுங் கொள்ளலாம்; அது புரண்டானென்னும் வினைமுற்றைக் கொண்டது. தோளான் என்பது சுட்டுப்பொருளதாய் நின்றது. காரென்பது பண்புப் பெயர் பண்பியாகிய மேகத்துக் காயினதாதலால் பண்பாகுபெயர். ஐயுமென்னும் இரண்டு பெயரெச்சங்களில் முன்னது இடைச்சொலடியாகப் பிறந்தது; குச் சாரியை பெற்று ஏய்க்குமெனவும் வரும்; பின்னது வினையடியாகப் பிறந்தது; இது சாரியை பெறாது. அரசரில் புட்கரனைப்போலத் தீயவொழுக்க முடையார் பிறரின்மையால் அவன் மனத்தைத் 'தனிமனம்' என்றார். காரேயுங் கூந்தலாள் கொங்கைமேற் செல்லுதலால் அவன் மனத்தைக் கவற்றுக் குவமையாக்கினார். மனம் தொழிலுவமமாதலால் தொழில் வருவிக்கப்பட்டது. ஏ-தேற்றம். மூன்றனுருபு ஏழாவதனிடப்பொருளது. உம் - சாரியை. கலிபுருடன் தமயந்தியினது கொங்கைமேற் காதலித்தவனாதலால் தோளானென்பதை அவன்மே லேற்றினும் இழுக்காது. (சக)

வைத்த மணியாரம் வென்றேன் மறுபலகைக்
கொத்த பணைய முரையென்ன — வைத்தநிதி
நூறா யிரத்திரட்டி நூறுநூ றாயிரமும்
வேறாகத் தோற்றானவ் வேந்து.

(இ-ள்.) வைத்த மணி ஆரம் - (நீ பந்தயமாக) வைத்த இரத்தின மாலையை, வென்றேன் - செயித்தேன்; மறு பலகைக்கு - மறுபலகை ஆட்டத்துக்கு, ஒத்த பணையம் - தக்க பந்தயப்பொருளை, உரை என்ன - சொல்லென்று கேட்க, அவ்வேந்து - அந்நளராசன், வைத்த - (அப்போது) வைத்த, நூறாயிரத்து இரட்டி - இரண்டு லட்சமாகிய, நிதி - பொன்னுக்கு, நூறும் - நூறுபங்கும், நூறாயிரமும் - (அவற்றிற்கு) நூறாயிரம் பங்கும், வேறாக - தனித்தனியாக, தோற்றான் - தோற்றனன், எ-று.

(வி-ரை.) பலகை-சூதாடு கருவியை வைக்க அறை கீறிய பலகை. மறு பலகைக்கு என்ற மாத்திரத்தில் ஆட்டமென்பது தானே

வந்திசைதலால் ஆட்டத்துக்கென மிகைபடக் கூறுமல் விட்டனர். மறு பலகை - பண்புத்தொகைநிலைத்தொடர். நூருயிரத்திரட்டி நிதி என்பது நிதி நூருயிரத்திரட்டி எனப் பின் முன்னுகத் தொக்க பண்புத்தொகைநிலைத் தொடராகிய தழாத்தொடர். நூருயிரம் - பண்புத்தொகைநிலைத்தொடர். ஆயிரத்திரட்டி - ஒன்றன்கூட்டத் தற்கிழமைப் பொருட்டாகிய ஆரும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். ஆயிரத்தினிரட்டி என எல்லைப்பொருளில் வந்த ஐந்தாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடராகவுங் கொள்ளலாம். இரட்டி - இரண்டுடையதென்னும் பொருளில் பண்படியாகப் பிறந்த பெயர்; இரண்டு பகுதி, இ-ஒன்றன்பால் விகுதி, ணகரம் டகரமானது வலித்தல் விகாரம், உகரக்கேடு சந்தி. எண்ணைப் பொருளினு ளடக்குவர் நன்னூலார். இரண்டாகுதலுடையதென்னும் பொருளில் இரட்டு-பகுதி, இ - வினைமுதற்பொருண்மை விகுதி, உகரக்கேடு சந்தி; இப்பகுதி இரண்டென்னும் பெயரடியாகப் பிறந்தது. நூறும், நூருயிரமும் என்பன எண்ணளவையாகு பெயர். நிதி நூறும், நிதி நூருயிரமும் எனக் கூட்டிப் பொருள் கொள்ளின் மேலே சொன்ன முன்பின்னுகத் தொக்க தழாத்தொடராகிய பண்புத்தொகைநிலைத்தொடர்களாம். வேந்து-பண்பாகுபெயர்.()

பல்லா யிரம்பரியும் பத்துநூ றுயிரத்துச்
சொல்லார் மணித்தேருந் தோற்றதற்பின்—வில்லாட்கள்
முன்றோற்று வானின் முகிறோற்கு மால்யானை
பின்றோற்றுத் தோற்றான் பிடி.

(இ-ள்.) பல் ஆயிரம் பரியும் - பலவாகிய ஆயிரம் குதிரைகளையும், பத்துநூறு ஆயிரத்து - பத்துலட்சமாகிய, சொல் ஆர் - புகழ் நிறைந்த, மணித்தேரும் - மணிகளையுடைய தேர்களையும், தோற்றதன்பின் - தோற்றதற்குப்பின், வில் ஆட்கள் - விற்போரில் வல்லபடைவீரர்களை, முன் தோற்று - முன்னே தோற்று, வானின் - ஆகாயத்தில் உலாவுகின்ற, முகில் தோற்கும் - மேகங்கள் தோற்கின்ற, மால் யானை - மத

மயக்கமுடைய யானைகளை, பின் தோற்று-(அரசன்) பின்னே தோற்று, பிடி - பெண்யானைகளை, தோற்றான் - தோற்றனன், எ - று.

(வி - ரை.) தோற்றதன்பின் என்பதைத் தோற்றது அன்பின் எனப் பிரித்துத் தோற்றதனின்பின், தோற்றதற்குப்பின், தோற்றதனதுபின் என மூன்று பொருளால் மயங்கியதெனக்கொள்க; மூவழியும் தோற்றதென்பது இறந்தகாலத்தொழிற்பெயர்; தோற்று அதன் பின் எனப் பிரித்து இறந்தகால வினையெச்சத் தொகாநிலைத்தொடராகவுங் கொள்ளலாம். னகரம் றகரமானது வலித்தல் விகாரம். பல்லாயிரம்-பண்புத்தொகைநிலைத்தொடர்; விரிந்தால் பன்மையாகிய ஆயிரமென விரியும். நன்னூலார் பல என்பதன் ஈற்று அகரம் பல என்பதொழிந்த வருமொழிப்புணர்ச்சியால் கெட்டதென்றபடி கொள்ளின் இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடர்; விரிந்தால் பலவாகிய ஆயிரமென விரியும். பல என்பது அஃறிணைப்பன்மைப்பெயர். முகிலேறு்றல் இவ் யானைகள் மேகங்களின் நிறத்தின் மிக்க கருமையையும், மழை பெய்கையின் மிக்க மதம் பெய்கையையும், குமுறலின் மிக்க பிளிறலையுமுடையன ஆதலால் ஒப்பாகாமை. மணித்தேர்-இரத்தினங்களை இழைத்த தேரெனவும் உரைக்கலாம். தோற்றது: தோல் - பகுதி, ற்-இறந்தகால இடைநிலை, அ-சாரியை, து-பகுதிப்பொருள் விகுதியாகிய தொழிற்பெயர் விகுதி, லகரம் றகரமானது சந்தி. இத்துவ்விகுதி தோற்கிறது, தோற்பது என நிகழ்கால எதிர்கால இடைநிலைகளையும் பெற்று உடன்பாட்டிலும், தோலாதது என எதிர்மறையிலும், பாய்த்து, முயற்று எனக் கால இடைநிலை பெறாமல் உடன்பாட்டிலும் வரும். (சஅ)

சாதுரங்கம் வென்றேன் றரும்பணைப மேமேதன்ன
மாதுரங்கம் பூணு மணித்தோரான்—சூதரங்கில் [ற்
பாவையரைச் செவ்வழிபாழ்ப் பண்ணின்மொழிப் பின்னுகுழ
பூவையரைத் தோற்றான் பொருது.

(இ - ள்.) சாதுரங்கம் - நால்வகைச் சேனையையும், வென்றேன் - செயித்தேன்; தரும் பணயம் - (இனி உன்னால்) கொடுக்கப்படும் பந்தயப்பொருள், ஏது என்ன - யாதென்று (புட்கரன்) கேட்க, மாதுரங்கம் - பெருமையாகிய குதிரைகளால், பூணும் - பூணப்படும், மணி தேரான் - மணிகளையுடைய தேரையுடைய நளராசன், அரங்கில் - சூதாட்டத்துக்கு வகுத்ததானத்தில், சூது பொருது - சூதாடி, பாவையரை - பதுமையை ஒத்தவரை, செவ்வழி யாழ்ப் பண்ணின் - செவ்வழிக்குரிய யாழினிசையை ஒத்த, மொழி - சொல்லையும், பின்னு குழல் - பின்னிய கூந்தலையுமுடைய, பூவையரைத் தோற்றான் - நாகணவாய்ப் புள்ளையொத்த மாதரைத் தோற்றான், எ - று.

(வி - ரை.) சதுரங்கமென்பது சாதுரங்கமென நீட்டல்பெற்றது; இது பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த விட்ட வன்மொழித்தொகை. விட்ட வன்மொழித்தொகையை வடநூலார் அதற்குணகம் விஞ்ஞான வெகு விரீகி என்பர். துரங்கம் - வேகமான நடையையுடையது. பாவையர், பூவையர் என்பனவற்றில் பாவை பூவை என்பன உயர்திணைப் பெண்பாலொருமைக்கு உவமையாகுபெயர்களாய் அர் விகுதிபெற்று அப்பாலின் பன்மையை யுணர்த்தின. செவ்வழியாழ்ப்பண் - நால்வகைப் பண்ணி லொன்று; "உரவிய பாலை யாழே யுலவிய குறிஞ்சி யாழே, மருதஞ்செவ் வழியா மென்ன வருத்தரா லிசையு நாற்பண்" என்பது நிகண்டு. பாவையரை, பூவையரை என்னும் ஒரு பொருண்மேல் வந்த பலபெயர்கள் தோற்றான் என்னும் ஒரு பயனிலை கொண்டன. பண்ணின் என்பதில் இன் ஐந்தனுருபன்று, சாரியை; இன்னை ஐந்தனுருபாகக் கொள்ளின் மொழியை முதனிலைத் தொழிற்பெயராகக்கொண்டு பண்போல் மொழிதலையும் என வுரைக்க. பண்போன்ற, பண்ணைப் போன்ற என உவமைத்தொகைநிலைத்தொடர், இரண்டாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடராகிய அல்வழி வேற்றுமைப் புணர்ச்சியாகக் கொள்க. அன்றி இன் என்பதைப் பண்புப் பெயராகக்கொண்டு பண்ணையொத்த இனிமையாகிய மொழி எனவும் உரைக்க. (சக)

கற்பின் மகளிர்பா னின்றுங் கலையல்குல்
விற்கு மகளிர்பான் மீண்டான்போல்—நிற்கும்
நெறியானை மெய்ம்மைவாய் நின்றானை நீங்கிச்
சிறியானைச் சேர்ந்தா டிரு.

(இ-ள்.) கற்பின் - கற்பையுடைய, மகளிர்பால்நின் றும் - மாதர்களிடத்திலிருந்து, கலை அல்குல் - மேகலையணிந்த அல்குலை, விற்கும் - விலைப்படுத்தும், மகளிர்பால் - வேசையரிடத்தில், மீண்டான்போல் - மீண்டு சென்ற அறிவிலியைப்போல, திரு - திருமகள், நிற்கும் நெறியானை - நன்னெறியில் நிற்பவனை, மெய்ம்மைவாய்-சத்தியத்தில், நின்றானை - தவறுதலில்லாதவனாகிய நளராசனை, நீங்கி - பிரிந்து, சிறியானை - சிறுமைக்குணமுடைய புட்கரனை, சேர்ந்தாள் - அடைந்தாள், எ - று.

(வி-ரை.) கைத்தலமென்பது ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத் தொடராயினும் உடையதும் உடைமையும் வேறாகாமைபோல மகளிர்பால் என்பது ஒற்றுமைப்பொருளில் வந்த ஆறும் வேற்றுமைத்தொகை நிலைத்தொடர். பாலென்னும் இடப்பெயரோற்று நின்ற நின்றென்பது ஐந்தாவதன் சொல்லுருபு. உம் - சாரியை. மீண்டாற்போல் எனப் பாடமானால் ஒருவனென்பதைத் தோன்றா எழுவாயாக வருவிக்க. மீண்டான்-இறந்தகால வினையாலணையும்பெயர்; மீள்-பகுதி, ட் - இறந்தகால இடைநிலை, ஆன்-ஆண்பால் விகுதி, பகுதி யீற்று ளகரம் டகரமானது-சந்தி, அது ணகரமானது மெலித்தல் விகாரம். கொடிச்சேவலோ வென்பதைச் சேவற்கொடியோவெனக் கூட்டிப் பொருள் கொள்வல்போல நிற்கும் நெறியானை என்பதில் நெறி நிற்பானை எனக் கூட்டிப் பொருள் கூறுக. திருமக ளென்பது இங்கே செல்வத்தையாதலால் நளராசன் எல்லாப் பொருளையுந் தோற்றானென்பது கருத்து. ()

மனைக்குரியா ரன்றே வருந்துயரந் தீர்ப்பார்
சினைச்சங்கின் வெண்டலையைத் தேனல்—நனைக்கும்

குவளைப் பணைப்பைந்தாட் குண்டுநீர் நாடா
இவளைப் பணயந்தா வென்று.

(இ-ள்.) சிலைச்சங்கின் - (தன்னைத் தாக்கிய) சூல்கொண்ட சங்கினது, வெள் தலை-மிக்க வெண்மையாகிய தலையை, தேனால் - (தன் மலரினது) தேனினால், நனைக்கும்-நனைக்கின்ற, குவளை-குவளையினது, பணை - பருமையாகிய, பைந்தாள் - பசுந்தண்டுகளையுடைய, குண்டு நீர் நாடா-ஆழமாகிய நீர்வளமுள்ள நிடதநாட்டையுடையானே, வரும் துயரம் - (நாயகர்க்கு) வருகின்ற துன்பங்களை, தீர்ப்பார் - நீக்குதற்கு உரியோர், மனைக்கு உரியார் அன்றே - இல்லறத்துக்குரிய மாதரே ஆவார்; (ஆதலால்) இன்று - இப்போது, இவளை - இத்தமயந்தியை, பணயம் - பந்தயப்பொருளாக, தா என்றான் - தாராயென்றான், எ - று.

(வி - ரை.) நனைக்குமென்னும் பெயரெச்சம் தாளென்னும் செய்வதன் பெயர்கொண்டது. அன்று என்பது இங்கு அல்லர் என்று பொருள்படுதலால் இது உண்டென்பதுபோல இருதிணையைம்பால் மூவிடங்களுக்கும் பொதுவாய் வழங்குங் குறிப்புவினைமுற்று. ஏ-எதிர்மறை. அன்றே அன்றினது ஈற்றில் நின்ற ஏ தெளிவுப்பொருள் தந்ததென்னனுமொன்று. தீமை செய்தார்க்கும் நன்மைசெய்யு மியல்புடையாயென்பான் 'சங்கின் வெண்டலைத் தேனால் நனைக்கும்' என்றும், மனைக்குரியார் நாயகரோடு ஒக்க இன்பதுன்பங்களை அநுபவித்தற் குரியாராவ ரென்பதைக் குறிப்பிப்பான் 'குவளைப் பணைப்பைந்தாட் குண்டுநீர்' என்றும், நிடதநாட்டின்மேலேற்றி 'நாடா' எனவும், நாயகனருகு நிற்கின்றமையால் தமயந்தியை அண்மைச்சுட்டால் 'இவளை' எனவும், நளராசன் எல்லாச் செல்வங்களையும் இழந்தமையால் அவனைச் சிற்றரசனாகிய தன்னேடொப்போனாகக் கருதித் 'தா' எனவுங் கூறினான். (௫௧)

இனிச்சூ தொழிந்தோ மினவண்டு கிண்டிக்
கனிச்சூத வார்பொழிலின் கண்ணே—பனிச்சூதப்
பூம்போ தவிழ்க்கும் புனனாடன் பொன்மகளே
நாம்போது மென்றா னளன்.

(இ-ள்.) நளன் - நளராசன், (அதற்கு நேரே உத்தரம் சொல்லாமல்) கனி - கனிகளையுடைய, சூதம் - மாமரங்களினது, வார் - ஓங்கி வளர்ந்த, பொழிலின் கண் - சோலையில், இனம் - கூட்டத்தினது, வண்டு - வண்டானது, கிண்டி - (காலால்) கிண்டி, பனி சூதம் - குளிர்ச்சியாகிய அம்மாமரங்களினது, பூ போது - பொலிவாகிய போதை, அவிழ்க்கும் - மலர்த்தும், புனல் நாடன் - நீர்வளமுள்ள விதர்ப்பநாட்டையுடைய வீமராசனுக்கு, பொன் மகளே - பொன்போன்ற மகளே, இனி சூது ஒழிந்தோம் - இனிச் சூதாடுதலினின்றும் நீங்கினோம்; நாம் போதும் என்றான் - நாம் போவோமென்றான், எ-று.

(வி-ரை.) இனி என்பது காலப்பொருள் தரும் இடைச்சொல். இனத்தினது வண்டென்பதில் ஆறாவது உறுப்புத்தற்கிழமைப்பொருளது. வண்டினது இனமென்றால் அது ஒன்றன்கூட்டத்தற்கிழமைப் பொருளது. தன் தேவியை நோக்கிக் கூறினனாதலால், ஒழிந்தோம், போதும் என்னும் இரண்டும் முன்னிலையிடத்துப்பொருளைத் தன்னோடுளப்படுத்திய தன்மைப்பன்மை வினைமுற்று. நாமென்பதும் அவ்வாறுநின்றபெயர்; இது உலக வழக்கு. விதர்ப்பன் பொன்போலப் போற்றிவளர்த்த நினக்கு என்னோடு காடு செல்ல நேர்ந்ததே என்னுங் கருத்தால் 'புனனாடன் பொன்மகளே' என்றான். சூதப்பொழில் ஒன்றன்கூட்டத்தற்கிழமைப் பொருளினும், சூதப்போது உறுப்புத்தற்கிழமைப்பொருளினும் வந்த ஆறாம்வேற்றுமைத்தொகை. போதும்: போ-பகுதி, தும்-தன்மைப்பன்மை விகுதி, இதுவே எதிர்காலங்காட்டியது. அவிழ்க்கும் பிறவினை, அவிழும் தன்வினை; அவிழ் - பகுதி, க் - சந்தி, கு-சாரியை, உம் - எதிர்காலப்பெயரெச்சவிகுதி. இன்று-காலப்பெயர்;

இ-பகுதி (சுட்டு), ற்-சந்தி, று-காலத்தை யுணர்த்தும் விகுதி, றகரம் னகரமானது மெலித்தல் விகாரம்; போதென்பது கிண்டி அவிழ்க்கு மென்ற குறிப்பால் மலராதற்கு முன்னுள்ள நிலைமையுடைய பேரரும்பை யுணர்த்தியது; அதனை "காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலை மலருமிந் நோய்" என்னுங் குறளாலு முணர்க. (௫௨)

மென்காற் சிறையன்னம் வீற்றிருந்த மென்மலரைப்
புன்காகங் கொள்ளத்தான் போனாற்போல்—தன்கால்
பொடியாடத் தேவியொடும் போயினா னன்றே
கொடியானுக் கப்பார் கொடுத்து.

(இ-ள்) மெல் கால் - மென்மையாகிய காலையும், சிறை அன்னம் - சிறை வளப்பத்தையுமுடைய அன்னமானது, தான் வீற்றிருந்த-தான் பெருமையாக இருந்த, மெல் மலரை - மென்மையாகிய தாமரை மலரை, புல் காகம் - இழிந்த இயல்பையுடைய காகமானது, கொள்ள - தனதாக்கிக்கொள்ள, போனால் போல் - (அம்மலரினின்றும்) நீங்கினாற்போல, அன்றே - தோற்ற அப்பொழுதே, கொடியானுக்கு-கொடுமையையுடைய புட்கரனுக்கு, அப்பார் - அந்நிடதநாட்டை, கொடுத்து-கொடுத்துவிட்டு, தன் கால் - தன் காலில், பொடியாட - புழுதிபடியும்படி, தேவியொடும் - மனையாளோடு, போயினான்-சென்றான், எ-று.

(வி-ரை) அன்னம் வீற்றிருந்த என்றதனால் மென்மலர் தாமரைமலரென்பது விளங்கியது. தோலடியாதலால் 'மென்கால்' என்றார். இப்பெருஞ் செல்வத்தை ஆளுதற்குத் தக்கவன் நளனேயன்றிப் புட்கரனல்லனென்பார் நளனுக்கு மென்கா லன்னத்தையும் புட்கரனுக்குப் புன்காகத்தையும் உவமையாக்கினார். மூன்றனுருபை அடுத்துவந்த உம் சாரியை. ஏ-தேற்றம். அன்றென்பதைக் காலப்பெயராகக் கொள்ளாமல் அசையாகக் கொண்டு ஏ இரக்கப்பொருட்டெனினும் ஒக்கும். பார் இடத்தையும், இடத்திலுள்ள பொருளையும் உணர்த்தியது. தன்னி

லுள்ள பொருளை யுணர்த்தும்போது இடவாகுபெயர். கால் - எண்ணலளவையாகுபெயர். மலர்-தொழிலடியாகப்பிறந்த பெயர்; மலர்-பகுதி, இ - வினைமுதற்பொருண்மை விகுதி புணர்ந்துகெட்டது; மலரென்னும் முதனிலைத்தொழிற்பெயர் ஆகுபெயராய் மலர்தலையுடைய பொருளை யுணர்த்தியதெனினும் பொருந்தும். அ என்னுஞ் சுட்டு நிடதநாட்டின் உயர்வைச் சுட்டி நின்றது. (௫௩)

கடப்பா ரெவரே கடுவினையை வீமன்
மடப்பாவை தன்னுடனே மன்னன் — நடப்பான்
வனத்தே செலப்பணித்து மாயத்தாற் சூழ்ந்த
தனைத்தே விதியின் வலி.

(இ-ள்) கடு வினையை - (செய்தவனிடத்து) விரைந்து செல்கின்ற வினைப்பயனை, கடப்பார் - கடக்கவல்லவர், எவர்-ஒருவருமிலர்; விதியின் வலி - ஊழினது வன்மை, வீமன் - வீமராசனுடைய, மடம்-மடமென்னுங் குணமுடைய, பாவைதன்னுடன் - பதுமையையொத்த புத்திரியோடு, மன்னன் - நளராசன், நடப்பான் - நடையினால், வனத்து - காட்டில், செல - போம்படி, மாயத்தால் - வஞ்சனையால், சூழ்ந்து - ஆராய்ந்து, பணித்தது - தனக்கடங்கச்செய்தது, அனைத்தே - அவ்வளவினதா இன்னும் பலவுண்டு, எ-று.

(வி ரை.) விதிவலி நளனைத் தன்னாடிழக்கச்செய்து தேவியோடு காடுசெலச்செய்ததேயன்றித் தன் தேவியை விட்டுப் பிரிதல் முதலிய தீங்குகளையுந் தந்ததென்பார் அனைத்தே என்னும் வினாவுக்குப் பயனிலையாகிய விடை கொடுத்து முடிக்காதொழிந்தனர். கடு என்பது கடி என்னும் உரிச்சொல்லின் இகரம் உகரமாகத் திரிந்தது; கடுமையென்னும் பண்பு ஈறு கெட்டுப் புணர்ந்ததெனினும் குற்றமன்று. பணித்துச் சூழ்ந்தது என்னும் நிலைமொழி வருமொழிகளை முன்பின்னாக் மாற்றிச் சூழ்ந்து பணித்ததென விகுதிகளைப் பிரித்துக் கூட்டிப்

பொருள் கூறுக. மடமென்னுங் குணமாவது அறிந்தும் அறியாமை போலிருத்தல். நடப்பு-தொழிற்பெயர்; நட-பகுதி, ப்-சந்தி, பு-தொழிற் பெயர் விகுதி; மூன்றாவதாகிய ஆனுருபேற்று நடப்பானென நின்றது; நடப்பானென்ற குறிப்பு தேர் முதலிய வாகனத்தாற் செல்லாமை யை யுணர்த்தியது. அனைத்தே என்னுங் குறிப்பு வினைமுற்றின் ஈற் றில் நின்ற ஏவை வினாவாகக் கொள்ளுதலே அன்றித் தேற்றமாகக் கொண்டு அவ்வளவினதே நளனை இனி வேறென்ன செய்யமாட்டு மென விதிவலியைக் கவி இழித்துக் கூறியதாகக் கொள்ளினும் அமையும். (௩௪)

ஆருயிரின் றாயே யறத்தின் பெருந்தவமே
பேரருளின் கண்ணே பெருமானே—பாரிடத்தை
யார்காக்கப் போவதுநீ யாங்கென்றார் தங்கண்ணின்
நீர்வார்த்துக் கால்கழுவா நின்று.

(இ-ள்.) தம் கண்ணின் - தங்களுடைய கண்ணினது, நீர் வார்த்து - நீரைச் சிந்தி, கால் கழுவாநின்று - (நளராசனுடைய) அடிகளைக் கழுவிக்கொண்டே, ஆர் உயிரின் தாயே-அருமையாகிய உயிர்களினது தாயே, அறத்தின் - அறத்தினது, பெரு தவமே - உயர்ந்த தவப்பயனே, பேர் அருளின் கண்ணே-மிக்க கருணையினது கண்ணே, பெருமானே- (நற்குணநற்செய்கையால்) பெரியோனே, பார் இடத்தை - பூமியாகிய இடத்தை (நிடதநாட்டை), யார் காக்க-யாவர் காக்கும்படி, நீ போவது யாங்கு - (எம்மைவிட்டு) நீ செல்வது எவ்விடம், என்றார் - என்று புலம்பினார், எ - று.

(வி-ரை.) காலின்மேல் விழுந்து அழுகின்றாராதலால் 'கண்ணி னீர் வார்த்துக் கால் கழுவா நின்று' என்றார். தன் மகவைத் தாய் காப் பதுபோலக் குடிகளைக் காத்தலினால் 'ஆருயிரின்றாயே' எனவும், ஒருவ னது மேலைத் தவப்பயனாகிய செல்வம் அவனுறுதற்குக் காரணமாய்

நின்றாற்போல அறம் ஆகுதற்குக் காரணமாய் நின்று அதனை ஆக்குத லால் 'அறத்தின் பெருந்தவமே' என்வும், ஒருவன் வழியறிந்து நடத்தலுக்குக் கண் இன்றியமையாததுபோல உலகில் அருள் வழங்கு தற்கு இவன் இன்றியமையாமையின் 'அருளின்கண்ணே' என்வும், நற்குண நற்செய்கைகளில் சிற்சிலவே மற்றவரிடத்துண்டு இவனிட த்து அவையெல்லா முண்டாயிருத்தலால் 'பெருமானே' என்வும், இப் பெருங்குணம் உடையார் பிறரில்லாமையால் 'யார் காக்க' என்வும் அந் நகரத்தார் கூறினார்கள். அருளின்கண்ணே மிக்க கருணையின்து இருப் பிடமே எனவும் உரைக்கலாம். பிறப்பின தருமையை உயிரின்மே லேற்றி 'ஆருயிர்' என்றார். அருமை என்பதில் மை கெட்டு அகரம் ஆகாரமாய் முதல் நீண்டு, "இனையவும்"என்பதனால் உகரங்கெட்டு நின் றது; "முற்றும் அற்றொரோவழி"-என்பதனால் உகரங்கெட்டதெனின் ஆர் பொருள், கார்க்குழல் என மெய்ம்முதன் மொழிபுணரும்போதும் அவ்வுகரங் கெட்டு நிற்றலால் அது பொருந்தாது. பேரருள் என்பதில் பெருமை அவ்வாறு நின்றதெனக் கொள்க. பெருமானென்பதில் மான் விகுதி, அல்லது ஆன் விகுதியெனின் மகரம் விரித்தல் விகார மென்க. பெருமன் என்பதில் ஈற்றயல் அகரம் ஆகாரமாகி ஏ யிருந்த விளியுருபெனினும் ஒக்கும். யார் என்பது யாவர் என்னும் வினைப்பெய ரின் மரூஉ; ஆரெனவும் மரூஉவாய்வரும்; யாவரென்பதன் மரூஉவாகிய யாரென்னும் வினைப்பெயர்க்கும் யாரென்னும் வினைவினைக் குறிப்பு முற்றுக்கும் வேற்றுமை என்னெனில் பெயர் வினைவப்படும் பலர்பாற் பொருளை உணர்த்தி விளியொழிந்த வேற்றுமைகள் சார்தற் கிடமாய் நிற்கும்; குறிப்புமுற்று குறிப்பாகக் காலத்தை யுணர்த்திப் பெரும் பான்மை ஆண் பெண் பலரென்னும் படர்க்கை முப்பால்களில் ஒன்றற் கும், சிறுபான்மை நான் யார், நீ யார், உள்ளம் யாரெனத் தன்மை முன் னிலை ஒருமைக்கும், படர்க்கை அஃறிணை யொருமைக்கும் பயனிலை யாய் நிற்கும்; இவையே தம்முள் வேற்றுமை; இக்குறிப்பு முற்றும் ஆரென மரூஉவாய் வரும். போவது வினைமுதல் வினையை இடத்தின்

மேலேற்றிக்கூறும் எதிர்கால வினையாலணையும்பெயர்; இது யாங்கென்னும் வினாப்பெயர் கொண்டது; யா - பகுதி, க்-சந்தி, கு-இடப்பொருண்மை யுணர்த்தும் விகுதி, ககரம் ஙகரமானது மெலித்தல் விகாரம்; மற்ற வினாவோடும், சுட்டுகளோடும் இவ்விகுதி வருமெனக். (௫௫)

வேலை கரையிழந்தால் வேத நெறிபிறழ்ந்தால்
ஞால முழுது நடுவிழந்தால்—சீலம்
ஒழிவரோ செம்மை யுரைதிறம்பாச் செய்கை
அழிவரோ செங்கோ லவர்.

(இ-ள்.) வேலை - கடல், கரை இழந்தால் - கரையைக் கடந்து பொங்கினாலும், வேதநெறி - வேதங் கூறிய ஒழுக்கம், பிறழ்ந்தால் - (பயன் தருவதில்) மாறினாலும், ஞாலம் முழுதும் - பூமியிலுள்ளார் யாவரும், நடுவு இழந்தால் - நடுவுநிலைமையை விட்டாலும், செங்கோலவர் - ஆளுகை முறைமையுடைய அரசர், சீலம் ஒழிவரோ - (தமது) நல்லொழுக்கத்தினின்றும் நீங்குவரோ (நீங்கார்); செம்மை - நடுவுநிலைமையும், உரை - (சொல்லிய) சொல்லும், திறம்பாச் செய்கை-தவறுதலில்லாத செய்கை, அழிவரோ - கெடுவரோ (கெடார்), எ-று.

(வி-ரை) இழந்தால், பிறழ்ந்தால், இழந்தால் என்பவற்றினீற்றில் உயர்வுசிறப்போடு எண்ணின்கணின்ற உம்மைகள் தொக்கு நின்றமையால் இது வினைச்செவ்வெண்; இழந்தாலும் முதலிய உம்மைகள் இழவாது, பிறழாது, இழவாது என எதிர்மறைப்பொருள் தருவனவாகக் கொள்ளின் எதிர்மறை யும்மைகளுமாம். வேலையென்னுங் கடற்கரையின் பெயர் கடலுக்கானமையால் சினையாகுபெயர். ஞாலம்-இடவாகுபெயர். ஓகார மிரண்டும் எதிர்மறை. செங்கோலவர் - பொருளடியாகப் பிறந்த பெயர்ச்சொல்; செங்கோல்-பகுதி, அ - சாரியை, வ்-சந்தி, அர்-பலர்பால் விகுதி; செங்கோல் அவர் என இரு சொல்லாகப் பிரித்துச் செங்கோலையுடைய அவ்வரசர் என வுரைப்பினும் பொருந்தும். ஆளு

னை முறைமை செம்மையாகிய கோலைப்போலுதலால் அதனைச் செங்கோலென்றது உவமையாகுபெயர். செங்கோலவர் செய்கை யழிவரோ என்றது திணைவழுவமைதி. செங்கோலவர் (தமதாளுகையின்கீழுள்ள) பூமி முழுதையும் இடையிலே இழந்துவிட்டால், வேலை கரை யிழந்தாலும் வேதநெறி பிறழ்ந்தாலும் சீலம் ஒழிவரோ செய்கையழிவரோ எனக் கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளலு மொன்று. இச்செய்யுள் அங்கராசனங்கள் ஒருவருக்கொருவர் தம்மில் பேசியதாகச் செய்யப்பட்டது. (௫௬)

வடியேறு கூரிலைவேன் மன்னவோ வுன்றன்
அடியேங்கட் காதரவு தீரக்—கொடிநகரில்
இன்றிருந்து நாளை யெழுந்தருள்க வென்றுரைத்தார்
வென்றிருந்த தோளான்றாள் வீழ்ந்து.

(இ - ள்.) வென்று - (பகைவரை முற்றும்) வென்று, இருந்த - (போர்பெறாமல்) சோம்பியிருந்த, தோளான் - தோளையுடைய நளராசனது, தாள் வீழ்ந்து - பாதங்களில் விழுந்து, வடி - வடிக்குந்தொழில், ஏறு - மிக்க (மிகுதியும் வடித்த), இலை - வெற்றிலையை ஒத்த, கூர் வேல் - கூர்மையாகிய வேலைத்தாங்கிய, மன்னவோ - அரசனே! உன்றன் - உன்னுடைய, அடியேங்கட்கு - அடியேங்களுக்கு, ஆதரவு தீர - (நீ இருக்கவேண்டுமென்னும்) ஆசை முடிவுபெற, கொடி நகரில் - கொடிகளை நாட்டிய நகரத்தில், இன்று இருந்து - இத்தினம் தங்கி, நாளை எழுந்தருள்க என்று - நாளைத்தினம் செல்லக்கடவாயென்று, உரைத்தார் - சொன்னார்கள் (அங்கநாத்துள்ளார்), எ - று.

(வி-ரை.) வடியேறு கூர் என்பதற்கு வடி-வடிக்குந்தொழிலால், ஏறு கூர்-உண்டாகின்ற கூர்மை எனவும் உரைக்கலாம். வெற்றிலைக்கு இலையென்னும் பெயர் தலைமைபற்றி வந்தது; "இலைநட்டு வாழும்" என்னும் ஆட்பெயருதாரணத்தாலு முணர்க; இது மெய்யுவமம். அடி

யெங்கள்-பண்படியாகப் பிறந்தபெயர்; அடிமை-பகுதி, மகர வைகாரக் கேடும் யகரமெய்த் தோற்றமும் சந்தி, எம் - தன்மைப்பன்மைவிகுதி, கள்-விகுதிமேல் விகுதி, இது தன்மையில் படர்க்கைவந்த இடவழுவமைதி. எழுந்தருள்க-வியங்கோள் வினைமுற்று; எழு-பகுதி, த்-சந்தி, து-சாரியை, அருள் கூறுவோனுடைய தாழ்வையும், கூறப்படுவோனுடைய உயர்வையும் உணர்த்தும் விகுதி, சாரியை உகரக்கேடு சந்தி, தகரம் நகரமானது மெலித்தல் விகாரம், அனைத்து மொருபகுதி, க-வியங்கோள் விகுதி. மன்னாவோ - விளியுருபேற்ற மன்னன் என்பதில் ஈற்றயல் அகர நீண்டு ஈறு கெட்டு ஓகார மிகுந்தது; ஓகாரமிகுதல் புலம்பலுக்குரிய குறி. (௬எ)

மன்றலிளங் கோதை முகநோக்கி மாநகர்வாய்
நின்றுருகு வார்கண்ணி னீர்நோக்கி—இன்றிங்
கிருத்துமோ வென்றா னிளங்குதலை வாயாள்
வருத்தமோ தன்மனத்தில் வைத்து.

(இ-ள்.) மா நகர்வாய் - பெரிய மாவிந்தநகரத்தில், நின்று-(தாம் செல்லவழியில்லாமல் நெருங்கி) நின்று, உருகுவார் - மனமுருகுகின்றவர்களுடைய, கண்ணின் நீர் நோக்கி - கண்ணினது நீரைக்கருதி (அழுகையைக்கருதி), மன்றல் - (இயற்கையாகிய) வாசனையமைந்த, இளங் கோதை - மென்மையாகிய கூந்தலையுடைய தமயந்தியினது, முகம் நோக்கி - முகத்தைப் பார்த்து, இள குதலை வாயாள் - மென்மையாகிய மழலைச்சொல்லைக் கூறும் வாயையுடைய அவளது, வருத்தமோ - வருத்தத்தையோ, தன்மனத்தில் வைத்து - தன்மனத்தில் (புறத்தே தோன்றாமல் புதைய) வைத்து, இன்று - இத்தினம், இங்கு - இந்நகரத்தில், இருத்துமோ - இருப்போமா, என்றான் - என்று (நளராசன்) வினவினான், எ - று.

(வி-ரை.) மனத்தில் வைத்தென்றதனால் புறத்தே தோன்றாமல் என்பது வருவிக்கப்பட்டது; மனத்தில் புதையவையாமையின் நகரத்

தாரைப்போலத் தானும் புலம்புவானென்பது குறிப்பெச்சம். இளங் கோதை, இளங்குதலை என்பவற்றில் "வேயிளந்தோளி" என்பதிற் போல இளமை மென்மையை உணர்த்திநின்றது. இளங்கோதை பண் புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. கண்ணினீர் - பொருட்பிறிதின்கிழமைப் பொருட்டாகிய ஆறாம்வேற்றுமைத் தொ கைநிலைத்தொடர். ஓகாரம் இரண்டில் முன்னது வினு; பின்னது உயர்வுசிறப்போடு பிரிநிலைப்பொருளது. இருத்தும்-தன்மைப்பன்மை எதிர்கால வினைமுற்று; இரு-பகுதி, த்-சந்தி, தும்-விகுதி, இவ்விகுதி யே இடப்பன்மையையும், காலத்தையும் உணர்த்தியது. இறந்தகாலத் தில் இருந்தமோ எனவரும். கோதைமுகம், உருகுவார்கண்-உறுப்புத் தற்கிழமைப்பொருளவாகிய ஆறாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர் கள். குதலைவாயாள் வருத்தம் - தொழிற்பண்புத் தற்கிழமைப்பொருள தாகிய ஆறாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். இளங்குதலை வாயா ளென்பது சுட்டின்கண் வந்தது. அவளது வருத்தமாவது மெல்லடிகள் கொப்புளிக்கப் புழுதியை மிதித்து வெயிலில் நடந்து வருவதினாலுண் டாகும் வருத்தம். வருத்தம் - தொழிற்பெயர்; வருந்து - பகுதி, அம் - தொழிற்பெயர் விகுதி, நகரம் தகரமானது வலித்தல் விகாரம், உகரக் கேடு சந்தி; இவ்விகுதி புணரும்போது வருத்தமென மென்றொடரும், பெருக்கமென உயிர்த்தொடரும், நாட்டமென நெடிற்றொடரும், ஒற்க மென இடைத்தொடரும் ஆகிய குற்றியலுகரப் பகுதிகளும், செற்ற மென முற்றுகரப்பகுதியும் விகாரப்பட்டே வரும். (௯அ)

> வண்டாடுந் தார்நளனை மாநகரில் யாரேனும்
> கொண்டாடி ஞர்தம்மைக் கொல்வமெனத்—தண்டா
> முரசறைபா யாங்கென்றான் முன்னே முனிந்தாங்
> கரசறியா வேந்த னழன்று.

(இ-ள்.) அரசு - அரசுத்தன்மையை, அறியா - தெரியாத, வேந் தன் - புட்கராசன், அழன்று - (மனம்) புழுங்கி, வண்டு - (தேனையுண்ண

வந்த) வண்டுகள், ஆடும் - சுற்றுகின்ற; தார் நளனை-மலர்மாலையணிந்த நளனை, மா நகரில் - பெரிய மாவிந்தநகரத்தில், யார் எனும் - எத்தன்மையராயிருப்பினும், கொண்டு - மேன்மையாக அழைத்து, ஆடினர் தம்மை-இனிய மொழிகளைப் பேசினவர்களை, கொல்வம் என - (நாம்) கொல்லுவோமென்று, முனிந்து-கோபித்து, தண்டா-(யாம் சொன்ன கட்டளையில்) நீங்காமல், ஆங்கு - அவ்விடத்தில், (நளனைச் சனங்கள் சூழுமிடத்தில), முரசு-பேரிகையை, முன்னே அறையாய் என்றான்- எதிரே கொட்டென்றான், எ-று.

(வி-ரை.) பின்னுள்ள ஆங்கு அசை. யார்-யாவரென்னும் வினாப் பெயரின் மரூஉ. என்-எனின் என்பதன் மரூஉ. உம்மை உயர்வு சிறப்பு. கொண்டாடினார் என்பதை ஒரு சொல்லாகக் கொள்ளின், நன்கு மதிப்பவரை என உரைக்க. தம் - சாரியை. தண்டாமல் என்னும் எதிர்மறை வினையெச்சத்தீறு தொகுத்தலாய்த் தண்டா என நின்றது. அழன்று - பெயரடியாகப்பிறந்த இறந்தகால வினையெச்சம்; அழல்-பகுதி, ற்-இறந்தகால இடைநிலை, உ-வினையெச்சவிகுதி, லகரம் றகரமானது சந்தி, அது னகரமானது மெலித்தல் விகாரம். வேந்தன் - பண்படியாகப் பிறந்தபெயர்; வேந்து (அரசத்தன்மை) - பகுதி, அன் - ஆண்பால் விகுதி, உகரக்கேடு சந்தி. முன்னே அரசனியா என்றதனால் வேந்தனென்றது சாதிபற்றி வந்த பெயரென்க. தன்னை யுயர்த்திக் கொல்வமென்றான். கொல்லென்றும் பாடமுண்டு. (ருக)

அறையும் பறையரவங் கேட்டழிந்து நையும்
பிறைநுதலாள் பேதைமையை நோக்கி—முறுவலியா
இந்நகர்க்கி தென்பொருட்டா வந்த தெனவுரைத்தான்
மன்னகற்றுங் கூரிலைவேன் மன்.

(இ-ள்.) மன் - (பகையாகிய) அரசரை, அகற்றும் - (போர்க்களத்தினின்று) நீக்கும், இலை - வெற்றிலையை ஒத்த, கூர்வேல் மன் -

கூர்மையாகிய வேலைத்தாங்கிய நளராசன், அறைபும் - கொட்டப்படும், பறை அரவம் - முரசினது ஒலியை, கேட்டு - கேட்டு, அழிந்து-(மன நிலை) கெட்டு, நையும் - துன்பப்படுகின்ற, பிறை-மூன்றாம் பிறையை ஒத்த, நுதலாள்-நெற்றியையுடைய தமயந்தியினது, பேதைமையை - அறியாமையை, நோக்கி - பார்த்து, முறுவலியா-நகைத்து, இந்நகர்க்கு-இந்த நகரத்துக்கு, என் பொருட்டு ஆ - என்னிமித்தமாக, ஈது வந்தது என - இப்பறையறைதல் நேரிட்டதென்று, உரைத்தான் - சொல்லி னான், எ-று.

(வி-ரை.) எனவே இன்றொருநாளும் இங்கிருத்தல் தகுதியன் றென்றானென்பது குறிப்பெச்சம். பறையரவம் - பண்புத்தற்கிழமைப் பொருட்டாகிய ஆறாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். முறு வலியா - முறுவலென்னும் பெயரடியாகப் பிறந்த செய்யா என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம்; முறுவல்-பகுதி, ய்-சந்தி, ஆ-வினை யெச்சவிகுதி; ஆக என்பதில் ஈறு தொகுக்கப்பட்டு ஆ என நின்றது. அகற்றும் - செய்யுமென் வாய்பாட்டுப் பெயரெச்சம்; இது பிறவினை; தன்வினை அகலும்; தன்வினைப்பகுதி அகல், அதனோடு றவ் விகுதி சேர்ந்து அகற்றெனப் பிறவினைப்பகுதி யாக்கியது. (௬௦)

தன்வாயின் மென்மொழியை தாங்கினா னோங்குநகர்ப்
பொன்வாயில் பின்னாகப் போயினான்—முன்னாளில்
பூமகளைப் பாரினொடும் புல்லினான் றன்மகனைக்
கோமகளைத் தேவியொடுங் கொண்டு.

(இ-ள்.) முன் நாளில்-(தான் தோற்றதற்கு) முற்பட்ட நாளில், பூ மகளை - தாமரைப்பூவி லெழுந்தருளிய திருமகளை, பாரினொடும் - பூமிதேவியோடு, புல்லினான்-தழுவினவனாகிய நளராசன், தன் மகனை - தன் புத்திரனையும், கோமகளை - (தன் மகளாகிய) இராச கன்னி கையையும், தேவியொடும் கொண்டு - மனையாளாகிய தமயந்தியோடு

அழைத்துக்கொண்டு, தன் வாயில்-தனது வாயிலே, மெல் மொழியே - மென்மையாகிய சொல்லையே, தாங்கினான் - கொண்டவனாகி, ஓங்கு - உயர்ந்த, நகர் - நகரத்தினது, பொன் வாயில் - பொன்னாகிய கோபுர வாசல், பின் ஆக - பிற்பட, போயினான் - போனான், எ-று.

(வி-ரை.) தன்னைக் கொண்டாடினாரைக் கொல்வமென முரசறை வித்தமையைக் குறித்து ஈது என்பொருட்டா வந்ததென யுரைத்ததே யன்றி யாதொரு கடுஞ்சொல்லு முரைத்திலனென்பார் 'மென்மொழி யே தாங்கினான்' என்றும், இறைவன் உலகபாலருருவாய் நின்று உல கங் காப்பனென்ப ராதலின் 'பூமகளைப் பாரினொடும் புல்லினான்' என் றும், அப்புல்லுதல் இப்போது இலனென்பார் 'முன்னாளில்' என்றுங் கூறினார். ஏ - பிரிநிலை. ஓங்குநகர் என்பதை வினைத்தொகை நிலைத் தொடராகக் கொள்ளலேயன்றி ஓங்கும் நகர் எனக்கொண்டு பெயரெச் சத் தொகாநிலைத்தொடராகவுங் கொள்ளலாம். இல்வாயென்னும் உறுப் புத்தற்கிழமைப் பொருட்டாகிய ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத் தொடர், சொல் பின்முன்னாக மாறி வாயிலெனா வழங்கலால் இது இலக் கணப்போலி. வாய் உவமையாகுபெயர். ஒடு உருபை யடுத்து நின்ற உம்மைகள் சாரியை. (சுக)

கொற்றவன்பாற் செல்வாரைக் கொல்வான் முரசறைந்து
வெற்றியொடு புட்கரனும் வீற்றிருப்ப—முற்றும்
இழவுபடு மாபோ லில்லங்க டோறும்
குழவிபா லுண்டில வே கொண்டு.

(இ - ள்.) கொற்றவன்பால் - நளராசனிடத்தில், செல்வாரை - போவாரை, கொல்வான் - கொல்ல, முரசு அறைந்து - பேரிகையைக் கொட்டுவித்து, புட்கரனும் - புட்கரராசனும், வெற்றியொடு - வெற்றி யை யுடையவனாய், வீற்றிருப்ப - பெருமையா யிருக்க, முற்றும் - நகர முழுமையும், இழவுபடும் ஆ போல் - இழவு விளையும் விதம்போல,

இல்லங்கள் தோறும் - வீடுகளி லெல்லாம், குழவி - குழந்தைகளும், கொண்டு - (தாயின் முலையைப்) பிடித்து, பால் - பாலை, உண்டில - உண்ணுத லொழிந்தன, எ-று.

(வி-ரை) சொல்வான்-எதிர்கால வினையெச்சம்; வான் - விகுதி. அறைவித்து என்பதில் விவ் விகுதி தொகுத்தலாய் அறைந்தென நின்றது. மூன்றனுருபு விசேடணப்பொருளில் வந்தது. வீற்றிருப்ப-நிகழ் கால வினையெச்சம்; வீற்றிரு-பகுதி, ப்-சந்தி, ப் - விரித்தல் விகாரம், அ - விகுதி. உம்மைகள் முற்றும்மை. இழவு - உல்கவழக்கு; இது தொழிற்பெயர்; விகுதி வு. நளராசன் செல்வத்தை யிழந்து காட்டிற் செல்வதை நினைத்து நினைத்துத் துக்கிக்கின்று ராதலால் 'இழவு படுமா போல்' என்றார்; ஆறென்பது று தொகுத்தலாய் ஆ என நின்றது. முற்று மென்பது பொதுப்பட நின்றமையால் முற்றும் இழவுபடும் ஆபோ லென்பதற்கு எல்லாப் பொருளையும் இழக்கின்ற விதம்போல எனவும் உரைக்கலாம். தோறு என்னும் இடைச்சொல் தான் சார்ந்த சொல்லினது பன்மையையும் இடப்பொருண்மையையு முணர்த்தும்; இது தொறு என்பது விகாரப்பட்டு நின்றது. குழவி என்பத னீற்றில் உயர்வு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. அரசன் காட்டுக்குச் செல்லுதலால் உண்டாகும் துன்பத்தை உணர மதியாதது குழந்தை யாதலால் அதுவு மதித்ததென்னும் பொருள் படுகின்றமையின் அவ் வும்மை உயர்வு சிறப்பாயிற்று. குழவி - பண்படியாகப் பிறந்த பெயர்ச் சொல்; குழ (இளமை)-பகுதி, வ்-சந்தி, இ-ஒன்றன்பால் விகுதி; இது சாதியொருமை. குழவி உண்டில என்பதற்கு யாவரும் துன்பத்தால் தலங்குகின்றமையால் தாயர்கள் தங்கள் தங்கள் குழந்தைகளுக்கும் பாலூண்பித்திலரென்பது கருத்தாகக் கொள்க. குழவி பால் உண்டில எனவே மற்றவர்கள் ஐம்புலனுகர்ச்சியு மிலராயினு ரென்பது கூற வேண்டாதாயிற்று. உண்டில: உண்-பகுதி, ட்-இறந்தகால இடைநிலை, இல் - அவ்விரண்டையும் மறுக்க வந்த எதிர்மறை விகுதி, அனைத்து மொருபகுதி, அ-பலவின்பால் விகுதி. (கஉ)

சந்தக் கழற்றா மரையுஞ் சதங்கையணி
பைந்தளிரு நோவப் பதைத்துருகி—எந்தாய்
வடந்தோய் களிற்றாய் வழியான தெல்லாம்
கடந்தோமோ வென்றார் கலுழ்ந்து.

(இ - ள்.) சந்தம் - அழகாகிய, கழல் தாமரையும் - வீரகண்டையைத் தரித்த (பாதமாகிய) தாமரைமலர்களும், சதங்கை அணி - பாதசாலத்தை அணிந்த, பைந்தளிரும் - (பாதங்களாகிய) இளந்தளிரும், நோவ - நொந்ததினால், பதைத்து - துடித்து, உருகி - மனங்கரைந்து, எந்தாய் - பிதாவே, வடம் தோய் - (புரோசையென்னும்) கயிறு (கழுத்தில்) பொருந்திய, களிற்றாய் - யானைச்சேனையுடைய அரசனே, வழி ஆனது எல்லாம் - வழியென்பதை முழுமையும், கடந்தோமோ - கடந்து வந்தோமோ, என்றார் கலுழ்ந்து - என்று அழுது கேட்டார்கள் அவன் குமாரர்கள், எ - று.

(வி - ரை.) முன்னெல்லாம் தாய் அந்தப்புரத்திலேயே இருந்தனளாதலால் அவளை யொழித்துத் தந்தையைக் கேட்டனர். கழற்றாமரை மகனையும், சதங்கையணி பைந்தளிர் மகளையும் உணர்த்துகின்றமையால் மகன் மகளென மிகைபடக் கூறுதொழிந்தார். பசுமை - பசுங்குழவி என்பதிற்போல இளமையை யுணர்த்தியது. எந்தை என்னும் பொருளடியாகப் பிறந்த பொதுப்பெயர் விளியுருபேற்று ஈற்றைகாரம் ஆ யெனத் திரிந்து நின்றது. யாம் - பகுதி, த் - எழுத்துப்பேறு, ஐ - முறைப்பெயர் விகுதி, யா இடப்பிறப்பா லொத்த எவ்வானது குறுக்கல் விகாரம். அங்கங்கள் நான்கனுள் யானையும் தேரும் சிறந்த அங்கமாதலால் களிற்றான், தேரினான் என அரசனுக்குப் பெயரிட்டு வழங்குதல் மரபு. களிற்றான்-பொருளடியாகப் பிறந்தபெயர்; களிறு-பகுதி, ஆன்-ஆண்பால் விகுதி, பகுதி தன்னொற்றிரட்டியது விரித்தல் விகாரம், உகரக்கேடு சந்தி. இப்பெயர் விளியுருபேற்று ஈற்று னகரம் யவ்

லானது. ஆனது-வினையிலக்கணப்பெயர்; எழுவாயுருபென்பாருமுளர். வழியெல்லா மென்பது ஒருமையிற் பன்மை வந்த வழுவமைதி. கடந்தோம்-முன்னிலையையும் படர்க்கையையும் தன்னொடுபடுத்த உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்று. ஓ-வினு. எந்தாய் என்பதை ஒருமொழியாகக்கொள்ளாமல் தொடர் மொழியாகக்கொண்டு எம்முடைய தாயே எனத் தமயந்தியை விளித்ததாகக் கூறினும் பொருந்தும். (சுங.)

தூபதன் மக்க டுயர்நோக்கிச் சூழ்கின்ற
மாய விதியின் வலிநோக்கி—யாதும்
தெரியாது சித்திரம்போ னின்றிட்டான் செம்மை
புரிவான் றுயராற் புலர்ந்து.

(இ - ள்.) செம்மை புரிவான் - நடுவுநிலைமையை விரும்புவோனாகிய நளராசன், தன் -தன்னுடைய, தூய மக்கள் - (துன்பத்தோடு) பொருந்துதலில்லாத மக்களுடைய, துயர் நோக்கி - துன்பத்தைப் பார்த்து, சூழ்கின்ற - நீங்காமல் நிற்கின்ற, மாயம் - வஞ்சனையையுடைய, விதியின் வலி - ஊழினது வன்மையை, நோக்கி - எண்ணி, துயரால்-(உண்டாகிய) துன்பத்தினல், புலர்ந்து - வாடி, யாதும்-(அத்துன்பத்தை நீக்குதற்கு) யாதொரு செயலும், தெரியாது-விளங்காமல், சித்திரம் போல் - சித்திரத்தைப்போல, நின்றிட்டான்-(அசைதலில்லாமல்) நின்றான், எ-று.

(வி-ரை.) தூய்மை தூயமனத்தார் என்பதிற்போலச் சலப்பின்மையை உணர்த்தியது; தூய-பண்படியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம்; தூய்மை-பகுதி, பகுதி யீற்று மகர வைகாரக்கேடு சந்தி, அ-பெயரெச்சவிகுதி. மக்க டுயரென்பதை ஆறாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடராகக் கொள்ளுதலே அன்றி எழுவாய்த் தொகாநிலைத் தொடராகவுங் கொள்ளலாம்; அவ்வாறு கொள்ளின் துயர் துயர்தலென்னும் பொருள்படும் முதனிலைத்தொழிற்பெயரென்க. உம்மை இழிவு

சிறப்பில் வந்த முற்றும்மை. செம்மையை விரும்புதலாவது தோற்ற செல்வங்கள் யாவற்றையும் புட்கரனுக்குக் கொடுத்தல் மறுக்க நினையாமை. செம்மைபுரிவான் இரண்டாம் வேற்றுமைத் தொகையிலைத் தொடராதலாலும், நிலைமொழி அஃறிணைப்பெயராதலாலும், வருமொழிப் பகரம் மிகாது, நன்-உரு-பு-இ-கஙு-ம் சூத்திரத்தின்படி விகாரத்தியல்பாயிற்று. நின்றிட்டான் - ஆண்பாற்படர்க்கை யிறந்தகால வினைமுற்று; நில்-பகுதி, து - சாரியை, இடு - பகுதிப்பொருண்மை விகுதி, லகர தகரத் திரிபும், உகரக்கேடும் சந்தி, அனைத்து மொருபகுதி, ஆன்-ஆண்பால் விகுதி, பகுதி ஒற்றிரட்டியது விரித்தல் விகாரம், உகரக்கேடு சந்தி; இவ்வாறே நின்றிடுகின்றான், நின்றிடுவானென்ன ஏனைக் காலங்களிலும் இவ்விகுதி வருதல் காண்க; நின்றிட்டான் எனத் தலைமைப்பற்றித்தந்தையாகிய செம்மை புரிவானைக்கூறித்தாய் நின்றிட்டாளென்பதை "ஒருமொழி யொழிதன் இனங்கொளற் குரித்தே" என்பதனாற் கொள்ளவைத்தார். (கூச)

காத லிருவரையுங் கொண்டு கடுஞ்சுரம்போக்
கேத முடைத்திவரைக் கொண்டுநீ—மாதாய்
வீமன் றிருநகர்க்கே மீளென்றான் விண்ணவர்முன்
தாமம் புனைவாளைத் தான்.

(இ - ள்.) விண்ணவர் முன் - தேவர்களுக்கு முன்னே, தாமம் புனைவாளை - (அவர்களை மதியாமல்) மாலையணிந்த தமயந்தியை, மாதராய் - பெண்ணே, காதல் இருவரையும் - மக்களிருவரையும், கொண்டு - உடன்கொண்டு, கடு சுரம் - கடுமையாகிய பாலைவனத்தில், போக்கு - போகுதல், ஏதம் உடைத்து - துன்பமுடையதாகும்; இவரைக் கொண்டு - (ஆதலால்) இவர்களை அழைத்துக்கொண்டு, வீமன் திருநகர்க்கே - (நின் தந்தையாகிய) வீமராசனுடைய செல்வமிக்க நகரத்துக்கே, நீ மீள் என்றான் தான் - நீ திரும்பிச் செல்லென்று தான் சொல்லினான், எ - று.

(வி-ரை.) கடுஞ்சுரம் போதலால் இவள் பருந்துயரத்தைக் காணச் சகியாமல் இவளையும் பிரிதல் தக்கதெனக் கருதி இங்ஙனக் கொண்டு மீளென்றான். தன் மக்களைப் பிரிதலினும் இவளைப் பிரியும் பிரிவு அவனுக்கு மிகுதியும் துன்பந்தருவதென்பார் 'விண்ணவர்முன் தாமம் புனைவாளை' என்றார். காதல் என்னும் பால்பகா அஃறிணைப் பண்புப் பெயர் பன்மைப்பாலை யுணர்த்தி மக்களுக்காகி நின்றது; அதனோடு இருவரென்னும் வருமொழி தொக்கதொடர் இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடர். உம்மை-முற்றும்மை. காதல் - ஆகுபெயரா தல் "சூரியன் காதலே சொல்லி யென்பல" என்னுங் கம்பநாடர் செய்யுளாலு முணர்க. போக்கு - தொழிற்பெயர்; போ-பகுதி, க்-சந்தி, கு-தொழிற்பெயர் விகுதி. மாது - பெண்பாற்பெயர்; இது குற்றியலுகரமாதலால் அர் என்பதைப் போலியாகப்பெற்று மாதர் என நின்று, தையலாள், அங்கனையாள் என்பனபோலப் பகுதிப்பொருள் விகுதியாகிய ஆள் விகுதிபெற்று மாதராள் என நின்ற பெயர் விளியுருபேற்று ளகரம் யகரமாய்த் திரிந்தது. ஆண்மகன்பெயர் இந்திரசேனன், பெண்மகள் பெயர் இந்திரசேனை. புனைவாள் என்பது இறந்தகாலம் எதிர்காலமாக இயல்பினால் வந்த காலவழுவமைதி. (கரு)

குற்றமில் காட்சிக் குதலைவாய் மைந்தரையும்
பெற்றுக் கொளலாம் பெறலாமோ—கொற்றவனே
சோக்கா தலனைக் குலமகளுக் கென்றுரைத்தாள்
நோக்கால் மழைபொழியா நொந்து.

(இ-ள்.) நோக்கால் - (அதுகேட்ட தமயந்தி) கண்களினால், மழை பொழியா - மிகுதியும் நீரைச் சொரியாநின்று, கொற்றவனே - அரசனே, குலமகளுக்கு - குலத்தில் மணஞ்செய்த பெண்ணுக்கு, குற்றம் இல் - (பிறரால் பழிக்கப்படும்) குற்றமில்லாத, காட்சி - அறிவினையும், குதலை வாய்-மழலைச்சொல்லைப் பேசுகின்ற வாயையுமுடைய, மைந்தரையும்-குமாரர்களையும், பெற்றுக்கொளல் ஆம்-(இழந்தால் பின்னே)

பெற்றுக்கொள்ளுதல் இசையும்; சோக்காதலனை - ஆண் மகனாகிய நாயகனை, பெறல் ஆமோ என்று - பெறுதல் இசையுமோவென்று, நொந்து உரைத்தாள் - வருத்தத்தோடு சொன்னாள்.

(வி-ரை.) எனவே யான் மக்களைப் பாராட்டி நின்னைப் பிரியே னென்பது குறிப்பெச்சம். உம்மை உயர்வு சிறப்பும்மை; மற்ற சிறந்த பொருள்களையும் பெற்றுக்கொளலாமெனப் பொருள்கொள்ளின் எதிரது தழீஇய எச்சவும்மையுமாம். மைந்தரொன்றது சாதிப்பன்மை; இது பண்படியாகப்பிறந்தபெயர்; மைந்து - பகுதி, அர்-பலர்பால்விகுதி, உகரக்கேடு சந்தி; பொருள்: தாய் தந்தை முதலியோரைத் தாங்கும் வலியுடையார்; இது பெண்பாலுக்கேலாமை அறிக. ஓ-எதிர்மறை. காதலனென்பது கணவனுக்கும் மகனுக்கும் பொதுவாகிய பெயராதலால் 'சோக்காதலன்' என்றாள்; இது இருபெயரொட்டுப்பண்புத்தொகை நிலைத்தொடர். பொழியா என்னும் இறந்தகாலவினையெச்சம் பொழியாநின்றென்னும் நிகழ்கால வினையெச்சத்தின் றிரிபு. கு்வுருபு எழுவாயுருபிற்குரிய கர்த்தாப்பொருளில் வந்தது. (சுசு)

கைதவந்தா னீக்கிக் கருத்திற் கறையகற்றிச்
செய்தவந்தா னெத்தனையுஞ் செய்தாலும்—மைதீர்
மகப்பெறு மானிடர்கள் வானவர்த மூர்க்குப்
புகப்பெறார் மாதராய் போந்து.

(இ-ள்.) (தமயந்தி சொன்னதைக்கேட்ட நளன்) மாதராய்-பெண்ணே, கைதவம் (புறத்தே பிறரை) வஞ்சிப்பதை, நீக்கி-ஒழித்து, கருத்தில் - மனத்திலுள்ள, கறை - (காமம் வெகுளி மயக்கம் ஆகிய) அழுக்கை, அகற்றி - நீக்கி, எத்தனையும் - எவ்வளவு மிகுதியாயினும், செய்தவம்தான் - செய்தற்குரிய தவத்தையே, செய்தாலும் - செய்தவர்களாயினும், மை தீர் - குற்றமில்லாத, மக - ஆண்மக்களை, பெறுமானிடர்கள் - பெறுதமனிதர்கள், வானவர்தம் - தேவர்களுடைய, ஊர்க்கு -

னாகிய சுவர்க்கத்தில், போந்து - பிரவேசித்து, புக - (அவ்வுலகத்தின் பம் தம்மிடத்து) வர, பெறார் - பெறாதவராவர், எ - று.

(வி-ரை.) கணவனிலும் மக்களையே பாதுகாத்தல் வேண்டுமென்பது இது முதலிய மூன்றுசெய்யுளும். புக எனனும் வினைக்குக் கருத்தா வருவிக்கப்பட்டது. தந்தை தாயருடைய தீவினை வளராமல் தேய்வதற்குக் காரணமாகிய நல்வினைகளைச் செய்யவல்லோர் ஆண்மக்களே ஆதலால் இங்கு மக என்பது ஆண்மகனை யுணர்த்திற்று. மகப்பெறாதவர் புத்தென்னும் நரகத்தைப் பெறுவரென்பது குறிப்பெச்சம். தான் இரண்டனுள் முன்னது அசை; பின்னது தேற்றம்; இது உலகவழக்கு. உம்மைக ளிரண்டும் உயர்வுசிறப்பு. கறை - தொழிலடியாகப் பிறந்த பெயர்; கறு-பகுதி, (இப்பகுதி பண்படியாகப் பிறந்தது),ஐ-வினைமுதற்பொருண்மை விகுதி, உகரக்கேடு சந்தி. மானிடர் - வடமொழி; இது மானுடரெனவும் வழங்கும். கான்கனுருபு ஏழாவது னிடப்பொருளில் வந்தது. பெறார்-பல்லோர் படர்க்கை எதிர்மறை வினைமுற்று; பெறு-பகுதி, ஆ - எதிர்மறை விகுதி, உகரக்கேடு - சந்தி, அனைத்து மொரு பகுதி, ஆர்-விகுதி, விகுதி ஆ கெட்டது முதற்குறை விகாரம். (கஎ)

பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனு முடையரோ—இன்னடிசில்
புக்களையுந் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர்.

(இ-ள்.) புக்கு - அருகே வந்து, இன் அடிசில் - இனிமையான சோற்றை, அளையும் - அளைகின்ற, தாமரைக்கை - தாமரை மலரைப் போன்ற கைகளையும், பூ நாறும் - (குமுதத்தின்) மலர்போலத் தோன்றுகின்ற, செய்ய வாய் - சிவந்தவாயையயுமுடைய, மக்களை - பிள்ளைகளை, இங்கு - இவ்வுலகத்தில், இல்லாதவர்-இல்லாத மனிதர், பொன் உடையர் ஏனும்-மிகுதியும் செல்வத்தை உடையவர்களாயினும், புகழ் உடை

யர் ஏனும் - மிக்க புகழுடையவர்களாயினும், மற்று என் உடையர் ஏனும் - வேறு எதையுடையவர்களாயினும், உடையரோ - உடையவர்களாவரோ ஆகார், எ - று.

(வி-ரை.) அளைதலாவது சோற்றில் இட்டும், எடுத்தும், கௌவியும், துழாவியும், உண்ணூந் தந்தை தாயருடைய உடலிற்பட இறைத்தலாம். உம்மைகள் எண்ணுப்பொருளோடு உயர்வுசிறப்பின்கண் வந்தன. ஏனென்பது எனினென்பதன் மரூஉ. ஓ-எதிர்மறை. தாமரை-பொருளாகுபெயர். பூநாறு மென்பதற்குக் குமுதமலர்போல மணக்கின்ற எனினும் பொருந்தும். செய்ய-பண்படியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம்; செம்மை-பகுதி, மை - கெட்டதும், மகரம் யகரமானதும், யகர மிரட்டியதும் சந்தி. அ-விகுதி. மற்று - பிறிதென்னும் பொருட்டாகிய இடைச்சொல். என் - வினைப்பெயர்; இது "என்னுக் கின்னும் பெருக்கின்றதே" என நான்கனுருபேற்றலுங் காண்க. புக்கு - இறந்தகால வினையெச்சம்; புகு-பகுதி, உ - வினையெச்சவிகுதி, பகுதி ஒற்று இரட்டியது விரித்தல் விகாரம், பகுதியீற்றுகரக்கேடு சந்தி; பகுதி விகாரமே காலங்காட்டியது இல்லாதவர் - செயப்படுபொருள் குன்றியும், குன்றாமலும் வருகிற ஈறுதிரிந்த குறிப்பு வினையாலணையும்பெயர். செயப்படுபொருள் குன்றிவருவதற் குதாரணம்: அவர் இங்கு இலர்; குறிப்பு வினைமுற்று. (கூஅ)

சொன்ன கலையின் றுறையனைத்துந் தோய்ந்தாலும்
என்னபய னுடைத்தா மின்முகத்து—முன்னம்
குறுகுதலைக் கிண்கிணிக்காற் கோமக்கள் பால்வாய்ச்
சிறுகுதலை கேளாச் செவி.

(இ-ள்.) முன்னம் - (ஒருவர்) தமக்கு எதிரில், இன் முகத்து - இனிய முகத்தையும், குறுகு - குறுகிய, தலை - தலையையுடைய, கிண்கிணிக்கால் - கிண்கிணியென்னும் அணியை அணியப்பெற்ற பாதங்

களையும் உடைய, கோ மக்கள்-சிறந்த மக்களுடைய, பால் வாய்-முலைப் பாலின் மணத்தையுடைய வாயாற்பேசும், சிறு குதலை-நிரம்பாத மெல்லிய சொல்லை, கேளாச் செவி - கேளாத காது, சொன்ன-(அறிவுடையோரால்) சொல்லப்பட்ட, கலையின் துறை அனைத்தும்-சாத்திரங்களினது வகை முழுமையும், தோய்ந்தாலும் - நிரம்பப்பெற்றாலும் (கேட்கப்பெற்றாலும்), என்ன பயன் உடைத்து ஆம் - என்ன பயனுடையதாகும், எ-று.

(வி-ரை.) மக்கள்: தாய் தந்தையர்கள் முன்னே இன் முகத்தைக் காட்டிக் குறுகுறு நடந்துவந்து பேசுதலால் இவ்வாறு கூறினான். தம் மனத்துட்டோன்றிய கவலையைத் தான் நீக்குதலால் முகத்துக்கு இனிமை அடை கொடுக்கப்பட்டது. உம்மைகளிரண்டில் முன்னது முற்றுப்பொருளது; பின்னது உயர்வு சிறப்புப்பொருளது. கிண்கிணி - கிண்கிண் எனல் உடையதென்பது பொருள்; தொழிலடியாகப் பிறந்த பெயர்ச்சொல்; கிண் கிண் - பகுதி, (இசைபற்றிவந்த இரட்டைக்கிளவி), இ-வினைமுதற் பொருண்மை விகுதி. என்ன - எவனென்னும் வினை வினைக் குறிப்பின் மரூஉ. குதலைச் சொல்லினளவு கலையின்றுறை செவிக்கு இன்பந்தாராதென்பது கருத்து. அன்றி மக்களை யிங்கில்லாதவர் புத்தென்னு நரகடைவரென்பதை வற்புறுத்தற்குச் செவியின்மேலேற்றி என்ன பயனுடைத்தா மெனக்கூறினா னென்பதும் பொருந்தும். (கூக)

போற்றரிய செல்வம் புனனாட் டொடும்போகத்
தோற்றமையும் யாவர்க்குந் தோற்றாதே—ஆற்றலாய்
எம்பதிக்கே போந்தருளு கென்றா ளெழிற்கமலச்
செம்பதிக்கே வீற்றிருந்த தேன்.

(இ-ள்.) எழில் - அழகாகிய, செம் கமலம் - செந்தாமரை மலர்கிய, பதிக்கு - இடத்தில், வீற்றிருந்த - பெருமையா யெழுந்தரு

ளிய, தேன் - திருமகளாகிய தமயந்தி, ஆற்றலாய் - (பகையரசரைப் போர்முகத்தில் வெல்லுதல் முதலிய) வலிமையுடையானே, எம் பதிக்கே - எம்முடைய புரமாகிய குண்டினபுரத்துக்கே, போந்தருளுக - புகக்கடவாய்; (புகுவாயானால்) போற்று அரிய - புகழ்தல் அரிய (புகழ்தற்கு அடங்காத), செல்வம்-செல்வங்கள், புனல்-நீர்வளத்தையுடைய, நாட்டொடும் - நிடததேசத்தோடு, போக - (புட்கரனிடத்தில்) சேர, தோற்றமையும் - (நாம் அவற்றைத்) தோற்றதும், யாவர்க்கும் - (நம்) எல்லோருக்கும், தோற்றாதே - தோன்றமாட்டாது, என்றாள் - என்று சொல்லினாள், எ-று.

(வி-ரை) தோற்றமையும் தோற்றாமையாவது தோற்றமையால் வரும் வறுமைத்துன்பம் நலியாமல் எல்லாச் செல்வங்களையும் அநுபவித்துச் சுகமுறுதல். போற்று அரிய போற்றென்னும் முதனிலைத் தொழிற்பெயர்; எழுவாய்த் தொகாநிலைத்தொடராக அரிய என்னும் பண்படியிற்பிறந்த குறிப்புப்பெயரெச்சங் கொண்டது; நான்காம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடரெனினும் ஒக்கும்; போற்ற அரிய எனப் பதம் பிரித்துப் போற்ற என்னுஞ் செயவெனெச்சத்தீறு தொகுத்தலாய் நின்றதெனக்கொண்டு அத்தொடரை வினையெச்சத் தொகாநிலைத்தொட ரென்னலுமாம். யாவர்க்கு மென்றது தன்மையில் படர்க்கை வந்த இடவழுவமைதி. வினாவடியாகப் பிறந்த பன்மைப்பெயர் முற்றும்மை எற்றால் வினாப்பொருளை விட்டு எல்லாமென்னும் பொருளைத் தரும். மூன்றனுருபை அடுத்துவந்த உம்மை சாரியை. "வீமன் றிருநகர்க்கே மீள்" என்ற குறிப்பால் தான் படும் வருத்தத்தையுங் கருதிக் கூறினாளென யாவர்க்கு மென்றாளாதலால் தோற்றமையு மென்ற வும்மை என் வருத்தமும், மக்கள் வருத்தமும், நின் வருத்தமுமே அன்றி எனப் பொருள் தருதல்பற்றி இறந்ததுதழீஇய எச்சவும்மை. ஏ மூன்றனுள் முன்னையது தேற்றம், அடுத்தது பிரிநிலை, பின்னையது ஈற்றசை. தன் தாய்தந்தையரையும் தன்னொடுபடுத்தி 'எமபதி' என்றாள். போந்தருளுக என்பதனீற்றில் அகரம் தொகுக்கப்

பட்டது. கமலம் - முதலாகுபெயர். தேன் திருமகளுக்கு உவமையாகு பெயர். அரசனை இறைவனென்னுதல்பற்றி அவன் மனைவியைச் 'செங்கமல பதிக்கே வீற்றிருந்ததேன்' என்றார். (௯௦)

சினக்கதிர்வேற் கண்மடவாய் செல்வர்பாற் சென்றீ
எனக்கென்னு மிம்மாற்றங் கண்டாய்—தனக்குரிய
தானந் துடைத்துத் தருமத்தை வேர்பறித்து
மானந் துடைப்பதோர் வாள்.

(இ-ள்.) சினம்-கோபமாகிய, கதிர் வேல் - கிரணங்களைப்பெற்ற வேல்போலும், கண் மடவாய் - கண்களையுடைய பெண்ணே, செல்வர் பால் சென்று - செல்வரிடத்திற்போய், எனக்கு - (ஒரு பொருளுமில்லாத) எனக்கு, ஈ என்னும் - ஈவாயென் றிரக்கும், இம்மாற்றம் - இச் சொல், தனக்கு உரிய - தனக்குரியதாக நிலைத்த, தானம் - ஈகையினால் வந்த புகழை, துடைத்து - அழித்து, தருமத்தை - இல்லறத்தை, வேர் பறித்து - முற்றுங் கெடுத்து, மானம் துடைப்பது - மானத்தைக் கெடுக்கவல்லதாகிய, ஓர் வாள் - ஒருவித வாளாம், எ-று.

(வி-ரை.) உடையானது சினத்தை வேலென்னும் உடைமையின் மேலேற்றிக் கூறியது ஓர் மரபுவழுவமைதி. ஈயா என்னும் ஏவலொருமை வினைமுற்று விகுதி குன்றி ஈயென நின்றது. தனக்குரிய தாக்கிக் கூறப்பட்டமையால் தானம் ஈகையால் வரும் புகழெனப்பட்டது. புகழ் பெரும்பாலும் ஈகையால் வருதலால் அதனைக் காரணவாகுபெயரால் 'தானம்' என்றார். தானத்தையும் மானத்தையுஞ் சாரவைத்தமையால் தருமமென்பது இல்லறத்தையெனக் கொள்ளப்பட்டது. மானம் - உயர்குடியிற் பிறந்தோன் தான் நின்ற நிலையிலிருந்து தாழாமையும், ஊழால் தாழ்வு வந்தபோது உயிர் வாழாமையுமாகிய தன்மை. செல்வர்பாற் சென்று இரத்தல் இழிந்தோன் செய்கை யென்பான் 'ஈ என்னு மாற்றம்' என்றும், அது தான முதலிய மூன்றையும் அழித்து

லால் 'வாள்' என்றும், அம்மூன்றாகிய அருவப்பொருளை அழித்தலால் 'ஓர்வாள்' என்றுங் கூறினான். கண்டாய்-முன்னிலையசைச்சொல். (௭௧)

மன்னவராய் மன்னர் தமையடைந்து வாழ்வெய்தி
இன்னமுதந் தேக்கி யிருப்பரேல்—சொன்ன
பெருப்பே டிகளலரேற் பித்தரே யன்றே
அரும்பேடை மானே யவர்.

(இ-ள்.) அரு பேடைமானே - உயர்வாகிய பெண்மானை ஒத்தவளே, மன்னவராய் - தாம் அரசராயிருந்து, மன்னர்தமை - வேறு அரசர்களை, அடைந்து-(வறியராய்ச்) சேர்ந்து, வாழ்வு எய்தி-(அவர்களால் தரப்படும்) செல்வத்தை அடைந்து, இன் அமுதம் - (நாவுக்கு) உரிசையாகிய உணவை, தேக்கி - நிரம்பவுண்டு, இருப்பரேல் - உயிர் வாழ்வாரேயானால், அவர் - அத்தன்மையானவர், சொன்ன-(உலகத்தாரால்) இழித்துச் சொல்லப்பட்ட, பெரு பேடிகள் - ஆண்மைவிட்டுப் பெண்மை அவாவும் சிறந்த பேடிகளாவர்; அலரேல் - அல்லராயின், பித்தரே அன்றே - பித்தங்கொண்டவரே யாவர், எ - று.

(வி-ரை.) இருப்பரேலென்பது இரார்களென்பதை விளக்கி நின்றது. ஏலிரண்டும் எனிலென்பதன் மரூஉ. பெரும்பேடிக ளென்றது பேட்டிலக்கண முற்றுமமைந்த பேடிகளை. பேடிகள்: பேடு-பகுதி, (பேடியின் றன்மை), இ-ஆண் பெண் இரண்டுக்கும் பொதுமையுணர்த்தும் ஒருமை விகுதி, உகரக்கேடு சந்தி, கள் - ஒருமை யொழித்துப் பன்மையுணர்த்தும் விகுதி, இவ்வாறு வருதலை ஒருமையிற்பன்மை வந்தவழுவமைதி யென்பர்; பண்பாகுபெயராகப் பேடெனவும் வழங்கும். ஏ-தேற்றம். ஓ-எதிர்மறை. பேடைமான்-பேடையாகிய மானென்பது பொருளாதலால் இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடர்; இது மான் முதலிய சில மிருகத்தின் பெண்ணுக்கு வழங்கு மரபுப் பெயர். ஐகாரச்சாரியை யிறுதியில் பெற்ற நெடிற்றொடர்க் குற்றுகர

மொழி பெட்டையெனவும் மருஉவாய் வழங்கும். மாவென்பதற்கு நிகண்டு "ஒட்டகங் கழுதை வாசி யுறுசிங்க மரையிவ் வைந்தும், பெட்டையாம்" என்பது. வாசி-குதிரை. தேக்கி - இறந்தகால வினையெச்சம். தேங்கு என்னுந் தன்வினைப்பகுதியி னிடையில்நின்ற மெல்லொற்று வல்லொற்றாதலாகிய விகாரம்பெற்ற தேக்கு பகுதி, உகரத்தின் றிரிபாகிய இகரம் விகுதி, உகரக்கேடு சந்தி. (எஉ)

செங்கோலா யுன்றன் றிருவுள்ள மீதாயின்
எங்கோன் விதர்ப்ப னெழினகர்க்கே—நங்கோலக்
காதலரைப் போக்கி யருளென்றாள் காதலருக்
கேதிலரைப் போல வெடுத்து.

(இ-ள்.) (அச் சொல்லைக் கேட்ட தமயந்தி) காதலருக்கு - தன் ஆசைக்குரிய மக்களுக்கு, ஏதிலரைப்போல - யாதோருரிமையும் இல்லார் சொல்வதைப்போல நின்று, செங்கோலாய்-முறைசெய்யும் அரசனே, உன்தன் திருவுள்ளம் - உன்னுடைய திருவுள்ளக்குறிப்பு, ஈது ஆயின் - இத்தன்மையதானால், நம் - நம்முடைய, கோலக்காதலரை - அழகிய மக்களை, எம் கோன் - எம் அரசனாகிய, விதர்ப்பன் - விதர்ப்ப தேசத்து அரசனுடைய, எழில் நகர்க்கே-அழகாகிய நகரத்துக்கே, போக்கி அருள் - போகும்படி செய்யாய், என்றாள் எடுத்து - என்று குறித்துச் சொன்னாள், எ-று.

(வி-ரை.) எம் என்றது தாயை தன்னொடுபடுத்தி, நம் என்றது கணவனைத் தன்னொடு படுத்தி என்றறிக. "மைந்தரையும் பெற்றுக் கொளலாம் குலமகளுக்குக் கோக்காதலனைப் பெறலாமோ" என்ற சொல்லின்படி நின்றனளாதலால் 'காதலருக் கேதிலரைப்போல' என்றார். ஈது - சுட்டடியாகப் பிறந்த குறிப்புவினைமுற்று. ஏ - பிரிநிலை. திரு-என்பது தானடைந்த மொழிப்பொருளின் உயர்வை உணர்த்தும் பண்புச்சொல். இது எங்கும் தன்னால் உயர்வாகக் கருதப்படும்.

பொருளையும், அப்பொருளைச் சார்ந்த பொருளையும் பற்றியே வரும். கடவுள், ஆசான், தந்தை முதலியோரது பாதுகையைத் திருவடிநிலை யென்னுதலன்றித் தன்னி னிழிந்தோரது பாதுகையை அவ்வாறு சொல்லாமை வழக்கத்திலுங் காண்க. "கண்டோரால் விரும்பப்படுந் தன்மை நோக்கமாகிய அழகு" என்னலுமாம். எதிலர் யாதொருசம்பந் தமு மில்லாதவரென்பது பொருள்; எது என்னும் வினைப்பெயரோடு இல் என்னும் பண்படி புணர்ந்தபோது நிலைமொழியீற்றில் இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொகுக்கப்பட்டு ஒருசொல்லின் தன்மைய தாய் நின்ற எதில்-பகுதி, ஆர்-பல்லோர்படர்க்கைவிகுதி; இம்முதனிலை மை விகுதி பெற்று எதின்மை எனப் பண்புப்பெயராயும், குறிப்புத் தொழிற்பெயராயும் வழங்கும். (எ௬)

பேதை பிரியப் பிரியாத பேரன்பின்
காதலரைக் கொண்டுபோய்க் காதலிதன்—தாதைக்குக்
காட்டுநீ யென்றான் கலங்காத வுள்ளத்தை
வாட்டுநீர் கண்ணில்லை வைத்து.

(இ-ள்.) கலங்காத உள்ளத்தை - (எக்காலத்திலும்) கலங்குதலில் லாத மனத்தை, வாட்டும்-(பிரிவானது) கலங்கச்செய்தலினா லுண்டா கின்ற, நீர்-நீரை, கண்ணில் வைத்து-கண்ணில் வையாநின்று, பேதை பிரிய-பேதைமைத்தன்மையையுடைய தமயந்தி (தம்மைப்) பிரியும்படி நினைக்க, பிரியாத - (அவளினின்றும்) பிரிதலைப்பொறுக்கமாட்டாத, பேர் அன்பின் - மிக்க அன்பினையுடைய, காதலரை-மக்களை, கொண்டு போய் - அழைத்துப்போய், காதலிதன் - இவளுடைய, தாதைக்கு-பிதா வாகிய வீமராசனுக்கு, நீ காட்டு என்றான் - நீ காட்டாயென்று (ஓரந் தணனைப் பார்த்துச்) சொல்லினான், எ-று.

(வி-ரை.) பேதை-பண்பாகுபெயர். காதலி-பண்படியாகப் பிறந்த பெயர்; இது இங்கே சுட்டுப்பொருட்டாய் நின்றது; காதல் - பகுதி,

இ-வி குதி; இந்த விகுதி ஆண் பெண் ஒன்றென்னும் ஒருமைகட் குரிய தாயினும் இங்கே பெண்பாலுக் குரியதாகி வந்தது. வில்லி என ஆண் பாலுக்கும், பாசி என ஒன்றன்பாலுக்கும் வரும். வாட்டுமென்னும் வினைக்கு எழுவாய் வருவிக்கப்பட்டது. காரணப்பொருட்டாய் நின்ற பெயரெச்சம் செய்வதாதி முதலிய பொருட்பெயரைக் கொள்ளாமல் உண்ட இளைப்பென்பதுபோல நீயென்னும் பிறபெயர்கொண்டது. வாட்டும் என்பதன் ஈற்று மகரம் தன்னோடு மயங்காத நகரம் புணர்ந்தமையால் கெட்டது; நிலைமொழி வாட்டெனக் கொள்ளின் அத்தொடரை வினைத்தொகைநிலைத்தொட ரென்னலாம். (எச)

தந்தை திருமுகத்தை நோக்கித் தமைப்பயந்தாள்
இந்து முகத்தை யெதிர்நோக்கி—எந்தம்மை
வேறாகப் போக்குதிரோ வென்றார் விழிவழியே
ஆறாகக் கண்ணீ ரழுது.

(இ-ள்.) விழி வழி - கண்களின் வழியாக, கண்ணீர் - கண்ணீரானது, ஆறு ஆக அழுது - ஆறுபோலப் பெருகும்படி அழுதுகொண்டு, தந்தை திரு முகத்தை - பிதாவினது அழகிய முகத்தை, நோக்கி - பார்த்து, தமைப் பயந்தாள் - தம்மைப் பெற்றவளது, இந்து முகத்தை - சந்திரனை ஒத்த முகத்தை, எதிர் நோக்கி - எதிரில் பார்த்து, வேறு ஆக - (நாங்கள்) வேறிடத்திலிருக்க, எம் தம்மை - எங்களை, போக்குதிரோ - போக்குகின்றீர்களோ, என்றார் - என்று கேட்டார்கள், எ - று.

(வி-ரை.) தந்தை முகத்தைப் பயந்தாள் முகத்தை நோக்கி என ஒருவினைகொடுத்து முடிக்காமல் தனித்தனியே நோக்கி யென வினைகொடுத்து முடித்தது அவ்விருவர் முகத்தையும் பலமுறை நோக்கி யென்பதுணர்த்தற்கு என்க. எந்தம்மை என்பதில் தம் சாரியை; அது தன்மையில் படர்க்கை வந்த இடவழுவமைதி. தந்தை ஆண்பால் முறைப்பெயர்; தாம்-பகுதி, த்-எழுத்துப்பேறு, ஐ - முறைப்பொருள்

மை விகுதி, பகுதி ஆ அவ்வானது குறுக்கல் விகாரம், மகரம் தகர மானதுசந்தி, பகுதி ஒருமையில் பன்மை வந்த பால்வழுவமைதி. பயந் தாள்: பயமென்னும் பெயரடியாகப் பிறந்த பய-பகுதி, த்-சந்தி, த்-இற ந்தகால இடைநிலை, ஆள்-பெண்பால் விகுதி, சந்தித் தகரம் நகரமானது மெலித்தல் விகாரம். பயமென்பதில் மகரத்துக்கு னகரம் போலியாய்ப் பயனெனவும் வரும். போக்குதிர்-முன்னிலைப்பன்மை நிகழ்கால வினை முற்று; இது பிறவினை; தன்வினை போகுதிர்; போக்கு-பகுதி, த்-நிகழ் கால இடைநிலை, இர் முன்னிலைப்பன்மை விகுதி. இர் - விகுதி காலம் காட்டுமேல் எதிர்காலங் காட்டும்; எதிர்காலங் காட்டின் ஏவற்பன்மை வினைமுற்று, த்-எழுத்துப்பேறு, ஓ-வினு. ஏ-ஈற்றசை. ஆறு யாறென்ப தன் மரூஉ. இவ்வாறே யாடு ஆடு, யானை ஆனை என வழங்கும். கண் ணீர் ஒருசொல்லின் தன்மையது. (எ௫)

அஞ்சனந்தோய் கண்ணி லருவிநீ ராங்கவர்க்கு
மஞ்சனநீ ராக வழிந்தோட—நெஞ்சுருகி
வல்லிவிடா மெல்லிடையாண் மக்களைத்தன் மார்போடும்
புல்லிவிடா நின்றாள் புலர்ந்து.

(இ - ள்.) வல்லி - பூங்கொடியானது, விடா - (கட்டை) விடாத, மெல் இடையாள் - மென்மையாகிய இடையையுடைய தமயந்தி, அஞ் சனம் தோய் - மை பொருந்திய, கண்ணில் - கண்களினின்றும் வடி கின்ற, அருவி நீர் - அருவியை ஒத்த நீர், ஆங்கு-அங்கே, மக்களுக்கு - பிள்ளைகளுக்கு, மஞ்சன நீர் ஆக - குளிப்பாட்டு நீர்போல, வழிந்து ஓட - (அவர்கள் உடலில்) வழிந்து ஓடும்படி, நெஞ்சு உருகி - மனம் உருகி, அவர்களை - அப்பிள்ளைகளை, தன் மார்போடு-தன் மார்புடனே சேர, புல்லி - தழுவி, விடா - (அத்தழுவுதலை) விட்டு, புலர்ந்து-வாடி, நின்றாள் - மெய்ம்மறந்தனள், எ-று.

(வி-ரை.) முதலடியில் அவர்க்கு என்பதை மக்களுக்கு என்றும், மூன்றாமடியில் மக்களை என்பதை அவர்களை என்றும் கொண்டு கூட்

டிப் பொருள் கொள்க. மார்பென்பது இங்கு இடக்கரடக்கலாய் நின்றது. பின்னின்ற விடா-செய்யா என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். மூன்றனுருபை அடுத்த உம் சாரியை. நெஞ்சு - இடவாகுபெயர். (எசு)

இருவ ருயிரு மிருகையால் வாங்கி
ஒருவன் கொண்டேகுவா னொத்து—வருமறையோன்
கோமைந்த னோடிளைய கோதையைக் கொண்டேகினான்
வீம னகர்க்கே விரைந்து.

(இ-ள்.) வரு மறையோன் - (தம்மைப் பிரியாமல்) வந்த அந்தணன், இருவர் உயிரும் - (நளன் தமயந்தியாகிய) இருவருடைய உயிர்களையும், இரு கையால் வாங்கிக்கொண்டு-(அவர்கள் தரத் தன்) இரண்டு கைகளாலும் வாங்கிக்கொண்டு, ஏகுவான் - போவானாகிய, ஒருவன் ஒத்து - ஒருவனைப்போன்று, கோ மைந்தனோடு - இராசகுமாரனோடு, இளைய சோதையை - இளம் பருவமுடைய பெண்ணை, கொண்டு - (அவர்கள் தரப்) பெற்று, வீமன் நகர்க்கே - வீமராசனுடைய நகரத்துக்கே, விரைந்து ஏகினான் - விரைந்து சென்றான், எ-று.

(வி-ரை.) எனவே தாய் தந்தைய ரிருவரும் உயிர் நீங்கிய உடல் போல வாடினரென்பது குறிப்பெச்சம். ஏகுவா னொருவனெனக் கூட்டுக. உம்மை முற்றும்மை. இருகையா லென்றவிடத்து முற்றும்மை விகாரத்தால் தொக்கது. வாங்கி என்றதனால் அவர் தர என்பது பெற்றும். மறை - இறைவனுடைய குணப்பெருமையை கூடமாகச் சொல்வது; இது தொழிலாகுபெயர்; இவ்வாறன்றிச் சில வருணத்தாருக்கு மறுக்கப்படுவதென்பது பொருளெனக் கொள்ளின், மறு-பகுதி, ஐ - செயப்படுபொருண்மை விகுதி, உகரக்கேடு சந்தி எனக் கொள்க. மறையோன் என்பதில் ஆ ஓ வானது செய்யுள் வழக்கு. கோதையைக் கொண்டகாலத்தில் கோ மைந்தனும் அவ்வினைக்குச் செயப்படுபொரு

ளாய் உடனிகழ்தலால் ஒடுருபு உடனிகழ்ச்சிப்பொருளது. ஏ-பிரிநிலை. வருமறையோன் இறந்தகால வினைத்தொகை நிலைத்தொடர். (எஎ)

காத லவர்மேலே கண்ணோட விண்ணோடும்
ஊதை யெனநின் றுயிர்ப்போட—யாதும்
உரையாடா துள்ள மொடுங்கினான் வண்டு
விரையாடுந் தாரான் மெலிந்து.

(இ - ள்.) வண்டு - வண்டுகள், விரை ஆடும்-மணமாகிய தேனில் முழுகுகின்ற, தாரான் - மலர்மாலையணிந்த நளராசன், காதலவர்மேல்-மக்களின்மேல், கண் ஓட-கண்ணினது பார்வை ஓடவும், விண் ஓடும்-ஆகாயத்தில் விரைந்து செல்லும், ஊதை என - காற்று ஓடுவதுபோல, உயிர்ப்பு - பெருமூச்சு, நின்று ஓட-பொறுத்தோடவும், மெலிந்து-தளர்ந்து, யாதும் உரை ஆடாது - எந்தச்சொல்லும் பேசாமல், உள்ளம் ஒடுங்கினான் - மனம் அழிந்தான், எ - று.

(வி-ரை.) ஒருவிடயத்தில் மனஞ்சென் றழுந்தியபோது மூச்சுச் சிறிது நேரம் பொறுத்தே வரலால், இவன் மனம் மக்களின்மேல் சென்றழுந்தியதென்பார் 'நின் றுயிர்ப்போட' என்றார். தலைமைபற்றி இவன்மேலேற்றிக் கூறினாராயினும் இவன் மனைவியும் அவ்வாறு அடைந்து நின்றனளெனக் கொள்க. உம்மை இழிவுசிறப்போடு முற்றின்கண் வந்தது. விரை-பண்பாகுபெயர். ஏ-ஈற்றசை; பிரிநிலையெனினும் பொருந்தும். கண்-பொருளாகுபெயர். (எஅ)

சேணுற்ற வாவித் திருநாடு பின்னொழியக்
காவிற்போய்த் தேவியொடுங் கண்ணுற்றான்—ஞாலஞ்சேர்
கள்ளிவே கத்தாவின் கண்மணிக டாம்பொடியாய்த்
துள்ளிவே கின்ற சுரம்.

(இ-ள்.) சேல் உற்ற - சேல்மீன்கள் உள்ள, வாவி - தடாகங்களை யுடைய, திரு நாடு - செல்வமிகுந்த நிடதநாடு, பின் ஒழிய - பின்னாக, தேவியொடும்-மனைவியோடு, காலின் போய்-காலால் நடந்து சென்று, ஞாலம் சேர் - பூமியைச் சேர்ந்த, கள்ளி-கள்ளிமரங்களும், வேகத்து - (வெப்பம் பொறுக்கமாட்டாமல்) ஓடும் வேகத்தையுடைய, அரவின் - பாம்புகளினது, கண் - கண்களும், மணிகள்-மாணிக்கங்களும், பொடி ஆய் - சாம்பராகும்படி, துள்ளி - (வெப்பங்கொண்டு) பொரிந்தெழுந்து, வேகின்ற - வேகுதற்கிடமாகிய, சுரம் - பாலைநிலத்தை, கண்ணுற்றான் - பார்த்தான், எ-று.

(வி-ரை.) அந்நிலவெப்பத்தை உற்றறியும் ஓரறிவுயிராயினும் நின்ற நிலைவிட்டுப்பெயராத் தன்மையதாதலால் 'ஞாலஞ்சேர் கள்ளி' என்றார். கள்ளி: கள் (பால்)-பகுதி, ள்-சந்தி, இ-ஒன்றன்பால்விகுதி, இது விகுதிபற்றி வந்தபெயர்; இது சாதி ஒருமை. கண்மணிகள் இவ்விரண்டும் பாம்பினிடத்தனவாதலால் உடனெண்ணப்பட்டன; இது அஃறிணை உம்மைத்தொகையாதலால் கள் விகுதிபெறாமல் கண்மணியெனவும் வரும்; இரண்டுசொல் தொக்கு உம்மைத்தொகையாய் நின்ற கண்மணி கள்ளி யென்பதனோடு உம்மைத்தொகையாய் நின்றமையின் கள்ளி கண்மணிகளென அம் மூன்றின்பன்மையை யுணர்த்தியதெனினும் பொருந்தும். ஆய் ஆக என்பதன் திரிபு. வேகின்ற - காரியப் பொருட்டாகிய பெயரெச்சம் சுரமென்னுங் காரணப்பெயர் கொண்டது. (௭௧)

கன்னிறத்த சிந்தைக் கலியுமவன் முன்பாகப்
பொன்னிறத்த புள்வடிவாய்ப் போந்திருந்தான்—நன்னெறிக்கே
அஞ்சிப்பா ரீந்த வரசனையுந் தேவியையும்
வஞ்சிப்பான் வேண்டி வனத்து.

(இ-ள்.) நல் நெறிக்கே-நன்மையைத்தருவதாகிய நீதியின்பொருட்டே, அஞ்சி - பயந்து, பார் ஈந்த - பூமியைக்கொடுத்த, அரசனையும் -

நளராசனையும், தேவியையும் - அவன் மனையாளையும், வஞ்சிப்பான் வேண்டி - வஞ்சிக்க விரும்பி, வனத்து - அப்பாலைவனத்தில், கல் நிறத்த - கல்லினது வன்மைக்குணமுள்ள, சிந்தை-மனத்தையுடைய, கலியும் - கலிபுருடனும், அவன் முன்பு ஆக - அவனுக்கு முன், பொன் நிறத்த - பொன்னிறமுள்ள, புள் வடிவு ஆய் - பறவையின் உருவங் கொண்டு, போந்து - வந்து, இருந்தான் - (விரும்பும்படி) இருந்தனன், எ - று.

(வி - ரை.) நன்னெறிக்கு அஞ்சுதலாவது ஒழுகல் தவறினால் இம்மையில் பழியையும், மறுமையில் நரகத்துன்பத்தையும் அந்நெறி தருமென்று அஞ்சுதல். நாட்டையும் செல்வத்தையும் இழக்கச் செய்ததுமன்றி உடுத்த ஆடையையும் இழக்கச்செய்ய வேண்டுமென்னுங் கருத்தால் வந்தவனாதலால் 'கன்னிறத்த சிந்தைக் கலி' என்றார். கன்னிறத்த - பண்புத்தற்கிழமைப்பொருட்டாகிய ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். இவ்வாறாவது நிறத்த என்னும் பண்படியாகப் பிறந்த குறிப்புப்பெயரெச்சத்தின் முதனிலை கொண்டது; கல்போலுங் குணமுள்ள என உவமைத்தொகையாகவும், கல்லைப்போலுங் குணமுள்ள என இரண்டாம் வேற்றுமைத் தொகைநிலையாகவுங் கொள்ளலாம்; பொன்னிறத்த என்பதும் அது. சூதில் நளன் போந்ததே அன்றிஎனப் பொருள்தரலால் கலியும் என்ற உம்மை இறந்ததுதழீஇய எச்சவும்மை. ஆக என்பது அசைநிலை; தொல்காப்பியச் சொல்லதிகாரத்து நச்சினார்க்கினியா ருரையா னுணர்க. நெறிக்கு என்னுங் குவ்வுருபு மூன்றாவதன்பொருட்டாகிய ஏதுப்பொருளின்கண் வந்தது. புட்கானுடைய வலிக்கு அஞ்சி அன்றெனப் பொருள் படலால் ஏ பிரிநிலை. (௮0)

தேன்பிடிக்குந் தண்டுழாய்ச் செங்கட் கருமுகிலை
மான்பிடிக்கச் சொன்ன மயிலைபோல்—தான்பிடிக்கப்
பொற்புள்ளைப் பற்றித்தா வென்றாள் புதுமழலைச்
சொற்கிள்ளை வாயா லொழுது.

(இ-ள்.) புது மழலைச் சொல் - (கேட்குந்தோறும்) புதுமையைத் தருகின்ற மழலைச் சொல்லைப் பேசுகின்ற, கிள்ளை - கிளிபோல் பேசுகின்ற, வாயாள் - சொல்லையுடைய தமயந்தி, தொழுது - (நளனைக்) கும்பிட்டு, தேன் பிடிக்கும் - வண்டுகள் பற்றுகின்ற, தண் துழாய் - குளிர்ந்த துளசிமாலை யணிந்த, செம் கண் - சிவந்த கண்களையுடைய, கரு முகிலை-கருமையாகிய சிராமபிரானை, மான் பிடிக்கச் சொன்ன - பொன்மானைப் பிடித்துத் தாக்கேட்ட, மயிலே போல் - மயில்போலும் மேம்பாட்டையுடைய சீதாபிராட்டியாரைப்போல், தான் பிடிக்க - தான் கையில் வைத்திருக்க, பொன் புள்ளை - பொன்னிறமாகிய பறவையை, பற்றித் தா - பிடித்துத் தாராய், என்றாள் - என்று கேட்டாள், எ-று.

(வி-ரை.) மயிலேபோலப் பற்றித்தா என்றது "பஞ்சவடியில் சிராமபிரான் எழுந்தருளியிருந்தகாலத்தில் மாரீசன் வஞ்சத்தால் பொன் மா னுருக்கொண்டு வந்தகாலத்து அதை வஞ்சமென் றுணராமல் பிடித் துத்தாவென்று சீதாபிராட்டியார் சிராமபிரானைக் கேட்டதுபோலக் கேட்டா ளென்றபடி. அதனாலேயே அவர்களுக்குப் பின் துன்பம் நேரிட்டதுபோல இவர்களுக்கும் ஆடை யிழத்தலாலாகிய துன்பம் நேரிட்டதென்பது உணர்த்துதற்கு 'மயிலேபோல்' என்றார்; இது தொழிலுவமம். மயில் பெண்ணுக்கு உவமையாகுபெயர்; அது இங்கே சீதாபிராட்டியாரை உணர்த்தியது; அன்றிக் காதல் பற்றிவந்த பெய ரென்னினும் பொருந்தும். ஏ-பிரிநிலை. வாயால் என்பதில் வாய் கருவி யாகுபெயர். இவ்விருவரும் தம்மில் உருவும், திருவும், பருவமும், குல மும், குணமும், அன்பும் முதலியவற்றால் ஒத்தவராதலால் 'தா வென் றாள்' என்றும், அங்ஙனமாயினும் இவள் அவனுடைமை யாதலால் 'தொழுது' என்றுங் கூறினர். (அக)

பொற்புள் ளதனைப் பிடிப்பானவன் புகுதக்
கைக்குள்வரு மாபோற் கழன்றோடி—எய்க்கும்

இளைக்குமா போல விருந்தது கண்டன்றே
வளைக்குமா றெண்ணினான் மன்.

(இ-ள்.) நளன் - நளராசன், பொன் புள் அதனை - பொன் பட்சியாகிய அதை, பிடிப்பான் - பிடிக்கும்படி, புகுத - வருகையில், கைக்குள் - கையினுக்கு உள்ளே, (அகங்கையில்) வரும் ஆ போல் - (அது) அகப்படும் விதம்போன்று, கழன்று ஓடி - (இருந்த இடத்தினின்று) நீங்கிப்போய் எய்க்கும்-(இனிப் பறக்கவலியிலதுபோல) இளைத்து நிற்கும், இளைக்கும் ஆ போல - (அவ்வாறு) இளைக்கும் விதம்போல, இருந்தது கண்டு - பறவாமலிருந்தது கண்டு, மன் - அரசன், அன்றே - அப்போதே. வளைக்கும் ஆறு-(ஆடையால்) வளைத்துப்பிடிக்கும் வகையை, எண்ணினான் - துணிந்தான், எ - று.

(வி - ரை.) புள்ளது-இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடர்; இருசொல்லாகக் கொள்ளாமல் ஒருசொல்லாகக் கொள்ளின் புள்-பகுதி, ள்-சந்தி, அ-சாரியை, து - பகுதிப்பொருள் விகுதி. பிடிப்பான் -எதிர்காலவினையெச்சம்; பிடி-பகுதி, ப் - சந்தி, பான் - எதிர்கால வினையெச்சவிகுதி. புகுத-நிகழ்கால வினையெச்சம்; புகு - பகுதி, து - சாரியை, அ-நிகழ்கால வினையெச்சவிகுதி, உகரக்கேடு சந்தி. கைக்குள் என்பதில் உள் என்பதை எழனுருபாகக் கொண்டால் கு சாரியை என்க. ஆபோல என்பதை எய்க்கு மென்பதனோடுங் கூட்டுக. போலென்னும் இடைச்சொலடியாகப் பிறந்த முதனிலை இறந்தகால வினையெச்சப்பொருள்பட நின்றது ஆறென்பது ஈறு தொகுத்தலாய் ஆ என நின்றது. இளைக்குமென்பது இளமையென்னும் பெயரடியாகப் பிறந்த பெயரெச்சம். இருந்தது-இறந்தகால வினையாலணையும்பெயர். ஏ - பிரிநிலை. மன்-பண்பாகுபெயர். (அஉ)

கொற்றக் கயற்கட் கொடியே யிருவோரும்
ஒற்றைத் துகிலா னுடைபுனைந்து—மற்றிந்தப்

போற்றுகிலாற் புள்வளைக்கப் போதுவோ மென்றுரைத்தான்
பற்றகலா வுள்ளம் பரிந்து.

(இ-ள்.) பற்று அகலா - (மனைவிமேல்) ஆசை நீங்குதலில்லாத, உள்ளம் - மனம், பரிந்து - அன்பு மிகுந்து, கொற்றம் - வெற்றியை யுடைய, கயல் கண் - சேல்மீன்போலுங் கண்களையுடைய, கொடியே - பூங்கொடியை ஒத்தவளே, இருவோரும் - நாமிருவரும், ஒற்றை துகிலால் - ஓராடையால், உடை புனைந்து - உடை தரித்துக்கொண்டு, இந்த பொன் துகிலால் - என்னுடைய இவ்வழகிய வஸ்திரத்தினால், புள் வளைக்க - பறவையை வளைத்துப் பிடிக்க, போதுவோம் என்று - புகுவோமென்று, உரைத்தான் - சொல்லினான், எ-று.

(வி-ரை.) கண்ணுக்கு வெற்றியாவது தன்னைக் கண்டவருடைய ஊக்கமுதலியவற்றை அழித்தல். கொடி-உவமையாகுபெயர். இருவோரும் என்றது தன்மையில் படர்க்கைவந்த வழுவமைதி. இருவேமும் என வரின் வழாநிலையாம். ஒற்றை - ஒன்றென்னும் மென்றொடர்க் குற்றுகரம் தன்னியல்பிலேதானே ஐகாரச்சாரியைப் பெற்று இடையில் நின்ற மெல்லொற்று வல்லொற்றாகத் திரிந்துநின்றது. உடை - தொழிலடியாகப்பிறந்த பெயர். உடு-பகுதி, ஐ-செயப்படுபொருண்மை விகுதி, உகரக்கேடு சந்தி. மற்று - உடுக்கப்படாத இத்துகில் எனப் பொருள் தாலால் பிறிதென்னும் பொருளது. இந்த இ என்னுஞ் சுட்டின்மீறூஉ. பற்று-முதனிலைத்தொழிலாகுபெயர். பற்று அகலா என்பதற்கு (அப்பறவையைப்) பிடிக்குந்தொழிலை விடாமல் எனப் பொருள் கொள்ளின் பற்று முதனிலைத்தொழிற்பெயர்; அகலா-ஈறுதொகுத்தலாய் நின்ற எதிர்மறை வினையெச்சம் எனக் கொள்க. பரிந்தென்னுஞ் சினைவினை உரைத்தானென்னும் முதல்வினை கொண்டது. (அரு)

எற்றித் திரைபொரநொந் தேறி யிளமணலில்
பற்றிப் பவளம் படர்நிழற்கீழ்—முத்தின்று

*வெள்வளைத்தா யோடுநீர் வேலைத் திருநாடன்*
*புள்வளைத்தா னுடையாற் போந்து.*

(இ-ள்.) திரை - அலை, எற்றி - எறிந்து, பொர - மோதினதி னால், நொந்து - வருந்தி, இள மணலில்-சிறு மணலில், ஏறி-தவழ்ந்து சென்று, பவளம் - பவளக்கொடிகள், பற்றி - (தாழையைப்) பற்றிக் கொண்டு, படர்-படர்தலாலுண்டாகிய, நிழல் கீழ்-நிழலின்கீழ், முத்து ஈன்று - (கருவாகிய) முத்துகளைப்பெற்று, வெள் வளைத்தாய் - வெள் ளிய சங்காகிய தாய், ஓடும் - (மீண்டு) ஓடுகின்ற, நீர் வேலை - நீர்வள முள்ள சமுத்திரத்தைச்சார்ந்த, திரு நாடன் - செல்வமிக்க நிடதநாட்டை யுடையவன், போந்து - (சமீபத்தில்) பிரவேசித்து, ஆடையால் - வஸ்திரத்தினால், புள் வளைத்தான் - அப்பறவையை வளைத்துக்கொண் டான், எ-று.

(வி-ரை.) பற்றி என்னும் செயப்படுபொருள் குன்றாத வினைக் குத் தாழை என்னும் செயப்படுபொருள் அவாய்நிலையால் வந்தது; கரையின்கணுள்ளது பெரும்பாலும் அதுவேயாதலால். திரை-தொழி லடியாகப்பிறந்தபெயர்; திரை - பகுதி, இ - வினைமுதற்பொருண்மை விகுதி புணர்ந்து கெட்டது. இளநகை (புன்சிரிப்பு) என்பதிற்போல இளமணல் என்பதில் இளமை சிறுமையை உணர்த்திபது; பவள மென்பது பிரவாளமென்னும் ஆரியமொழிச்சிதைவு; இவ்வாறு வரு வதனைத் தற்பவமென்பர். பொர-செயவென்னும் வாய்பாட்டு வினை யெச்சம் காரணப்பொருளதாய் நின்றமையால் இறந்தகால முணர்த்தி யது. படவென்னுங் காலங்கரந்த பெயரெச்சமுங் காரணப்பொருட் டாதலால் படர்ந்த, படர்கின்ற என இறப்பையாவது நிகழ்வையாவது உணர்த்தியதெனக் கொள்க. வளை - தொழிலாகுபெயர்; தொழிலும் பண்பினு ளடங்குமாதலால் பண்பாகுபெயருமாம். இதுபற்றியே சங் குக்குக் கூன் என்னும் அடை கொடுத்துக் கூன் சங்கெனக் கூறுதல். வேலை-சினையாகுபெயர். (அசு)

கூந்த லிளங்குயிலுங் கோமானுங் கொண்டணைத்த
பூந்துகில்கொண் டந்தரத்தே போய்நின்று—வேந்தனை
நன்னாடு தோற்பித்தோ னானேகா ணென்றதே
பொன்னாடு மாநிறத்த புள்.

(இ-ள்.) பொன் - பொன்னானது, நாடும் - (விரும்புந் தொழிலுடையதாயின்) விரும்புதற்குரிய, மா நிறத்த - மிக்க ஒளியையுடைய, புள் - பறவை, கூந்தல் - கூந்தலையுடைய, இள குயிலும் - இளமையாகிய குயிலையொத்த தமயந்தியும், கோமானும் - நளராசனும், கொண்டு அணைத்த - பற்றி நெருங்கிய, பூ துகில் கொண்டு - பூந்தொழில் செய்யப்பெற்ற ஆடையைக்கொண்டு, அந்தரத்தே - அந்தரத்திலே, போய் நின்று - பறந்து நின்று, வேந்தனை - அரசனை, நல் நாடு - நல்ல நிடத தேசத்தை, தோற்பித்தோன் - (நின்னைத்) தோற்கும்படி செய்தவன், நானே - நானே, காண் - அறி, என்றது - என்று சொல்லிப்போனது, எ - று.

(வி-ரை.) அந்தரத்தே என்ற ஏகாரம் நிலத்தில், மரத்தில் போய் நின்றிலது அந்தரத்தில் நின்றது என்னும் பொருள் தரலால் பிரிநிலை. அந்தரமென்றது ஆகாயத்தில் உயர்ந்தவிடத்தை. என்றதே என்னும் ஏ ஈற்றசை. பொன்னாடும் என்பதற்கு, பொன்னைப்போல (யாவரும்) விரும்புகிற என வுரைப்பினும் பொருந்தும். தோற்பித்தோன் இப்பிறவினை. நின்னை நாட்டைத் தோற்பித்தோனென இரண்டு செயப்படு பொருளை ஒருங்கு கொள்ளும்; இப்பிறவினை வினையாலணையும்பெயராய் நின்றது. நானே என்னும் ஏகாரமும் பிரிநிலை. காண் என்பதை முன்னிலையசையாகக் கொள்ளினும் பொருந்தும். (அ௫)

காவிபோற் கண்ணிக்குங் கண்ணியங்தோட் காளைக்கும்
ஆவிபோ லாடையுமோன் றானதே—பூவிரியச்
கள்வேட்டு வண்டுழலுங் கானத் திடைக்கனகப்
புள்வேட்டை யாதரித்த போது.

(இ-ள்.) பூ விரிய - (கள்ளிமுதலியவற்றின்) மலர்கள்மலர, கள் வேட்டு - தேனைவிரும்பி, வண்டு - வண்டுகள், உழலும் - திரிகின்ற, கானத்திடை - பாலைவனத்தில், கனகப்புள் - பொன்னிறமாகிய பறவையை, வேட்டை - வேட்டையாடுதலை, ஆசரித்தபோது - விரும்பிச் செய்தகாலத்தில், காவிபோல் - நீலோற்பலத்தைப் போல்கின்ற, கண்ணிக்கும் - கண்களையுடையாளுக்கும், கண்ணி - பூமாலையணிந்த, அம் தோள் - அழகிய தோள்களையுடைய, காளைக்கும் - (நடையால்) இடபத்தை ஒத்த நளராசனுக்கும், ஆவிபோல் - (தமக்கு ஒன்றாய்நின்ற) உயிர்போல், ஆடையும்-உடையும், ஒன்று ஆனது - ஒன்றாகியது, எ-று.

(வி-ரை.) போலென்பதனீற்று லகரம் சந்த இன்பப்பொருட்டு றகரமாகத் திரிந்து நின்றது. போல்கண்ணி - வினைத்தொகைநிலைத் தொடர்; இடைச்சொலடியாகப் பிறந்த போலென்னுமுதனிலை பெயரெச்சப் பொருள்தந்ததெனினு மொக்கும். காளை-உவமையாகுபெயர். உம்மை இறந்ததுதழீஇய எச்சவும்மை. வேட்டு-இறந்தகால வினையெச்சம்; வேள்-பகுதி, ட்-இறந்தகால இடைநிலை, உ-விகுதி, ளகரம் டகரமானது சந்தி. புள்வேட்டை என்பதில் வேட்டையென்பது முதனிலையில்லாத் தொழிற்பெயராதலால் புள்ளை என இரண்டாவது விரித்தபோது வேட்டையாடலென இயைந்த ஒருதொழிற்பெயர் வருவிக்கப்பட்டது உலகப்படைப்பு என்பதுபோலப் புள்ளினது வேட்டை என ஆறாவதன்றொகை எனினும் அவ்வாறாவதும் இரண்டாவதன் பொருளில் வந்ததேயாம். கள்ளி முதலியவற்றின் மலர்த்தேனுண்டும் அந்நிலவெப்பத்தா லுண்டாகிய விடாய் தணியாமையால் 'கள்வேட்டு'என்றும், வேறு நன்மலர்களைப் பெறாமையால் 'உழலும்' என்றுங் கூறினர். ()

அறம்பிழைத்தார் பொய்த்தா ரருள்சிதைத்தார் மானத்
திறம்பிழைத்தார் தெய்வ மிகழ்ந்தார்—புறங்கடையில்
சென்றார் புகுநரகஞ் சேர்வாய்கொ லென்றழியா
நின்றாள் விதியை நினைந்து.

(இ-ள்.) அறம் பிழைத்தார் - (தமக்குரிய) அறத்தைத் தவறி நடந் தவர்களும், பொய்த்தார் - பொய்ச்சாட்சி சொன்னவர்களும், அருள் சிதைத்தார் - தயையைக் கெடுத்தவர்களும், மானத் திறம் பிழைத்தார் - மானமாகிய வகையை விட்டவர்களும், தெய்வம் இகழ்ந்தார்-கடவுளை நிந்தித்தவரும், (ஆகிய இவர்களுடைய) புறம் கடையில் - தலைவாயி லில், சென்றார் - (நட்பு முதலியவற்றைக் கருதிச்) சென்றவர்கள், புகு நரகம் - புகுதற்குரிய நரகத்தை, சேர்வாய் - (நீ) சேர்தற்கு உரியை யாவாய், என்று - எனச் சொல்லி, அழியா - மனந்தளர்ந்து, விதியை - (இதற்குக் காரணமாகிய) போகூழை, நினைந்து நின்றாள் - எண்ணிக் கொண்டு அசைவற்றிருந்தாள், எ-று.

(வி-ரை.) அறம்பிழைத்தல் முதலியவற்றைச் செய்தவருடைய தலைவாயிலிற் சென்றவர்கள் நரகம் புகுவார்களென்பதைக் கூறவே அறம்பிழைத்தார் முதலானவர் நரகம் புகுவதைச் சொல்லவேண்டா தாயிற்று. உயர்குடியிற் பிறந்த ஆண்மகனுக்குரிய குணவகைகளுள் மானம் ஒன்றாதலால் மானத்திறம் என்பதை இருபெயரொட்டுப் பண் புத்தொகையென்க. புறங்கடை இலக்கணப்போலி. பிழைத்தார் முத லிய பலர்பா லீற்றுச்சொற்கள் இறந்தகால வினையாலணையும்பெயர் கள். கொல்-அசை. இது பறவையுருவாகவந்த கலிபுருடனை நோக்கிச் சொன்னது. (அஎ)

> வையந் துயருழப்ப மாயம் பலசூழ்ந்து
> தெய்வங் கெடுத்தாற் செயலுண்டோ—மெய்வகையே
> சேர்ந்தருளி நின்றதனிச் செங்கோலா யிங்கொழியப்
> போந்தருளு கென்றாள் புலர்ந்து.

(இ-ள்.) புலர்ந்து - வருந்தி மெய் வகையே-உண்மையினது பக் கத்திலே, சேர்ந்து - சார்ந்து, அருளி - (உயிர்களிடத்து) அருள் செய்து, நின்ற - சலியாமல் நிலைத்த, தனி செங்கோலாய் - ஒப்பற்ற

செங்கோலையுடையானே, வையம் துயர் உழப்ப (நினது பிரிவைக்குறித்து) உலகத்தார் துன்பப்படும்படி, மாயம் பல - பல வஞ்சனைகளை, சூழ்ந்து - ஆராய்ந்து, தெய்வம் - ஊழானது, கெடுத்தால் - கெடுக்கப் புகுந்தால், செயல் உண்டோ - (அதைத்தடுக்கத்தக்க) முயற்சியுளதோ இலது; (ஆதலால்) இங்கு ஒழிய - இவ்விடத்தினின்று நீங்கும்படி, போந்தருளுக - வரக்கடவாய், என்றாள் - என்று சொல்லினாள், எ-று.

(வி-ரை.) வையம் - இடவாகுபெயர். பலமாய மெனற்பாலது மாயம் பல எனச் சொல் பின்முன்னாக மாறிநின்ற இத்தொடர் இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடரில் தழாத்தொடர்; விசேடணத்தால் விசேடிக்கப்படும்பொருளுக்கு அவ்விசேடணம் முன்னிற்க வேண்டியது முறை, இது அவ்வாறு நில்லாமையால் தழாத்தொடரெனப்பட்டது. ஓ-எதிர்மறை. எ-பிரிநிலை. இங்கென்னும் பெயர் ஐந்தாம் வேற்றுமைப் பொருளுடையதாய் வந்தது; இதுபோன்ற சொற்கள் ஏழாவதனிடப்பொருளில் பெரும்பாலும், ஐந்தாம் வேற்றுமைப் பொருளில் சிறுபான்மையும் வருமெனக் கொள்க. போந்தருளுக என்னும் வியங்கோ ளீற்றி னகரம் தொகுக்கப்பட்டது. (அஅ)

அந்த நெடுஞ்சுரத்தின் மீதேக வாங்கழலும்
வெந்தழலை யாற்றுவான் மேல்கடற்கே—எந்தை
குளிப்பான்போற் சென்றடைந்தான் கூரிருளாற் பாரை
ஒளிப்பான்போற் பொற்றே ருடன்.

(இ-ள்) எந்தை - (உயிர்களுக்குத்) தந்தையாகிய சூரியன், அந்த நெடு சுரத்தின் - அத்தன்மையதாகிய நெடிய பாலைவனத்திற்கு, மீது ஏக - மேலிடத்தில் செல்லுகையில், ஆங்கு - அவ்விடத்தில், அழலும் - சொலித்தெழுகின்ற, வெம் தழலை - மிக்க சூட்டை, ஆற்றுவான்-(தன் உடலில்) ஆற்றிக்கொள்ளும்படி, மேல் கடற்கு - மேற்குக் கடலில், குளிப்பான் போல் - சென்று குளிப்பவன்போலவும், கூர் இருளால் -

மிருந்த இருளாகிய உறையில், பாரை - பூமியை, ஒளிப்பான் போல் - ஒளித்து வைப்பவன்போலவும், பொன் தேருடன் - பொன்னாலாக்கிய தேரோடு, சென்று அடைந்தான் - போய் முழுகினன், எ-று.

(வி-ரை.) உலகத்துயிர்களுக்கு ஒளியைத் தந்தும், காலத்தை வரையறுத்தும், உணர்வு முதலியவாகப் பயன்படும் பைங்கூழ் முதலிய வற்றையும் அவ்வுயிர்களையும் வளர்த்தும் உபகரித்து வருதலால் சூரியனை எந்தை என உபசரித்தும், தான் செய்மைக்க ணீங்குழித் தன் மக்கட்குத் தீங்குவராமற் காக்குங் கடன் தந்தையதாதலால் எந்தையென்றதற்கேற்பக் 'கூரிருளாற் பாரை யொளிப்பான்போல்' என்றுங் கூறினர். அந்த அ - என்பதன் மரூஉ. மேல்கடல்-ஏழாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்; விரிந்தால் மேற்கின்கணுள்ள கடலென விரியும். கூரிருள்-உரிச்சொற்றொகாநிலைத்தொடர். இருளால்-உருபுமயக்கம். ஆற்றுவான்-எதிர்கால வினையெச்சம். (அக)

பானு நெடுந்தேர் படுகடலிற் பாய்ந்ததற்பின்
கான வடம்பின் கவட்டிலைகள்—மானின்
குளம்பேய்க்கு நன்னாடன் கோதையொடுஞ் சென்றான்
இளம்பேய்க்குந் தோன்றா விருள்.

(இ - ள்.) கானல் - கடற்கரைச் சோலையிலுள்ள, அடம்பின் - அடம்பங்கொடியினது, கவடு - பிளவாகிய, இலைகள்-இலைகள், மானின் குளம்பு - மானினுடைய குளம்புகளை, எய்க்கும் - ஒத்திருக்கின்ற, நல் நாடன் - வளமாகிய நிடதநாட்டையுடைய நளன், பானு - சூரியனுடைய, நெடு தேர் - பெருந்தேர், படு கடலில் - ஒலிக்கின்ற கடலில், பாய்ந்ததற்பின் - பாய்ந்ததற்குப்பின், இள பேய்க்கும் - இளமையாகிய பேய்க்கும், தோன்றா - (வழி) தோன்றாத, இருள் - இருளில், கோதையொடும் - தமயந்தியோடு, சென்றான் - நடந்தான், எ-று.

(வி-ரை.) அடம்பினிலை மான்குளம்பேய்க்கு நாடு என்றமையால் நெய்தலு முல்லையும் நெருங்கிய நாடென்பதாயிற்று. இரவில் திரி

யும் இயல்புடையதாகலால் 'பேய்க்கு' என்றும், அவற்றுளும் மூப்பால் கண்ணின் பார்வையில் வழுவிலதென்பார் இளமையென்னு மடை கொடுத்து 'இளம்பேய்' என்றுங் கூறினார். உம்மை உயர்வுசிறப்பு. மூன்றனுருபை யடுத்துநின்ற வும்மை சாரியை. (௯0)

எங்காம் புகலிடமென் றெண்ணி யிருள்வழிப்போய்
வெங்கா னகந்திரியும் வேலைதனில்—அங்கேயோர்
பாழ்மண்ட பங்கண்டான் பால்வெண் குடைநிழற்கீழ்
வாழ்மண் டபங்கண்டான் வந்து.

(இ-ள்.) பால் - பால்போலும், வெள் குடை நிழல்கீழ் - வெண் கொற்றக்குடையினது நிழலின்கீழ், வாழ் - வாழ்கின்ற, மண் - உலகத் துயிர்களினது, தபம் - தவத்தை, கண்டான் - (குற்றமின்றி நடக்கக்) கண்ட செங்கோலையுடையான், புகல் இடம்-புகுதற்குரிய இடம், எங்கு ஆம் என்று - எங்கிருக்குமென்று, எண்ணி - நினைத்துக்கொண்டு, இருள் வழிபோய் - இருளிற்போய், வெம் கானகம்-வெவ்விய காட்டி னிடத்தில், திரியும் வேலைதனில் - திரிகின்றபோது, அங்கு-அவ்விடத் தில், வந்து ஓர் பாழ் மண்டபம் கண்டான் - வந்து ஒருபாழாகியமண்ட பத்தைக் கண்டான், எ-று.

(வி-ரை.) குடைநிழற்கீழ்வாழ் மண்டபத்தைக் கண்டானென் றது தன் குடைக்கீழ்வாழு முயிர்கள் தீயவழியிற் செல்லாமல் நல்வழியி லொழுகும்படி செய்தானென்றபடி. மண் - இடவாகுபெயர். மக்களுக் குத் தாய் முலைப்பால்போல இனிமை யுடையதாய் நின்று காத்தலும், வெண்மையு முடையதாகலால் குடைக்குப் பால் உவமையாயிற்று; இது பயனும் உருவும்பற்றி வந்த வுவமை. குடை வெயின் முதலியவற்றைத் தானேற்றுக்கொண்டு தன்கீழ் நின்றோர்க்கு இனிய நிழலைத் தருதல் போல இவனது ஆளுகையும் பகைவர் முதலானோரால் உண்டாகுந் தீமையைத் தானேற்றுக்கொண்டு தன்கீழ் நின்ற குடிகளை இனிது

காத்தலால் ஆளுகையைக் குடையென உவமையாகுபெயரால் கூறினர். ஆரியமொழிகளிற் சில கோபமெனவும், கோவமெனவும், தபமென வும், தவமெனவும் தமிழில் வழங்கும். போய் என்பதில் யகரவிகுதியே இறந்தகாலத்தைக் காட்டியது; இகரவிகுதிபோல இவ்விகுதியும் உகரத் தின் திரிபென்றே கொள்க; எதிர்மறையில் போகாது என உகரமேற்ற லால். வானக மென்றாற்போலக் கானகம் கானகிய அகம் எனக் கொள் ளின் இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடராகவும், கானி னது அகமெனக் கொள்ளின் ஒற்றுமைப்பொருளில் வந்த ஆறாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடராகவுங் கொள்க. மண்டபம் நிலை மொழி யீறு திரியாமை; "சாதிகுழூஉப் பரண்க வண்பெய ரிறுதி, இயல்பாம் வேற்றுமைக் குணவெண் சாண்பிற, டவ்வாக லும் ஆம் அல் வழி யும்மே" என்பதில் பிற என்ற மிகையாற் கொள்க. (கூ௯)

மூரி யிரவும்போய் முற்றிருளாய் மூண்டதால்
சாரு மிடமற்றுத் தானில்லை—சோர்கூந்தல்
மாதராய் நாமிந்த மண்டபத்தே கண்டுயிலப்
போதரா யென்றான் புலர்ந்து.

(இ-ள்.) மூரி இரவும் - வலியையுடைய இராக்காலமும், போய் - நாழிகைசென்று, முற்று - முதிர்கின்ற, இருள் ஆய் - இருளுடைய தாகி, மூண்டது - பெருகியது; சாரும் - (நாம்) சார்தற்குரிய, மற்று இடம் - வேறு இடமும், இல்லை - இலது; சோர் கூந்தல் - அவிழ்ந்து வீழ்ந்த கூந்தலையுடைய, மாதராய் - பெண்ணே, நாம் - நாம், இந்த மண்டபத்து - இந்த மண்டபத்தில், கண் துயில - கண்ணுறங்கும்படி, போதராய் - வாராய், என்றான் புலர்ந்து - என்று வருத்தத்தோடு சொல்லினன், எ-று.

(வி-ரை.) வழி முதலியவற்றை நல்ல தீயவென் றுணரக்கூடா மையால் 'மூரியிரவு' என்றான். இருளாய் என்றது உடையதை உடை

மையாகக் கூறுவதோர் மரபுவழுவமைதி; இவ்வாறு வரல் "இல்லவண் மாண்பானால்" என்னுங் குறளினுங் காண்க. ஆல், தான் - அசை. இரவு மென்ற உம்மை எதிரதுதழீஇய எச்சவும்மை. மற்றிடமெனக் கூட்டுக. இதனிறுதியில் இறந்ததுதழீஇய எச்சவும்மை தொக்கப்பட்டது. போதராய் ஒருமை ஏவல் எதிர்கால வினைமுற்று; போ (நடத்தல் முதனிலைத்தொழிற்பெயர்); தா (கொடு) இவ்விரண்டுஞ் சேர்ந்து போதலைக் கொடு என்னும் பொருளுள்ளதாய் நின்ற போதா - பகுதி, ஆய் - ஏவலொருமை எதிர்கால விகுதி, பகுதியீற்று ஆ அவ்வானது குறுக்கல் விகாரம், ரு-விரித்தல்விகாரம், உகரக்கேடு சந்தி, ர் - விரித்தல்விகாரம், உ சாரியை எனினும் பொருந்தும். போ என்பது நடத்தலை யுணர்த்துதற்கு நிகண்டு: "கடத்தலே படர்தல் சேரல் கழிதலே யிவற லேகல், விடுத்திட லிறத்தல் போகன் மெல்லென வழங்கி னீங்கல், தடத்தினிற் செலவே யில்ல றணத்தலே யியங்கல் தீர்தல், நடத்தலின் பேரீ டெட்டா மொதுக்கமு நாட்டு மப்பேர்" என்பது. போ என்பதைப் புகு என்பதன்மரூஉ எனினும் பொருந்தும். (கூஉ)

வைய முடையான் மகரயாழ் கேட்டருளும்
தெய்வச் செவிகொதுகின் சில்பாடல்—இவ்விரவில்
கேட்டவா வென்றழுதாள் கெண்டையங்க ணீர்சோரத்
தோட்டவார் கோதையாள் சோர்ந்து.

(இ-ள்.) வையம் - பூமியை, உடையான் - (தன்வசத்தில்) உடைய அரசனது, மகர யாழ் - மகரயாழினிசையை, கேட்டருளும் - (முன்னெல்லாம்) கேட்டருளுகின்ற, தெய்வச்செவி - தெய்வத்தன்மையையுடைய காதுகள், கொதுகின் சில் பாடல் - கொதுகுகளினது சிறுமையான பாட்டுகளை, இவ்விரவில் - இன்றிராத்திரியில், கேட்டவா என்று - கேட்க இசைந்தனவாவென்று, தோட்ட-மலர்மாலையணிந்த, வார் கோதையாள்-நீண்ட கூந்தலையுடைய தமயந்தி, கெண்டை-சேலை

ஒத்த, அம் - அழகிய, கண் நீர் சோர - கண்களினின்றும் நீர் வடிய, அழுது சோர்ந்தாள் - அழுது (தன்னை) மறந்தாள், எ-று.

(வி-ரை.) மகரயாழ்-மகரமீனின் வடிவாய்ச் செய்யப்பட்ட யாழ். செவிக்குத் தெய்வத்தன்மையாவது யாழிசை முதலிய இனிய வோசைகளைக் கேட்கும் பாக்கிய முடையதாதல். யாழ் - கருவியாகு பெயர் சிறுபாடலென்பதைச் சில்பாடலென்றது தகுதி வழக்கென்பர் தொல்காப்பியவுரைகாரர். ஆ-இரக்கப்பொருளது, இது புதியனபுகுதல். அழுதாள்சோர்ந்து என்பனவற்றைப் பின்முன்னாகமாற்றி விகுதிபிரித்துக் கூட்டிப் பொருளுரைக்க. குண்டு குண்டென வருவதுபோலக் கண்டை கெண்டை யெனவந்தது. அம் சாரியையாக்கி விரித்தல் விகாரமென்பாரு முளர். தோட்ட-பொருளடியாகப்பிறந்த குறிப்புப்பெயரெச்சம்; தோடு-பகுதி, அ - பெயரெச்சவிகுதி, பகுதி ஒற்று இரட்டியது விரித்தல்விகாரம், உகரக்கேடு சந்தி. தோடு-சினையாகுபெயராய் மலரை யுணர்த்த, அதுவும் அவ்வாகுபெயராய் மாலையை யுணர்த்தினமையால் இருமடியாகுபெயர். (கூ௩)

பண்டை வினைப்பயனைப் பாரிடத்தி லார்கடப்பார்
கொண்ட னிழலிற் குழைதடவும்—கெண்டை
வழியனீ சென்றான் மனநடுங்கி வெய்துற்
றழியனீ யென்றா னரசு.

(இ-ள்) பார் இடத்தில்-பூமியினிடத்தில், பண்டை வினை-முன்னைத்தீவினையினது, பயனை - பழுத்த துன்பத்தை, கடப்பார் ஆர் - கடக்கவல்லவர்யார் (ஒருவருமில்லை); கொண்டல் நிழலில்-கூந்தலாகிய மேகத்தினிழலில், குழை - காதணியை, தடவும்-(பார்வையால்) தீண்டுகின்ற, கெண்டை-சேலை ஒத்த கண்களில் நின்று, நீ நீர்வழியல் நீ நீர் பெருகாதே, என்றான் - என்று சொன்னான், மனம் நடுங்கி - மனம் நடுக்கமுற்று, வெய்து உற்று - புழுக்கமடைந்து (புழுங்கி), நீ அழியல் - நீ தளராதே, என்றான் அரசு-என்று சொன்னான் அரசன், எ-று.

(வி-ரை.) அங்ஙனமாக நம்மால் நடக்கலாமோ என்பது குறிப்பெச்சம். பண்டை யென்பதில் ஐ சாரியை. பண்டைவினை - பண்புத்தொகைநிலைத்தொடர்; வினையென்றது இங்கே தீவினையை; இது அதிகாரத்தாற் பெற்றும். ஆர்-யாவரென்னும் வினாப்பெயரின் மரூஉ. நீ என்பதை முன்னுங் கூட்டுக. நீ நீர்வழியல், நீ மனமழியல் என்பனவற்றில் நீ பொதுமை நீங்கி உயர்திணைக் குரியதாய் இங்கு நிற்றலால் திணைவழுவமைதி. இவ்விணையிரண்டும் ஏவ லொருமை எதிர்மறை வினைமுற்றுகள். வழியல்: வழி - பகுதி, ய் சந்தி, அல் ஏவலொருமை எதிர்மறைவிகுதி. அழியல் என்பதையும் இவ்வாறே பிரிக்க. மனையாளோடு அரசன் பேசுவதாக இச்செய்யுள் செய்யப்பட்டதாதலால் கெண்டைவழிய னீரென்றான், மனமழிய னீயென்றான் எனத் தனித்தனியாக முடித்தார். அரசு-பண்பாகுபெயர். (கச)

விரைமலர்ப்பூ மெல்லணையு மெய்காவல் பூண்ட
பரிசனமும் பள்ளி யறையும்—அரசேநான்
காணேனிங் கென்றுக் கலங்கினாள் கண்பனிப்பப்
பூணேர் முலையாள் புலர்ந்து.

(இ - ள்.) பூண் - ஆபரணம்போல, ஏர் - அழகையுடைய, முலையாள் - முலைகளையுடைய தமயந்தி, விரை - (நினக்கு) மணமாகிய, மலர் - மலர்களாற் சமைத்த, பூ-பொலிவாகிய, மெல் அணையும் மெல்லிய சயனத்தையும், மெய் காவல் - உடலைக் காக்குந்தொழிலை, பூண்ட - மேற்கொண்ட, பரிசனமும் - ஏவலாளர்களையும், பள்ளி அறையும் - (அம்மெல்லணையைப் பெற்று மெய்க்காப்பாளரால் சூழப்பெற்ற) படுக்கை அறையையும், அரசே - அரசனே, இங்கு - நினக்கிருக்க, நான் - (அக்காலத்தில் நினக்கு உபசரித்துநின்ற) நான், காணேன் என்னு - காண்கின்றிலேனென்று சொல்லி, கண் பனிப்ப-கண் நீரைத்துளிக்க, புலர்ந்து கலங்கினாள் - வாடிக்கலங்கினாள், எ-று.

(வி-ரை.) பள்ளியறைக்கு அகத்திலிருப்பதாதலால் அணையை முன்னும், புறத்திலிருப்பதாதலால் பரிசனத்தை அதன் பின்னும்,

இவ்விரண்டையும் அது உடையதாதலால் அதனை அவற்றின் பின்னும் வைத்தாள். அக்காலத்து நினக்கு உபசரித்துநின்ற என்பது நானென்னுஞ் சொல்லாற்றலால் போந்தபொருள். மெய்காவல்: இரண்டாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடராதலால்வருமொழிக்ககரமிசாமல் இயல்பாயிற்று. மெய்க்காவல் என வரின் ஆறாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடரெனக் கொள்க. சேய் நிலத்தை நோக்க அணி நிலம் இங்கெனப்படுமாதலால் இங்கென்பது முன்னிலையானை யுணர்த்தியது. காணேன்-ஒருமைத்தன்மை எதிர்மறை வினைமுற்று: காண் - பகுதி, ஆ - எதிர்மறை விகுதி, அவ்வாகாரக்கேடு தொகுத்தல், என் - தன்மை ஒருமை விகுதி. என்று-இடைச்சொலடியாகப்பிறந்த செய்யா என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். பெண்மைக்குப் பூண் போலச் சிறந்த அகத்துறுப்பாதலால் 'பூணேர் முலையாள்' என்றார். இங்ஙனங் கூறிய குறிப்பால் மாராப்பில்லாளாயினள் என்பது விளங்கியது. (கரு)

தீய வனமுந் துயின்று திசைதுயின்று
பேயுந் துயின்றதாற் பேர்யாமம்—நீயுமினிக்
கண்மேற் றுயில்கை கடனென்றான் கைகொடுத்து
மண்மேற் றிருமேனி வைத்து.

(இ - ள்.) தீய வனமும் - கொடுமையாகிய வனத்திலுள்ள மறவரும், மிருக முதலானவைகளும், துயின்று - உறங்க, திசை - திக்கிலுள்ளவர்களும், துயின்று - உறங்க, பேயும் - (இரவில் திரிதலையுடைய) பேய்களும், துயின்றது-உறங்கினது, (ஆகலால்)பேர் யாமம்-(இந்தநேரம்) நடுச்சாமமாகும்; நீயும்-(மெல்லியதன்மையளாகிய) நீயும், இனிமேல் - இனி, மண்மேல் - புழுதியில், திருமேனி வைத்து - அழகிய உடலைக் கிடத்தி, கண் துயில்கை - கண்ணுறங்குதல், கடன் என்றான் கை கொடுத்து - கடமையென்று சொல்லி (தேவிதலைக்கு அணையாகக்) கைகொடுத்தான், எ-று.

(வி-ரை.) துயின்றென்னும் இரண்டும் செயவெனெச்சத்திரிபு. துயின்றது - இறந்தகால வினைமுற்று; இவ்வாறன்றித் துயின்றதால் என்னும் இறந்தகாலத்தொழிற்பெயர்க்கும் மூன்றனுருபுக்கும் இடையே அன்சாரியை தொக்கப்பட்டதெனக் கொண்டு துயின்றதினாலென உரைப்பினும் பொருந்தும். யாமமென்னும் பெயர்ப் பயனிலைக்கு இந்நேர மென்பது தோன்றா எழுவாய். மேலென்பதை இனி என்பதனோடு கூட்டி ஒருபொருட் பன்மொழியென்க. என்றான் கைகொடுத்து என்னுஞ் சொற்களிலுள்ள விகுதிகளைப் பிரித்து என்று கைகொடுத்தானெனக் கூட்டுக. வனம், திசை-இடவாகுபெயர். உம்மை மூன்றனுள் முன்னது இழிவுசிறப்பு, நடுநின்றது உயர்வுசிறப்பு, பின்னது இறந்தது தழீஇயதனோடு உயர்வுசிறப்புப்பொருளது. இருளின் பெருமையுடைய யாமம் நடுச்சாமமாதலால் அதனைப் 'பேர்யாமம்' என்றார். பேய் துயின்றதை ஏதுவாகக் கூறினமையாலும் பேர்யாமமென்பது நடுச்சாமமெனக் கொள்க. "கழுது கண்படுக்கும் பானாள்" எனப் பிறர் கூறுதலுங் காண்க. (௬௬)

புன்கண்கூர் யாமத்துப் பூழிமேற் றான்படுத்துத்
தன்கண் டுயில்வாளைத் தான்கண்டும்—என்கண்
பொடியாதா லுள்ளாவி போகாதா னெஞ்சம்
வெடியாதா லென்றான் விழுந்து.

(இ-ள்.) புன் கண் கூர்-(எம்போல்வார்க்குத்) துன்பமிகுகின்ற, யாமத்து - நடு இராத்திரியில், தான் பூழிமேல் படுத்து - தான் புழுதியின்மேல் படுத்து, தன் கண் துயில்வாளை-தன் கண்கள் தூங்குகின்றவளை, தான் கண்டும் - தான் பார்த்தும், கண் பொடியாது-கண் பொடியாதிருக்கின்றது, உள் ஆவி - (கண்வழியாக அறிந்த) உள்ளிருக்கிற உயிர், போகாது - (உடலைவிட்டுப்) போகாமலிருக்கின்றது, நெஞ்சம் - (கண்ணுக்குத் துணையாக நின்ற) மனம், வெடியாது - பிளவாமலிருக்கிறது, என் - என்ன ஆச்சரியம், என்றான் விழுந்து - என்று சொல்லி விழுந்தான், எ-று.

(வி-ரை.) துயில்வாளை என்னும் வினையாலணையும்பெயரில் வ் இடைநிலை நிகழ்காலங் காட்டியது; இது நச்சினார்க்கினியாருடைய மதம். உம்மை உயர்வுசிறப்பு. என்-எவனென்பதன்மரூஉ. கண்-சாதியொருமை. ஆல் மூன்றும் அசை. நெஞ்சம் - இடவாகுபெயர். கண் இயங்குந்தன்மை யிலதாதலால் பொடியாதென்றும், ஆவி நித்தியமாயும் இயங்குந்தன்மை யுடையதாயுமிருத்தலால் அழியாதென்னுமல் போகாதென்றும், நெஞ்சம் அவன் நிலைமையை எண்ணுதலா லளவுகடந்து பெருகுந் துன்பம் தன்னு ளடங்கப்பெறுமையால் வெடியாதென்றுங் கூறினான். (கன)

> முன்றிறனின் மேற்படுக்க முன்றானையுமின்றி
> இன்று துயில விறைவனுக்கே—என்றனது
> கைபுகுந்த தென்னுடைய கால்புகுந்த தென்றழுதாள்
> மைபுகுந்த கண்ணீர் வர.

(இ - ள்.) இறைவனுக்கு - அரசனுக்கு, இன்று துயில - இன்றிராத்திரி நித்திரைசெய்ய, முன்றில்தனில்-(இம்மண்டபத்தின்) முன்னிடத்தில், மேல் படுக்க (அணைக்குமாறாக) மேலேவிரிப்பதற்கு. முன்தானையும் இன்றி - ஆடையின் முன்பங்கு மில்லாமல், என்தனது கை புகுந்தது-என்னுடையகைகள் உடன்பட்டன, என்னுடைய கால் புகுந்தது - என்னுடைய கால்கள் உடன்பட்டன, என்று - என்றுசொல்லி, மை புகுந்த - மை தங்கிய, கண் நீர் வர-கண்களில் நின்று நீர் மிகுதியும் வரும்படி, அழுதாள் - அழுதனள், எ-று.

(வி-ரை.) முன் பாட்டில் தமயந்தி துயின்றதாகவும், இப்பாட்டில் நளராசன் துயின்றதாகவுங் கூறினமையால் அவள் சிறிது துயில் செய்தபின் இவன் சிறிது துயில் செய்தானென விளங்குகிறது. பின் வருஞ் செய்யுளாலும் தமயந்தி துயில்வதாகக் கவி கூறுவது இவ்வாறு பலமுறை துயின்று புலம்பினரென் றுணர்த்துதற்கென்க. கை புகுந்

ததுகால் புகுந்ததென்றமையால் அவள் கைம்மேல் தலை வைத்துக் கால்களின்மேற் படுத்துத் துயின்றன னென்பது. இல்முன் முன்றி லெனவும், தானைமுன் முன்றானையெனவுஞ் சொல் பின்முன்னாக மாறி வழங்கலால் இவை இலக்கணப்போலி. வீட்டின் முன்னிடத்தின் பெயராகிய முன்றிலென்பது வேறோரிடப்பொருளின் முன்னிடத் துக்கும் இலக்கணையாய் வழங்கிவரும். இந்த மண்டபத்தின் முன் னிடத்தை யுணர்த்தியது. "பிறங்குஞ் சிகரப்படர் முன்றிறொறும்பி ணோவா-டுறங்கும் மகரங்கள்" என மலையின் முன்னிடத்துக்கும், "முயங்கினர் முலைமுன்றில், இறுகு சாந்தமு மெழுது நற்றறி களும்" என உடலின் முன்னிடத்துக்கும் ஆனமை கம்பநாடர் செய் யுளி லுணர்க. உம்மை இழிவுசிறப்பு. என்றனது என்னும் உருபு புணர்ச்சியில் தன்னென்னுஞ் சாரியை வந்தது தன்மையில் படர்க்கை வந்த வழுவமைதி. காலென்னும் எண்ணலளவைப்பெயர் உடலின் காற்பங்காகிய உறுப்புக்கு ஆனமையால் எண்ணலளவையாகுபெயர்; அது இங்கு உடலின் காற்பங்கும் தொடையுஞ்சேர்ந்த உறுப்புக்காத லால் சினையாகுபெயர். கை, கால்-சாதியொருமை. (கஅ)

வீமன் றிருமடந்தை விண்ணவரும் பெற்றிலாத்
தாம மெனக்களித்த தையலாள்—யாமத்துப்
பாரே யணையாப் படைக்கண் டுயின்றாண்மற்
றாரே துயரடையா ராங்கு.

(இ-ள்.) வீமன் திருமடந்தை-வீமராசனுடைய செல்வப்புத்திரி, விண்ணவரும் - (இந்திரன் முதலிய) தேவரும், பெற்றிலா - பெறாத, தாமம் - மாலையை, எனக்கு - (வீரம் செல்வ முதலியவற்றில் சிறந்த) எனக்கு, அளித்த - (மானுடனென்று இகழாமல்) அருளிய (தந்த), தையலாள் - அலங்காரமுடையாள், யாமத்து-இரவில், பாரே-பூமியே, அணையா - மெத்தையாக, படைக் கண் - வேல்போலுங் கண்கள், துயின்றாள் - நித்திரித்தாள், ஆங்கு - முன்னை வினைப்பயன் விளை

வில், மற்று ஆர் - வேறே யாவர், துயர் அடையார் - துன்பத்தை அடையாதவர், எ-று.

(வி-ரை.) இந்திரன் முதலிய தேவராவர்: இந்திரன், அக்கினி, வருணன், யமன். பிறந்த அகம் செல்வ முதலியவற்றில் குறைவில தென்பான் 'வீமன் திருமடந்தை' எனவும், புகுந்த அகமும்அவ்வாறு குன்றவிலதென்பான் 'எனக்கு' எனவும், சிறந்த கட்டழகுடையா ளென்பான் 'விண்ணவரும் பெற்றிலாத் தாமம்' எனவும், என்பால் மிக்க விருப்பமுடையா ளென்பான் 'எனக்களித்த' எனவும், இவள் டாரே யிணையாகத் துயின்றமை பிரத்தியட்சப்பிரமாணமா யிருத்த லால் வினைப்பயன் ஒருவரையும் விடாதென்பதற்கு ஆகமப்பிரமா ணம் வேண்டா என்பான் 'மற்றாரே துயரடையார்' எனவுங் கூறி னன். வீமன் - பகைவர்களுக்குப் பயத்தை உண்டாக்குவோன். உம் மை உயர்வுசிறப்பு. பெற்றிலாத என்பது ஈறு தொகுத்தலாய்ப் பெற் றிலா என நின்றது. பெறு-பகுதி, பகுதி ஒற்றிரட்டியது விரித்தல் விகாரம், அதுவே இறந்தகாலங் காட்டியது, இல் அச்செயலையும், காலத்தையும் மறுக்கவந்த எதிர்மறை விகுதி, உகரக்கேடு சந்தி, அனைத்து மொருபகுதி, ஆ-சாரியை, த்-விரித்தல் விகாரம், அ-பெய ரெச்சவிகுதி. இல் என்பதைச் சாரியையாகக் கொண்டு ஆ எதிர் மறை விகுதியாகக் கொள்ளின் அது பெற்றிலனென்னும் எதிர் மறை வினைமுற்றுக்குப் பொருந்தாமை அறிக. அளித்த என்னும் இறந்தகாலப் பெயரெச்சத்தில் அளி என்னும் பகுதி கருணைக்குரிய சொல். முன்னுள்ள ஏ பிரிநிலை. பின்னுள்ள ஏ ஈற்றசை. மற்றுப் பிறிதென்னும் பொருளது. அணையாக என்பது விகுதியும் அது பற்றிவந்த சாரியையும் தொகுக்கப்பட்டு அணையா என நின்றது. திருமடந்தை தையலா ளென்னும் ஒரு பொருண்மேல் வந்த பல பெயர் துயின்றாளென்னும் ஒரு வினை கொண்டது. (கக)

பெய்ம்மலர்ப்பூங் கோதை பிரியப் பிரியாத
செம்மை யுடைமனத்தான் செங்கோலான்—பொய்ம்மை

விலக்கினா னெஞ்சத்தை வேறாக்கி நின்று
கலக்கினான் வஞ்சக் கலி.

(இ - ள்.) வஞ்சக்கலி - வஞ்சனைத் தொழிலையுடைய கலிபுரு டன், பிரியாத-(தன்னைவிட்டு) நீங்குதலில்லாத, செம்மை உடை - நற்குணமுடைய, மனத்தான்-மனத்தையுடையான், செங்கோலான் - செங்கோலையுடையான், பொய்ம்மை - பொய்யொழுக்கத்தை, விலக்கினான் நெஞ்சத்தை - நீக்கினானென்னும் தன்னுடைய மனத்தை, மலர் பெய்-மலர்களை யணியப்பெற்ற, பூ கோதை - அழகாகிய கூந் தலையுடைய தமயந்தியை, பிரிய - பிரியும்படி, வேறு ஆக்கி - வேறு படுத்தி, நின்று - அம்முயற்சியை விடாமல், கலக்கினான் - கலங்கச் செய்தான், எ - று.

(வி-ரை.) பூங்கோதை-பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன் மொழித் தொகைப்பெயர். உடைய என்னுங் குறிப்புப் பெயரெச் சத்தி னீறு தொகுத்தலாய் உடை என நின்றது. (௪00)

வஞ்சக் கலிவலியான் மாகத் தராவளைக்கும்
செஞ்சுடரின் வந்த கருஞ்சுடர்போல்—விஞ்ச
மதிக்கந்தேர்த் தானை வயவேந்த னெஞ்சத்
துதித்ததே வேறோ ருணர்வு.

(இ-ள்) மாகத்து - ஆகாயத்தில், அரா - இராகுவாகிய பாம் பால், வளைக்கும்-சூழ்ந்துகொள்ளப்பட்ட, செம் சுடரின்-சிவப்பாகிய சூரியனினின்று, வந்த - தோன்றிய, கரு சுடர்போல் - கருமை யாகிய ஒளியைப்போல, விஞ்ச - மிகுதியாக, மதித்த-(வீரர்களால்) மதிக்கப்பட்ட, தேர்த்தானை-தேர்ச்சேனையையுடைய, வயம்-வெற்றி யாகிய, வேந்தன் - அரசனுடைய, நெஞ்சத்து - மனத்தில், வஞ்சம் - வஞ்சத்தொழிலையுடைய, கலி வலியால் - கலிபுருடனது வல்லமை யால், வேறு ஓர் உணர்வு - (முன்னுள்ளதற்கு) மாறாகிய ஓரெண் ணம், உதித்தது - தோன்றியது, எ-று.

(வி - ரை.) கலிவலி - பண்புத்தற்கிழமைப்பொருட்டாகிய ஆறாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். வேந்தனெஞ்சம்-சினைத் தற்கிழமைப்பொருட்டாகிய ஆறாம் வேற்றுமைத் தொகைநிலைத் தொடர். மூன்றனுருபு கருவிப்பொருட்டன்று, ஏதுப்பொருட்டு. அரா என்னுங் குறிலின்கீழ் ஆகாரம் பெற்ற பெயர் அர எனக் குறுக லும், அரவு என அக்குறுகலோடு உகரம் பெறுதலுஞ் செய்யுள் வழக் காம், "குறியதன் கீழாக் குறுகலும் அதனோ, டுகரம் ஏற்றலும் இயல் பும்ஆ ம் தூக்கின்" [நன்-உயிரீற்று-கூ-உஉ]. அராவளைக்கும்-எழுவாய்த் தொகாநிலைத்தொடராகவும், அராவினால் வளைக்கும் என மூன்றாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடராகவும் கொள்ளலாம். சுடர்-பண் பாகுபெயர்; அது செம்மையென்னும் பிறிதினியைபு நீக்கிய விசே டணத்தால் செஞ்சுடரென விசேடிக்கப்பட்டுச் சூரியனை உணர்த் திற்று. ஐந்தனுருபு நீங்கற்பொருளது. (௧0௧)

காரிகைதன் வெந்துயரங் காணாம னீத்தந்தக்
கூரிருளிற் போவான் குறித்தெழுந்து—நேரே
இருவர்க்கு மோருயிர்போ லெய்தியதோ ராடை
அரிதற் கவனினைந்தா னாங்கு.

(இ-ள்) காரிகைதன் - மிக்க அழகையுடைய தமயந்தியினது, வெம் துயரம் - மிகுதியாகிய துன்பத்தை, காணாமல்-காணப்பொறுக் காமல், நீத்து - நீக்கி, அந்தக் கூர் இருளில் - அந்த மிக்க இருளில், போவான் - போக, குறித்து - துணிந்து, எழுந்து-(படுக்கை விட்டு) எழுந்து, இருவர்க்கும் - இருவருக்கும், ஓர் உயிர்போல-உயிரொன்று யிருப்பதுபோல, எய்தியது-பொருந்தியதாகிய, ஓர் ஆடை-ஓராடை யை, நேரே அரிதற்கு-சரியாக அரிவதற்கு, ஆங்கு - அவ்விடத்தில், அவன் நினைந்தான் - அவன் நினைத்தான், எ - று.

(வி ரை.) காரிகை - பண்பாகுபெயர். வெம்மை: "வெங்காம னோய்" என்பதிற்போல மிகுதியை யுணர்த்தியது. நீத்து - இறந்

கால வினையெச்சம்; நீ-பகுதி, த்-சந்தி, த்-இறந்தகால இடைநிலை, உ-வினையெச்சவிகுதி. போவான் - வானீற்று எதிர்கால வினையெச்சம். உம்மை முற்றும்மை. எய்தியது - இறந்தகால வினையாலணையும் பெயர்; எய்து - பகுதி, இன் - இறந்தகால இடைநிலை, இடைநிலையீற்று னகரக்கேடு கடைக்குறை, ய்-சந்தி, அ-சாரியை, து-ஒன்றன்பால்விகுதி, உகரக்கேடு சந்தி, இதனோடு ஆடை யென்பது இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடராகத் தொக்கன. (௩0௨)

எண்ணிய வெண்ண முடிப்ப விகல்வேந்தன்
கண்ணி யதையறிந்து காய்கலியும்—பண்ணினுக்குக்
கேளான தேமொழியை நீக்கிக் கிளரொளிசேர்
வாளாய் மருங்கிருந்தான் வந்து.

(இ - ள்.) இகல்வேந்தன் - போரில் மிக்க நளராசன், கண்ணியதை - குறித்ததை, அறிந்து - தெரிந்து, பண்ணினுக்கு - இசைக்கு, கேள் ஆன - நட்பாகிய, தேன் மொழியை-இனிமையாகிய சொல்லையுடைய தமயந்தியை, நீக்கி - (நளனில் நின்று) நீங்கச்செய்து, எண்ணிய - (ஆதியில் தான்) ஆலோசித்த, எண்ணம் - ஆலோசனையை, முடிப்ப - முடிக்கும்படி, காய் கலியும் - (நளனைத் தமயந்தி மாலையிட்ட நாள்முதற்கொண்டு) கோபந்தணியாத கலிபுருடனும், கிளர் - விளங்குகின்ற, ஒளி சேர் - ஒளியைச் சேர்ந்த, வாள் ஆய்-வாளுருவமாகி, மருங்கு வந்து - (அவன்) பக்கத்தில் வந்து, இருந்தான் - கிடந்தான், எ - று.

(வி-ரை.) ஆதியில் கலி எண்ணிய எண்ணமாவது "விண்ணோர் நிற்க வெறித்தேன் மணமாலை, மண்ணரசற் கீந்த மடமாதின் எண்ணம், கெடுக்கின்றேன்" எனவும், "செருக்கதிர்வேற் கண்ணியுடன் றேர்வேந்தன் கூடி, இருக்கத் தரியே னிவரைப் பிரிக்க, உடனோ" எனவும் அவன் கொண்ட எண்ணம். அது பன்னிரண்டாண்

டாகியும் ஆதியில் கொண்ட கோபந் தணியாமையால் காய் என்பதற்கு அவ்வாறு பொருளுரைக்கப்பட்டது. வாளாய்க் கிடந்தது ஆடையைத் துணிப்பதற்கு. கிளரொளிசேர் வாளாயது நள்ளிராத்திரியாதலால் ஈளனது கண்ணுக்குப் புலப்படவெண்ணி. இகல் என்பதைப் பண்புப்பெயராகக் கொள்ளலே அன்றி இகல்கின்ற என நிகழ்கால வினைத்தொகைநிலைத்தொடராக வினைச்சொல்லாகவுங் கொள்ளலாம். கண்ணியது இறந்தகால வினையாலணையும்பெயர். தேமொழி-பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. வந்து-படர்க்கையில் தன்மைவந்தவழுவமைதி, (நன்-பொது-சூ-௩௦) "தால்வரல் கொடைசெலல்சாரும்படர்க்கை,எழுவாயிரண்டுமெஞ்சியவேற்கும்."

ஒற்றைத் துகிலு முயிரு மிரண்டாக
முற்றுந்தன் னன்னை முதலோடும்—பற்றி
அரிந்தா னரிந்திட் டவணிலைமை நெஞ்சில்
தெரிந்தா னிருந்தான் றிகைத்து.

(இ - ள்.) ஒற்றைத்துகிலும் - ஒன்றாகிய ஆடையும், (ஒற்றை) உயிரும் - ஒன்றாகிய உயிரும், இரண்டு ஆக-இரண்டாகும்படி, முற்றும் - (நாளுக்குநாள்) முதிர்கின்ற, தன் அன்னை - (தான் அவளிடத்து வைத்த) தனது அன்பை, முதலோடும் - வேரோடும், பற்றி - (வாளைப்) பிடித்து, அரிந்தான்-அரிந்தனன்; அரிந்திட்டு - அறிந்து, அவள் நிலைமை - அவளது (தனித்திருக்கும்) நிலைமையை, நெஞ்சில் - தன் மனத்தில், தெரிந்தான்-தெரிந்து, திகைத்து இருந்தான்-(ஒன்றுந் தோன்றாமல்) பிரமித்து உட்கார்ந்தான், எ - று.

(வி - ரை.) ஒற்றை என்பதை உயிரென்பதற்குங் கூட்டுக. "காவிபோல் கண்ணிக்குங் கண்ணியர்தோட் காளைக்கும், ஆவிபோலாடையு மொன்றானதே" என்பதற்கிணைய 'ஒற்றைத் துகிலும் ஒற்றை யுயிரும்' என்றும், பிரிந்துபோகக் கருதி அத்துகிலை அரிந்தா

ஆதலால் 'துகிலும் உயிரும் இரண்டாக' என்றும், துகிலும் உயிரும் தனித்தனி ஒன்றானதற்குக் காரணம் அன்பே ஆகலால் அவ்வன்பு கெட்டவழி அவ்விரண்டும் ஒன்றாகுந்தன்மை கெடுதலின் 'அன்பை வேரோ டரிந்தான்' என்றுங் கூறினார். தெரிந்தான்-வினைமுற்று வினையெச்சமானது. ஒற்றை-ஒன்றென்னும் மென்றொடர்க் குற்றியலுகரம் வருமொழி நோக்கியன்றித் தன்னியல்பிலேயே ஐகாரச்சாரியை யேற்று வன்றொடராயது. (௧0௪)

போயொருகான் மீளும் புகுந்தொருகான் மீண்டேகும்
ஆயர் கொணர்ந்த வடுபாலின்—தோயல்
கடைவார்தங் கைபோலு மாயிற்றே காலன்
வடிவாய வேலா ன்மனம்.

(இ-ள்.) காலன்-(பகைவர்களுக்குக்) காலனுடைய, வடிவு ஆய-உருவுபோலாகிய, வேலான் மனம் - வேலைத்தாங்கிய நளராசனது மனம், ஒருகால் - ஒருமுறை, போய் (அவளிடம்) சென்று, மீளும்-(தன்பால்) வரும்; ஒருகால் - ஒருமுறை, புகுந்து - (தன்பால்) வந்து, மீண்டு - (அந்நிலையில்) மாறி, ஏகும் - (அவளிடம்) செல்லும்; (ஒரு நிலையில் நில்லாமையால்) ஆயர் - ஆயர்கள், கொணர்ந்த - (கறந்து) கொண்டுவந்த, அடு பாலின் - காய்ச்சிய பாலினது, தோயல் - தயிரை, கடைவார்தம் - கடைகிற பெண்களது, கைபோலும் - கைபோல, ஆயிற்று - ஆனது, எ - று.

(வி-ரை.) போதல், ஏகுதல் - பிரிதற்கிசையாமை. மீளுதல்-பிரிதற்கிசைதல். கொணர்ந்த-இறந்தகாலப் பெயரெச்சம்; கொணு-பகுதி, த் - சந்தி, த்-இறந்தகால இடைநிலை, அ-பெயரெச்ச விகுதி, பகுதியீற்று ஆ அவ்வானது குறுக்கல் விகாரம், ர் - விரித்தல் விகாரம், சந்தித்தகரம் நகரமானது மெலித்தல் விகாரம். அடுபால் - இறந்தகால வினைத்தொகைநிலைத்தொடர். பாலின் தோயல் - திரிபினுக்சத் தற்

கிழமைப்பொருட்டாகிய ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். தோயல் - தொழிலாகுபெயர். போலு மென்பதில் உம் சாரியை. ஏ- ஈற்றசை. வேலான் மனம் - உறுப்புத் தற்கிழமைப்பொருளதாகிய ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். கை-தொழிலுவமம். ()

சிந்துரத்தாற் றெய்வ முனிவர் தெரிந்துரைத்த
மந்திரத்தாற் றம்பித்த மாநீர்போல்—முந்த
ஒலித்ததேர்த் தானை யுயர்வேந்த னெஞ்சம்
வலித்ததே தீக்கலியால் வந்து.

(இ-ள்.) சிந்துரத்தால் - ஐராவதமென்னும் யானையினால், தெய்வமுனிவர் - தெய்வத்தன்மையுடைய நாரதமுனிவர், தெரிந்து உரைத்த - ஆராய்ந்து சொல்லிய, மந்திரத்தால் - மந்திரத்தினால், தம்பித்த - நிலைபெயராமல் நின்ற, மா நீர்போல - (கங்கையினது) வெள்ளம் போல, முந்த - (பகை அரசர்களுடைய தேர்களில்) முதன்மைபெற, ஒலித்த - ஆரவாரித்த, தேர்த்தானை - தேர்ச்சேனை, உயர் - மிக்க, வேந்தன் - அரசனது, நெஞ்சம் - மனம், தீக்கலியால் - தீமைக்குண முடைய கலிபுருடனால், வந்து - (அவளிடத்தினின்று தன்னிடம்) வந்து, வலித்தது - வன்மைத்தன்மை யடைந்தது, எ - று.

(வி-ரை.) நாரதமுனிவர் ஐராவதத்தால் தெரிந்து சொல்லிய மந்திரத்தால் கங்கை வெள்ளம் தம்பித்த தென்பது - ஒருகாலத்தில் நாரதமுனிவர் முனிவர் கூட்டத்தோடு ஸ்ரீ ஹரிநாம சங்கீர்த்தனஞ் செய்துகொண்டு நிலாவில் கங்கைக்கரையண்டைவந்து ஆநந்த பரவசராயிருக்கையில் தனக்கு அவர் வணக்கஞ்செய்திலரென்று மனம் பொறாமல் அவரும் அம்முனிக்கூட்டமும் அமிழும்படி அடங்காப் பெருவெள்ளமாய் அக்கங்கை பெருகிவருதலை அம்முனிவர்கள் அறியாமையால் ஐராவதம் வந்து நீர் குடிக்கும் பாவனையாகத் தன்கையால் நீரை வாரி அவர்கள் மேல் இறைத்தது. இறைக்கவே அம்முனி

வர் அப்பெருக்கை யுணர்ந்து மந்திரமொன்றைச் செபித்தமையால் கங்கை பெருக்கடங்கி அசைய வலியில்லாமல் தம்பித்து அம்முனி வரை வேண்டி அவரது அருள்பெற்றுப் பழைய நிலைமையில் நின் றனளென்பது. இது ஜைமினி பாரதத்தி லுண்டெனத் தமிழிலக் கண விலக்கியங்களுக்கு இலக்கானவரும், வடநூற் கரைகண்டுணர்ந் தவரும், ஸ்கூல் தமிழ்த்தலைமைப்புலவரும் ஆகிய ஈ. ஸ்ரீநிவாச ராகவாசாரியரவர்கள் கூறினர். முனிவர்-உயர்வினால் வந்த பால்வழு வமைதி. நாரதர் - அஞ்ஞானத்தைச் சேதிப்பவர், நல்லது பகவன் சம்பந்தமான ஞானத்தையுடையவர். முனிவர் இறைவனை மனனஞ் செய்பவர். சிந்தூரத்தாட் டெய்வமுனிவரென்று பாடமாயின், சிந் தூரம் - சிவப்பாகிய, தாள்-பாதங்களையுடைய, தெய்வமுனிவர்-தெய் வத்தன்மையையுடைய முனிவர்கள், தெரிந்து-(இன்னபயனைத் தரு வது இன்னதென்று) ஆராய்ந்து, உரைத்த - சொல்லிய, மந்திரத் தால் - மந்திரத்தினால், தம்பித்த மா நீர்போல் - அசைவற்று நின்ற பெருமையாகிய நீரைப்போல என்று பொருளுரைக்க. முன்னே முனிவர்கள் சொல்லிய மந்திரங்களுள் நீரைக்கட்டுதற்குரிய மந்திர த்தை ஒருவன் செபித்தால் நீர் கட்டப்படுவதுபோல என்பது கரு த்து. தாம் வேண்டியவற்றை வேண்டியபடி அடையும்படி வணங்கு வோருடைய முடிபடுந்தோறுஞ் சிவப்பேறுதலால் 'சிந்தூரத்தாள்' என்றார். துப்பார்க்குத் துப்பாக்கித் தானும் துப்பாய் நிற்கும் பெரு மையுடைய தாதலால் 'மாநீர்' என்றார். நெஞ்சம் வலித்ததென்றது பிரியத்துணிந்த தென்றபடி. ஏ ஈற்றசை. மூன்றனுருபு மூன்றும் ஏதுப்பொருள. (௧0௬)

தீக்கா னகத்துறையுந் தெய்வங்கா ளீமன்றன்
கோக்கா தலிபைக் குறிக்கொண்மின்—நீக்காத
காதலன்பு மிக்காளைக் காரிருளிற் கைவிட்டின்
றேதிலன்போற் போகின்றேன் யான்.

(இ-ள்.) நீக்காத - (எவ்வகையாலும்) நீக்கப்படாத, காதல் அன்பும் - ஆசையும் அன்பும், மிக்காளை - (என்னிடத்து) மிகுந்தாளை, கார் இருளில் - மிக்க இருளிலே, ஏதிலன்போல - யாதொரு சம்பந்தமுமில்லான்போல, யான் - (நாயகனாகிய) நான், கைவிட்டு - பற்றற விட்டு, இன்று - இப்போது, போகின்றேன் - இதோ போகாநின்றேன்; (ஆதலால்) தீ கானகத்து-கொடுமையாகிய காட்டினிடத்தில், உறையும் - வசிக்கும், தெய்வங்காள் - தேவதைகளே, வீமன்றன் - (என்போல மனையாளைக் கைவிடாத) வீமராசனுடைய, கோக்காதலியை - சிறந்த புத்திரியை, குறிக்கொண்மின் - (யாதொரு தீங்கும் வாராமல்) குறித்துக்கொண்டு காவுங்கோள், எ-று.

(வி-ரை.) காதலன்பு மிக்காளை மிக்க இருளில் கைவிட்டு அயலான்போலப் போகின்றமையால் என்னைக்குறித்து இவளைக் காக்க உங்களுக்குக் கடமை இன்றாயினும், இவ்வாறு மனையாளைக் கைவிடாதவன் புத்திரி என்பதைக் கொண்டு காத்தல் கடனென்பான் 'வீமன் கோக்காதலி' என்றான். (௪௦௭)

ஏந்து மிளமுலையா ளின்னுயிருந் தன்னருளும்
பூந்துகிலும் வேறாகப் போயினான்—தீந்தேன்
தொடைவிரவு நாண்மாலை சூட்டினா டன்னை
இடையிருளிற் கானகத்தே யிட்டு.

(இ-ள்.) தீ தேன் - மதுரமாகிய தேனினது, தொடை-தாரையையுடைய, விரவு - (மலரும் பச்சிலையும்) கலந்த, நாள் மாலை-புதிய மாலையை, சூட்டினாள் தன்னை-சூட்டிய நாயகியை, இடை இருளில்-நடுராத்திரியில், கானகத்து - காட்டில், இட்டு - (தனியாக) வைத்து, ஏந்தும்-சுமக்கின்ற, இள முலையாள்-இளமையாகிய ஸ்தனபாரத்தையுடைய அவளது, இன் உயிரும் - இனிமையாகிய உயிரும், தன் அருளும் - தன்னுடைய அருளும், பூ துகிலும் - பூந்தொழில் செய்

யப்பெற்ற ஆடையும், வேறு ஆக - வேருகும்படி, போயினன்-சென்ருன், எ-று.

(வி-ரை.) ஏந்து மென்றமையால் மூலே என்பதற்கு மூலேச் சுமை எனப் பொருளுரைக்கப்பட்டது. உயிரின் மிக்க இனிமையுடையது ஒருவருக்கு வேறின்மையின் உயிரை 'இன்னுயிர்' என்ருர். (கoஅ)

தாருவெனப் பார்மேற் றருசந் திரன்சுவர்க்கி
மேருவரைத் தோளான் விரவார்போல்—கூரிருளில்
செங்கா னகஞ்சிதையத் தேவியைவிட் டேகினன்
வெங்கா னகந்தனிலே வேந்து.

(இ-ள்.) வேந்து - நளராசன், பார்மேல் - பூமியில், தாரு என - (கற்பகமாகிய) மரம்போல, தரு - (எற்றவற்றைத்) தருகின்ற, சந்திரன் சுவர்க்கி-சந்திரன் சுவர்க்கியென்னும் பெயரையுடைய, மேருவரைத் தோளான் - மேருமலையை ஒத்த தோள்களையுடையானது, விரவார் போல-பகைவரைப்போல, வெம் கானகம்தனில்-வெம்மையாகிய காட்டிலே, கூர் இருளில் - மிகுந்த இருளில், தேவியை விட்டு - மனையாளை (தனியாக) விட்டு, செம் கால் - சிவந்த பாதங்களும், நகம் - (விரல்களின்) நகங்களும், சிதைய - (தம் உரு) அழியும்படி, ஏகினன் - நடந்து சென்ருன், எ-று.

(வி-ரை.) சந்திரன் சுவர்க்கியின் விரவார் அவனை எதிர்த்துப் பொருது புறங்கொடுத்துத் தம்மனைவி முதலியோரையும் நாட்டையும் துறந்து, தம்மின்னுயிரைக் காத்தலே பெரிதாக நினைத்துக் காட்டிற் புகுவாராதலால் அவர் உவமையாயினர். இது தொழிலுவமை. தேவர்களுக்குமுன் மாலே சூட்டினவளும், காதலன்பு மிக்காளுமாகிய மனையாளை விட்டுப்பிரியுங் கொடுமையைக் கருதி அவரை இவனுக்கு உவமை கூறினர். தாரு என்பது தரு என்ற குறிப்பால்

விண்ணுலகத் தருவை யுணர்த்தியது; இவ்வுவமையும் அது. வனை மெய்யும், பயனும் பற்றிவந்த வுவமை. வேந்து-சொல்லா லஃறிணை யாயினும், பொருளா லுயர்திணையாதலால் 'ஏகினன்' என்றார்; இது பண்பாகுபெயர். காலென்னும் எண்ணலளவையாகுபெயர் தன்னா லுணர்த்தப்படும் பொருளுக்கு உறுப்பாகிய அடியை இங்கே உணர்த்தலால் முதலாகுபெயர். தரு என்பது இடவழுவமைதி. சந்திரன் சுவர்க்கி இந்நூலாசிரியர்க்கு உதவிசெய்தவன். (௩0௧)

நீல மளவே நெகிழ நிரைமுத்தின்
கோல மலரின் கொடியிடையாள்—வேல்வேந்தே
எங்குற்றா யென்றா வினவளைக்கை நீட்டினாள்
அங்குத்தான் காணா தயர்ந்து.

(இ-ள்.) அளவே - (நளன்) ஏகினவளவிலேயே, நீலம் - கண்களாகிய நீலோற்பலமுகை, நெகிழ - மலர (விழிக்க), நிரை - முறையாகக்கோத்த, முத்தின் - முத்துமாலைபோன்ற, கோலம் - அழகுள்ள, மலரின் - மலர்களையுடைய, கொடி இடையாள்-கொடிபோலு மிடையையுடைய தமயந்தி, அங்கு - அவ்விடத்தில், தான் காணாது - தான் (நாயகனைக்) காணாமல், அயர்ந்து-சோர்ந்து, வேல் வேந்தே - (வேலைத்தாங்கிய) அரசனே, எங்கு - (என்னைவிட்டு) எவ்விடத்தில், உற்றாய் - சேர்ந்தாய், என்றா-என்றுசொல்லி, இனம் - ஓரினமாகிய, வளை - பொன்வளை அணிந்த, கை - கைகளை, நீட்டினாள் - நீட்டித் தடவினாள். எ-று.

(வி-ரை.) பின்னே நெகிழ என்றமையாலும், சித்திரிக்கின்ற கண்ணை நீலமென உருவகப்படுத்திக் கூறினமையாலும் அந்நீலமென்பதற்கு அதன்முகையெனப் பொருள் சொல்லப்பட்டது. (௩௩0)

வெய்ய தரையென்று மெல்லமளி யைத்தடவிக்
கையரிக்கொண் டெவ்விடத்துங் காணாமல்—ஐயகோ

என்னப்போய் வீழ்ந்தா ளினமேதி மென்கரும்பைத்
தின்னப்போ நாடன் றிரு.

(இ-ள்.) மேதி இனம் - எருமைக்கூட்டம், மெல் கரும்பை - மென்மையாகிய கரும்புகளை, தின்ன - தின்னுதற்கு, போம்-(விளைநிலத்தில்) செல்லுகின்ற, நாடன் - நிடதநாட்டையுடைய நளராசனது, திரு - செல்வமாகிய தமயந்தி, வெய்ய தரை என்னும் - (உடலுக்கு) இனிமையாயிராத தரையாகிய, மெல் அமளியை - மெல்லிய படுக்கையை, தடவிக் கைபரிக்கொண்டு - தடவித்தேடி, எவ்விடத்தும் - (அம்மண்டபத்தின்) இடமெங்கும், காணுமல் - காணப்பெறுமல், ஐயகோ என்ன போய் - (தன்வாய்) ஐயகோ என்று சொல்லப் போய், வீழ்ந்தாள் - விழுந்தாள், எ-று.

(வி-ரை) மெல்லமளி என்பதில் மென்மை சாதிபற்றிய அடை. மேற்பாட்டில் வேல்வேந்தென்பதும் இது. அறிவில்லாரை நோக்கி நீர்பெரிதும் அறிவீர் என்றற்போல வெய்யதரையை மெல்லமளியென்று சொன்னலுமாம். (கசக)

அழல்வெஞ் சிலைவேட னம்புருவ வாற்ற
துழலுங் களிமயில்போ லோடிக்—குழல்வண்
டெழுந்தோட வீழ்ந்தா ளிருகுழைமேற் கண்ணீர்க்
கொழுந்தோட வீமன் கொடி.

(இ-ள்.) வீமன் கொடி - வீமராசன் பெற்ற பூங்கொடியானவள், வெம் சிலை-(விலங்குமுதலிய உயிர்க்குத்) தீமையைச்செய்கின்ற வில்லைப்பிடித்த, வேடன் - வேடனது, அழல்-தீயையொத்த, அம்பு உருவ - அம்பானது தைத்துருவ, ஆற்றது - ஆற்றுமல், உழலும் - இங்குமங்குமாய்ப் பறந்து விழுகின்ற, களி மயில்போல ஓடி-களித்த மயில்போல ஓடி, குழல் வண்டு - கூந்தலில் மொய்த்த வண்டுகள்,

எழுந்து - (அதைவிட்டு) எழுந்து, ஓட - ஓடவும், இரு குழைமேல் - இரண்டு காதுகளின்மேலும், கண் நீர்க்கொழுந்து-கண்ணீர்த்தாரை, ஓட - ஓடவும், வீழ்ந்தாள் - விழுந்தாள், எ-று.

(வி-ரை.) தீ ஒருவரைச் சுட்டு வருத்தம் உண்டாக்குதல்போல அம்பு ஒருயிரின் மேற்பட்டுத் துன்பஞ் செய்தலால் அழல் பய னுவமை களிமயிலென்றது வேடனம்புருவதற்குமுன் தன் துணை யோடுகூடிக் களித்திருந்த மயிலென்றபடி. (ககஉ)

வான்முகிலு மின்னும் வறுநிலத்து வீழ்ந்ததுபோல்
தானுங் குழலுந் தனிவீழ்ந்தாள்—ஏனம்
குளம்பால் மணிகிளைக்கும் குண்டுநீர் நாடன்
இளம்பாவை கைத்தலைமே லிட்டு.

(இ-ள்.) ஏனம் - பன்றிகள், (தம்முடைக்கால் கிழங்கு கிண்டிய மண்ணில்) குளம்பால் - குளம்பினால், மணி - இரத்தினங்களை, கிளைக்கும் - சீக்கின்ற, குண்டு நீர் - ஆழமாகிய நீருள்ள, நாடன் - விதர்ப்பநாட்டரசனுடைய, இளம்பாவை - இளமையாகிய பெண், கை தலைமேல் இட்டு - கைகளைத் தலையில் வைத்துக்கொண்டு, வான்- ஆகாயத்தின்கணுள்ள, முகிலும் - கார்மேகமும், மின்னும் - மின்ன லும், வறு நிலத்து - வெற்றுத்தரையில், வீழ்ந்ததுபோல - வீழ்ந்தது போல, தானும் குழலும் - தானும் கூந்தலும், தனி வீழ்ந்தாள் - துணை ஒருவருமில்லாமல் (தரையில்) விழுந்தாள், எ-று.

(வி-ரை.) முகிலுக்குக் குழலும், மின்னுக்குத்தானும் உபமேய மாகலால் வான்முகிலு மின்னுமென்கிற முறைக்கிசையக் குழலுந் தானுமென நில்லாமல் தானுங்குழலுமென நிற்கின்ற பெயர்ப் பய னிலைகளைக் குழலுந் தானுமெனமாற்றிப் பொருள்கொள்ள வேண்டுத லால் இது பெயரெதிர் நிரனிறைப்பொருள்கோள்; [நன்-பொது-கூ கூ- ஆம்-சூ.] "பெயரும் வினையுமாஞ் சொல்லையும் பொருளையும், வேறு

கிரணிறீஇ முறையினு மெதிரினும்,நேரும் பொருள்கோ ணிரனிறை நெறியே" என்பது. சாணுங்குழலும் வீழ்ந்தாள் என்பது[நன்-பொது சூ உஎ-இல்] பன்மையொரு முடிபின வென்றுமல் ஒருமுடிபின எனக் கூறினதினால் சிறப்புப்பற்றிவந்த திணைவழுவமைதி. கிளைத்தல் இங்கே சீத்தல்; "குப்பைகிளைப்போவா" என்னும் நாலடிச் செய்யுளாலுமுணர்க. பன்றிகள் கிண்டியவிடத்து மணிகளிருந்தன என்றது அந்நாட்டின் சிறப்புக் கூறியபடி. 'வள்ளி கொள்பவர் கொள்வன மாமணி" எனக் கம்பநாடர் கூறலுங் காண்க. (ககரு)

தையல் துயர்க்குத் தரியாது தஞ்சிறகாம்
கையால் வயிறலைத்துக் காரிருள்வாய்—வெய்யோனை
வாவுபரித் தேரேறி வாவென் றழைப்பனபோல்
கூவினவே கோழிக் குலம்.

(இ-ள்.) கோழிக்குலம்-கோழிக்கூட்டங்கள், தையல் துயர்க்கு-தமயந்தியினது துன்பத்தை, தரியாது - ஆற்றாமல், தம் சிறகு ஆம் - தம்முடைய சிறகுகளாகிய, கையால் - கைகளால், வயிறு அலைத்து - வயிற்றில் அடித்துக்கொண்டு, வெய்யோனை - சூரியனை, வாவு-தாவி ஓடுகின்ற, பரித்தேர் - குதிரைகட்டிய தேரில், ஏறி வா என்று-ஏறி வாராயென்று, அழைப்பன போல - அழைக்கின்றனபோல, கார் இருள்வாய்-கரிய இருளில், கூவின - (பலமுறை) கூவின, எ - று.

(வி-ரை.) குவ்வுருபு செயப்படுபொருளில் வந்தது. தையறுயர்-பண்புத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறும் வேற்றுமைத் தொகை நிலைத்தொடர், [நன்-மெய்-சூ-ருச-இல்]பிற என்கிற மிகையால் நிலைமொழி யீற்றுலகரம் வருமொழிமுதல் தகரந்திரியு மிடத்துக் கெட்டது.வருமொழித்தகரத்திரிபுக்கு[மெய்-சூ-ருச]தையல்என்பதுஉயர்திணைப்பெயராதலால் [உயி-சூ-கூ-இல்] "சிலவிகாரமா முயர்திணை" என்னும் விதியில் அடங்காதோ எனில், இது மயக்கவிதி இல்லாமையால்வந்த விகாரமாதலால் அடங்காது. (ககசு)

வான நெடுவீதி செல்லு மணித்தேரோன்
தான மடந்தைக்குத் தார்வேந்தன்—போனநெறி
காட்டுவான் போலிருள்போய்க் கைவாங்கக் கானூடே
நீட்டுவான் செங்கரத்தை நின்று.

(இ-ள்.) வானம் - ஆகாயமாகிய, நெடு வீதி - நீண்டவீதியில், செல்லும் - (எக்காலத்தும்) செல்லுகின்ற, மணித்தேரோன் தான் - மணிகள்கட்டிய தேரையுடைய சூரியன், நின்று - (உதயகிரியில்) நின்று, அம்மடந்தைக்கு - அத்தமயந்திக்கு, தார் வேந்தன் -(வெற்றி) மாலையணிந்த நளராசன், போன நெறி - போனவழியை, காட்டு வான்போல் - காட்டுகின்றானைப்போல, இருள்-(அவ்வழியை மறைத்துவைத்த) இருளானது, போய்க் கைவாங்க - பற்றுவிட்டுப் போகும்படி, கானூடு - காட்டினடுவே, செங் கரத்தை - சிவந்த கிரணமாகிய கையை, நீட்டுவான் - நீட்டுவானாயினான், எ-று.

(வி-ரை.) காட்டுவானென்பதில் வகரம் நிகழ்காலங் காட்டியது. பகரவகரங்கள் நிகழ்காலங்காட்டல் சிறுபான்மையென அறிக. உதய கிரணம் நீளத்தோன்றுதலால் 'நீட்டுவான்' என்றார். அம்மடந்தை என்பதில் மகரந் தொகுத்தலாய் அமடந்தை என நின்றது. கரமென்னும் வடமொழி கிரணத்துக்கும் கைக்கும் பெயராதலால் செங்கரத்தை நீட்டுவா னென்றது சிலேடை யுருவகம். (கக௫)

செய்தபிழை யேதென்னுந் தேர்வேந்தே யென்றழைக்கும்
எய்துதுய ரக்கரைகா ணேனென்னும்—பையவே
என்னென்னு மென்னென்னு மிக்கானின் விட்டேகு
மன்னென்னு வாடு மயர்ந்து.

(இ-ரை.) செய்த பிழை-(நான்)செய்தகுற்றம், ஏது என்னும்- எத்தன்மையதென்பாள்; தேர் வேந்தே - தேர்விடுதலில் வல்ல அர

சனே, என்று அழைக்கும் - என்று அழைப்பாள்; எய்து - (என்னிடம்) வருகிற, துயர் அக்கரை - துன்பக்கடலினது அக்கரையை, நாணேன் என்னும் - கண்டிலேனென்பாள்; பைய - மெள்ள, என் என்னாது - (துன்பப்படுதல்) யாதுகாரணமென்று கேளாமை, என் என்னும் - என்னவென்பாள்; இக்கானின் - இக்கொடிய காட்டில், விட்டு - (என்னைத்தனியாக) விட்டு, ஏகு - சென்ற, மன் என்று - அரசனே என்று சொல்லி, மயர்ந்து வாடும்-மயங்கிவாடுவாள், எ-று.

(வி - ரை.) ஏகு - வினைவிடைச்சொலடிலாகப்பிறந்த குறிப்புவினைமுற்று. என்னும் இடைச்சொலடியாகப் பிறந்த செய்யுமென்முற்று பொதுமை நீங்கி உயர்திணைப் பெண்பாலுக்காயிற்று. (சகசு)

அல்லியந்தார் மார்ப னடித்தா மரையவடன்
நல்லுயிரு மாசையும்போ லூறுதலும்—மல்லுறுதோள்
வேந்தனை யென்று விழுந்தாள் விழிவேலை
சாய்ந்தநீர் வெள்ளத்தே தான்.

(இ-ள்.) அல்லி - அகவிதழாற்றொடுத்த, அம் - அழகிய, தார் - மாலையணிந்த, மார்பன் - மார்பையுடைய நளராசனது, அடித்தாமரை - பாதமாகிய தாமரைமலரினது சுவடு, அவள் . தன்-அத்சமயந்தினது, நல் உயிரும் - சிறந்த உயிரும், ஆசையும் போல - ஆசையும் உருக்கொண்டு தோன்றுதல்போல, ஊறுதலும்-தோன்றுதலும், (அதைக்கண்டு) மல்-மல்லுப்போரில், உறு-மிக்க,தோள் வேந்தனே-தோள்களையுடைய அரசனே, என்று-என்று சொல்லி, விழி வேலை-கண்ணாகிய கடலினின்றும். சாய்ந்த - பெருகின, நீர் வெள்ளத்து - நீரினது பெருக்கில், வீழ்ந்தாள் - விழுந்தாள், எ - று.

(வி-ரை.) புல்லி - புறவிதழ். அல்லி அந்தார் - அழகிய அல்லி மலர்மாலை எனினும் பொருந்தும். அல்லி, தாமரை-முதலாகுபெயர். அடியினாலுண்டாகிய சுவட்டை அடி என்றது காரணவாகுபெயர்.

நன்பகல், நல்லம்மான் என்பதிற்போல நல்லுயிர் என்பதில் நல் சிறப்பை உணர்த்தியது. வேலை-சினையாகுபெயர் தான்-கட்டுரைச்சுவை பட நின்ற அசை. ஏ-ஈற்றசை. (கக௭)

வெறித்த விளமான்காண் மென்மயில்கா ளிந்த
நெறிக்க ணெடிதூழி வாழ்வீர்—பிறித்தெம்மைப்
போனாரைக் காட்டுதிரோ வென்னாப் புலம்பினாள்
வானாடர் பெற்றிலா மான்.

(இ-ள்.) வான் நாடர் - சுவர்க்கலோகத்து இந்திரன் முதலிய தேவர்களும், பெற்றிலா மான் - பெறாத மானை ஒத்தவள், வெறித்த- மயங்கின, இள மான்காள் - இளமையாகிய மான்களே, மென் மயில் காள் - மென்மையாகிய மயில்களே, இந்த நெறிக்கண்-இவ்வழியில், எம்மை பிறித்து - எம்மை வேறுபடுத்தி, போனாரை - போயினாரை, காட்டுதிர் - காட்டுங்கோள், ஊழி - ஊழிகாலமட்டும், நெடிது வாழ் வீர் - மிகுதியும் வாழ்ந்திருப்பீர்கள், என்னா-என்று சொல்லி, புலம்பி னாள் - அழுதாள், எ - று.

(வி - ரை.) நடையினது மென்மையை மயிலின்மேலேற்றி மென்மயிலென்றது மரபுவழுவமைதி. மானும், மயிலும் இவளது பார்வையையும், சாயலையுங்கண்டு மயங்கலும் மெல்லநடத்தலு முடைமையைக்கண்டு 'வெறித்தமான்காள்'என்றும், 'மென்மயில்காள்'என்றும் விளித்தாள். தன்மக்களைத் தன்னொடுபடுத்தி 'எம்மை'என்றாள். போனார் என்பதில் காலங்காட்டும் யகரம் தொகுத்தல்; சாரியையின் முதலெழுத்தாகிய இகரம் முதற்குறைவிகாரம். காலங்காட்டும் இடைநிலை தொகுத்தலுண்டோ எனின் "அந்தமில் சிலதிய ராற்ற குப்பைகள்" என்பதில் இன் இடைநிலை தொகுத்தது காண்க. காட்டுதிர்-ஏவற்பன்மை; காட்டு-பகுதி, த்-விரித்தல் விகாரம், இர்-ஏவற்பன்மை எதிர்கால விகுதி. மான் - உவமையாகுபெயர். வானாடருமென்ற

உயர்வு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. இந்த-இ என்னுஞ் சுட்டின் மருஉ. பிரித்தென்பது இறந்தகால வினையெச்சம்; பிற என்னும் இடைச்சொலடியாகப் பிறந்த பிறி - பகுதி, த்-சந்தி, த் - இறந்தகால இடைநிலை, உ-வினையெச்ச விகுதி, பகுதியீற்று அகரக்கேடு கடைக்குறை விகாரம், இ-சாரியை; இது பிறவினை; பிறிந்து எனத் தன்வினையில் வரும். ஓ இரக்கப்பொருட்டு. (கசஉ)

> வேட்ட கரியை விழுங்கிப் பெரும்பசியால்
> மோட்டு வயிற்றரவு முன்றோன்ற—மீட்டதனை
> ஓரா தருகணைந்தா ளுண்டேனறற கூந்தற்
> போரார் விழியாள் புலர்ந்து.

(இ-ள்) வேட்ட - விரும்பிய, கரியை-பெரிய வுருவினதாகிய யானையை, பெரு பசியால் - மிக்க பசியினால், விழுங்கி - உண்டு, மோட்டு வயிற்றரவு - மோடாகிய வயிற்றையுடைய பாம்பு, முன் தோன்ற - தனக்கெதிரில் வர, உண் - தேனை உண்ணுகின்ற, தேன்-வண்டுகள் மொய்த்த, அறல் - கருமணலை ஒத்த, கூந்தல் - கூந்தலையும், போர் - (காதணியோடு செய்யும்) போரை, ஆர் - பொருந்திய, விழியாள் - கண்களையு முடையாள், புலர்ந்து - வாடி, அதனை - அப்பாம்பின் தன்மையை, மீட்டு ஓராது - அறியாமல், அருகு அணைந்தாள் - சமீபத்தில் சேர்ந்தாள், எ-று.

(வி-ரை) முன் தோன்றிய தன்மையை ஓரவேண்டியிருக்க, அதற்கெதிர்மறையாகிய ஓராதென்னும் வினையைச் சார்ந்துவந்ததாதலால் மீட்டு வினைமாற்றின்கண் வந்த இடைச்சொல். "இரதமுடைய" என்னுந் திருச்சிற்றம்பலக்கோவைச் செய்யுளில் 'மீட்டதன்றேல்" என்பதில் மீட்டு வினைமாற்றின்கண் வந்த இடைச்சொலெனப் பேராசிரியர் உரைத்தலுங் காண்க. வேட்டு - இறந்தகால வினையெச்சம்; வேள்-பகுதி, ட் - இறந்தகால இடைநிலை, உ - வினை

யெச்சவிகுதி, ணகரம் டகரமானது சந்தி. இப்பகுதியில் நின்று வேட்டு, வேட்க, வேட்ப என இறந்தகால நிகழ்கால வினையெச்சமும்; வேட்கின், வேட்டால், வேட்டக்கால் என எதிர்கால வினையெச்சமும்; வேட்கின்ற, வேட்கும் என இருகாலப்பெயரெச்சமும் பிறத்தல் காண்க. (கககூ)

அங்கண் விசும்பி னவிர்மதிமேற் சென்றடையும்
வெங்க ணரவுபோன் மெல்லியலைக்—கொங்கைக்கு
மேலெல்லாந் தோன்ற விழுங்கியதே வெங்கானின்
பாலெல்லாந் தீயுமிழும் பாம்பு.

(இ-ள்.) அம் கண் - அழகிய இடமகன்ற, விசும்பின் - ஆகாயத்தில், அவிர் - விளங்குகின்ற, மதி மேல் - பூரணசந்திரன்மேல், சென்று - போய், அடையும் - (அச்சந்திரனை உண்ணப்) பெறுகின்ற, வெம் கண் - இரக்கமில்லாமையுடைய, அரவு போல - இராகு என்னும் பாம்புபோல, வெம் கானின் - வெம்மையாகிய காட்டினது, பால் எல்லாம் - இடமெல்லாம், தீ உமிழும் பாம்பு - (விடமாகிய) தீயைக் கக்குகின்ற பாம்பு, கொங்கைக்கு - முலைக்கு, மேல் எல்லாம் - மேலிடமெல்லாம், தோன்ற - காணும்படி, மெல்லியலை - மென்மையாகிய தன்மையுடையாளை, விழுங்கியது - உண்டது, எ-று.

(வி-ரை.) சென்றடையும் அரவென்றமையால் மதி முழுமதியென்பது பெற்றாம். மதி மதுவை யுடையதென்பது பொருளாதலால் பொருளடியாகப் பிறந்த பெயரென்க; மது (அமுதம்)-பகுதி, இ-ஒன்றன்படர்க்கை விகுதி, உகரக்கேடு சந்தி. மெல்லியல்-பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. ஐந்தனுருபு எல்லைப்பொருளில் வந்தது. எல்லாமென்பன ஒருமையிற் பன்மைவந்த வழுவமைதி. கானின்பால் ஒற்றுமைப்பொருளாகிய ஆறாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். மே. - [illegible]. (உ)

வாளாவின் வாய்ப்பட்டு மாயாமுன் மன்னவநின்
தாளடைந்து வாழுந் தமியேனைத்—தோளால்
விலக்காயோ வென்றழுதாள் வெவ்வரவின் வாய்க்கிங்
கிலக்காகி நின்றா ளெடுத்து

(இ-ள்.) இங்கு - இக்காட்டில், வெம் அரவின் வாய்க்கு-வெவ்விய பாம்பினது வாய்க்கு, இலக்கு ஆகி நின்றாள் - குறியாய் நின்ற தமயந்தி, மன்னவ - அரசனே, வாள் அரவின் - ஒளியையுடைய அரவினது, வாய்ப்பட்டு - வாயில்அகப்பட்டு, மாயா முன் - இறவாத முன், நின் தாள் - உன்னுடைய பாதங்களை, அடைந்து - சேர்ந்து, வாழும் - வாழ்கின்ற, தமியேனை - தனியேனை, தோளால் - உன் கைகளால் விலக்காயோ - (பாம்பின் வாயினின்று) விலக்கச்செய்யாயோ, என்று எடுத்து - என்று எடுத்துச்சொல்லி, அழுதாள்-புலம்பினாள், எ-று.

(வி-ரை.) தமியேன் - பண்படியாகப் பிறந்த பெயர்ச்சொல்; தமி-(தனிமை)பகுதி,ய்-சந்தி, ஏன்-ஒருமைத்தன்மைவிகுதி. (கஉக)

வென்றிச் சினவரவின் வெவ்வா யிடைப்பட்டு
வன்றுயராற் போயாவி மாள்கின்றேன்—இன்றுன்
திருமுகநான் காண்கிலேன் றேர்வேந்தே யென்றாள்
பொருமுகவேற் கண்ணாள் புலர்ந்து.

(இ-ள்.) பொரு - போர் செய்தற்குரிய, முகம் - முனையையுடைய, வேல் - வேல்போலும், கண்ணாள் - கண்களையுடையாள், புலர்ந்து - வாடி, வென்றி - வெற்றிபெறத்தக்க, சினம் - கோபத்தையுடைய, அரவின் - பாம்பினது, வெம் வாயிடைப் பட்டு - கொடுமையான வாயில் அகப்பட்டு, வல் துயரால்-(நின்னைப் பிரிந்ததனாலுண்டாகிய) போக்கப்படாத துன்பத்தோடு, ஆவி போய் - உயிர் நீங்கி, மாள்கின்றேன் - முடிகின்றேன்; இன்று - இப்போதும், தேர் வேந்

தே - தேர்ச்சேனையையுடைய அரசனே, உன் திருமுகம் - உன் அழகிய முகத்தை, நான் காண்கிலேன் - நான் காணப்பெற்றிலேன், என்றாள் - என்று புலம்பினாள், எ-று.

(வி-ரை.) வென்றி-தொழிற்பெயர்; வெல்-பகுதி, தி-புடைபெயர்ச்சிவிகுதி, லகரமும் தகரமும் றகரமானது சந்தி, பகுதியீற்று றகரம் னகரமானது மெலித்தல் விகாரம்; அது பெறாமல் வெற்றி எனவும் வழங்கும். அரவின் சினத்துக்கு வெற்றியாவது ஓருயிரைச் சினந்து தீண்டமுயலின் அதனைத் தீண்டியேவிடல். முன்னே ஆவிபோய் என்றமையால் மாளுதல் முதலின்மேலதென்க. உயிரும் உடலுமொன்றாய் நின்றபொருள் ஒருவனொருத்தி யெனப்படுதலால் அப்பொருளுக்கு அவையிரண்டும் சினையாதல் வேண்டுமன்றே அவ்வாறாதலால் ஆவிபோய் என்னுஞ் சினைவினை மாள்கின்றேன் என்னும் முதல்வினை கொண்டது. இன்றென்பதனீற்றில் இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. காண்கிலேன் - தன்மையொருமை எதிர்மறை வினைமுற்று; காண்-பகுதி, கு - சாரியை, இல்-எதிர்மறை விகுதி, உகரக்கேடு சந்தி, அனைத்துமொருபகுதி, என்-தன்மையொருமை விகுதி. (கஉஉ)

மற்றொடித்த தோள்பிரிந்து மாயாத வல்வினையேன்
பெற்றெடுத்த மக்காள் பிரிந்தேகும்—கொற்றவனை
நீரேனுங் காண்குதிரோ வென்றழுதா ணீள்குழற்குக்
காரேனு மொவ்வாள் கலுழ்ந்து.

(இ-ள்) நீள் குழற்கு - நீண்ட கூந்தலுக்கு, கார் எனும் - கார் மேகமாயினும், ஒவ்வாள் - ஒப்பாகாளாகிய தமயந்தி, கலுழ்ந்து - அழுது, மல் - மல்லுப்போரால், தொடித்த - அணியப்பெற்ற, தோள் - (நினது) தோளை, பிரிந்து - பிரியப்பெற்றும், மாயாத - (இதுவரையும்) இறவாமல் பிழைத்திருந்த, வல் வினையேன் - நீக்கப்படாத தீவினையை

யுடைய நாள், பெற்று எடுத்த-பெற்றுச் சீராட்டின, மக்காள்-பிள்ளைகளே, பிரிந்து வரும்-(என்னைப்) பிரிந்துபோகின்ற கொற்றவனை - அரசனை, நீரேனும் - நீங்களாயினும், காண்குதிரோ - காண்கின்றீர்களா, என்று அழுதாள் - என்று சொல்லி அழுதாள், எ-று.

(வி-ரை.) பிரிவு உயிர்மாய்தற் குரியதாதலால் பிரிந்தும் என்கிற வும்மையும், காரேனுமென்கிற வும்மையும் உயர்வு சிறப்பும்மைகள். நீரேனும் என்கிற வும்மை இழிவுசிறப்பும்மை. மாயாத என்னுங் காரியப்பொருளதாகிய எதிர்மறைப் பெயரெச்சம் வல்வினை பேண் என்னும் தொழிலடியாகப் பிறந்த பெயரின் முதனிலையோடு முடிந்தது. வினை - முதனிலையில்லாத தொழிற்பெயர். மக்காள்-ஈற்றயல் அகரம் ஆகாரமான விளியடைந்த பெயர் காண்குதிர்-முன்னிலைப்பன்மை நிகழ்கால வினைமுற்று; குகரம் நிகழ்கால முணர்த்தியது. ஓ - வினா நீரேனும், காரேனும் என்பவற்றிலுள்ள ஏன் இரண்டும் எனின் என்பதன் மரூஉ. எனில் என்பது ஏல் எனவும், ஆயின் என்பது ஆன் எனவும், ஆயில் என்பது ஆல் எனவும் மரூஉவாய் வழங்கும். கருமை என்பதன் விகாரமாகிய காரென்னும் பண்புப்பெயர் அந்நிறமுள்ள மேகத்துக்காதலால் பண்பாகுபெயர் ஒவ்வாள்-இடைச்சொலடியாகப்பிறந்த எதிர்மறை வினையாலணையும் பெயர்; ஒ-பகுதி, உடன்படு மெய்யாகிய வ் சந்தி, "தனிக்குறின் முன்னொற் றுயிர்வரி னிரட்டும்" என்பதனால் இரட்டிய வகரமும் சந்தி, ஆ - எதிர்மறை விகுதி, அனைத்து மொருபதத்தி, ஆள் பெண்பாற்படர்க்கை விகுதி, முதலாகாரச்சேடு முதற்குறை விகாரம். குழல் அவிழ்ந்து கிடத்தலால் 'நீள்குழல்' என்றார். (௩௨௯)

அடையுங் கடுங்கானி லாடரவின் வாய்ப்பட்
டுடையுமுயிர் நாயகனை யோகோ—விடையெனக்குத்
தந்தருள்வா யென்றுதன் றாமரைக்கை கூப்பினாள்
செந்துவர்வாய் மென்மொழியா டேர்ந்து.

(இ-ள்) செம் துவர் வாய் - சிவந்த பவளம்போன்ற வாயில், மெல் மொழியாள்-மென்மையாகிய சொல்லையுடையாள், தேர்ந்து - துணிந்து, அடையும்-புகுந்த, கடு கானில் - கடுமையாகிய காட்டில், ஆடு அரவின்-ஆடுகின்ற பாம்பினது, வாய்ப்பட்டு-வாயில் தான் அகப்பட, உயிர் உடையும் - உயிர் தளர்கின்றது; நாயகனே - தலைவனே, ஓசோ - ஐயோ, எனக்கு - (நின் அடியாளாகிய) எனக்கு, விடை தந்தருள்வாய் - செலவு கொடு, என்று - என்று சொல்லி, தன் தாமரைக்கை - தன்னுடைய தாமரைமலர்போன்ற கைகளை, கூப்பினாள்- குவித்துத் தொழுதாள், எ-று.

(வி-ரை.) கடுங்கான்: இத்தொடரில் கடு கடி என்னும் உரிச்சொல்லின் திரிபெனக்கொண்டு உரிச்சொற்றொகாநிலைத் தொடராகவும், கடுமையென்பது மை விகுதி கெடப்புணர்ந்த பண்புத்தொகைநிலைத் தொடராகவுஞ் சொல்லலாம்; உரிச்சொலாகக் கொள்ளின் பொருள் அச்சத்தைத் தருகின்ற காடு என உரைக்க. (கஉச)

உண்டோ ரழுகுரலென் றொற்றி வருகின்ற
வெண்டோடன் செம்பங்கி வில்வேடன்—கண்டான்
கழுகுவாழ் கானகத்துக் காரரவின் வாயில்
முழுகுவா டெய்வ முகம்.

(இ-ள்.) ஓர் அழு குரல் - ஒப்பற்ற அழுகின்ற ஓசை, உண்டு என்று - உண்டாயிற்றென்று, ஒற்றி - (மனமுஞ் செவிப்புலனும் அதனோடு) ஒன்றுபட்டு, வருகின்ற - (அவ்வோசைவழியே) வருகின்ற, வெள் தோடன்-வெண்மையாகிய சங்கக்குழையை யுடையவனாகிய, செம்பங்கி-சிவந்த தலைமயிருள்ள, வில் வேடன் வில்லைத்தாங்கிய வேடன், கழுகு வாழ்-கழுகுவாழ்கின்ற, கானகத்து-காட்டினிடத்து, கார் அரவின் வாயில் - பெரும் பாம்பினதுவாயில், முழுகுவாள்-முழுகுகின்றவளது, தெய்வ முகம் - தெய்வத்தன்மை பொருந்திய முகத்தை, கண்டான் - பார்த்தான், எ-று.

(வி-ரை.) மற்ற மானுடப் பெண்கள் முகத்தோடு மிக்க அழகுடையதாகிய இதற்குவேற்றுமைதோன்றத் 'தெய்வமுகம்' என்றும், அவ்வரவு இவளைச் சிறிதுசிறிதாகவிழுங்கலால் 'முழுகுவாள்' என்றுங் கூறினார். அழுங்காலத்தும் அவ்வோசைக்குக் குயிலோசை ஒப்பாகாமையால் ஓர் குரலெனக் கருதினான். குரல்-கருவியாகுபெயர். ஒற்றி என்னும் இறந்தகால வினையெச்சம் ஒன்றென்னும் பெயரடியாகப் பிறந்தது; இது ஒன்றி எனவும் வரும். வருகின்ற-இடவழுவமைதி. இவ்வினை அண்மை நிலத்துக்குரியதாதலால் வழாநிலை யெனினும் பொருந்தும். கருமை இந்தப் பெருமையை யுணர்த்தியது. முழுகுவாடெய்வம் என்பது "குறில்செறியாலள" என்னுஞ் சூத்திரத்தில் பிற என்ற மிகையால் ஈற்று ளகரங்கெட்டு வந்ததென்க. (௧௨௫)

வெய்ய வரவின் விடவாயி னுட்பட்டேன்
ஐயன்மீ ருங்கட் கபயம்யான்—உய்ய
அருளீரோ வென்று வாற்றினா ளஞ்சி
இருளீரும் பூணா ளெடுத்து.

(இ-ள்.) இருள் ஈரும் - (தன்னொளியால்) இருளைப் பிளக்கின்ற, பூணாள் - ஆபரணத்தையுடையாள், அஞ்சி - பயந்து, வெய்ய அரவின் - கொடிய பாம்பினது, விடவாயினுள் - விஷம் பொருந்திய வாயில், பட்டேன் - அகப்படேன்; ஐயன்மீர் - ஐயன்மாரே, உங்கட்கு - உமக்கு யான் அபயம் - நான் அடைக்கலமடைந்தவள்; உய்ய - (இதன் வாயினின்றும்) தப்பும்படி, அருளீரோ - கிருபைசெய்யீரோ, என்று எடுத்து - என்றெடுத்துச் சொல்லி, ஆற்றினாள் - கதறினாள், எ-று.

(வி-ரை.) ஐயன்மார் என்பது ஒருமை விகுதிமேல் பன்மை விகுதிபெற்றது; ஒருவனைப்பற்றிக் கூறினமையால் உயர்வினால் வந்த பால்வழுவமைதியா மென்க; இது விளியடைந்தமையால் ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாயிற்று. (௧௨௬)

சங்கநிதிபோற் றருசந் திரன்சுவர்க்கி
வெங்கலிவாய் நின்றுலக மீட்டாற்போல்—மங்கையைவெம்
பாம்பின்வாய் நின்று பறித்தான் பகைகடிந்த
காம்பின்வாய் வில்வேடன் கண்டு.

(இ-ள்.) சங்கநிதிபோல - சங்கநிதியைப்போல, தரு-(இரப்போர்க்கு வேண்டியவற்றைக்) கொடுக்கின்ற, சந்திரன் சுவர்க்கி - சந்திரன் சுவர்க்கி யென்பவன், வெம் கலி வாய் நின்று - வெம்மை யாகிய வறுமையினது வாயினின்று, உலகம் - உலகத்தாரை, மீட்டால்போல - (தன் கொடையால்) செல்வர்களாய்ச் செய்தாற்போல, பகை கடிந்த - பகையாகிய சிங்கமுதலியவற்றைத் தண்டித்த, காம்பின் - மூங்கிலினால், வாய் - அமைந்த, வில் வேடன் - வில்லைப்பிடித்த வேடன், கண்டு - (அந்நிலைமையைக்) கண்டு, மங்கையை - தமயந்தியை, வெம் பாம்பின்வாய் நின்று - கொடிய பாம்பினது வாயிலிருந்து, பறித்தான் - மீட்டான், எ-று.

(வி-ரை.) சங்கநிதி-நிதி இரண்டனுள் ஒன்று; மற்றொன்று-பதுமநிதி; இவ்விரண்டும் சங்கம்போலவும், தாமரைமலர்போலவும் உருவமுடையன ஆதலால் அதுபற்றி அவ்வாறு கூறப்பட்டன. தரு - இடவழுவமைதி. தன்னை உடையவனை ஈதலும் உண்ணுதலுமில்லாத சாரணைப்பற்றி மறுமை யின்பத்தையும் இம்மை யின்பத்தையும் இழக்கச்செய்தலால் 'வெங்கலி' என்றார். கலிவாயென்றது இலக்கணை நின்று இரண்டும் ஐந்தாம்வேற்றுமைச்சொல்லுருபு. செல்வம் உடையோர்சிலருள், இல்லார் பலராதலால் உலகம் இடவாகுபெய ராய் உயிர்ப்பன்மைமேல் நின்றது. மீட்டால்-இறந்தகாலவினையெச்சம்; மீள்-பகுதி, து-சாரியை, ஆல்-இறந்தகால வினையெச்சவிகுதி, ளகரதகரங்கள் டகாரமானதும், உகரக்கேடும் சந்தி, இது பிறவினை; தன்வினையில் மீண்டால் எனவரும். மங்கை என்பது பன்னிரண்டு வயதுமுதல் பதின்மூன்றுவயதுடையாளை உணர்த்தாமல் பெண்கள்

பொதுமையாய் இங்கு நின்றது. பகை-பண்பாகுபெயர்; நடை என்றாற்போலப் பகு-பகுதி, ஐ-தொழிற்பெயர் விகுதி, உகரக்கேடு சந்தி ஆயினும் அது அத்தன்மைக்கு இயற்பெயராய் நிற்றலால் பண்பாகுபெயரெனப்பட்டது. (கஉஎ)

ஆருயிரு நானு மழியாம லையாவிப்
பேரரவின் வாயிற் பிழைப்பித்தாய்—தேரில்
இதற்குண்டோ கைம்மா றெனவுரைத்தாள் வென்றி
விதர்ப்பன்றான் பெற்ற விளக்கு.

(இ-ள்.) வென்றி - வெற்றியையுடைய, விதர்ப்பன் - விதர்ப்ப தேசத்தரசனாகிய வீமன், பெற்ற விளக்கு - பெற்றவிளக்கானவள், ஐயா - ஐயனே, ஆர் உயிரும் - அருமையாகிய உயிரும், நானும் - நானும், அழியாமல் - அழிந்துபோகாமல், இப்பேர் அரவின் - இந்தப்பெரிய பாம்பினது, வாயின் - வாயினின்று, பிழைப்பித்தாய் - தப்பச்செய்தாய்; தேரில் - ஆராய்ந்தால், இதற்கு - செய்ய மற்செய்த இவ்வுபகாரத்துக்கு, கைம்மாறு - பிரதியுபகாரம், உண்டோ என - உண்டோ இல்லை என்று, உரைத்தாள் - சொல்லினாள், எ-று.

(வி-ரை) உயிரழிதலாவது உடலை விட்டு நீங்குதல். பிறப்பினது அருமையை உயிரின்மேலேற்றி 'ஆருயிர்' என்றான். ஆருயிர் பேரரவென்பவற்றின் நிலைமொழிகளாகிய அருமை பெருமை என்பன "ஈறுபோதல்" என்பதனால் மகரஐகாரங் கெட்டு, "ஆதி நீடல்" என்பதனால் முதலெழுத்து ஆரு பேரு என நீண்டு, "இனையவும்" என்பதனால் உகரங் கெட்டன. (கஉஅ)

இந்த நுதலி யெழிலினைக்கி யேதோதன்
சிந்தை கருதிச் சிலைவேடன்—பைந்தொடிநீ
போதுவா யென்னுடனே யென்றான் புலைநாருக்
கேதுவாய் நின்ற நெடுத்து.

(இ-ள்.) புலை நரகக்கு - இழிவாகிய நரகடைவதற்கு, ஏது ஆய் நின்றான் - காரணமுடையானாய் நின்றவனாகிய, சிலை வேடன் - வில்லைப்பிடித்தவேடன், இந்து நுதலி - அர்த்தசந்திரன் போன்ற நெற்றியையுடைய தமயந்தியினது, எழில் நோக்கி - அழகைப் பார்த்து, ஏதோ - எதையோ, தன் சிந்தை - தன் மனத்தில், கருதி - விரும்பி, பைந்தொடி - பசும் பொன்வளையலை யணிந்தவளே, என்னுடன் - என்னோடு, நீ போதுவாய் - நீ வாராய், என்றான் எடுத்து - என்று எடுத்துச் சொல்லினான், எ-று.

(வி-ரை.) நுதலி - சினையடியாகப் பிறந்த பெயர்; இகர விகுதி இங்குப் பெண்பாலை யுணர்த்தியது. வில்லி என ஆண்பாலையும், பாசி என ஒன்றன்பாலையும் உணர்த்தும். நுதலியெழில் - பண்புத்தற்கிழமைப்பொருட்டாகிய ஆறாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். கு - இரக்கப்பொருளது. இக்கவி வேடனது சிந்தைக் கருத்தைத் தமக்குத் தெரிந்திருந்தும் அவளது கற்பினிலைமையை நோக்கித் தாம் கூறுதற்கஞ்சிப் புணர்ச்சி என்னாமல், துணியார் போன்று 'ஏதோ' என்றார். புணர்ச்சி யென்பது எழினோக்கி என்ற குறிப்பால் விளங்கியது. பைந்தொடி - பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. பைம்பொற்றொடி என்பதைப் பைந்தொடி என்றது மரபு வழுவமைதி [நன்-பொது-சூ ௩௯]. போதுவாய் - முன்னிலையேவ லொருமை; போவென்பது பகுதி, புதுவென்பதன் மரூஉ. து - சாரியை, ஆய் விகுதியே எதிர்காலங் காட்டிநிற்றலால் வகரம் [நன் உயிர்-சூ-௧௬௪-இல்] "உக்குறள் உயிர்வரின் மெய்விட்டுக் கெடும்" என்னாமல் "ஓடும்" என்றமையால், ௧௨-சூத்திரப் பொதுவிதியால் வந்த உடம்படுமெய். புலை - பண்புப்பெயர்; புல் - பகுதி. தொலை வெள்ளை என்பனவற்றிற்போல ஐ பகுதிப்பொருள் விகுதி. நரகக்கு என்னும் நான்கனுருபு நிமித்தகாரண காரியப்பொருளது. ஏதுவெனக் குணத்தின்பெயர் "இல்லவன் மாண்டான்" என்பதுபோலக் குணியின் மேல்நின்றது. இதுவும் மரபுவழுவமைதி. ஏது வடமொழியாதலால் உகரங் கெடாமல நின்றது. (௧௨௧

வேட னழைப்ப விழிபதைத்து வெய்துயிரா
ஆடன் மயில்போ லலமரா — ஓடினாள்
தூறெலா மாகச் சுரிகுழல்வேற் கண்ணினீர்
ஆறெலா மாக வழுது.

(இ-ள்.) வேடன் அழைப்ப-வேடன் (என்னோடு வாராயென்று) அழைத்தலால், விழி பதைத்து - கண்கள் துடித்து, வெய்து உயிரா-வெம்மையுடையதாக மூச்செறிந்து, ஆடல் மயில்போல - ஆடுந் தொழிலையுடைய மயிலைப்போல, அலமரா - சுழன்று, வேல் கண்ணின் நீர் - வேல்போலுங் கண்ணினீரானது, ஆறு எலாம் ஆக - வழிகளெல்லாஞ் சிந்தும்படி, அழுது - அழுதுகொண்டு, சுரி குழல்-சுழித்து முடித்த கூந்தல், தூறு எலாம் ஆக - (அங்குள்ள) புதர்களி லெல்லாம் சிக்கிக்கொள்ளும்படி, ஓடினாள் (அவன் கையி லகப்படாமல்) ஓடினாள், எ-று.

(வி-ரை.) கண்கள் துடித்தலாவது கண்ணிமைகளிரண்டும், புருவமுந் துடித்தல். (கஅ௦)

தீக்கட் புலிதொடரச் செல்லுஞ் சிறுமான்போல்
ஆக்கை தளர வலமந்து — போக்கற்றுச்
சீறி விழித்தாள் சிலைவேட னவ்வளவில்
நீறாய் விழுந்தா னிலத்து.

(இ-ள்) தீ கண்-தீப்போலுங் கண்களையுடைய, புலி தொடர - (தன்னைப் பற்ற) புலி தொடர்ந்துவர, செல்லும் - (அகப்படாமல் முன்) போகின்ற, சிறு மான்போல-இளமான்போல, ஆக்கை தளர-உடல் தளரும்படி, அலமந்து - சுற்றி, போக்கு அற்று - போகுதல் நீங்கி (நின்று), சீறி - சீறி, விழித்தாள் - விழித்துப்பார்த்தாள்; அவ்வளவில் - விழித்துப்பார்த்த மாத்திரத்தில், சிலை வேடன் - வில்லைப் பிடித்த வேடன், நிலத்து - அந்நிலத்திலே, நீறு ஆய் விழுந்தான் - சாம்பலாகி விழுந்தான், எ-று.

(வி-ரை.) விழித்தலாவது கண்ணிதழ்களை முற்றுந் திறந்து, இமைக்காமல் கோபத்தோடு பார்த்தல். ஆக்கை யாக்கை என்பதன் மரூஉ; தொழிலாகுபெயர்; யா-பகுதி, க்-சந்தி, கை-தொழிற்பெயர் விகுதி; யாக்கப்பட்டதென்னும் பொருளில் யா-பகுதி, க்-சந்தி, கு-சாரியை, ஐ-செயப்படுபொருண்மை விகுதி, உகரக்கேடு சந்தி எனக் கொள்க. போக்கு-தொழிற்பெயர்; போ - பகுதி, க் - சந்தி, கு-புடைபெயர்ச்சி விகுதி. (௧௩௧)

வெண்டமிழ்வா ணர்ப்பிழைத்த வான்குடிபோற் றீத்தழன்மீ
மண்டு கொடுஞ்சுரத்தோ ரோர்மா டிருந்தோர்—பண்டையுள
வாழ்வெல்லாந் தானினைந்து மற்றழுதான் மன்னிழைத்த
தாழ்வெல்லாந் தன்றலைமேற் றந்து.

(இ - ள்.) தீத்தழல் - தீப்போல வெப்பம், மீ மண்டு - மேலே நெருங்கி எழுகின்ற, கொடு சுரத்து - கொடுமையாகிய பாலைநிலத்தில், ஓர்மாடு இருந்து - ஒருபக்கத்தில் தானிருந்து, மன் இழைத்த - அரசன் (தனக்குச்) செய்த, தாழ்வு எல்லாம் - குறைவை யெழுமையும், தன் தலைமேல் தந்து - தன் தலையின்மேல் வைத்து. (குற்றமாக நினையாமல் மேன்மையாகவே நினைத்து) வெள் தமிழ் வாணர் - வெளிமாகிய தமிழில் பயிலுதலுடைய புலவர்களிடத்தில், பிழைத்த பிழை செய்த, வான் குடிபோல-வான்போ லுயர்ந்த குடும்பத்தாரைப்போல, பண்டையுள வாழ்வு எல்லாம்-முன்னிருந்த செல்வங்களையெல்லாம், தான் நினைந்து - தான் எண்ணி, மற்று அழுதான் அழுதனன், எ-று.

(வி-ரை.) தமிழ்வாணர்ப் பிழைத்தலாவது புலவர் செய்த செய்யுளை யேற்று மணி பொன் முதலிய தந்து மகிழ்வியாமை. (௧௩௨)

அவ்வளவி லாதிப் பெருவழியி லாய்வணிகன்
இவ்வளவுந் தீவினையே யென்பாடன்—மெய்வடிவைக்
கண்டானை யுற்றான் கமலமயி லேயென்றான்
உண்டாய தெல்லா முணர்ந்து.

(இ-ள்) அவ்வளவில் - அழுதகாலத்தில், ஆதி - (சேதி நகரத்துக்கு) மேராய்ப் போதலையுடைய, பெரு வழியில் - பெரிய வழியில், ஆய் வணிகன் - ஆராயவல்ல வர்த்தகன், இவ்வளவு தீவினையேன்-இந்நிலைமைக்குக் காரணமாகிய பாவத்தையுடையேன், என்பாள் தன் - என்றழுவாளுடைய, மெய் வடிவை - தேகத்தினழகை, கண்டான் - நன்றாகப் பார்த்து, ஐயுற்றான் - (மானுடப்பெண்ணோ அல்லளோ என்று) சந்தேகித்து. உண்டு ஆயது எல்லாம் - (அவளிடத்து) உண்டாயிருக்கும் கற்பு முதலிய குணங்களை யெல்லாம், உணர்ந்து - (முகக்குறியால்) தெரிந்து, கமலம் - தாமரைமலரி லெழுந்தருளிய, பயிலை - மயிலை ஒத்த திருமகளேயாவள், என்றான் - என்று கருதினான், எ-று.

(வி - ரை.) ஆதி நேரோடல்; அதை வழியின்மேலேற்றி ஆதிப்பெருவழி என்றது இவ்வழி யவ்வூர்க்குப் போம் என்றாற்போல வந்த மரபுவழுவமைதி; இங்ஙனமன்றி, ஆதிப் பெருவழி என்பதற்கு முதன்மையாகிய பெரியவழி எனவுரைப்பினும் பொருந்தும். கண்டான் ஐயுற்றனென்னும் வினைமுற்றுகள் வினையெச்சமாய் நின்றன [நன் வினை-சூ-டு உ]. வினைமுற்று வினையெச்சமாய வருகையில் தன்திணைபாலிடத்து வினையைக் கொண்டு முடிவதல்லது வேறு திணைபாலிடத்து வினையைகொண்டு முடியாது; "கடிதெடுத்தான்" என்பதற்கு அவ்வாறு பொருள் கூறல் புலமை காற்கூறும் பற்றாத மடமையின் காரியமென்க. ஐயுற்றான் - ஆண்பாற் படர்க்கை இறந்தகால வினைமுற்று; ஐயுறு-பகுதி, ஆன் - ஆண்பாற் படர்க்கை விகுதி, பகுதி ஒற்றிரட்டியது விரித்தல்விகாரம், அதுவே காலங்காட்டியது, உகரக்கேடு சந்தி. ஐயமென்னும் பெயரோடு உறு என்னும் உரிச்சொலடியாகப் பிறந்த வினையடி புணர்ந்தபோது, நிலைமொழியீற்று அம் கடைக்குறையாய் ஐயுறு என ஒரு சொல்லின் தன்மைத்தாகநின்றது. அளவுத்தீவினையேன் பண்புத்தொகையாகவும் கொள்ளலாய; விரிந்தால் அளவாகிய தீவினையேன் என விரியும்.

இவ்வளவுத் தீவினையே னென்பதற்கு இவ்வளவாகிய தீவினையுடையேனென வுரைக்க. தமனமுனி அருள் செய்த வரத்தால் வீமசேனன் புத்திரியாகத் தோன்றி, நிடததேயத்தரசன் மனைவியாய் பிறந்தகத்தும், புகுந்தவிடத்தும் மிக்க செல்வ முடையாளா யிருந்து, பின்செல்வமிழந்து, காட்டிற்புக்குப், பாதியாடையுடையாளாகிக், கணவனைப் பிரிந்து, வேடனால் மறுக்கம் அடைந்தமையை இவ்வளவு எனச் சுட்டினளென்க. உண்டாயசெல்வ மென்பதில உண்டாய வென்பது பன்மையி லொருமைவந்த வழுவமைதி. ஏ - தேற்றம். கயலம்-முதலாகுபெயர். மயில் திருமகளுக்குச் சாயல்பற்றிவந்த திணைவழுவமைதி. உவமையாகுபெயரெனினு மொக்கும். (கஙங)

*எக்குலத்தா யார்மடந்தை யாதுன்னூர் யாதுன்பேர்*
*நெக்குருகி நீயழுதற் கென்னிமித்தம்—மைக்குழலாய்*
*கட்டுரைத்துக் காணென்றான் கார்வண்டு காந்தாரம்*
*விட்டுரைக்குந் தார்வணிகர் வேந்து.*

(இ-ள்.) கார் வண்டு - கருமையாகிய வண்டுகள், காந்தாரம் - காந்தாரமென்னும் பண்ணை, விண்டு - வாய் திறந்து, உரைக்கும் - பாடுகின்ற, தார் - மலர்மாலையணிந்த, வணிகர் வேந்து - வைசியர் தலைவன், மைக்குழலாய் - மேகம்போலுங் கூந்தலை யுடையவளே, எக்குலத்தாய் - எந்தக்குலத்தை யுடையாய், யார் மடந்தை-யாருடைய பெண், உன் ஊர் யாது - உன்னுடைய ஊர் எது, உன் பேர் யாது - உன்னுடைய பெயர் என்ன, நீ நெக்கு - நீ (மனம்) தளர்ந்து, உருகி அழுதற்கு - கரைந்து அழுவதற்கு. நிமித்தம் என் - காரணமென்ன, கட்டுரைத்துக்காண்-உண்மையாகச் சொல், என்றான்-என்று வினவினான், எ-று.

(வி - ரை.) யாது என்பன இரண்டும் வினாவடியாகப் பிறந்த குறிப்புவினைமுற்று. நெக்கு-இறந்தகாலவினையெச்சம்; நெகு-பகுதி, உ-வினையெச்சவிகுதி, பகுதி ஒற்றிரட்டியது விரித்தல் விகாரம்,

அது காலங்காட்டியது, பகுதி ஈற்றுக்கேடு சந்தி. மைக்குழலாள் விளியுருபேற்று ஈற்று ளகரம் யகரமானது கட்டுரைத்துக்காண்-ஏவலொருமைவினை; கட்டுரை-பகுதி, த்-சந்தி, து-சாரியை, க்-சந்தி, காண்-ஏவலொருமை எதிர்காலவிகுதி, பகுதி ஒருசொல்லின் தன்மையது. கட்டுரை என்பதில் கடு என்னும் பண்பு மிகுதிப் பொருளது; கடி என்னும் உரிச்சொல்லின் திரிபெனினும் ஒக்கும். விண்டென்னும் இறந்தகால வினையெச்சம் விட்டென வலிக்கப்பட்டது; விள் - பகுதி, ட் இறந்தகால இடைநிலை, உ-வினையெச்ச விகுதி, ளகரம் டகரமானது சந்தி சந்தி டகரம் ணகரமானது மெலித்தல் விகாரம். வேந்து-பண்பாகுபெயர். இதுபோன்ற சொற்களை ஆகுபெயரென்னாமல் சொல்லால் அஃறிணையாய் நின்று பொருளால் உயர்திணைப் பெயரென்பாருமுளர். இங்கே இச்சொல் சாதிபற்றிவந்ததன்று, சிறப்புப்பற்றி வந்தது. நாயகன் பெயரை மனைவி கூறாளென்பதனாலும், முதற்கண் வினவிய நான்கு வினாவினாலே அவன் இன்னானென்பது தோன்றுமென்பதனாலும் யாவனுன் கணவனென வினாவானாயினேன். (௧௩௪)

முன்னை வினையின் வலியான் முடிமன்னன்
என்னைப் பிரிய விருங்கானில்—அன்னவனைக்
காணா தழுகின்றே னென்றாள் கதிரிமைக்கும்
பூணார் முலையாள் புலர்ந்து.

(இ-ள்.) கதிர் - கிரணமிகுதியால், இமைக்கும் - (காண்போர் கண்) இமைக்கின்ற, பூண் - ஆபரணம், ஆர் - தங்கிய, முலையாள் - தனங்களையுடைய சமயந்தி. புலர்ந்து - வாடி, முன்னை வினையின் - (யான்) முற்பிறப்பிற் செய்த தீவினையினது, வலியால்-பலத்தினால், முடி மன்னன் - முடியையணிந்த அரசன், இரு கானில் - பெருங்காட்டில், என்னைப் பிரிய - என்னைவிட்டுப் பிரிந்ததினால், அன்ன

வனை - அவ்வரசனை, காணது - காணமல், அழுகின்றேன் என்ருள் - அழுகிறேனென்று சொன்ஞள், எ-று.

(வி - ரை.) வணிகன் கேட்ட வினு ஐந்தனுள் முதலும் ஈறு மாகிய வினு விரண்டிற்கும் 'முடிமன்னன்என்னைப்பிரிய' என்பதனு லும், 'அன்னவனைக்காணுதழுகின்றேன்' என்பதனுலும் விடைகூறி, மற்ற மூன்றிற்கும் வீமன்மடந்தை, நிடதநாடு, தமயந்தி எனக்கூறின் நாயகன் இன்னுனென்பது விளங்கி அவன் புகழ்க்குக் குற்றமாமென அஞ்சிக் கூருதுவிட்டு, முடிமன்னன் என்னைப் பிரிந்தது அவனுணர்ந்து செய்ததன் றென்னும் கருத்தால் 'முன்னை வினையின்' என்று கூறினள். இங்குப்பூணென்றது பூண்களுட் சிறந்த மாங்கலியமெனக் கொள்க. பூண்-செயப்படுபொருண்மை யுணர்த்தும் ஐ விகுதி புணர்ந்து கெட்ட தொழிலடியாகப் பிறந்தபெயர்; முதனிலைத் தொழிலாகுபெயருமாம். கதிரிமைக்கும் என்பதற்குக் கிரணத்தால் விளங்குமென உரைத்தலு மொன்று. இமைத்தல் - காரணத்தைக் காரியமாகக் கூறுவதோ ருபசார வழக்கு. முன்னை - காலத்தை உணர்த்திய பண்புப் பெயர்ச்சொல்; முன்-பகுதி, ன்-சந்தி, ஐ-பகுதிப்பொருள் விகுதி; மாண்பு என்பதுபோலப் புவ் விகுதிபெற்று முன்பு எனவும், நன்னர் என்பதுபோல நர் விகுதிபெற்று முன்னர் எனவும், வெள்ள மென்பதுபோல அம் விகுதிபெற்று முன்னம் எனவும் வரும். அர் விகுதி எனக் கூறிப் பரிமேலழகரும் அர் விகுதியென்ருரென ஒருவர் பொய்ப்புலமை காட்டுவர்; நன்னரென்பதற்கு யாது கூறுவரோ? பின் என்பதும் அம் விகுதி ஒழிந்தவற்றை ஏற்று வரும். முடிமுதலிய அணிகள் ஒன்றும் இல்லாணுகிக் காட்டில் திரிபவனை முடிமன்னனெனச் சாதிபற்றிய அடை கொடுத்துக் கூறினுளென்க. முடி - சாதிபற்றிய அடை. (கங)

சேதி நகர்க்கே திருவைச் செலவிட்டுப்
போதிற் கொடைவணிகன் போயினுன்—நீதி

*கிடத்துவான் மன்னவர்தங் கீர்த்தியினைப் பார்மேல்*
*நடத்துவான் வட்டை நடந்து.*

(இ - ள்) நீதி - நடுவுநிலைமையாகிய முறைமையை, கிடத்துவான் - நிலைக்கச் செய்பவனும், மன்னவர்தம் - (நளன்முதலிய) அரசரது, கீர்த்தியினை-கீர்த்தியை, பார்மேல் பூமியில், நடத்துவான் - கெடாமல் வழங்கச் செய்பவனும் ஆகிய, கொடை வணிகன் - ஈகைத் தன்மையுடைய வாணிகன், திருவை - திருமகளாகிய தமயந்தியை, சேதிநகர்க்கே - சேதிதேச நகரத்துக்கே, செலவிட்டு - போகவிட்டு, அப்போதில் - அக்காலத்தில், வட்டை நடந்து - வழியேநடந்து, போயினன் -(தன்னூர்க்குப்) போயினன், எ-று.

(வி-ரை.) தான் பிறரிடத்துக் கொள்வது அதிகமும், தான் கொடுப்பது குறைவுமாகாமல் இருவர் பொருளையும் ஒக்கநாடிச் செய்வோனாதலால் 'நீதி கிடத்துவான்' என்றும், அவ்வனத்தினின்றும் தமயந்தியைச் சேதி நகர்க்குக் கொண்டுபோய் விடானாயின் அங்கு அவட்கு ஏதேனு மீளாத்தீங்கு நேரிடின் கொண்டோன் பெற்றோன் இவ்விருவருடைய புகழுங் குறைவுந் தழியுமாதலால் 'மன்னவர்தங் கீர்த்தியினைப் பார்மேல் நடத்துவான்' என்றும், இவ்வாறு அவன் செய்தது செய்யாமற் செய்த உதவி யாதலால் சும்மா வணிகனென்னாமல் 'கொடைவணிகன்' என்றுங் கூறினார். வாணிகத்தின் பொருட்டுப் பல தேசங்களிலுஞ் செல்வோனாதலால் அங்கங்குள்ள அரசருடைய புகழைச் செல்லு மிடந்தோறுங் கூறுவானென்ற கருத்தால் மன்னவர்தங் கீர்த்தியினைப் பார்மேல் நடத்துவானென்றுரைப்பினும் பொருந்தும். ஏ - ஈற்றசை கொடை-தொழிற்பெயர்; கொடு-பகுதி, ஐ புடைபெயர்ச்சி விகுதி, உகரக்கேடு சந்தி; தொழிலும் பண்பெனப்படுதலால் இச்சொற்கு ஈகைத்தன்மையெனப் பொருளுரைக்கப் பட்டது. பிரிநிலை ஏகாரத்தால் வேறு தேயவழியில் செல்லவிட்டில னென்பது கொள்க. போது-பொழுதென்பதன் மரூஉ; போழ்தெனு

வும் வரும். கிடத்துவான்-பிறவினையாகிய எதிர்கால ஆண்பாற் படர்க்கை வினையாலணையும் பெயர்; கிட-தன்வினைப் பகுதி, த்-சந்தி, து-பிறவினைபடுத்தும் விகுதி, வ்-எதிர்கால இடைநிலை, ஆன்-ஆண்பாற் படர்க்கை விகுதி; நடத்துவா னென்பதும் இது. இவ்விருசொல்லையும் காரியப்பொருளனவாகிய வானீற்று எதிர்கால வினையெச்சமாக வைத்து உரைப்பினும் பொருந்தும். இங்கு நீதி நடுவுநிலைமைக்காயிற்று. (கரு௫)

அற்ற துகிலு மறுதொழுகு கண்ணீரும்
உற்ற துயரு முடையளாய்—மற்றொருத்தி
நின்றாளைக் கண்டே நிலவேந்தன் பொற்றேவி
என்றார் மடவா ரெடுத்து.

(இ-ள்.) மடவார் - தோழமைப் பெண்கள், நிலவேந்தன் - சேதிநிலத்தரசனுக்கு, பொன் தேவி-பொன்போலுந் தேவியே, அற்ற துகிலும் - துண்டித்த ஆடையையும், அறாது-இடையறாமல், ஒழுகு-சிந்துகின்ற, கண்ணீரும்-கண்ணீரையும், உற்ற-நடுவேநேர்ந்த, துயரும்-துன்பத்தையும், உடையள் ஆய் - உடையவளாகி, நின்றாள் ஒருத்தியை - நின்றவளாகிய ஒருத்தியை, கண்டேம் - பார்த்தோம், என்றார் எடுத்து - என்று எடுத்துச்சொன்னார்கள், எ-று.

(வி - ரை.) நின்றாளென்னும் வினைப்பெயரி னீற்றிலுள்ள ஐயுருபை ஒருத்தியென்பதனோடு கூட்டி, அப்பெயர்களை நின்றாளொருத்தியெனப் பின்முன்னாக நிறுத்தி உரைக்க. மற்று - அசைநிலை. அற்ற-இறந்தகாலப் பெயரெச்சம்; அறு-பகுதி, அ-பெயரெச்ச விகுதி, பகுதி ஒற்றிரட்டல் விரித்தல் விகாரம், அதுவே காலங் காட்டியது, உகரக்கேடு சந்தி. அறாது - எதிர்மறை வினையெச்சம்; அறு-பகுதி, ஆ-எதிர்மறைவிகுதி, உகரக்கேடு சந்தி, அனைத்தும் ஒருபகுதி, த்-விரித்தல்விகாரம், உ-வினையெச்சவிகுதி. இதனை

வினையெச்சமாகக் கொள்ளாமல் ஒன்றன்படர்க்கை எதிர்மறை வினைமுற்றாகக் கொண்டு, அது "வினைமுற்றே வினையெச்சமாக லும்" என்பதனால் வினையெச்சமாய் வைத்துரைப்பினும் ஒக்கும்; பொருள் அறாததாகி என்க; விகுதி - து. மடவார் - பண்படியாகப் பிறந்தபெயர்; மடமை-பகுதி, ஆர் - பல்லோர் படர்க்கை விகுதியும், "ஈறுபோதல்" என்பதனால் மகர ஐகாரக்கேடும், "ஏனை உயிர்வழி வவ்வும்" என்பதனால் வகரத்தோற்றமும் பெற்றுமுடிந்தது. மடமை-பெண்களுக்குரிய குணநான்களுள் ஒன்று; அவை: அச்சம், மடமை, நாணம், பயிர்ப்பு. பகுதி மடம் எனக்கொண்டு "மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும்" என்பதனால் மகரங் கெட்டதெனினும் பொருந் தும். மடமை-அறிந்தும் அறியார்போன்று அடங்குதல்; இங்ஙன மன்றிக் கற்பெனப் பொருள்கொள்ளினும் பொருந்தும். அச்சொல் இங்குத் தோழியர்மேல் நின்றது. நிலம் - தொழிலடியாகப் பிறந்த பெயர்ச்சொல்; நில்-பகுதி, அம் - வினைமுதற்பொருண்மை விகுதி; நிற்றலுடைய தென்பது பொருள். உயர்த்திக் கூறும் வழுவமைதியா லல்லாமல் வழாநிலையால் வரும் தனித்தன்மைப்பன்மை இலதாக லால் கண்டேம் என்பது நானும் அவளும் எனப் படர்க்கையை யுளப் படுத்திய உளப்பாட்டுத் தன்மைப்பன்மை யென்க. அவர்களில் சிற் சிலர் தனித்தனிக் கூறினராதலால் 'மடவாரென்றார்'என்றார். (கூஎ)

போயகலா முன்னம் புனையிழையாய் பூங்குயிலை
ஆய மயிலை யறியவே—நீயேகிக்
கொண்டுவா வென்றுடன் கொவ்வைக் கனிதிறந்து
வண்டுவாழ் கூந்தன் மயில்.

(இ-ள்.) வண்டு வாழ் - வண்டுகள் வாழ்கின்ற, கூந்தல் மயில் - கூந்தலையுடைய மயிலானவள், (சேதிராசன் மனைவி ஒருத்தியைப் பார்த்துத்) தன் கொவ்வைக் கனி திறந்து - கோவைப்பழம்போன்ற

தன் வாயைத் திறந்து, புனை இழையாய் - அழகுசெய்யும் ஆபரணத்தை யுடையாளே, பூ குயிலை - பொலிவாகிய குயில்போலுங் குரலுடையாளை, ஆய - (யாரெனா நான்) ஆராயவும், மயிலை - மயில் போலு மென்மையுடையாளை, அறிய (அவளை இன்னளெனத்)தேறவும், போய் அகலாத முன்னம் - போய் நீங்குதற்கு முன்னே, நீ எகினீ போய், கொண்டுவா - அழைத்துவா, என்றாள் - என்று சொல்லினாள், எ-று.

(வி - ரை.) அழுகையால் குரலையும், நடையாள் சாயலையும் அறிந்தமையால் முறையே 'குயிலை, மயிலை' என்றும், ஆராய்ந்தே தேறவேண்டுதலாலும், அவள்பால் வைத்த கருணையா லுளதாகிய அவாவாலும் 'பூங்குயிலை, ஆய மயிலையறிய' என்றுங் கூறினளாயினள்; [நன்-பொ-சூ-சக-இல்.] "தனியு மொரோ வழி" என்பதனுள் இஃது அடங்காதோ எனின், ஆய அறிய வேறுவினையாதலால் அடங்காதென்க. ஆய மயிலை என்பதற்கு ஆயம் மயிலை (காணும்படி கூடிய) பெண்கள் கூட்டத்தில் நின்ற மயிலை எனவும் பொருள் உரைக்கலாம். புனையிழையாள் என்னும் பொருளடியாகப் பிறந்த பெயர் விளியுருபேற்று ஈற்று ளகரம் யகரமாகத் திரிந்ததென்க. புனையிழை என்னும் அன்மொழித் தொகைப்பெயர் விளியுருபேற்றால் புனையிழையே, புனையிழாய் என வரும். கொவ்வைக்கனி-உறுப்புத் தற்கிழமைப்பொருட்டாகிய ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத் தொடர்; கொவ்வைக்கனி யென்றது வாயை ஆகலின் தன் கொவ்வைக்கனி யென்பதும் அப்பொருட்டாகிய அவ்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். கொண்டு-இறந்தகால வினையெச்சம்; கொள் - பகுதி, ட் - இறந்தகால இடைநிலை, உ - வினையெச்சவிகுதி, ளகரம் டகரமாதல் சந்தி, அது ணகரமாதல் மெலித்தல் விகாரம். (கஅ)

அந்தா மரையி லவளேயென் னையுற்றுச்
சிந்தா குலமெனக்குத் தீராதால்—பைந்தொடியே

உள்ளவா றெல்லா முரையென்றா ளொண்மலரின்
கள்ளவார் கூந்தலாள் கண்டு.

(இ-ள்.) ஒள் மலரின் - வாடுதலில்லாத மலர்களினது, கள்ள- தேனுள்ள, வார் கூந்தலாள் கண்டு - நீண்ட கூந்தலையுடையாள் (தமயந்தியைக்) கண்டு, (அழகு முதலிய தன்மையால்) அம் தாமரையில்- அழகிய தாமரைமலரி லெழுந்தருளிய, அவளோ என்று - அத்திரு மகளோ நீயென்று துணிந்து, ஐயுற்று - (நிலத்தில் அடிதோய்தல் முதலிய செய்கையால் அவளல்லையோ என) சந்தேகப்படுதலால், சிந்தாகுலம் - மனத்தினது கலக்கம், எனக்குத் தீராது-என்னினின் றும் ஒழியாது; (ஆதலால்) பைந்தொடியே - பசும் பொன்வளை யணிந்தவளே, எல்லாம் (உன் செய்திகள்) எல்லாவற்றையும், உள்ள ஆறு - உள்ளபடி, உரை என்றாள்-சொல்லென்று கேட்டாள், எ று.

(வி - ரை.) கண்டமாத்திரத்தில் அவளது மிக்க அழகு இவளது மனத்தை முற்றுங் கவர்தலால் அவளைத் திருமகளேயெனத் துணிந்து, அடிநிலத்தில் படிதல், கண்ணிமைத்தல் முதலியவற்றால் அத்துணிவை ஒழிக்கக் கூடுமாயினும், இப்பேரழகு மானுடப்பெண் களுக் கில்லாமையால் ஐயமுற்றாளாயினாள். ஐயுற்று - காரணப் பொருட்டாகிய இறந்தகால ஐயுற என்பதன் திரிபு. ஏ - தேற்றம். எனக்கென்னுங் குவ்வுருபுக்குப் பயனிலை தீராதென்னும் எதிர்மறை வினை; அது நீங்கற்பொருளில் வந்தது. ஆல் - அசை. அகரச்சுட்டு அழகு முதலிய தன்மையைப்பற்றி உயர்த்தற்கண் வந்தது. பசும் பொன்தொடி யெனற்பாலது பைந்தொடியென வந்தது ஓர் குறிப்பு; இது பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். தொடி - தொழிலடியாகப் பிறந்தபெயர்; தொடு பகுதி, இ - செயப்படுபொருண்மை விகுதி. உகரக்கேடு சந்தி; தொடுக்கப் படுவதென்பது பொருள். உள்ள-உண்மை யென்னும் பண்படியாகப்

பிறந்த குறிப்புப் பெயரெச்சம். கள்ள - பொருளடியாகப் பிறந்த அப் பெயரெச்சம். (கஙகூ)

என்னைத் தனிவனத்திட் டெங்கோன் பிரிந்தேக
அன்னவனைக் காணா தலமருவேன்—இந்நகர்க்கே
வந்தே னிதுவென் வரவென்றாள் வாய்புலராச்
செந்தேன் மொழிபதறச் சேர்ந்து.

(இ-ள்.) வாய் புலரா - வாய்வறண்டு, செம் தேன் - செம்மையாகிய தேன்போலும் இனிமையாகிய, மொழி பதற - சொற்கள் தடுமாறி, சேர்ந்து - பிரியாதிருந்து, எங்கோன் - எம்முடைய தலைவன், வனத்து - வனத்தில், என்னை தனி இட்டு - என்னைத் தனியளாக இருக்கவிட்டு, பிரிந்து ஏக - பிரிந்துபோதலினால், அன்னவனை - அப்பிரியாதிருந்த நாயகனை, காணாது - காணாமல், அலமருவேன் - சுற்றித்திரியும் நான், இ நகர்க்கு வந்தேன் - இந்த நகரத்துக்குவந்தேன், இது என் வரவு என்றாள் - இது என் செய்தி என்றுசொன்னாள், எ - று.

(வி - ரை.) எம் என்பது உவப்பு முதலியவற்றால் வந்த பால் வழுவமைதியன்று; மக்களிருவரையும் தன்னொடுபடுத்தி எம் என்றாளாதலால் வழாநிலையே ஆம். கோனென்பதில் னகரம் சாரியை. அன்னவன் - இடைச்சொல லடியாகப்பிறந்த ஈறுதிரிந்த குறிப்பு வினையாலணையும்பெயர்; ஈறு திரியாதாயின் அன்னானென நிற்கும்; அன்-பகுதி, ன்-சந்தி, அ-சாரியை, வ்-சந்தி, அன் - விகுதி; இதில் அ பகுதி யெனின் அன்ன எனப் பெயரெச்சத்திலும் னகரமெய் நித்தியமாய் வருதலாலும், அனை என்பதில் ஐ கடைக்குறையாய் நின்ற அன் எனின், இபற்கையாகிய அன் ஐகாரச்சாரியை பெற்றதென மற்றொருவன் கூறின் எவ்வேதுவைக்கொண்டு மறுத்தல் கூடும்; கூடாதாகலால் அன் என்பது வேறு; அனை என்பது வேறு எனக்கொள்ளலே இலக்கணம்; இது கருதியே நன்னூலுரைகாரர்

"பிறவும்" என்பதற்கு அனைய என்பதை எடுத்துக் காட்டினர்; வே றல்லாதாயின் காட்டாரென்க. ஒன்றேயெனல் காற்கூற்றுப் புலமை யின் காரியமென்க. அலமரல் நளனைக் காணுமளவு முள்ள தாத லால் அலமருவேனென எதிர்காலத்தால் கூறினள்; அது வினையா லணையும் பெயராய் நின்றது; அலமா-பகுதி, அலம என்றுதல் குறுக் கல் விகாரம், ரு-விரித்தல் விகாரம், வ்-எதிர்கால இடைநிலை, ஏன்- தன்மையொருமை விகுதி; அகமும் புறமும் மறுவுள்ள ஒருவர் அலமரு பகுதியென்பார்; பரு, பெரு என்பவற்றிற்போல ரு-நித்திய மாயின், இறந்தகாலத்தில் அலமருத்தேனென வரவேண்டுமாதலா லும், தா, வா என்பனபோல அலமந்தேனென வருதலாலும் அது மடமையின் காரியமென்க. வரவென்னுந் தொழிற்பெயர் அத்தொ ழிலையுடைய செய்திக் காயினமையால் தொழிலாகுபெயர். வாய் புலரா, மொழிபதறு என்னுஞ் சினைவினைகள் என்றுளென்னும் முதல்வினை கொண்டன. சேர்ந்தென்னும் வினையெச்சம் இட்டென் னும் வினைகொண்டது. அவள் தனக்குச் சிற்றன்னை யென்பதைத் தானறிந்தா ளாயினும் தன்வரலாற்றை முற்றுந் தெரிவிக்கின், தன் கணவன் முதலியோர்க்குப் பழிப்பாமென்றும், கணவன் துன்பமுற மனையாள் இன்பமுறுதல் கற்புடையாளுக்கு அடாதாதலால், அவ் வரசி தன்னை இன்னளென வுணர்ந்து சிறப்பாகக்கொண்டு நடத்தின் அது தனக்குக் குற்றமா மென்றும் இவ்வாறு கூறினள். (கசுO)

உன்றலைவன் றன்னை யொருவகையா னாடி யே
தந்து விடுமளவுந் தாழ்குழலாய்—என்றனுடன்
இங்கே யிருக்க வினிதென்றா ளேந்திழையைக்
கொங்கேயுந் தாராள் குறித்து.

(இ-ள்.) கொங்கு-மணம், ஏயும் - நிறைந்த, தாராள்-மாலையை யணிந்த சேதிநகரத்தரசி, குறித்து - (தன் மனத்திலே) கருதி, தாழ்

குழலாய் - நீண்ட கூந்தலை யுடையாளே, உன் தலைவன் தன்னை- உன்னுபகனை, யான் - நான், ஒருவகை - ஒருவாறு, நாடி - தேடி, தந்து - கொண்டுவந்து, விடும் அளவும் - (உன்னிடத்து) விடுகிற வரையும், என் தனுடன் - என்னோடு, இங்கே-இவ்விடத்தேதானே, இனிது இருக்க - சுகமாக இருக்கக்கடவாய், என்றான் ஏந்திழையை- என்று சுமக்கின்ற ஆபரணங்களையுடைய தமயந்தியைச் சொன்னான், எ-று.

(வி-ரை.) ஏ இரண்டனுள் முன்னையது ஈற்றசை; பின்னையது பிரிநிலை. இங்கு-சுட்டடியாகப் பிறந்தபெயர்; இ - பகுதி, கு - இடப்பொருண்மை விகுதி, க்-சந்தி, அது ஙகரமாதல் மெலித்தல்; றவ்வென்னுங் காலப்பொருண்மை விகுதியை ஏற்கின் இன்றெனவும், இடப்பொருண்மை விகுதியாகிய டவ்வை ஏற்கின் பகுதி நீட்டல் பெற்று ஈண்டெனவும் வரும். இச்சொல் ஏழாவதனிடப் பொருளிலேயே வரும்; இங்கிருந்து என ஐந்தனுருபேற்றல் சிறுபான்மை யென்க. மற்ற சுட்டும், வினாவும் இவ்வாறுவரல் ஏற்றபெற்றிகொள்க. ஏந்திழை - வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர்; இது உயர்திணைப் பெண்ணுக்குப் பொதுப்பெயராயினும் இங்குத் தமயந்தியை உணர்த்தியது. உம்மை முற்றும்மை. என்றனுடன் என்பதில் தன் சாரியை தன்மையில் படர்க்கைவந்த இடவழுவமைதி. இனிது இருக்க - இத்தொடரில் நிலைமொழி குறிப்புவினையெச்சமெனக் கொண்டு வினையெச்சத் தொடர்நிலைத்தொட ரென்க. இனிது - பண்படியாகப் பிறந்த குறிப்புவினையெச்சம்; இனிமை - பகுதி, உ என்னும் வினையெச்சவிகுதிப் புணர்ச்சியில், மையீறு கெட்டு, தகர எழுத்துப்பேறு பெற்றது; குறிப்புவினைமுற்றாயின் துவ் விகுதியென்க; இப்பகுதியடியாகத் தெரிநிலைவினை இனி, இனித்தல், இனித்த, இனித்து, இனித்தான் என உடன்பாடும்; இனியாமை, இனியாத, இனியாமல், இனியான் என எதிர்மறையும் வரும். இருக்க என்பதை வியங்கோள்

வினையாகக் கொள்ளாமல் செயவெனெச்சமாகவும், இனிதென்பதைக் குறிப்புமுற்றாகவுங்கொண்டு, இருக்க இனிது-நீ இருக்க (அது எனக்கு) இன்பந்தருவதெனக் கொள்ளலுமாம். (கசச)

ஈங்கிவளிவ் வாறிருப்ப வின்னலுழந் தேகிப்
பூங்குயிலும் போர்வேற் புரவலனும்—யாங்குற்றார்
சென்றுணர்தி யென்று செலவிட்டான் வேதியனைக்
குன்றுறழ்தோள் வீமன் குறித்து.

(இ - ள்.) ஈங்கு - இச்சேதி நகரத்தில், இவள் - இத்தமயந்தி, இவ்வாறு - இப்படி, (சேதி யரசன் மனைவி யறியாதபடி) இருப்ப - இருக்க, குன்று உறழ் தோள் - மலையை ஒத்த தோள்களையுடைய, வீமன் - வீமராசன், குறித்து - (நளனும் தமயந்தியுங் காட்டுக்குச் சென்றதைக்) கருதி, பூ குயிலும் - பொலிவாகிய குயில்போலுந் தமயந்தியும், போர் - போரிற் சிறந்த, வேல் புரவலனும் - வேலைத் தாங்கிய நளராசனும், இன்னல் உழந்து - (எல்லாச் செல்வமு மிழந்தமையால்) துன்பத்தால் வருந்தி, ஏகி - போய், யாங்கு உற்றார் - எங்கே தங்கினார்கள், சென்று உணர்தி என்று - போய் (அவ்விடத்தை) அறியென்று சொல்லி, வேதியனை-சுதேவனென்னும் அந்தணனை, செலவிட்டான் - போகவிட்டான், எ-று.

(வி-ரை.) இருப்ப-காரணகாரியமல்லாத செயவென்வாய்பாட்டு நிகழ்கால வினையெச்சம்; இரு-பகுதி, ப்-சந்தி, ப்-விரித்தல் விகாரம், அ-நிகழ்கால வினையெச்ச விகுதி; ஆறிருப்ப - ஏழாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர் என உரைத்தலும் பொருந்தும். புரவலன் - தொழிலடியாகப்பிறந்த பெயர்; புரவல் (காத்தல்)-பகுதி, அன் - ஆண்பாற்படர்க்கை விகுதி, புரத்தலில் வல்லவனெனப் பொருள் கொள்ளின் புர - முதனிலைத் தொழிற்பெயர், வல் (பண்பு) - பகுதி, அன் விகுதி என்க. இவ்வாறு கொள்ளின் பண்படியாகப் பிறந்த பெயராம்.

உணர்,தி ஏவலொருமை எதிர்காலவினை; உணர்-பகுதி, த்-எழுத்துப்பேறு, இ-ஏவலொருமை எதிர்கால விகுதி. என்று-இடைச்சொலடியாகப் பிறந்த இறந்தகாலவினையெச்சம்; என்-பகுதி, ற்-இறந்தகால இடைநிலை, உ-வினையெச்சவிகுதி. வேதியன் - வேதங்களை யுணர்ந்தவன். பொரு என்னும் வினையடி போரென நின்றதெனின், பண்புப்பெயரடியாகப் பிறந்த பரு, பெரு என்னும் வினையடி பார், பேர் என நிற்றல்வேண்டுமே அங்ஙனம் நில்லாமையின் அது பேதைமை என்க. (கசஉ)

ஓடும் புரவித்தேர் வெய்யோ னொளிசென்று
நாடு மிடமெல்லா நாடிப்போய்க்—கூடினான்
போதிற் றிருநாடும் பொய்கைத் திருநாடாம்
சேதித் திருநாடு சென்று.

(இ-ள்.) ஓடும் - (தங்காமல்) ஓடுகின்ற, புரவித் தேர் - குதிரை கட்டிய தேரில் வருகின்ற, வெய்யோன் - வெப்பமாகிய கிரணங்களையுடைய சூரியனது, ஒளி சென்று - ஒளியானது சென்று, நாடும் இடம் எல்லாம் - பொருந்தும் இடமெங்கும், நாடிப் போய் - தேடி நடந்து, போதின்-(இருப்பதற்குத்தக்க) தாமரைமலரை, திரு நாடும்-திருமகள் ஆராய்கின்ற, பொய்கை - தடாகங்களையுடைய, திரு நாடு ஆம் - செல்வமிக்க நாடாகிய சேதித் திருநாடு - சேதியாகிய அழகிய நாட்டில், சென்று கூடினான் - போய்க் கூடினான் (அந்தணன்), எ - று.

(வி-ரை) பொய்கையிலுள்ள தாமரைமலர்களெல்லாம் ஒன்றினொன்று வேற்றுமை தோன்றாமல் ஒரு தன்மையனவாய் மலர்ந்திருத்தலால் திரு நாடுவாளாயினாள். போதின் என்பதில் இன் சாரியை, அதனீற்று னகரம் வலித்தலாய் நின்றது. வெய்யோன் - பண்படியாகப் பிறந்தபெயர்; வெம்மை - பகுதி, ஆன்-விகுதி, "ஈறுபோ

தல்" என்பதனால் மகரமைவகாரங் கெட்டு, "முன்னின்ற மெய்திரிதல்" என்பதனால் மகரம் யகரமாகி, "தனிக்குறின் முன் ஒற்று உயிர்வரின் இரட்டும்" என்பதனால் யகரந்தோன்றி முடிந்தது; விகுதி ஆ - ஓ வானது செய்யுள்வழக்கு. செம் என்பதும் செய்யாளென வரும்; வெம் செம் என்னும் இவ்விருபகுதியும் வெவ்விய செவ்விய என உயிர்முதல் விகுதிப்புணர்ச்சியில் வகரமாகவுந் திரியும்; இம்மட்டோ; வெவ்வரா, செவ்வரா, வெவ்வாய், செவ்வாய் என உயிர், வகர முதன் மொழிகளின் முன்னும் அவ்வாறு திரியும். "எகரம் மெய் யொடேலாது" என நன்னூலாரும், "எ எனவரு முயிர் மெய்யீ றாகாது" என ஆசிரியர் தொல்காப்பியரும் கூறியவற்றை நன்குணராத பேதைமையால் வெ, செ என்பன பகுதியென்பா ரொருவர். சேதிநாடு-இருபெயரொட்டுப் பண்புத்தொகை. கூடினன் என்னும் செயப்படுபொருள் குன்றாத வினைக்குச் சேதிநாடு செயப்படுபொரு ளாயினும் "கண்ணுட் குத்தினன்" என்பதுபோல இடமுமாய் நிற்ற லால் சேதித் திருநாடு கூடினனென்பது ஏழாம் வேற்றுமைத் தொகையாகக் கொள்ளப்பட்டது. (கசாரு)

தாமஞ்சே ரோதித் தமயந்தி நின்றாளை
ஆமென் றறியா வருமறையோன்—வீமன்
கொடிமேல் விழுந்தழுதான் கொம்புமவன் செம்பொன்
அடிமேல் விழுந்தா ளழுது.

(இ-ள்) அரு மறையோன் - அருமையாகிய மறைகளை யுணர்ந்த அந்தணன், நின்றாளை-(சேதிராசன் அரண்மனைவாயிலில்) நின்றவளை, தாமம் சேர் ஓதி - மலர்மாலை சேர்ந்த கூந்தலையுடைய, தமயந்தி ஆம் என்று - தமயந்தி ஆவாளென்று, அறியா - உணர்ந்து, வீமன் கொடிமேல் - வீமராசனுடைய புத்திரியாகிய பூங்கொடியை யொத்தாள்மேல், அழுது விழுந்தான் - அழுது விழுந்தான்; கொம்பும் - பூங்கொம்பை ஒத்தவளும், அவன்-அவ்வந்தணனுடைய, செம்

பொன் அடிமேல் - செம்பொன்னைப்போல விரும்பத்தக்க பாதங்களின்மேல், அழுது விழுந்தாள்-அழுதுகொண்டு விழுந்தாள், எ-று

(வி-ரை.) தாமஞ்சேர் தாமஞ் சேர்கின்ற, தாமத்தைச் சேர்கின்ற என எழுவாயாகவும், இரண்டாம் வேற்றுமைத் தொகையாகவுங் கொள்ளக்கிடந்தது; இரண்டாம் வேற்றுமைத் தொகையாகக் கொள்ளுகையில் சேர் என்பது ஒதியின் வினையென்க. விழுந்தழுதாளென்பதில் சொற்களைப் பின்முன்னாக நிறுத்தி விகுதிபிரித்துக் கூட்டியுரைக்க. தமயந்தி தன்னழகாலே மற்ற மாதர்களுடைய கர்வத்தை யடக்கினவளெனவும், தமனமுனிவன் வரத்தால் பிறந்தவளெனவும் பொருள் கூறுவர். மறை - இறைவனது குணத்தையும் செயலையும் கூடமாகச் சொல்வதெனின் முதனிலைத் தொழிலாகு பெயரெனவும், நான்காம் வருணத்தார்க்கு மறுக்கப்பட்டதெனின் தொழிலடியாகப் பிறந்தபெயரெனவுங் கொள்க; மறு - பகுதி, ஐ-செயப்படுபொருண்மை விகுதி, உகரக்கேடு சந்தி. மறையோன் - பொருளடியாகப் பிறந்த பெயர். ஆகுமென்னும் வினைமுற்று ஆமென ஈற்றுயிர்மெய் கெட்டு நின்றது [நன்-வினை-கூ-உஉ]. தமயந்தி என்னுஞ் சிறப்புப்பெயரால் அது தன் பொதுமை நீங்கி உயர்திணைப் பெண்பாற் படர்க்கைக்குரியதாய் நின்றது. கொடி, கொம்பு இரண்டும் உவமையாகுபெயர். கொடி பண்படியாகப் பிறந்தபெயர்; கொடு-பகுதி, இ - ஒன்றன்படர்க்கை விகுதி, உகரக்கேடு சந்தி; கொடுமை-வளைவு. உம்மை இறந்ததுதழீஇய எச்சவும்மை. செம்பொன்-பயனுவமை. அடி-பண்பாகுபெயர். (கசச)

மங்கை விழிநீர் மறையோன் கழல்கழுவ
அங்கவன்றன் கண்ணீ ரவளுடன்மேற்—பொங்கக்
கடல்போலுங் காதலார் கையற்றார் தங்கள்
உடல்போலு மொத்தா ருயிர்.

(இ - ள்.) மங்கை - பெண்ணினது, விழி நீர் - கண்ணீர், மறை யோன் - அந்தணனது, கழல் கழுவ - பாதங்களைக் கழுவாநிற்கவும், அங்கு - அவ்விடத்து, அவன் தன் - அவனுடைய, கண் நீர் - கண்ணீர், அவள் உடன்மேல் - அவளுடைய உடலின்மேல், பொங்க - பெருகி ஓடாநிற்கவும், கடல்போலும் - கடல்போல, அளவிடப்படாத, காதலார் - அன்புடைய நகர சனங்கள் பலர், கையற்றார் - இது செய்ய வேண்டுமென் றுணராதவர்களாகி, தங்கள் உடல் - தங்களுடலை, உயிர் ஒத்தார் - உயிரொப்பாகித் துன்பமுற்றார்கள், எ-று.

(வி - ரை.) தமயந்தியும் சுதேவ னென்னும் பிராமணனும் அழுகிறதைக் கண்ட நகரத்துச் சனங்கள் உள்ளும்புறமு மொத்துத் துன்பப்பட்டார்களென்பது கருத்து. கையற்றார் - வினைமுற்று வினை யெச்சமானது. கையறல் - செயலறல்; ஒரு சொல்லின் றன்மையது. போலும் இரண்டனுள் முன்னையது எதிர்காலப் பெயரெச்சவினைச் சொல்; பின்னையது அசை இடைச்சொல். உடலை உயிரொத்தனவாதல் புறத்தில் அழுது துன்பப்படல் போல அகத்திலும் உயிர்தடு மாறித் துன்பப்பட்டாராதல்; சடப்பொருளாகிய உடல்போலச் சித் துப்பொருளாகிய உயிர் செயலற்றாராத லெனலுமாம். உயிரொத்தார் என்பது திணைவழுவமைதி; உடலை உயிராலொத்தாரென வழாநிலை யெனினு மொக்கும். காதலார் - பண்படியாகப்பிறந்த பல்லோர்படர்க் கைப்பெயர்; தம்மைத்தாம் காதலாரெனவரின் தொழிலடியாகப்பிறந்த அப்பெயரென்க. உடல் உயிர்க்குச் சட்டைபோலுதலால் உடம்புக் குத் தொழிலாகுபெயராமென்க. ஒத்தார் என்னும் இறந்தகால வினை முற்றில் பகுதி ஒ. (கசஞ)

மாரி பொருகூந்தன் மாதராய் நீபயந்த
காரிகைதான் பட்டதுயர் கண்டாயோ—சோர்குழலும்
வேணியாய் வெண்டுகிலும் பாதியாய் வெந்துயருக்
காணியாய் நின்றா ளயர்ந்து.

(இ-ள்.) மாரி - சோனைமாரியை, பொரு - ஒத்த, கூந்தல் - கூந்தலையுடைய, மாதராய் - பெண்ணே, நீ பயந்த - நீபெற்ற, காரிகை - அழகியபெண், பட்ட துயர் - அடைந்த துன்பத்தை, கண்டாயோ - பார்த்தாயோ; சோர் குழலும் - அவிழ்ந்த கூந்தலும், வேணி ஆய் சடையாகி, வெள் துகிலும் - ஒருசெய்கையுஞ் செய்யப் பெறாத ஆடையும், பாதி ஆய் - பாதியாகி, வெம் துயருக்கு - (பிறருடைய) மிக்க துன்பத்தை மதிப்பதற்கு, ஆணி ஆய் - உரையாணிபோலாகி, அயர்ந்து நின்றாள் - வருந்திநின்றாள், எ-று.

(வி-ரை.) வெந்துயருக்கு ஆணியாய் நின்றாளென்றது பிற மாதர்கள் பட்ட துயரைப் பார்க்கினும் இவள் மிக்க துன்பப்பட்டாளென்பது. மாது - நெடிற்றொடர்க் குற்றுகரமாதலால் அர் போலியும், பகுதிப்பொருள் விகுதியாகிய ஆள்விகுதியும்பெற்று நின்ற மாதராள் என்பது விளியுருபேற்று ளகரம் யகரமானது; மாது - விருப்பம்; அதற்குக் காரணமாகிய பெண்ணுக்காதலால் காரியவாகுபெயர். காரிகை - அழகு; ஆண்மகன் கண்ணுக்கு அழகாகத் தோன்றுதலால் பெண்ணுக்குப் பண்பாகுபெயர். ஓ இரக்கப்பொருளது; இது புதியன புகுதல். ஆடை முதலியன ஒருத்திக்குப் புறத்துறுப்பெனப்படுதலால் வேணியாய், பாதியாய்என்னும் சினைவினைகள் ஆணியாய் என்னும், முதல்வினை கொண்டன. உம்மைகளிரண்டில் முன்னது எதிரது தழீஇயதனோடு இழிவுசிறப்பிலும், பின்னது இறந்தது தழீஇயதனோடு இழிவுசிறப்பிலும் வந்தன. பாதி - மிகுதி மீதி என்றாற் போல் வந்த பகுதியென்பதன் மரூஉ; இது தொழிலாகுபெயர்; பகுக்கப்பட்டதென்னும் பொருளில் பா-பகுதி (பகு என்பதன் மரூஉ.), து-சாரியை, த்-எழுத்துப்பேறெனினுங் கூடும். இ-செயப்படுபொருண்மைவிகுதி, உகரக்கேடு சந்தி என்க. வெண்மை - கலப்பின்மையுணர்த்தியது. (கசக)

தன்மக ளாவ தறியாத் தடுமாறுப்
பொன்வடிவின் மேலழுது போய்வீழ்ந்தாள்—மென்மலரைக்

கோதிப்போய் மேதி குருகெழுப்புந் தண்பணைசூழ்
சேதிக்கோன் றேவி திகைத்து.

(இ-ள்.) மேதி - எருமைகள், மெல் மலரை - மென்மையாகிய தாமரைமலர்களை, கோதிப்போய் - கொழுதிக்கொண்டேபோய், குருகு - (அவற்றிலுறங்கும்) அன்னங்களை, எழுப்பும் - எழுந்து பறக்கச்செய்கின்ற, தண் பணை சூழ் - குளிர்ச்சியாகிய வயல்களாற் சூழப்பட்ட, சேதிக்கோன் தேவி - சேதிதேசத்தரசனுடைய மனையாள், தன் மகள் ஆவது - (இவள்) தன்மகளாயிருத்தலை, அறியா - அறிந்து, திகைத்து - மனங்கலங்கி, தடுமாறு - செய்கை தடுமாறி, பொன் - பொன்னையொத்த தமயந்தியினது, வடிவின்மேல் - உடலின்மேல், அழுதுபோய் - அழுதுகொண்டு போய், வீழ்ந்தாள் - விழுந்தனள், எ-று.

(வி-ரை.) ஆவது - எதிர்காலத்தொழிற்பெயர்; முக்காலத்திலும் ஒத்தியல் பொருளை எதிர்காலத்தால் கூறுதல் தமிழ்மொழி வழக்கு. மகள்-பொருளடியாகப் பிறந்த பெண்பாற்படர்க்கைப் பெயர்; மக-பகுதி, அள்-பெண்பாற்படர்க்கை விகுதி; விகுதி அகரங் கெட்டதெனின் முதற்குறைவிகாரம், பகுதியீற்றகரம் கெட்டதெனின் கடைக்குறை; இவ்வாறன்றி ளகரமெய் விகுதியெனக் கொள்ளலுமாம். பொன்-உவமையாகுபெயர். வடிவு-பண்பாகுபெயர். கோதி-கோதாநின்று என்னும் நிகழ்கால வினையெச்சத்தின் திரிபு; கோது (கொழுதென்பதன் மரூஉ) - பகுதி, உகரத்தின் திரிபாகிய இ விகுதி, உகரக்கேடு சந்தி. எழுப்பும் - எதிர்காலப் பெயரெச்சம்; இது பிறவினை. எழுப்பு-பகுதி, எழு-தன் வினைப்பகுதி, ப்-சந்தி, பு-பிறவினைவிகுதி. இவ்வாறன்றி எழும்பு என்னுந் தன்வினைப்பகுதியினிடைமெல்லொற்று வல்லொற்றாகிப் பிறவினைப்பகுதியானதெனினும் பொருந்தும்.

கந்தனையுங் கன்னியையுங் கண்டா யினுஞ்சிறிது
தன்றுயரந் தீர்ந்து தனியாறத்—தந்தை

பதியிலே போக்கினான் சேதியர்கோன் பண்டை
விதியிலே போந்தாளை மீண்டு.

(இ - ள்.) சேதியர்கோன் - சேதிதேசத்தாருடைய அரசன், கந்தனையும் - முருகனை ஒத்த இந்திரசேனனையும், கன்னியையும் - கன்னியாகிய இந்திரசேனையையும், கண்டாயினும் - பார்த்தாவது, தன் துயரம் - தன்னுடைய துன்பம், சிறிது தீர்ந்து - சிறிது நீங்கி, தனி சிறிது ஆற - தனிமை சிறிது நீங்கும்படி, பண்டை விதியில் - பழமையாகிய ஊழினால், போந்தாளை - (தம்மிடத்து) வந்தவளை, தந்தை பதியில் - (அவளுடைய) பிதாவினது குண்டினபுரத்தில், மீண்டு போக்கினான் - திரும்பிப் போகச்செய்தான், எ-று.

(வி - ரை.) சிறிது என்பதை ஆற என்பதனோடுங் கூட்டுக. கணவனைப்பிரிந்த பிரிவே பெரிதாதலால் 'தனிமை சிறிதாற' எனவும், இளமை கல்விகளைக்குறித்து இந்திரசேனனைக் 'கந்தன்' எனவும், இளமையையும் மணம் புணராமையையுங் குறித்து இந்திரசேனையைக் 'கன்னி' எனவுங் கூறினர். உம்மை மூன்றனுள் முன்னைய இரண்டும் எண்ணும்மை. பின்னையதொன்றும் இழிவு சிறப்பும்மை. விதியிலென்னும் ஏழனுருபு ஏதுப்பொருளது. தந்தை-பொருளடியாகப்பிறந்த பெயர்; தாம்-பகுதி, ஐ-ஆண்பால் முறைப்பொருண்மை விகுதி, த் - எழுத்துப் பேறு, மகாம் நகரமானது சந்தி, பகுதி ஆ அவ்வானது குறுக்கல்விகாரம், பகுதி ஒருமையில் பன்மைவந்த வழுவமைதி, தை விகுதியெனினும் பொருந்தும். போக்கினான்-பிறவினையாகிய ஆண்பாற்படர்க்கை யிறந்தகால வினைமுற்று; போ - தன்வினைப்பகுதி, க்-சந்தி, கு-பிறவினைப்படுத்தும் விகுதி, அனைத்துமொருபகுதி, இன்-இறந்தகால இடைநிலை, உகரக்கேடு சந்தி, ஆன்-ஆண்பாற்படர்க்கை விகுதி. பண்டை: பண்டு-பகுதி, ஐ-பகுதிப்பொருள் விகுதி, உகரக்கேடு சந்தி. போந்தாள் - பெண்பாற்படர்க்கை யிறந்தகால வினையாலணையும் பெயர்; போ-பகுதி, (புகு என்பதன்

மரூஉ), த்-சந்தி, த்-இறந்தகால இடைநிலை, ஆள் பெண்பாற்படர்க்கை விகுதி, சந்தித் தகரம் நகரமாதல் மெலித்தல் விகாரம். தனி - முதனிலைத் தொழிற்பெயருமாம். (கசஅ)

கோயிலு மந்தப் புரமுங் கொடிநுடங்கும்
வாயிலு நின்று மயங்கியதே—தீயகொடுங்
கானாள மக்களையுங் கைவிட்டுக் காதலன்பின்
போனாள் புகுந்த பொழுது.

(இ-ள்.) தீய - தீயுள்ள, கொடு கான் - கொடுமையாகிய காட்டை, ஆள - ஆளும்படி, மக்களையும் கைவிட்டு - புத்திரர்களையும் பற்றறவிட்டு, காதலன் பின் - நாயகன்பின், போனாள்-போன தமயந்தி, புகுந்தபொழுது - வந்தகாலத்தில், கோயிலும் - (இவளைக் கண்டு) அரண்மனையி லுள்ளாரும், அந்தப்புரமும்-அந்தப்புரத்தி லுள்ளவர்களும், கொடி நுடங்கும் - துகிற்கொடிகள் (காற்றால்) அசைகின்ற, வாயிலும் - வாயிலுள்ளவர்களும், நின்று - அசைவற்று, மயங்கியது-திகைத்தார்கள், எ-று.

(வி-ரை.) கோயிலிலுள்ளார் வீமராசன் முதலாயினார்; அந்தப்புரத்திலுள்ளார் அவன் மனைவி முதலாயினார்; வாயிலிலுள்ளார் வாயில் காப்பாளர் முதலாயினார். கோயில் முதலிய மூன்றும் இடவாகுபெயர்; இவை சொல்லால் அஃறிணையா யிருத்தலால் மயங்கிய தென்னும் அஃறிணை வினை கொண்டன. மயங்கியது - பன்மையிலொருமைவந்த வழுவமைதி. தீய-பொருளடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம்; தீமையென்னும் பண்படியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சமாகக் கொண்டால் தீயகொடுமை என்பன ஒருபொருட் பன்மொழியென்க; தீமையென்னும் முதனிலை, பெயரெச்ச அகர விகுதிப் புணர்ச்சியில் மையீறு கெட்டு, யகரவுடம்படுமெய்யாகிய சந்தி பெற்றது. மக்கள் - நித்திய பகுவசனம். கானாளுதல் - காட்டில்

வசித்தல். மக்களையுமென்ற உம்மை உயர்வுசிறப்பும்மை. கோவி லென்பது கோயிலெனவும், இல்வாயென்பது வாயிலெனவும் வந்தமையால் இலக்கணப்போலியாம். வாய்வழி வாயிலென்பது முன்றி லென்பதுபோல மற்ற பொருள்களின் வழிகளுக்கும் வழங்கும். ()

அழுவார் விழுவா ரயிர்ப்பா ருயிர்ப்பார்
தொழுவார் தமரெங்குஞ் சூழ்வார்—வழுவாத
காமநீ ரோதக் கடல்கிளர்ந்தா லொத்ததே
நாமவேல் வீம னகர்.

(இ-ள்.) தமர்-உறவினரில், அழுவார்-(சிலர் அவளைக் கண்டு) அழுவார்கள்; விழுவார் - (சிலர் அழுதுகொண்டு அவள்மேல்) விழுவார்கள்; அயிர்ப்பார் - (சிலர் அவளைக் கண்டு) சந்தேகிப்பார்கள்; உயிர்ப்பார்-(சிலர் திகைத்து) உயிர்த்தலொன்றுமே யுடையரா யிருப்பார்கள்; தொழுவார்-(சிலர் அவளது கற்புநிலையை நோக்கித்) தொழுவார்கள்; எங்கும் சூழ்வார் - (காணும்படி பலர்) எப்புறங்களிலுஞ் சூழ்ந்து வருவார்கள்; வழுவாத-(இவ்வாறு) தவறுதலில்லாத, காமம் - அன்பினால், நாம - (பகைவருக்கு) அச்சத்தைத் தருகின்ற, வேல் வீமன் - வேலைத்தாங்கிய வீமராசனது, நகர் - குண்டினபுரம், நீர் ஓதம் - நீர் வெள்ளத்தையுடைய, கடல் - சமுத்திரம், கிளர்ந்தால் ஒத்தது - கரை புரண்டுவந்தாற்போன்றது, எ-று.

(வி-ரை.) அவளைக் கண்டு சந்தேகித்தலாவது பகைவரால் நலியப்படாத தோள்வலியும் நற்குண நற்செய்கையுமுடைய நளன் மனைவியும், கற்புடையாளுமாகிய தமயந்திக்கு இவ்வாறு நேருமோ நேராது; ஆதலால் அவளல்லளெனவும், உருவத்தை நோக்கின் அவளாமெனவுங் கருதுதல். அழுவார் என்பதுமுதல் சூழ்வாரென்பதீறாக நின்ற வினைமுற்றுகளில் வகர பகரங்கள் இயல்புணர்ந்தன; இவ்வினைகளை இயல்பினால் வரும் காலவழுவமைதியின்பா லடக்கி

நிகழ்காலம் எதிர்காலத்தோடு மயங்கிவந்ததெனிற் படும் குற்றம் யாதெனின், காலவழுவமைதியில் நிகழ்காலம் இறந்தகாலமாகக் கூறுவதன்றி எதிர்காலமாகக் கூறுதல் வழக்கன்மையே குற்றமா மென்க வழுவாத காமமென்பதனீறறில் மூன்றுவதனுருபு தொகுக் கப்பட்டது. வழுவாத-எதிர்மறைப்பெயரெச்சம்; வழு-பகுதி, வ-சந்தி, ஆ-எதிர்மறைவிகுதி, த்-எழுத்துப்பேறு, அ-பெயரெச்சவிகுதி; சந்தி பெறுமல் வழாத எனவும் வரும். உடையானது தன்மையை உடைமைப்பொருளின்மேல் ஏற்றிக் கூறினமையால் நாமவேல் என்பது மரபுவழுவமைதி. நாமென்னும் உரிசசொல் நாம என ஈறு திரிந்தது. எங்கு மென்பதில் எகரம் எஞ்சாமைப் பொருளதாதலால உம்மை முற்றும்மை. (கதுo)

தந்தையைமுன் காண்டலுமே தாமரைக்க ணீர்சொரியச்
சிந்தை கலங்கித் திகைத்தலமந்—தெந்தாயான்
பட்டதே யென்னப்போய் வீழ்ந்தாள் படைநெடுங்கண்
விட்டநீர் மேலே விழ.

(இ-ள்.) தந்தையை-பிதாவை, முன் காண்டலும்-முன்னே காணுதலும், தாமரைக்கண்-தாமரை மலர்போன்ற கண்கள், நீர் சொரிய-நீரைப் பொழியாநிற்க, சிந்தை கலங்கி-மனங்கலங்கி, திகைத்து-பிரமித்து, அலமந்து-சுழன்று, எந்தாய்-அப்பனே, யான்-(நின் புத்திரியாகிய) நான், பட்டது-அடைந்தது, என்னப் போய்-இத்துன்பம் என்று (வாய்) சொல்லாநிற்கப்போய், படை-வேலாயுதம்போன்ற, நெடு கண்-நெடிய கண்கள், விட்ட நீர்-சொரிந்த நீர், மேல் விழ-அவன்மேல் விழும்படி, வீழ்ந்தாள்-விழுந்தாள், எ-று.

(வி-ரை.) காண்டலும்-இறந்தகால வினையெச்சம்; காண்-பகுதி, டு, அல்-சாரியை, உம்-இறந்தகால வினையெச்சவிகுதி, சாரியைத்

தகரம் டகரமானதும், அதன் உகரக்கேடும் சந்தி. இது என்னுஞ் சுட்டுப்பெயர் அவளுடைய நிலைமையைக்குறித்தது. அவள் கண்ணுக்குப் பிரத்தியட்சமாகத் தோன்றுதலால் இது எனச் சுட்டாளாயினள்; இது இங்கே எஞ்சி நின்றது. யான்பட்டது இத்துன்பம் என்பது செயப்படுபொருளைச் செய்ததுபோலக் கூறுவதோர் மரபுவழுவமைதி [நன்-பொது-சூ-௩௯௧]. எந்தை-பொருளடியாகப் பிறந்தபெயர்; டாம்-பகுதி; இது இடவழுவமைதியும், பால்வழுவமைதியுமாம்; மற்றையுறுப்புகள் - கசஅ - ஆம் செய்யுளில் தந்தையென்பதன் பகுதியொழிந்தவற்றோடொக்கும்; விளியுருபேற்றமையால் ஐயீறு ஆயெனத் திரிந்தது. என்ன-இடைச்சொ லடியாகப் பிறந்த நிகழ்கால வினையெச்சம். தாயானவள் ஆடவரும் மாதருமாகிய தமர்பலர் கூடிய கூட்டத்துள் வரலுக்கு நாணினளாதலாலும், கணவனுக்கு முன்செல்லல் கற்புடையாளுக் கடாததாதலாலும் வீமராசனுக்குப் பின்சென்றமைபற்றித் 'தந்தையை முன் காண்டலும்' என்றார். (கடுக)

செவ்வண்ண வாயாளுந் தேர்வேந் தனுமகளை
அவ்வண்ணங் கண்டக்கா லாற்றுவரோ—மெய்வண்ணம்
ஓய்ந்துநா நீர்போ யுலர்கின்ற தொத்ததமர்
நீந்தினார் கண்ணீரி னின்று.

(இ - ள்.) செவ்வண்ண வாயாளும் - சிவந்த நிறமாகிய வாயையுடைய வீமராசன் மனைவியும், தேர் வேந்தனும் - தேர்ச்சேனையையுடைய வீமராசனும், மகளை - குமாரத்தியை, அவ்வண்ணம் - அந்த நிலைமையில், கண்டக்கால் - கண்டால், ஆற்றுவரோ - சகிப்பார்களோ; மெய் வண்ணம் - (அத்தாய்தந்தையருடைய) உடலினது நிலைமை, ஓய்ந்து - தளர, நா நீர் போய் - நாக்கானது நீர் நீங்கி, உலர்கின்றது - உலராநின்றது; ஒத்த தமர் - (அன்பினால்) ஒத்த உறவினர், கண் நீரில் நின்று - (அவ்விருவருடைய) கண்ணீர்ப் பெருக்கிலே நிலைபாதகின்று, நீந்தினார் - (அந்நீர் மேலும் பெருகுதலால்) நிலைகொள்ளாமல் நீந்தினார்கள், எ-று.

(வி - ரை.) அன்பில் தந்தையினுந் தாய் சிறந்தவளாதலால் 'செவ்வண்ணவாயாளுந் தேர்வேந்தனும்' எனவும், மாசுபடிந்த உடலும் பாதித்துகிலும் உடையளாய்க் கூந்தல் சடைபற்றித் துன்பமுறு கின்ற நிலைமையை முன்னே கூறினமையால் இச்செய்யுளிலும் கூறி யது கூறலென்னுங் குற்றம்படக் கூறாமல் சுருங்கச் சொல்லலென் னும் அழகுபட 'அவ்வண்ணம்' எனவும், நா மேலுமேலும் வறளுதலால் உலர்ந்ததென்னுமல் 'உலர்கின்றது' எனவும், அவரது அழுகையின் மிகுதிகூற அளவுபடாதென்பார் 'தமர் கண்ணீரினின்று நீந்தினார்' எனவுங் கூறினார். ஆடவரினும் மாதர்கள் பலவாறு புலம்பி வாயைக் கையால் மோதுதல் அவர்க் கியல்பாதலால் அதனைக் குறிப் பிக்கச் செவ்வண்ணவாயா ளென்றார்போலும். செவ்வண்ணவாயாள் என்னுந் தொடரில் செம் என்னும் நிலைமொழியீற்று மகரம் "முன் னின்ற மெய்திரிதல்" என்பதனால் வகரமாகத் திரிந்ததென்க. கண் டக்கால்-இறந்தகால வினையெச்சம்; காண்-பகுதி, து, அ-சாரியை கள், சாரியையின் தகரம் டகரமாகத் திரிந்ததும், உகரங் கெட்ட தும், ககரந் தோன்றியதும் சந்தி, பகுதி ஆ அவ்வானது குறுக்கல் விகாரம், கால்-இறந்தகால வினையெச்சவிகுதி. காணல் ஆற்றாமைக்கு முன்னிகழ்ந்ததாய்க் காரணமாய் நிற்றலால் கண்டக்காலென்பது இறந்தகாலத்ததென்றாம். ஓ-எதிர்மறை. ஓய்ந்து - ஓய என்பதன் திரிபு. நா நீர் போய் உலர்கின்றது என்பது பால்வழுவமைதி; [நன்-சூ பொது-உகூ-இல்] அஃறிணையோடு பொருண்முதலாறுஞ் சார்த்தி முடித்தால் அத்திணை முடிபாமென்பதை "சொற்றொறு மிற்றி தன் பெற்றியென் றனைத்தும், முற்ற மொழிகுறின் முடிவில வாத லின், சொற்றவற் றியலான் மற்றைய பிறவும், தெற்றென வுணர் தல் தெள்ளியோர் திறனே," என்னுஞ் சூத்திரத்தாற் கொள்க. நா மேலு முலர்கின்றமையால் உலர்கின்றதென்றது வழாநிலையேயாம், காலவழுவமைதியன்று. (கருஉ)

பனியிருளிற் பாழ்மண் டபத்திலே யுன்னை
நினையாது நீத்தகன்ற போது—தனிபேநின்
றென்னினைத்தா யென்செய்தா யென்றுப் புலம்பினுள்
பொன்னினைத்தாய் நோக்கிப் புலர்ந்து.

(இ-ள்.) தாய் - தாயாகிய வீமராசன் மனைவி, பொன்னினை - பொன்போன்ற தன் மகளை, நோக்கி - பார்த்து, பனி இருளில் - குளிர்ச்சியாகிய இருளில் (கள்ளிருளில்), பாழ் மண்டபத்தில்-பாழா கிய மண்டபத்தில், உன்னை - உன்னருமையும் பெருமையும், நினையாது - எண்ணுமல், நீத்து - விட்டு, அகன்றபோது-(உன் கணவன்) நீங்கினபோது, தனியே நின்று - தனியாகவே யிருந்து, என் நினைத் தாய் - யாது நினைத்தாய், என் செய்தாய் - யாது செய்தாய், என்றுப் புலர்ந்து - என்று சொல்லி வாடி, புலம்பினுள் - புலம்பி அழுதாள், எ - று.

(வி-ரை.) சூரியனுடைய அஸ்தமனத்துக்கும் உதயத்துக்கும் நடுநின்ற இரவுக்கு நடுக்காலத்திருள் மிகுதியுங் குளிர்ச்சியுடைமை யால் அதனைப் 'பனியிருள்' என்றூர். என் என்பன இரண்டும் நினைத் தாய், செய்தாயென்னும் செயப்படுபொருள் குன்றூத வினைகளுக்குச் செயப்படுபொருளாய் நிற்கின்றமையால் வினுப்பெயரென்றே கொள்க. பொன் - உவமையாகுபெயர். முன்னுள்ள எ ஈற்றசை. பின் னுள்ளது எ பிரிநிலை. உன் - பொருளாகுபெயர். என்று-இடைச்சொ லடியாகப் பிறந்த செய்யா என்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச் சம்; என்-பகுதி, ன்-சந்தி, ஆ-இறந்தகால வினையெச்சவிகுதி. (௩௱௩)

கலிதொடர்காண்டம் முற்றிற்று.

ஆக வெண்பா ௩௨௮.

ஸ்ரீ

மூன்றாவது

# கலிநீங்குகாண்டம்.

கலி-வடமொழிப்பெயர்ச்சொல், நீங்கு-வினைத்தொகை வினைச்சொல், காண்டம் - கூட்டத்தை யுணர்த்தும் வடமொழிப் பெயர்ச்சொல் என மூன்றுசொல் இரண்டு சந்தியாய், முன்னது எழுவாய்த்தொகாநிலைத்தொடராய் நீங்கென்னும் வினைத்தொகையோடும், பின்னது வினைத்தொகைநிலைத்தொடராய்க் காண்டமென்னும் நிலப்பெயரோடும் முடிந்தன; பொருள் யாதோ எனின், கலிபுருடன் நளராசனை நீங்குகின்ற செய்திக் கூட்டத்தை யுடையதென்பது; எனவே கலிநீங்குகாண்ட மென்பது வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைப்பெயராய் இப்படலத்துக்குக் காரணக்குறியாயிற்று. நீங்கென்பதை முதனிலைத் தொழிற்பெயராகக் கொண்டு நீங்குதலை யுணர்த்தும் காண்டமென உரைக்கலாகாதோ எனின், முதனிலைத் தொழிற்பெயராயின் வேற்றுமைப்புணர்ச்சியில் நீங்குக் காண்டமென வருமொழிக் ககர மிகுவதன்றி இயல்பாகாதாதலால் உரைக்கலாகாதென்க. காண்ட மென்பதற்குப் பொருள்முறைமையெனவும், அது முதனிலைத் தொழிற்பெயரெனவும், முதனிலையில்லாத் தொழிற்பெயரெனவுங் கொள்ளலாகாதோ எனின், அவ்வடமொழிப்பெயர்க்கு அது பொருளன்மையாலும், அது அவ்விருவகைத் தொழிற்பெயராயின் தொழிலை உணர்த்தவேண்டு மாதலாலும் கொள்ளலாகாதென்க.

## கடவுள் வணக்கம்.

*மூலப் பழமறைக்கு முன்னேயுங் காணலாம்*
*காலிக்குப் பின்னேயுங் காணலாம்—மால்யானை*
*முந்தருளும் வேத முதலே யெனவழைப்ப*
*வந்தருளுஞ் செந்தா மரை.*

(இ - ள்.) மால் யானை - (கஜேந்திரனென்னும்) பெருமை யாகிய யானை, முந்து - (சிருட்டிக்கு) முன்னே, அருளும் - (பிரம னுக்கு) உபதேசித்த, வேத முதலே என - வேதங்களாற் சொல்லப் படும் முதன்மையாகிய பொருளே என்று, அழைப்ப - அழைக்கை யில், வந்து அருளும் - (மடுவின்) கரையில் வந்து கருணை செய்த, செந்தாமரை - (திருவடியாகிய) சிவந்த தாமரைமலர்களை, மூலப் பழ மறைக்கு - (எல்லா நூல்களுக்கும்) முதனூலாகிய பழைய வேதங் களுக்கு, முன்னேயும் - முதலினும், காணல் ஆம் - காணுதல் ஆகும், காலிக்கு - பசுக்கூட்டத்துக்கு, பின்னேயும் - பின்னும், காணல் ஆம் - காணுதல் ஆகும், எ - று.

(வி-ரை.) எல்லா நூல்களுக்கும் முதனூலாதலால் வேதம் ஆதி நூலென்று பெயர் பெறும். மறைசெய்யாமொழியாதலால் அதற்குப் பழமையென்னும் அடை கொடுக்கப்பட்டது. அழைத்த குரலோயு முன்னே வந்தருளின வாதலால் அழைப்ப என்னும் வினையெச்சம் நிகழ்காலத்தை உணர்த்தியதென்க; அது காரணப்பொருட்டாக வந்த தெனக் கொள்ளின் இறந்தகால முணர்த்தியதாகும்; அவ்வாறு கூறுவதனால் அருளின் சிறப்புத் தோன்றாமை காண்க. உம்மைக ளிரண்டில் முதலிலுள்ளது எதிரதுதழீஇய எச்சவும்மை; ஈற்றிலுள் ளது இறந்ததுதழீஇய எச்சவும்மை. எ. இரண்டும் ஈற்றசை. முன் னுள்ள காணலாம் என்னும் உம்மையின் முடிக்குஞ் சொல் இல்லை யானால் அவை எண்ணும்மைகளாம். காணலாம் என்பதைக் காணல்

ஆம் எனப் பிரித்து எழுவாய்த் தொகாநிலைத்தொடரெனச் சொல்லுக. அத்திருவடி வேதங்களா லுணரப்படுவன வென்பார் 'மறைக்கு முன்னேயுங் காணலாம்'என்றும், அங்ஙனமாயினும் ஏதுவில்லாமலே அருள் செய்யக் கருதிய உயிர்களுக்கு அருள் செய்யும் எளியன வென்பார் 'காலிக்குப் பின்னேயுங் காணலாம்' என்றுங் கூறினார். அழைப்ப-நிகழ்கால வினையெச்சம்; அழை-பகுதி, ப்-சந்தி, ப்-விரித்தல் விகாரம், அ-விகுதி, இவ்விகுதியே காலங்காட்டுதலால் ப்-விரித்தல் விகாரமெனப்பட்டது. இச்செய்யுள் பாயிரம்; பின் வருவதும் இது. செந்தாமரை-மலருக்கு முதலாகுபெயராய் அது திருவடிகளுக்கு உருவகமாகி நின்றது. (க)

போதுவார் நீறணிந்து பொய்யாத வைந்தெழுத்தை
ஓதுவா ருள்ள மெனவுரைப்பார்—நீதியார்
பெம்மா னமரர் பெருமா னொருமான்கை
அம்மானின் றாடு மரங்கு.

(இ-ள்.) நீதியார்-(தம்முயிர் போலப் பிறவுயிர்களையுங் கருதும்) நீதியையுடைய முனிவர்களுக்கு, பெம்மான் - பெருமானும், அமரர்-தேவர்களுக்கு, பெருமான் - அரசனும், ஒரு மான்-ஒப்பற்ற மானைத் தாங்கிய, கை அம்மான் - திருக்கரத்தையுடைய அப்பெரியோனுமாகிய நடேசன், நின்று ஆடும் - நின்று ஆடுகின்ற, அரங்கு - அம்பலத்தை, நீறு அணிந்து - ஆகமவிதிப்படி திருநீற்றைத் தரித்து, போதுவார் - (அந்நடேசனுடைய பாதங்களில்) புகாநின்று, பொய்யாத - (கருதிய பயனைத் தருவதில்) தவறுதலில்லாத, ஐந்து எழுத்தை - (திருமந்திரமாகிய) ஐந்தெழுத்தையும், ஓதுவார் - விடாமற் சொல்லுவோருடைய, உள்ளம் என - மனமாகுமென்று, உரைப்பார்-(பெரியோர்) சொல்லுவார், எ - று.

(வி - ரை.) நீறணிந்து ஐந்தெழுத்தையும் ஓதுவாருடைய உள்ளம் அம்பலமெனக் கூறினமையால் அவ்வுள்ளத்தில் பெருமகிழ்வு

கொண்டு நடிப்பனென்பது கருத்து. போதுவாரென்னும் வினைமுற்று வினையெச்சமாய் நின்றது. போதுவார் ஓதுவார் என்னும் இவ்விரு வினைமுற்றுகளிலும் வகரம் நிகழ்கால முணர்த்தியது. அமரர் என்பதற்குப் பொருள் மரணமில்லார் என்பது. பெம்மானென்பது பெருமானென்பதன் மரூஉ. புகுதல் - இடைவிடாது சிந்தித்தல். ஐந்தெழுத்தை என்பதனீற்றில் முற்றும்மை விகாரத்தால் தொக்கது. மானென்பது மஹாந் என்னும் வடமொழியின் சிதைவு. வலக்கா லூன்றி இடக்கா லுயர்த்தி ஆடுதலால் 'நின்றுமொங்கு' என்றார்.

மன்னா வுனக்கபய மென்னா வனத்தீயில்
பன்னக வேந்தன் பதைத்துருகிச்—சொன்ன
மொழிவழியே சென்றான் முரட்கலியின் வஞ்சப்
பழிவழியே செல்கின்றான் பார்த்து.

(இ-ள்.) முரண் கலியின் - பகைமையையுடைய கலிபுருடனது, வஞ்சம் - வஞ்சனையாகிய, பழி வழியே - (அறிவுடையோரால்) பழிக்கப்படும் வழியிலே, செல்கின்றான் - செல்கின்ற நளராசன், வனத்தீயில் - காட்டுத்தீயில், பன்னக வேந்தன் - பாம்புகளுக்கு அரசன், பதைத்து உருகி - துடித்துக் குழைந்து, மன்னா - அரசனே, உனக்கு அபயம் - உனக்கு அடைக்கலமானேன், என்னா - என்று சொல்ல, சொன்ன மொழிவழியே - சொல்லிய சொல்லின் வழியே (அச்சொல் பிறந்த திக்கின் வழியே), பார்த்துச் சென்றான் - பார்க்கா நின்று போயினான், எ - று.

(வி-ரை.) பன்னகமென்பது பன்னாகமென்றானது எதுகைத் தொடைபற்றிவந்த நீட்டல் விகாரம்; பொருள் காலாலே நடவாதது. சொன்ன - இறந்தகாலப் பெயரெச்சம்; சொல் - பகுதி, இன் - இறந்த கால இடைநிலை, அ - பெயரெச்சவிகுதி, இடைநிலை இகரக்கேடு முதற்குறை, லகரம் னகரமானது சந்தி, சொன்ன மொழிவழியே

செல்லுதலாவது-உனக்கு அபயமென்ற சொல்பிறந்த திக்கின்வழியே போதல்; புகைந்தெரிகின்ற தீயினிடையில் அவ்வரவு கிடத்தலால் அது தோன்றாமல் சொன்ன மொழிவழியே செல்வானாயினன். ஏ - இரண்டும் பிரிநிலை. அபயம்-பயமில்லாமைக்குக் காரணமாகிய சரண்புகுதலுக்கு ஆதலால் காரியவாகுபெயர்; அது சரண்புகுதலைச் செய்வோனுக் காதலால் அவ்வாகுபெயரே ஆம். பழிவழி யென்பதை வினைத்தொகை நிலைத்தொடராகக் கொள்ளலுமன்றி, பழி யென்பதைத் தொழிலடியாகப் பிறந்த பெயராகக்கொண்டு, பழியாகிய வழியென உரைத்து, பண்புத் தொகைநிலைத்தொடரெனினும் ஒக்கும்; பழி - பகுதி, ஐ - செயப்படுபொருண்மை விகுதி புணர்ந்து கெட்டது; பொருள் பழிக்கப்படுவதென்பது. பார்ராநின்று என்னும் வினையெச்சம் பார்த்தெனவும், என்ன வென்பது என்று எனவும் திரிந்தன. ()

> ஆருந் திரியா வரையிருளி னங்கனை
> சோர்குழலை நீத்த துயரோடும்—வீரன்
> திரிவானத் தீக்கானிற் செந்தீயின் வாய்ப்பட்
> டெரிவானைக் கண்டா னெதிர்.

(இ-ள்.) ஆரும் திரியாத - எத்தன்மையரும் (தேவரும்) திரிதல் கூடாத, அரை இருளின் - நடுவிராத்திரியில், தீக் கானில் பாலைவனத்தில், சோர் குழலை - அவிழ்ந்து சோர்ந்து வீழ்ந்த கூந்தலையுடைய மனைவியை, நீத்த துயரோடும் - நீக்கிய துன்பத்தையுடையனாகி, அங்கண்-அவ்வனத்தில், திரிவான்-திரிகின்றவனாகிய, வீரன் - வீரமுள்ள நளராசன், செம் தீயின் வாய்ப்பட்டு - சிவந்த நெருப்பினிடத் தகப்பட்டு, எரிவானை - வேகின்ற சர்ப்பராசனை, எதிர் கண்டான் - (தனக்கு) எதிரிடத்தில் பார்த்தான், எ-று.

(வி ரை.) ஆருமென்பதில் ஆர் யாவரென்னும் வினாவடியாகப் பிறந்த பல்லோர்படர்க்கைப் பெயரின்மரூஉ. உம்மை-உயர்வுசிறப்பு

இழிவு சிறப்புக்குப் பொதுவாதற் பொருளோடு முற்றுப்பொருள்பட நின்றது. காலத்தினது வரையறைப் பண்பை அக்காலத்து நிகழும் இருளின்மே லேற்றி 'அரையிருள்' என்றார்; இது ஓர் மரபுவழு வமைதி. அங்ஙன் எனச் சுட்டுப்பெயர் செய்யுளாதலால் முன்னே வந்தது, [நன்-பொ-கூ-சாஉ]; இச்சொல் கடைக்குறை. மூன்றனுருபு விசேடணப்பொருளது; அதை அடுத்த உம் சாரியை. சோர்குழல்-வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக்காரணப் பெயர். நீத்த என்னும் இறந்தகாலப்பெயரெச்சத்தில் நீ-பகுதி. (ச)

*தீக்கடவு டந்த வரத்தைத் திருமனத்தில்*
*ஆக்கி யருளா லரவரசை—நோக்கி*
*அடைந்தா னடைதலுமே யாரழலோ னஞ்சி*
*உடைந்தான்போய்ப் புக்கா னுவந்து.*

(இ-ள்.) தீக்கடவுள் - அக்கினிதேவன், தந்த வரத்தை - கொடுத்த வரத்தை, திரு மனத்தில் - அழகாகிய மனத்தில், ஆக்கி - சிந்தித்து, அருளால் - கருணையினால், அரவு அரசை - சர்ப்பராசனை, நோக்கி அடைந்தான் - பார்த்துச் சென்றான்; அடைதலும் - செல்லுதலும், ஆர் அழலோன் - (வெப்பம்) நிறைந்த தீக்கடவுள், அஞ்சி உடைந்தான்-(சுடுதற்கு) அஞ்சிப் பின் வாங்கினான்; உவந்து போய்ப் புக்கான் - (அந்த நளராசன்) மகிழ்ந்து சென்று புகுந்தான், எ-று.

(வி - ரை.) தீக்கடவுள் - தீயினது கடவுள், தீக்குக் கடவுள், தீயாகிய கடவுள் என மூன்று பொருளால் மயங்கும். தீக்கடவுள் தந்த வரமாவது : இந்திரன், வருணன், யமன், அக்கினிதேவன் இந்நால்வரும் தங்களிலே ஒருவருக்குச் சுயம்வர மாலையைத் தமயந்தி சூட்டும்படி தூது செல்லவேண்டுமென்ன, நளன் உடன்பட்டு, அவளிடத்துச் சென்று, உண்மையாகப் பேசி, அவளிணங்காமையை இத்தேவர்களுக்குத் தெரிவித்தபோது, அந்நால்வரும் மகிழ்ந்து

கொடுத்த வரங்களில் தீக்கடவுள் விரும்பிய இடத்தில் தீயைப் பெறுவாயெனவும், சோதியுலகம் பெறுவாயெனவும் தந்த வரம். விரும்பிய இடத்தில் தீயைப் பெறுவா யென்றமட்டில் விரும்பிய இடத்தில் உள்ள தீயைப்பெறுமையுங் கூடுமாதலால், இவன் அடைத லும், அழலோன் அஞ்சி உடைவானாயினன். அருளாலென்னும் மூன்றனுருபு ஏதுப்பொருளது. அரசு-பண்பாகுபெயர். அடைதலும்-இறந்தகால வினையெச்சம். ஏ ஈற்றசை. "விண்ணிற் றாவியிட்டான் வந்துவீழ்ந்தன" என்பதில் விண்ணிற் றாவியிட வந்துவீழ்ந்தன எனப் பொருள்கொள்ளல்போல அஞ்சியுடைந்தான் என்பதில் உடைந்தானென்னும் வினைமுற்றைச் சொற்றிரியினும் பொருள் திரியா வினையெச்சமாக்கி, அஞ்சியுடைய எனப் பொருள் கூறினும் பொருந்தும். வேதங்களை உணர்ந்த ஒரு முனிவனுடைய சாபத்தினால் இப் பாலைவனத்தில் தீயின்வாயிலகப்பட்டு வேகின்றேன்; வந்து என்னை இத்தீயினின்றும் எடுத்துக்காவென்று நளனைக் கேட்டுக்கொண்டான்.

சீரியாய் நீயெடுப்பத் தீமை கெடுகின்றேன்
கூருந் தழலவித்துக் கொண்டுபோய்—பாரில்
விடுகென்றான் மற்றந்த வெந்தழலால் வெம்மைப்
படுகின்றான் வேல்வேந்தைப் பார்த்து.

(இ-ள்.) அந்த வெம் தழலால் - அந்த வெம்மையான தீயால், வெம்மைப் படுகின்றான் - தாபப்படுகின்ற சர்ப்பராசன், வேல் வேந்தைப் பார்த்து - வேலைத் தாங்கிய நளராசனைப் பார்த்து, சீரியாய் - மேன்மைக்குண முடையானே, நீ எடுப்ப - நீ (கையால் பரிசித்து) எடுப்பதினால், தீமை கெடுகின்றேன் - (சாபத்தினது) தீமை நீங்குவேன்; (ஆதலால்) கூரும் - மிகுகின்ற, தழல் அவித்து-தீமை அவியச்செய்து, கொண்டுபோய்-(என்னை) எடுத்துப்போய், பாரில் விடுக என்றான் - பூமியில் விடக்கடவாயென்று சொல்லினன், எ-று.

(வி-ரை.) எடுப்ப என்பது தீமை கெடுதற்குக் காரணமாய் அத் தொழில் நிகழ்வதற்கு முன்னிகழ்வதாதலால் இறந்தகாலத்தில் வந்தது. தீமை கெடுகின்றேன்-திணைவழுவமைதி; துணிவினால் எதிர் காலம் நிகழ்காலமாயிற்று. கருமை காரென நின்றாற்போலப் பருமை விகாரப்பட்டு நின்ற பார் பண்புப்பெயர் பண்பாகுபெயராய்ப் பூமியை யுணர்த்திற்று. வேந்தும் அவ்வாகுபெயர். அவித்து-பிறவினையாகிய இறந்தகாலவினையெச்சம்; அவி-தன்வினை பிறவினைகளுக்குப் பொதுவாகிய பகுதி இங்குப் பிறவினையாய் நின்றது, த் - சந்தி, த்- இறந்தகால இடைநிலை, உ-வினையெச்சவிகுதி. விடுக என்னும் வியங்கோள் வினையின் அகரவீறு தொகுத்தல் பெற்றது. வேல் வேந்து என்றதில் வேல் என்பது சாதிக்குரிய அடை. மற்று-அசை. (சு)

என்றுரைத்த வவ்வளவி லேழுலகுஞ் சூழ்கடலும்
குன்றுஞ் சுமந்த குலப்புயத்தான்—வென்றி
அரவாசைக் கொண்டகன்றா னாரணியந் தன்னில்
இரவாசை வென்றா னெடுத்து.

(இ-ள்.) என்று உரைத்த - என்று சொல்லிய, அவ்வளவில் - அம்மட்டில், அரணியந்தன்னில் - பாலைவனத்தில், இரவு அரசை - இராத்திரி அரசை (நடுராத்திரிப்பொழுதை), வென்றான்-வென்றவனாகிய நளராசன், ஏழ் உலகும் - சப்த தீபங்களையும், சூழ் கடலும் - (அவற்றைச்) சூழ்ந்த கடல்களையும், குன்றும்-(மேரு முதலிய) மலைகளையும், சுமந்த - ஏந்திய, குலம் - சிறப்பாகிய, புயத்தான்-புயவலியினால், வென்றி - வெற்றியையுடைய, அரவு அரசை - சர்ப்பராசனை, எடுத்துக்கொண்டு அகன்றான் - எடுத்துக்கொண்டு (அத்தீயினின்று) நீங்கினான், எ-று.

(வி-ரை.) உலகென்றது தீபமாகிய நிலத்தை. தீபங்களையும், கடலையும், மலைகளையும் என்றது இவையாகிய உலகத்தை. அதைச்

சுமத்தலாவது-உலகத்துயிர்களுக்குத் தீங்கு வாராமற் காத்தல். மிக்க இருளுடையதாதலால் அங்கேவிராவை 'இரவரசு' என்றார். இரவரசை வென்றதாவது தனியனாய் அவ்விரவைக் கடத்தல். இரவரசை வென்றானென்பதற்கு இரவில் (தன்றுணையைச் செலுத்தும்) அரசனாகிய மன்மதனை வென்றான் எனப் பொருள் கூறினும் பொருந்தும். காமத்தை யுடையானாயின் மனையாளைப் பிரியானாக லால் காமத்தை வென்றானென்பது அதற்குக் கருத்தாகக் கொள்க. அரவரசென்பதை அரவு அரசெனப் பிரித்தலே அன்றி, அர அர செனப் பிரித்தலும் பொருந்தும், [நன்-உயிர்-கூ-உஉ]. அகன்றான்-ஆண்பாற்படர்க்கை இறந்தகால வினைமுற்று; அகல்-பகுதி, ற்-இறந்த கால இடைநிலை, ஆன் - ஆண்பாற்படர்க்கை விகுதி, லகரம் றகர மாதல் சந்தி, அது னகரமாதல் மெலித்தல் அரணியம் ஆரணியமென முதல் நீண்டது. புயத்தானென்னும் ஆனுருபு கருவிப்பொருளது.()

மண்ணின்மீ தென்றனைநின் வன்றாளா லொன்றுமுதல்
எண்ணித் தசவென் றிடுகென்றான்—நண்ணிப்போர்
மாவலான் செய்த வுதவிக்கு மாறாக
ஏவலாற் றீங்கிழைப்பே னென்று.

(இ-ள்.) போர்-போர்க்குரிய, மா வலான்-குதிரையை நடத்து வதில் வல்லவனாகிய நளராசன், நண்ணி-நெருங்கிவந்து, செய்த உத விக்கு - (தனக்கு) செய்த உபகாரத்துக்கு, மாறு ஆக-பிரதி உபகார மாக, ஏவலால்-(அவன்) ஏவுதலினால், தீங்கு இழைப்பேன்-(நன்மை யைத் தருவதாகிய) தீமையைச் செய்வேன், என்று-என்று கருதிக் கொண்டு, மண்ணின்மீது - தரையின்மேல், என்தனை - என்னை, நின் வல் தாளால் - உன்னுடைய வலியமைந்த பாதத்தால்; ஒன்று முதல் - ஒன்றுமுதலாக, எண்ணி-எண்ணி, தச என்று-தச என்று சொல்லி, இடுக என்றான்-இடக்கடவாயென்று சொல்லினான், எ-று.

(வி-ரை.) போர் மாவலா னென்பதற்குப் போரிலும், குதிரை நடத்துவதிலும் வல்லானென உரைப்பினும் பொருந்தும். உதவி - தொழிற்பெயர்; உத - பகுதி, வி - புடைபெயர்ச்சி விகுதி; கால இடைநிலைகளையும், தல் முதலிய புடைபெயர்ச்சி விகுதிகளையும் ஏற்கும்போது உதவுகின்றேன், உதவுவேன் எனவும், உதவுதலெனவும் உகரச்சாரியை ஏற்றே வரும். வன்றாள் - பண்புத்தொகைநிலைத் தொடர்; விரிந்தால் வன்மையாகிய தாளெனவிரியும்; பண்புப்பெயர்ப் பகுதியினீற்று லகர ளகரங்கள் மெல்லினமுதன் மொழிப்புணர்ச்சியில் னகர ணகரங்களாகத் திரிவதுபோல வல்லினப் புணர்ச்சியிலும் திரியும்; வன்கணம், மென்பூ, வெண்சோறு, வெண்பல் எனவரும், [நன். மெய். சூ. ௩௬.] தீக்குக் கூசாமையால் வன்றாளென்றும், ஆரியத்தில் பத்தென்னும் எண்ணுப்பெயரும், கடி. என்னும் ஏவலொருமை வினைச்சொல்லுமாகிய தசவென்று சொல்வித்தானுகையால் 'ஏவலால்' என்றும், தான் செய்யுந் தீங்கு அந்நளனுக்குப் பகையாசரால் தீங்கு நோமை முதலிய நன்மை தருதற்காதலால் 'உதவிக்கு மாறாக' என்றும் கூறினான். (அ)

ஆங்கவன்று னவ்வா றுரைப்ப வதுகேட்டுத்
தீங்கலியாற் செற்ற திருமனத்தான்—பூங்கழலை
மண்ணின்மேல் வைத்துத் தசவென்று வாய்மையால்
எண்ணினான் வைத்தா னெயிறு.

(இ-ள்.) ஆங்கு - அவ்விடத்தில், அவன் - அப்பாம்புக்காசன், அவ்வாறு - அவ்வகை, உரைப்ப - சொல்ல, அது கேட்டு - அச்சொல்லைக் கேட்டு, தீ கலியால் - தீமையாகிய கலிபுருடனால், செற்ற - வெல்லப்பட்ட, திரு மனத்தான் - அழகாகிய மனமுடைய நளராசன், வாய்மையால் - உண்மையினால், பூ கழலை - தாமரைமலர்போன்ற பாதத்தை, மண்ணின்மேல் வைத்து - தரையில்வைத்து, தச என்று எண்ணினான் - (ஒன்று முதலாகத்) தச என்று எண்ணினான், எயிறு

வைத்தான் - (அவனுடைய பாதத்தில்) பல்லை வைத்துத் தீண்டி னான், எ-று.

(வி-ரை.) கலியால் திருமனம் வெல்லப்பட்டதென்றது அக் கலி இவனது சிந்தை எல்லாந் தன்வயமே ஆக்கிக் கொண்டதை. தச என்னும் சிலேடைப்பொருளை அறியவல்லனென்பார் 'திருமனத் தான்' எனவும், இப்போது அறியாமை இவன் குற்றமன்று என்பார் 'கலியால் செற்ற' எனவும், தான் சொல்லியபடி நடப்பானென்பார் 'வாய்மையால்' எனவும் கூறினர். தீங்கலி-எதுகைத்தொடை நோக்கி வந்த மெலித்தல் விகாரம். அது என்னுஞ் சுட்டுப்பெயர் உரைப்ப என்னும் செயவெனெச்சத்தின் உரைத்தலைச் சுட்டிநின்றது. (௯)

வீமன் மடந்தை விழிமுடியக் கண்டறியா
வாம நெடுந்தோள் வறியோருக்—கேமம்
கொடாதா ரகம்போற் குறுகிற்றே மெய்ம்மை
விடாதான் றிருமேனி வெந்து.

(இ-ள்.) மெய்ம்மை விடாதான்-உண்மையை விடாத நளனது, திருமேனி வெந்து-திருமேனியானது வெதும்பி, வீமன் மடந்தை-வீமராச புத்திரியாகிய தமயந்தி, விழி-கண்களால், முடியக் கண்டு-முற்றுப்பெறக் கண்டு, அறியாத - அறியப்படாத, வாமம்-அழகாகிய, நெடு தோள் - பெரிய தோள்கள், வறியோருக்கு-வறுமைகாரணமாக இரப்பவருக்கு, ஏமம் - பொன்னை, கொடாதார் - கொடுக்காத செல் வர்களது, அகம் போல - வீடுவளம் குறைவதுபோல, குறுகிற்று - சுருங்கின், எ - று.

(வி-ரை.) நெடுநாள் விடாமல் பயில்பவளாகிய வீமன் மடந்தை விழிமுடியக் கண்டறியா எனவே அவ்வாறு பயிலுத லில்லாத மற்ற வர் விழிமுடியக் கண்டறியாமை கூறவேண்டாதாயிற்று. தோள்

சாதியொருமை. ஏ - இரக்கப்பொருளது. வெந்தென்னும் இறந்த கால வினையெச்சத்துக்குப் பகுதி வே. குறுகிற்று-ஒன்றன்படர்க்கை இறந்தகால வினைமுற்று; இது குறுமை யென்னும் பண்புப்பெயரடியாகப் பிறந்தது; வினைப்படுத்துவதாகிய குவ் விகுதிப் புணர்ச்சியில் மையீறு கெட்ட குறுகு-பகுதி, இன் - இறந்தகால இடைநிலை, று - ஒன்றன்படர்க்கை விகுதி, உகரக்கேடும், னகரம் றகரமாதலும் சந்தி. வாய்மையா லெண்ணினன், மெய்ம்மை விடாதான் எனப் பலமுறை கூறியது இவன் முன் இந்திரன் முதலியவர்களுக்குத் தான் உடன் பட்டபடி தமயந்தியினிடம் தூது சென்றதுமன்றிப் பால் கொடுத்து வளர்த்தவர்க்கும் பாம்பு விஷந்தரும் என்றபடி உபகாரிக்கும் பாம்பு தீங்கு செய்யு மென்பதை உணர்ந்திருந்தும் தனக்கு வரும் தீமையைக் கருதாமல், இங்கும் உடன்பட்டபடி தீயினின்றும் எடுத்த உண்மையைச் சிறப்பித்தற்கென்க. (௪௦)

ஆற்ற லரவாசே யாங்கென் னுருவத்தைச்
சீற்ற மொன்றின்றிச் சினவெயிற்றால்—மாற்றுதற்கின்
றென்கா ரணமென்றா னேற்றமரிற் கூற்றழைக்கு
மின்கா லயின்முகவேல் வேந்து.

(இ-ள்.) ஏற்று - (பகையரசர்களை) எற்று நின்று, அமரில் போர்க்களத்தில், கூற்று அழைக்கும்-(அவர்களது உயிரைக் கொண்டு போக) யமனை அழைக்கின்ற, மின் கால் - மின்னலை வீசுகின்ற, அயில் முக வேல்-கூர்மையாகிய முகத்தையுடைய வேலைத் தாங்கிய, வேந்து - நளராசன், ஆற்றல் - வலிமையுடைய, அரவு அரசே-சர்ப்பராசனே, இன்று-(உபகாரஞ் செய்த) இப்பொழுது, சீற்றம் ஒன்று - (உனக்குக்)கோபம்வருவதற்குக் காரணமாகிய ஓர்குற்றமும், இன்றி- (என்னிடத்து) இல்லாதிருக்க, சின எயிற்றால் - கோபமமைந்த பல்லினால், ஆங்கு - பழைய நிலையில் நின்று, என் உருவத்தை மாற்றுதற்கு - என் மேனியை வேற்றுமை செய்தற்கு, காரணம் என் - காரணம் யாது, என்றான் - என்று கேட்டான், எ-று.

(வி-ரை.) ஆங்கென்னுஞ் சுட்டுப்பெயர் செய்மைச் சுட்டாய்ப் படர்க்கைக் குரியதாதலால் அதற்குப் பழைய நிலைமை எனப் பொரு ளுரைக்கப்பட்டது. அமரில் கூற்றழைக்கும் வேல் வேந்தென்பதற்கு-போர்த்தொழிலில் (தன்னோடு பொருதற்குக்) கூற்றுவனை அழைக் கும் வேல்வேந்த னெனவும் உரைக்கலாம். சீற்றம்-சிறிது பொழுது உள்ளதாகிய கோபம்; சிறு-பகுதி, அம் - புடைபெயர்ச்சி விகுதி, பகுதி ஒற்றிரட்டலும் உகரக்கேடும் சந்தி; அம் விகுதிப் புணர்ச்சியில் உருக்கமென உயிர்த்தொடர்க் குற்றுகரமும், நெருக்கமென மென் றொடரும், ஒற்கமென இடைத்தொடரும், நற்றமென முற்றுகர மும் விகாரப்படும். கூற்று - சொல்லால் அஃறிணை. போரில் புறங் கொடாதவனுயினும் ஊர்வனவற்று ளொன்றாகிய ஓரரவை இவ்வாறு இரந்து கேட்டது முன்னை வினைப்பயனென்பது குறிப்பெச்சம். ()

காயுங் கடக்களிற்றாய் கார்க்கோ டகனென்பேர்
நீயிங்கு வந்த தியானினைந்து—காயத்தை
மாறாக்கிக் கொண்டு மறைந்துறைதல் காரணமா
வேறாக்கிற் றென்றான் விரைந்து.

(இ - ள்.) காயும் - கோப மியல்பாயுள்ள, கடக்களிற்றாய் - மத யானைச்சேனை யுடையானே, என் பேர் கார்க்கோடகன் - என்பேர் கார்க்கோடகனென்பது; நீ இங்கு வந்தது - நீ இக்காட்டிலே (தனி யாக) வந்ததை, யான் நினைந்து - நான் ஆராய்ந்து, காயத்தை - உன் னுடலை, மாறு ஆக்கிக்கொண்டு - வேற்றுருவமாகச் செய்துகொண்டு, மறைந்து உறைதல் - (அவ்வுருவில்) மறைந்திருந்து வாழ்தல், கார ணம் ஆக - காரணமாக, வேறு ஆக்கிற்று - (நின்னுருவை நான்) வேறு செய்தது ஆம், என்றான் விரைந்து-என்று விரைந்து சொல்லி னான், எ-று.

(வி - ரை.) செய்நன்றி மறந்தவனாகத் தன்னைக் கருதாதபடி விரைந்து கூறினான். வந்தது என்னும் இறந்தகாலத் தொழிற்பெயரின் உயிர்த்தொடர்க் குற்றியலுகரம் யானென்னும் யகர முதலிலுள்ள வருமொழிப் புணர்ச்சியில் இகரமாகத் திரிந்தது. இவ்விகரம் குற்றியலிகரமாம். பேர்-பெயரென்பதன் மரூஉ: வந்தான் கார்க்கோடகனென்பது பொருளை யுணர்த்துவதுபோல, என் பேர் கார்க்கோடகனென்பதில் சொல்லை மட்டுமே உணர்த்திற்று. நினைந்தென்னும் இறந்தகாலவினையெச்சம் வேறாக்கிற்றென்னும் தொழிற்பெயர்கொண்டது. ஆக்கிக்கொண்டு-இறந்தகால வினையெச்சம்; ஆக்கு-பகுதி, இ-சாரியை, உகரக்கேடும் ககரத்தோற்றமுஞ் சந்தி, கொள்-தற்பொருட்டு விகுதி, அனைத்து மொருபகுதி, ட்-இறந்தகால இடைநிலை, உ-வினையெச்ச விகுதி, ளகரம் டகரமானது சந்தி, அது ணகரமானது மெலித்தல் விகாரம். ஆக்கிற்று இறந்தகாலத் தொழிற்பெயர்; எழுவாயாக நின்ற இப்பெயர்க்குப் பயனிலையாகிய ஆம் என்பது குறைந்து நின்றது. (கஉ)

கூனிறால் பாயக் குவளை தவளைவாய்த்
தேனிறால் பாயுந் திருநாடா—கானில்
தணியாத வெங்கனலைத் தாங்கினா யிந்த
அணியாடை கொள்கென்றா னாங்கு.

(இ - ள்.) ஆங்கு-அவ்வாறு விரைந்து, கூன் இறால்-கூனாகிய இறால்மீன், குவளை பாய - குவளையின்மேற் பாய்ந்ததினால், தவளை வாய்-தவளையினது வாயில், தேன் - (அக் குவளை மலரினது) தேன்-இறால்-தேன் கூட்டுத் தேன்போல, பாயும்-பெருகி ஒழுகுகின்ற, திரு நாடா-அழகிய நிடதநாட்டரசனே, கானில்-இவ்வனத்தில், தணியாத - ஆறாமல் எரிகின்ற, வெம் கனலை - வெம்மையான தீயை, தாங்கினாய்-(என்பொருட்டு) ஏற்றுக்கொண்டாய்; (அதற்குப் பிரதி

யாக) இந்த அணி ஆடை - இந்த அழகிய வஸ்திரத்தை, கொள்க என்றான்-பெறுக என்று கொடுத்தான், எ-று.

(வி-ரை.) கானில் தணியாத வெங்கனலைத் தாங்கினை யென்பதற்கு: கானில் வெம் கனலை-காட்டிலுள்ள வெப்பமாகிய தீயையும், தணியாத வெம் கனலை- (அத்தீப்போல நீரால்) ஆறாத (விடமாகிய) வெய்ய தீயையும், தாங்கினாய் - ஏற்றாய், எனப் பொருளுரைக்கினும் பொருந்தும். கூனிறால் என்பதைப் பண்புத்தொகைநிலைத்தொடராகப் பொருள்கொள்ளலே அன்றிக் கூனிய இறாவென வினைத்தொகைநிலைத்தொடராகவும் பொருள் கொள்ளலாம். பாய என்னும் செயவெனெச்சம் காரணப்பொருளதாதலால் இறந்தகாலத்தது. இந்த - இ என்னுஞ் சுட்டின் மரூஉ. கனலென்னும் பெயரடியாகக் கனல், கனலல், கனன்றான், கனன்ற, கனன்று, கனலாமை, கனலான், கனலாத, கனலாமல் என வினைகள் பிறக்கும். (கஙு)

சாதி மணித்துகிலீ சாத்தினாற் றண்கழுநீர்ப்
போதின்கீழ் மேயும் புதுவரால்—தாதின்
துளிக்குநா நீட்டுந் துறைநாடர் கோவே
யொளிக்குநா ணீங்கு முரு.

(இ-ள்.) தண்-குளிர்ச்சியாகிய, கழு நீர்ப் போதின் கீழ்-செங்கழுநீரினது மலரின்கீழ், மேயும் புது வரால்-மேய்கின்ற இளவரால் மீன், தாதின் - (அப்பூவின்) தாதுக்களினிடத் துண்டாகும், தேனினது, துளிக்கு நா நீட்டும்-துளிக்கு நாவை நீட்டுகின்ற, துறை நாடர் கோவே-நீர்த்துறையையுடைய நிடதநாட்டரசனே, ஒளிக்கும் நாள்-வெளிப்பட விரும்பும் நாளில், சாதி மணித்துகில்-உயர்வாகிய இரத்தினங்களினாலாகிய இவ்வாடையை, நீ சாத்தினால்-நீ தரித்துக்கொண்டால், உரு - இவ்வுருவம், நீங்கும் - விலகும், எ-று.

(வி-ரை.) புதுமை இளமையை உணர்த்தியது. சாதியென்னும் பண்புப்பெயர் அடையடுக்காமல் நின்றமையால் சாதியின் உயர்வை

உணர்த்தியது. போது - காலவாகுபெயர். நீட்டும் - பிறவினையாகிய எதிர்காலப் பெயரெச்சம்; நீள்-பகுதி, டு-பிறவினைபடுத்தும் விகுதி, ளகரம் டகரமாதல் சந்தி பெற்ற நீட்டு பகுதி, உம்-எதிர்காலப்பெய ரெச்சவிகுதி; நீடு-தன்வினைப் பகுதி, பகுதி ஒற்றிரட்டலாகிய சந்தி பெற்றுநின்ற நீட்டு பகுதி எனினும் ஒக்கும். துறை-தொழிலடியா கப்பிறந்த பெயர்; துறு-பகுதி, ஐ-செயப்படு பொருண்மை விகுதி, உகரக்கேடு சந்தி; பொருள்-மண், கல், வண்டல், தழை முதலியவற் றால் உறுதியாகக் கட்டப்பட்டதென்பது. ஒளிக்கும்-பெயரடியாகப் பிறந்த பெயரெச்சம். (கச)

வாகு குறைந்தமையால் வாகுகனென் றுன்னாமம்
ஆக வயோத்தி நகரடைந்து—மாகனகத் [தால்
தேர்த்தொழிற்கு மிக்கானீ யாகென்றான் செம்மனத்
பார்த்தொழிற்கு மிக்கானைப் பார்த்து.

(இ-ள்.) செம் மனத்தால் - நடுவுநிலைமையுள்ள மனத்தையுடை மையால், பார்த்தொழிற்கு-பூமியை ஆளுந்தொழிலில், மிக்கானைப் பார்த்து-சிறந்தவனாகிய நளனைப்பார்த்து, வாகு குறைந்தமையால்- தோள்கள் சுருங்கிய காரணத்தால், வாகுகன் என்று உன் நாமம் ஆக- வாகுகனென உன்பேர் ஆகக்கடவது, அயோத்தி நகர் அடைந்து- அயோத்தியாநகரத்தைச் சேர்ந்து, கனகம்-பொன்னாற்செய்த, மா- பெரிய, தேர்த்தொழிற்கு-தேரை நடத்துந் தொழிலில், மிக்கான்-சிற ந்தசாரதி, நீ ஆகு என்றான்-நீ ஆகென்று சொல்லினான், எ-று.

(வி-ரை.) குறைந்தமை - இறந்தகாலத் தொழிற்பெயர்; குறை- பகுதி, த்-சந்தி, த்-இறந்தகால இடைநிலை, அ-சாரியை, மை-புடை பெயர்ச்சிவிகுதி, சந்தித் தகரம் நகரமாதல் மெலித்தல்; குறைகின் றமை என நிகழ்காலத்திலும், குறையாமை என எதிர்மறையிலும் இந்த மைவிகுதி வரும். ஆக-வியங்கோள்வினை; ஆ-பகுதி, க-வியங்

கோள் விகுதி; இதனைச் செயவெனெச்சவினையாகக்கொண் டுரைப் பினும் பொருந்தும்; ஆ - பகுதி, கு-சாரியை, அ - எதிர்கால வினை யெச்ச விகுதி, உகரக்கேடு சந்தி. தேர்த்தொழில், பார்த்தொழில் இரண்டும் செயப்படுபொருளில் வந்த ஆறும்வேற்றுமைத் தொகை நிலைத்தொடர்; விரிந்தால் தேரினது தொழில், பாரினது தொழி லென விரியும். இவன் விதியிருந்தவாறு என்னே யென்பார் 'செம் மனத்தால் பார்த்தொழிற்கு மிக்கானைப் பார்த்துத், தேர்த்தொழிற்கு மிக்கானீ யாகென்றான்' என்றார். நான்கனுருபிரண்டும் ஏழாவத னிடப்பொருளில் வந்தன. (கரு)

இணையாரு மில்லா னிழைத்த வுதவி
புணையாகச் சூழ்கானிற் போனான்—பணையாகத்
திண்ணாக மோரெட்டுந் தாங்குந் திசையனைத்தும்
எண்ணாக வேந்த னெழுந்து.

(இ-ள்.) பணை - பெருமையாகிய, ஆகம் - உடலினது, திண் நாகம் ஓர் எட்டும் - வலிமையுடைய ஒரெட்டு யானைகளும், தாங்கும்- சுமக்கின்ற, திசை அனைத்தும் - திக்குகளிலெல்லாம், எண் ஆக - (தன்) எண்ணமாகும்படி, வேந்தன் எழுந்து - நளராசன் புறப்பட்டு, யாரும் இணை இல்லான்-எவரும் (தனக்கு) ஒப்பாதலில்லாதவனாகிய கார்க்கோடகன், இழைத்த உதவி-செய்த பிரதியுபகாரம், புணை ஆக- துணையாகக்கொண்டு, சூழ் கானில் - நிறைந்த காட்டில், போனான் - போயினான், எ-று.

(வி-ரை.) இணையில்லான் - இணைவழுவமைதி. கார்க்கோடகன் நளனைக்கடித்தது பகைவரால் அவமதிப்பும், தீங்கும் நேராத பேருதவி யா யமைதலால் அவனை 'இணையாரு மில்லான்' என்றார். உதவி- தொழிற்பெயர்; உத-பகுதி, வ்-சந்தி, இ-தொழிற்பெயர் விகுதி; வில் விகுதி எனினும் பொருந்தும். புணையாக - செயவென் வாய்பாட்டு

நிகழ்கால வினையெச்சம்; புணை என்பது ஆகு என்னும் வினைக்கு அடைமொழியாக நின்றதாதலால் புணையா-பகுதி, கு - சாரியை, அ- வினையெச்ச விகுதி என்க; புணை-தெப்பம்; இது ஆற்றைக் கடப்பவர்க்கு நீரில் அமிழாதபடி கரையை அடைவதற்கு உதவியா யிருத்தலால் இச்சொல் துணையை உணர்த்தவந்த குறிப்புச்சொல். திசையனைத்தும் எண்ணுக என்றது மனந்திகைக்க என்றபடி. (கசு)

நினைப்பென்னுங் காற்றசைப்ப நெஞ்சிடையே மூளும்
கனற்புகைய வேகின்றான் கண்டான்—பனிக்குருகு
தண்படா நீழற் றனிப்பேடை பார்த்திரவு
கண்படா வேலைக் கரை.

(இ-ள்.) நினைப்பு என்னும்-(தமயந்தியைப் பிரிந்ததனாலாகிய) கவலை என்னும், காற்று அசைப்ப - காற்றானது அசைப்பதினால், நெஞ்சிடை - மனத்தில், மூளும் - பற்றி எரிகின்ற, கனல் புகைய - பிரிவின் துயராகிய தீப் புகைவிட் டெரிவதினால், வேகின்றான் - வெதும்புகின்ற நளராசன், பனிக் குருகு - நடுக்கமுள்ள சேவற்கொக்கானது, படாம் - மேற்கட்டியினிழலை ஒத்த, தண் நீழல் - குளிர்ச்சியாகிய நிழலில், தனிப் பேடை - தனிமையாயுள்ள பெண் குருகை, பார்த்து - (வரும் வழியைப்) பார்த்துக்கொண்டு, இரவு-கழிந்த இராவில், கண்படாத - உறங்காததற்கு இடமாகிய, வேலைக்கரை - கடற்கரையை, கண்டான் - பார்த்தான், எ-று.

(வி-ரை.) கனல் புகைய என்பதில் லகரம் எதுகைத்தொடையின்பொருட்டு றகரமாகத் திரிந்தது. அசைப்பவென்னுங் காரணப்பொருட்டாகிய இறந்தகாலச் செயவெனெச்சம் புகையவென்பதையும், அதுபோன்ற இவ்வெச்சம் வேகின்றா னென்பதையும் கொண்டன. வேகின்றான்-நிகழ்கால வினையாலணையும்பெயர். புகைய-பெயரடியாகப் பிறந்த செயவெனெச்சம்; புகு - பகுதி, ஐ - வினைமுதற்

பொருண்மை விகுதி, உகரக்கேடு சந்தி; புகுதலுடையதென்பது பொருள்; "புகைபுகாவாயிலும் புகுவான்", "புகையும் புகற்கரிய பூழை" இவற்றாலுமுணர்க; இவ்வாறு முடிந்த புகை-பகுதி, ய்-சந்தி, அ-இறந்தகால வினையெச்சவிகுதி. பனி-முதனிலைத்தொழிற்பெயர். தண்படா நீழல் என்பதற்குக் குளிர்ச்சி கெடாத நிழலென உரைப்பினும் ஒக்கும். கண்படா என்னும் ஈறுதொகுத்தலாய் நின்ற எதிர் மறைப் பெயரெச்சம் கரை என்னும் இடப்பெயர் கொண்டது. வேலைக்கரை - இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடர். நீரால் கரைந்த இடமே கரையெனப்படுதலால் கரை வினைமுதற் பொருண்மை விகுதியாகிய இகரம் புணர்ந்துகெட்ட தொழிலடியாகப் பிறந்த பெயரென்க; தொழிலாகுபெயருமாம். (கள)

கொம்ப ரிளங்குருகே கூறா திருத்தியால்
அம்புயத்தின் போதை யறுகாலால்—தும்பி
திறக்கத்தே னூறுந் திருநாடன் பொன்னை
உறக்கத்தே நீத்தேனுக் கொன்று.

(இ - ள்.) கொம்பர் - (புன்னையினது) கொம்பிலிருக்கின்ற, இள குருகே - இளமையாகிய கொக்கே, அம்புயத்தின் போதை - தாமரையினது நாளரும்பை, தும்பி - வண்டு, அறு காலால் - ஆறு கால்களினாலும், திறக்க-திறந்ததினால், தேன் ஊறும்-தேன் சுரந்து பெருகுகின்ற, திரு நாடன் - அழகிய விதர்ப்பநாட்டையுடையான் பெற்ற, பொன்னை - பொன்போன்ற மகளை, உறக்கத்தே-நித்திரையிடத்தே, நீத்தேனுக்கு-பிரிந்தேனுக்கு, ஒன்று - ஒருமொழியையும், கூறாது - சொல்லாமல், (உன்மத்தமாய்) இருத்தி - இருக்கின்றாய், எ-று.

(வி-ரை.) ஆதலால் நீயும் என்போலப் பெடையைப் பிரிந்தாய் போலும் என்பது குறிப்பெச்சம். புன்னை நெய்தனிலத்துக் கருப்

பொருளிலொன்றுதலின், கொம்பரென்பதற்கு அதன் கொம்பரென்றும். கொம்பர் குற்றியலுகரமொழியாதலால் அர் போலியாகவந்தது. இருத்தி-முன்னிலை யொருமை நிகழ்கால வினைமுற்று; இதில் இ - விகுதி, அவ்விகுதியை அடுத்து நின்ற தகரம் நிகழ்கால முணர்த்தியது; இகரவிகுதி நிகழ்காலம் உணர்த்து மென்பாருமுளர். தும்பி-வினையடியாகப் பிறந்தபெயர்; தூம்பு (உட்டொளை) - பகுதி, இ - ஒன்றன்படர்க்கை விகுதி, உகரக்கேடு சந்தி, ஊகாரம் உகரமாதல் குறுக்கல் விகாரம்; இதற்குப்பொருள் தும்பிக்கை; இச்சொல் பகுதி, இ-ஒன்றன்படர்க்கை விகுதி, பகுதியீற்று இகரக்கேடு கடைக்குறை. அறுகாலா லென்பதில் முற்றும்மை விகாரத்தால் தொக்கது. பொன் காதற்பற்றிக் கூறும் பெயர்; அன்றி உவமையாகு பெயரெனினும் பொருந்தும். அம்புயம் - நீரில் பிறப்பது. மனையாளைப் பிரிந்ததனால் அறிவழிந்து இவ்வாறு குருகு முதலியவற்றைக் கண்டு கூறுவானாயினன். (கஅ)

புன்னை நறுந்தாது கோதிப் பொறிவண்டு
கன்னிப் பெடையுண்ணக் காத்திருக்கும்—இன்னருள்கண்
டஞ்சினா னவி யழிந்தா னறவுயிர்த்து
நெஞ்சினா லெல்லா நினைந்து.

(இ - ள்.) புன்னை - புன்னைமலரினது, நறு தாது-மணமாகிய தாதுக்களை, கோதி - கொழுதி (கிளறித்தள்ளி), பொறி வண்டு - புள்ளிகளையுடைய ஆண் வண்டு, கன்னிப் பெடை - இளமையாகிய பெண்வண்டு, உண்ண - உண்ணாநிற்க, காத்து - (அதற்குத் தீங்கு நேரிடாமல்) காத்துக்கொண்டு, இருக்கும் - (தான் உண்ணாமல்) சும்மா இருக்கின்ற, இன் அருள் கண்டு - இனிமையாகிய அருளைக் கண்டு, அஞ்சினான் - பயந்தானாகி, அற உயிர்த்து - மிகுதியும் பெருமூச்செறிந்து, நெஞ்சினால் - மனத்தில், எல்லாம் நினைந்து - (முன்

நடந்தவற்றை) எல்லாம் நினைந்து, ஆவி அழிந்தான் - உயிரழிந்தான், எ-று.

(வி-ரை.) புன்னை - முதலாகுபெயர். கோதி என்னும் இறந்த கால வினையெச்சம் காத்திருக்கும் என்னும் வினைகொண்டது. இவ் வினையெச்சத்தின் பகுதியாகிய கோதென்பது கொழுதென்பதன் மரூஉ. உண்ண என்பது இது நடவாநிற்கையில் இது நடந்ததென் னும் பொருளதாதலால் நிகழ்காலத்தில் வந்தது. காத்திருக்கும் என் பதை ஒரு சொல்லாகக்கொண்டால் கா - பகுதி, த் - சந்தி, து - சாரியை, இரு-பகுதிப்பொருள் விகுதி, உகரக்கேடு சந்தி, அனைத்து மொருபகுதி, க் - சந்தி, கு - சாரியை, உம் - பெயரெச்ச விகுதி, உகரக்கேடு சந்தி, இப்பெயரெச்சம் காரியப்பொருட்டாய் அருளென் னும் கருவிப்பெயர்கொண்டது. உண்ண என்பதை எதிர்கால வினை யெச்சமாக வைத்துரைப்பினும் பொருந்தும். அஞ்சுதலாவது உயிர்க் குப் பொதுக்குணமாகிய அருள் அறுகாற் சிறுபறவையினிடத் திருக்கையில், என்னிடத்தில்லாமல் மனையாளைத் துறந்தேனே என்று அறத்துக்கு அஞ்சுதல். ஆவியழிதல்-உயிரின் செய்கை அறு தல். ஆவியழிந்தான் - தினைவழுவமைதி. நெஞ்சு-இடவாகுபெயர். எல்லாம் நினைத்தலாவது இந்திரன் முதலானோர் முன் தமயந்திமாலே சூட்டியதையும், குலமகளுக்குக் கோக்காதலனைப் பெறலாமே என்று கூறி மக்களைப்பிரிந்து தன்னோடு காட்டுக்குச் சென்றதையும், மற்ற வற்றையு மெண்ணுதல். (கக)

காதலியைக் காரிருளிற் கானகத்தே கைவிட்ட
பாதகனைப் பார்க்கப் படாதென்றோ—நாதம்
அளிக்கின்ற வாழிவா யாங்கலவ வோடி
ஒளிக்கின்ற தென்னோ வுரை.

(இ - ள்.) அலவ - நண்டே, நாதம் அளிக்கின்ற - ஓசையைத் தருகின்ற (ஒலிக்கின்ற), ஆழிவாய் - கடற்கரையில், ஆங்கு - தூரத்

தில், ஒடி ஒளிக்கின்றது - ஓடி ஒளிக்கிறது, காதலியை - (தன்னிடம்)அன்புமிக்கமனையாளை, கார்இருளில்-நடுவிராத்திரி இருளில், கானகத்தே - வனத்தினிடத்தே, கைவிட்ட - (கருணையில்லாமல்) விட்ட, பாதகனை - பாவியை, பார்க்கப்படாது - பார்த்தல் ஆகாது, என்றோ - என்று நினைத்தோ, என்னோ - வேறுகாரணம் யாதோ, உரை - சொல்லாய், எ-று.

(வி-ரை.) நடுவிராத்திரி யிருளாதலாற் காரென்னும் அடைகொடுத்துக் 'காரிருள்' என்றும், அது கூறியமாத்திரத்தி னமையாமல் தன் கொடுமை தோன்றக் 'கானகத்தே' என்றும் கூறினான். எ - பிரிநிலை. ஒ - இரக்கப்பொருட்டு. கைவிட்ட என்னும் இறந்தகாலப்பெயரெச்சம் காரணப்பொருட்டாய்ப் பாதகனென்னும் பெயரின் பாதகமென்னும் முதனிலையாகிய சாரியப்பெயர் கொண்டது; கைவிட்ட வென்பது ஒரு சொல்லின்தன்மையது. பாதகனென்றது தன்மையில் படர்க்கை வந்த வழுவமைதி. பார்க்கப்படாதென்பது ஒன்றன்படர்க்கைச் செயப்பாட்டு எதிர்மறை வினைமுற்றாகிய ஒரு சொல்லெனக் கொள்ளாமல், படாதென்னும் அஃறிணை ஒன்றன்படர்க்கை எதிர்மறை வினைமுற்றுக்கு எழுவாய் பார்த்தல். பார்க்க என்னும் செயவெனெச்சம் தொழிற்பெயர்ப் பொருள்பட நின்றதெனக் கொள்க. ஆழி-தொழிலடியாகப் பிறந்த பெயர்ச்சொல்; ஆழ் - பகுதி, இ - வினைமுதற்பொருண்மை விகுதி; "ஆழியினாழ்ந்த துண்டோ" என்பதனாலு முணர்க; ஆழி-வட்டம்; அது கடலுக்குப் பண்பாகுபெயரெனினும் பொருந்தும்; இங்கு முதலாகுபெயரென்க. (உ0)

பானலே சோலைப் பசுந்தென்றல் வந்துலவும்
கானலே வேலைக் கழிக்குருகே—யானுடைய
மின்னிமைக்கும் பூணாளவ் வீங்கிருள்வா யாங்குணர்ந்தால்
என்னினைக்குஞ் சொல்லீ ரெனக்கு.

(இ-ள்.) பானலே - நீலோற்பலமே, சோலை - (மருத முதலிய நிலங்களிலுள்ள) சோலைகளில் படிந்துவருகின்ற, பசு தென்றல் - குளிர்ச்சியாகிய தென்றற்காற்று, வந்து உலவும்-வந்து உலாவுகின்று, கானலே - கடற்கரைச்சோலையே, வேலை - கடற்கரையைச் சார்ந்த, கழிக்குருகே - கழியின்கணுள்ள நாரையே, யான் உடைய - நான் கொண்ட, மின் இமைக்கும் பூணாள் - மின்னலைப்போல விளங்கும் ஆபரணத்தை அணிந்த தமயந்தி, ஆங்கு - அப்பாலைவநத்தில், அவ் வீங்கு இருள்வாய் - அந்த மிகுந்த இருளில், உணர்ந்தால் - விழித்துக் கொண்டால், என் நினைக்கும் - யாது நினைப்பாள், எனக்குச் சொல் வீர் - எனக்குச் சொல்லும், எ-று.

(வி-ரை.) சோலை யென்பதனோடு கானலென்பதனைக் கூட்டி இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடரெனினும் பொருந் தும். வந்தென்பதைக் காற்றின் பொதுப்பெயரெனக் கொண்டு தென்றல் வந்து என்பதும் அவ்வாறாம். இமைத்தல் - கண்ணின் மேலிதழால் கீழிதழைத் தட்டல்; ஒளிமிகுதிகாரணமாக உண்டாதல் பற்றி, இமைக்குமென்னுங் காரியம் காரணத்தின்மேல் நின்றது. என்-எவனென்பதன் மரூஉ அன்று; வினைப்பெயர்; இச்சொல், "என் னுக்கடைவுடையேன் யான்", "என்னுக்கோ வளர்கின்றதே" என நான்கனுருபும், "என்னோனும் விளம்பரிது" என மூன்றனுருபும் எற் றல்காண்க. பசுமை யென்னும் பண்பு பசும்புன லென்பதிற்போலப் பசுந்தென்ற லென்பதில் குளிர்ச்சியை உணர்த்திற்று. யானுடைய- எழுவாய்த் தொகாநிலைத்தொடர். உடைய பூணாள் - குறிப்புப்பெய ரெச்சத் தொகாநிலைத்தொடர். சொல்வீர்-முன்னிலை யேவற்பன்மை எதிர்கால வினைமுற்றாதலால் வகரம் எதிர்கால இடைநிலையன்று; விரித்தல் விகாரமெனக. (உக)

போவாய் வருவாய் புரண்டு விழுந்திரங்கி
நாவாய் குழற நடுங்குறுவாய்—தீவாய்

அரவகற்று மென்போல வார்கலியே மாதை
இரவகற்றி வந்தாய்கொ லின்று.

(இ-ள்.) நீவாய் - நீயினிடத்துச் சென்று, அரவு அகற்றும் - பாம்பை நீக்கிக்காத்த, என்போல - யான் வருவதும் போவதுமாய் விழுந்து புரண்டு வாயில் நாவுகுழறப்புலம்பி நடுங்கல்போல், ஆர் கலியே - கடலே, புரண்டு வருவாய் - (கரையில்) புரளாநின்று வருகி றாய்; விழுந்து போவாய் - விழாநின்று போகிறாய்; நாவாய் - மரக் கலம், குழற-(உன்மேல்) தடுமாற, இரங்கி-ஒலித்து, நடுங்குறுவாய்- அசைகின்றாய்; (ஆதலால்) மாதை-மனையாளை, இரவு - (நேற்றை) இரவில், அகற்றி - நீக்கி, இன்று வந்தாய்கொல்-இன்று வந்தாய்போ லும், எ-று.

(வி - ரை.) அலைபுரண்டு வருதல், விழுந்துபோதல், ஒலித்தல், மரக்கலம் தடுமாறும்படி அசைதலாகிய இயல்பாக நிகழுந் தன்மை யைச் சிலேடைப்பட ஒருவகையா லொழித்து, மனையாளைப் பிரிந் தோனது தன்மையாகிய வேறொன்றினைக் கடலின்மேல் ஏற்றிக் கூறியதாகையால் இச்செய்யுள் தற்குறிப்பேற்றம். கொல் என்பது அவ்வணிக் குரியதோர் இடைச்சொல். போவாய் வருவாய் என்பவற் றுக்கிசைய விழுந்து புரண்டென நில்லாமல் புரண்டு விழுந்தென நிற்றலால் எதிர்நிரனிறை. நாவாயொன்றும் பிரிமொழிச்சிலேடை. ஆர்கலி-நிறைந்த ஓசையுடைய தென்பது பொருளாதலால் வினைத் தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர்; நீரினிறைவையுடையதெனப் பொருள் கொள்ளின், தொழிலடியா கப் பிறந்த பெயரென்க; ஆர்கல் (நிறைதல்) -பகுதி, இ - ஒன்றன் படர்க்கை விகுதியென்க. கொம்பரிளங்குருகே என்னுஞ்செய்யுள் முதல், இச்செய்யுளீறாக நளராசன் கடற்கரையில் புள், புணரி, கானல் முதலியவை தன்சொற் கேட்குமபோல மொழிதல் அகப்

புறப் பெருந்திணையின் வகையுள் சுரநடை தன்னொடு ஒத்திருக்கின்ற மையால் அத்திணையினோர் துறையாகக்கொள்க. (உஉ)

முன்னீர் மடவார் முறுவற் றிரள்குவிப்ப
நன்னீ ரயோத்தி நகரடைந்தான்—பொன்னீர்
முருகுடைக்குந் தாமரையின் மொய்ம்மலரைத் தும்பி
அருகுடைக்கு நன்னாட் டரசு.

(இ - ள்.) பொன் - அழகிய, ஈர் - குளிர்ச்சியாகிய, முருகு - (உள்ளேசுரந்த) தேனானது, உடைக்கும் - பீறிச்செல்கின்ற, தாமரையின் - தாமரையினது, மொய் மலரை - (இதழ்) நெருங்கியமலரை, தும்பி - வண்டு, அருகு உடைக்கும் - பக்கத்தில் (நின்று) மலர்த்து கின்ற, நல் நாட்டு அரசு - நல்ல நிடதநாட்டரசன், முன் நீர் - கடலானது, மடவார் - மாதர்களது, முறுவல் திரள்-பற்கள்போலும் முத்தினிராசியை, குவிப்ப - (கரையில்) ஒதுக்காநிற்க, (அதைக் கடந்து கொண்டு) நல் - நன்மையாகிய, நீர் அயோத்தி நகர் - தன்மையையுடைய அயோத்தியாநகரத்தை, அடைந்தான் - சேர்ந்தான், எ-று.

(வி-ரை.) எல்லா நீரிலும் முதன்மைப்பட்ட நீராதலால் முன்னீரெனவும், ஆக்கல், காத்தல், அழித்தல் எனும் முத்தொழிலைச் செய்யும் நீர், அன்றி ஆற்றுநீர், ஊற்றுநீர், வேற்றுநீர் இம்மூவகை நீராலாகியதெனப் பொருள்கொண்டு முந்நீரெனவும் கடலுக்குப் பெயர் வழங்கும். குவிப்ப என்னும் வினையால் முறுவலென்னும் பொருள் உவமையின்மேல் நின்றது. முறுவற்றிரள்-ஒன்றன்கூட்டத் தற்கிழமைப்பொருட்டாகிய ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். தாமரையின் மலர் - சினைத்தற்கிழமைப்பொருட்டாகிய அவ்வேற்றுமை அத்தொடர். முருகு-பண்பாகுபெயர்; தாமரையின் பேரரும்பை முருகுடைக்கின்றமையால் பெருகுகின்ற அத்தேனில் தான் முழுகிப்போகாதபடி தும்பி அருகுநின் றுடைப்பதாயிற்று. மலர்-தொழிலடியாகப் பிறந்தபெயர்; மலர்-பகுதி, இ - வினைமுதற்பொருண்மை

விகுதி புணர்ந்து கெட்டது; அன்றி முதனிலைத் தொழிலாகுபெய ரெனினும் பொருந்தும். மலவென்பது பேரும்மை. (உரு)

மான்றேர்த் தொழிற்கு மடைத்தொழிற்கு மிக்கோனென்
றூன்றேய்க்கும் வேலா னுயர்நறவத்—தேன்றோய்க்கும்
தார்வேந்தற் கென்வரவு தானுரைமி னென்றுரைத்தான்
தேர்வேந்தன் வாருகனாய்ச் சென்று.

(இ-ள்.) தேர் வேந்தன் - தேர் விடுவதில் வல்ல நளராசன், வாருகன் ஆய்ச்சென்று - வாருகனென்னும் பெயரை யுடையவனா கிச் சென்று, மான் தேர்த் தொழிற்கும் - குதிரை கட்டியதேரை நடத்துந் தொழிலிலும், மடைத் தொழிற்கும் - உண்டியைச் சமைக் குந் தொழிலிலும், மிக்கோன் என்று - சிறந்தோனென்று சொல்லி, ஊன் தேய்க்கும் - (பகைவருடைய) உடலை அழிக்கும், வேலான் - வேலை யுடையானாகிய, உயர் நறவம் - உயர்வாகிய மணமமைந்த, தேன் - தேனானது, தோய்க்கும் - (வழிந்து தன்னிலே) தோயச் செய்யும், தார் வேந்தற்கு - மலர்மாலையணிந்த இருதுபன்ன அரசனு க்கு, என் வரவு - (அவ்விருதொழிலும் வல்ல) என்னுடைய வரு கையை, உரைமின் என்று - (வாயிலில் நிற்கும் தூதரே) சொல்லு ங்கோளென்று, உரைத்தான்-சொல்லினான், எ-று.

(வி-ரை.) மிக்கோன்-தன்மையில் படர்க்கைவந்த வழுவமைதி. மடை - தொழிலடியாகப் பிறந்தபெயர்; மடு - பகுதி, ஐ - செயப்படு பொருண்மைவிகுதி, உகரக்கேடு - சந்தி; இது இடுகுறிமாத்திரத்தில் சோற்றை உணர்த்துமாயினும் காரணங் கருதியவழித் தின்பன, நக் குவன, பருகுவனவற்றையு முணர்த்து மாதலால் காரண இடுகுறிப் பெயராய் நின்று நால்வகை உணவுகளையும் உணர்த்தியது. மடுத்த லென்பதற்கு உண்ணலென்பது பொருளாதலால் மடை என்பதை உணவெனப் பொதுப்பெயராகக் கொள்ளினும் இழுக்காது. முன்

னுள்ள நான்கனுருபிரண்டும் ஏழாம்வேற்றுமைப் பொருளில்வந்தன; இவ்வாறு வருவன உருபுமயக்கமன்று. பின்னுள்ள நான்கனுருபு கொடைப்பொருளது. னகரச்சாரியை பெற்றுவந்த மா என்னும் பல பொரு ளொருசொல் தேரென்னுஞ் சார்பினால் குதிரையை விளக்கி நின்றது. ஊன் - கருவியாகுபெயர். ஊன்றேய்க்கு மென்பது இரண் டாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொட ராதலாலும், நிலைமொழி அஃறிணைப்பெய ராதலாலும், [நன்-உருபு-சூ-கஎ-இல்] எண்ணின் கண் நின்ற இறந்ததுதழீஇய இழிவு சிறப்பும்மையால், [மெய் - சூ- கடு - இல் கூறிய] இயல்பின் இயல்பாயிற்று. மான்றேரென்பதன் நிலைமொழி யீற்றிலுள்ள னகரம் சாரியை ஆதலால், [நன் - மெய் - சூ-நகூ-இன்படி] இயல்பாயிற்று. வரவு-தொழிற்பெயர்; வா-பகுதி, ரு-விரித்தல் விகாரம், அ-சாரியை, வு-புடைபெயர்ச்சி விகுதி, உக ரக்கேடு சந்தி, பகுதி ஆ அவ்வானது குறுக்கல் விகாரம். (உச)

அம்மொழியைத் தூத ரரசற் கறிவிக்கச்
செம்மொழியாத் தேர்ந்ததனைச் சிந்தித்தே—இம்மொழிக்குத்
தக்கானை யிங்கே தருமி னெனவுரைக்க
மிக்கானுஞ் சென்றான் விரைந்து.

(இ - ள்.) அம் மொழியை - அச்சொல்லை, தூதர் - (வாயிலி னின்ற) தூதர், அரசற்கு - இருதுபன்ன அரசனுக்கு, அறிவிக்க - தெரிவித்ததனால், அதனைச் சிந்தித்து - (அரசன்) அச்சொல்லை எண்ணி, செம மொழி ஆக - (அது) மெய்ம்மையாகிய சொல்லாக (உண்மைச் சொல்லாக), தேர்ந்து - துணிந்து, இம் மொழிக்கு - இச் சொற் பொருளுக்கு, தக்கானை - தக்க அவ்வொருவனை, இங்கே - என்னிடத்தில், தருமின் என - அழைத்து வாருமென்று, உரைக்க - அரசன் சொல்ல, (அவ்வாறே தூதரழைத்துச் செல்ல) மிக்கானும்- உயர்ந்தோனாகிய நளனும், விரைந்து சென்றான்-விரைவாகப் போயி னான், எ-று.

(வி-ரை.) உண்மை யாவரும் ஒப்ப ஏற்றுக்கொள்வதாதலால் அதனைச் 'செம்மை' என்றார். மொழி-காரணங் கருதியபோது மொழியப்படுவன வெல்லாம் மொழியாயினும், அவற்றுக்கு வழங்காமல், காரணத்தைக் கருதாமல் இடுகுறிமாத்திரத்தில் எழுத்தாலாக்கப்பட்டு ஐம்பாற்பொருள்களையு முணர்த்துவனவற்றுக்கு வழங்கலால் காரணவிடுகுறிப்பெயர்; இதனைத் தொழிலடியாகப் பிறந்தபெயராக வைத்து மொழி-பகுதி, ஐ-செயப்படுபொருண்மை விகுதி புணர்ந்து கெட்டதென்க; முதனிலைத் தொழிலாகுபெயருமாம். தருமின்-ஏவற்பன்மைவினை; தா - பகுதி, மின்-ஏவற்பன்மை எதிர்காலவிகுதி, பகுதி ஆ அவ்வானது குறுக்கல், ரு-விரித்தல். மிக்கானுமென்ற உம்மை ஒருபுடை இறந்ததுதழீஇய எச்சவும்மை. விரைந்து-செயவெனச் சந்திரிபு. (உரு)

பொய்யடையாச் சிந்தைப் புரவலனை நோக்கித்தன்
செய்ய முகமலர்ந்து தேர்வேந்தன்—ஐயாநீ
எத்தொழிற்கு மிக்கானி யாது பெயரென்றான்
கைத்தொழிற்கு மிக்காகக் கண்டு.

(இ - ள்.) பொய் அடையாத - பொய் சேராத, சிந்தைப் புரவலனை-எண்ணமுடைய நளனை, நோக்கி-பார்த்து, கைத்தொழிற்கு - (தேர்நடத்தல் உண்டிசமைத்தல் ஆகிய) கைத்தொழிலில், மிக்கான் ஆக - சிறந்தவனாக, கண்டு - (அவனது முகக்குறியால்) உணர்ந்து, தேர் வேந்தன் - தேர்ச்சேனையுடைய இருதுபன்னராசன், தன் செய்ய முகம் மலர்ந்து - தன் அழகிய முகமலர்ந்து, ஐயா - ஐயனே, நீ எத்தொழிற்கு மிக்கான்-நீ எந்தத்தொழிலில் தேர்ந்தவன், பெயர் - உன் பெயர், யாது என்றான் - என்ன என்று கேட்டான், எ-று.

(வி-ரை.) 'கைத்தொழிற்கு மிக்கானைக் கண்டு' எனப் பாடமாயின், சுட்டுப்பொருள்பட நின்றதாகக் கொண்டு, 'கைத்தொழிலில்

மிக்க அவனை முகக்குறியால் அத்தொழிலில் மிகுந்தவனென்பதாக அறிந்து'எனப்பொருள் கூறுக. கைத்தொழில்-மூன்றாவதன் கருவிப் பொருளில் வந்த ஆறாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். மலர்ந் தென்னுஞ் சினைவினை என்றானென்னும் முதல்வினை கொண்டது. புதியவர் ஒருவனை நெருங்குதற்கு இன்முகம் அவனுக்கு இன்றி யமையாததாயிருத்தலின் 'செய்ய முகமலர்ந்து' என்றார். பொய் யடையாத - எழுவாய்த்தொடர்; எனவே மறந்தும் பொய் கூறக் கருதானென்பது குறிப்பெச்சம். புரவலன் - புரத்தலில் (காப்பதில்) வல்லவன். மிக்கானியாது - யகரம் தன்னை யொழிந்த மெய்களுள் ஒன்றாகிய னகரத்துக்கு முன்வந்தமையால் இடையே இகரச்சாரியை வந்த இவ்வழக்குச் சிறுபான்மை [நன்-மெய்-கூ-ந]; இகரம் தன்னு தானால் வெண்பாவுக்குரிய சீருந் தளையுஞ் சிதையுமாறு காண்க. ()

அன்ன மிதிப்ப வலர்வழியுந் தேறல்போய்ச்
செந்நெல் விளைக்குந் திருநாடர்—மன்ன
மடைத்தொழிலுந் தேர்த்தொழிலும் வல்லன்யா னென்றான்
கொடைத்தொழிலின் மிக்கான் குறித்து.

(இ-ள்.) கொடைத் தொழிலில் - ஈகைத்தொழிலில், மிக்கான்-மிகுந்தவனாகிய நளன், அன்னம் - அன்னப்பறவை, மிதிப்ப - மிதித்ததினால், அலர் வழியும் - தாமரைமலரினின்றும் வழிகின்ற, தேறல் போய் - தேன் பாய்ந்து, செம் நெல் - செந்நெற்பயிரை, விளைக்கும் - விளையச்செய்யும், திரு நாடர்-அழகிய கோசலநாட்டாருக்கு, மன்ன-அரசனே, மடைத்தொழிலும் - உணவு சமைத்தற்றொழிலும், தேர்த் தொழிலும் - தேரை நடத்துந் தொழிலும், யான் வல்லன் - யான் வல்லன், என்றான் குறித்து - என்று அவ்விருதொழிலையும் எடுத் துச் சொல்லினான், எ-று.

(வி - ரை.) தேறல்-தொழிலாகுபெயர். விளைக்கும்-பிறவினை யாகிய எதிர்காலச் செய்யுமென் பெயரெச்சம்; விளை-பகுதி, க்-சந்தி,

கு-சாரியை, உம்-எதிர்காலப்பெயரெச்சவிகுதி, உகரக்கேடு - சந்தி; இவ்விளையென்பதே தன்வினைக்கும் பகுதி; இச்சொல்லில் பிற வினைக்குறியாகிய குச்சாரியை இன்றி விளையுமென வரும். மன்னன் - இடைச்சொலடியாகப் பிறந்த ஆண்பாற் படர்க்கைப்பெயர்; மன் (மிகுதி) - பகுதி, ன்-சந்தி, அன் - ஆண்பாற்படர்க்கை விகுதி; இது விளியுருபேற்று ஈறுகெட்டது, மிகுந்த செல்வப்பொருளுடையானென்பது பொருள். கொடைத்தொழில் - இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடர்; விரிந்தால் கொடையாகிய தொழி லென விரியும்; கொடை-தொழிற்பெயர்; கொடு-பகுதி, ஐ - புடைபெயர்ச்சி விகுதி, உகரக்கேடு சந்தி; இச்சொல் கொடுக்கப்பட்ட பொருளை உணர்த்துவதானால் ஐ செயப்படுபொருண்மை விகுதி யென்க. மடைத்தொழில் தேர்த்தொழில் வல்லன் என்பது திணை வழுவமைதி. (உஎ)

குறித்துரைத்த வாறக் குலவேந்த னென்று
மறித்துரையா னாங்கவனும் வைக—வெறித்தவிள
மான்போல் விழியாண் மகிழ்நனிலை யேதெனவே
யூன்போ லுயங்குவா ளோர்ந்து.

(இ-ள்.) குறித்து உரைத்த ஆறு-(வாகுகன்) குறித்துச் சொல்லியபடியே, அக் குல வேந்தன் - சிறந்த அரசனாகிய அவ்விருதுபன்னன், மறித்து உரையான் - தடுத்துப்பேசாமல், என்று - (அவ்விரு தொழிலிலும் அமரும்படி அவனை) ஏற்றுக்கொண்டதனால், ஆங்கு - அவ்வயோத்தியாநகரத்தில், அவனும் வைக - அவ்வாகுகனும் தங்கியிருக்க, வெறித்த - மருண்ட, இள மான்போல் - இளமையாகிய மான் பார்வைபோலும், விழியாள் - பார்வையையுடைய தமயந்தி, மகிழ்நன் நிலை - நாயகனுடைய நிலைமை, ஏது என - எத்தன்மையதென்று, ஓர்ந்து - எண்ணி, ஊன்போல-(உயிர் பிரிந்த) உடல்போல, உயங்குவாள் - வாடுவாளாகி, எ-று.

(வி-ரை.) என்று-என என்னுங் காரணப்பொருட்டாகிய இறந்தகாலச் செயவெனெச்சத்திரிபு; என்-பகுதி, ற் - இறந்தகால இடைநிலை, உ-வினையெச்சவிகுதி, லகரம் றகரமாதல் சந்தி, அது னகரமாதல் மெலித்தல்; இவ்விகாரம் பெறுமல் ஏற்றெனவும் வழங்கும். முன்னுள்ளபோல் போலென்னும் இடைச்சொலடியாகப் பிறந்த வினைத்தொகை வினைச்சொல். மகிழ்நன் - தொழிலடியாகப் பிறந்த ஆண்பாற்படர்க்கைப்பெயர்; மகிழ்-பகுதி, ந்-பெயரிடைநிலை, அன்-ஆண்பாற்படர்க்கைவிகுதி; இது மகிணனென மரூஉவாயும் வழங்கும்; பொருள்-மனையாளது நற்குண நற்செயலைக் கண்டு களிப்பவன்; அன்றி மனையாளால் களிக்கப்பட்டவனென்பது. உயங்குவாளென்ற குறிப்பால் ஊனென்றது உயிர் பிரிந்த உடலெனப்பட்டது. உயங்குவா ளென்னும் வினைமுற்று வினையெச்சமாய் மேல் வரும் பாட்டில் உணர்ந்தென்னும் வினை கொண்டது. (உஅ)

என்னை யிருங்கானி னீத்த விகல்வேந்தன்
தன்னைநீ நாடுகெனத் தண்கோதை—மின்னைப்
புரைகதிர்வேல் வேந்தன் புரோகிதனுக் கிந்த
உரைபகர்வ தானா ளுணர்ந்து.

(இ-ள்.) தண் கோதை - குளிர்ச்சியாகிய மாலையை யணிந்த தமயந்தி, உணர்ந்து - துணிந்து, மின்னை - மின்னலை, புரை - ஒத்த, கதிர் - கிரணங்களையுடைய, வேல் - வேலைத்தாங்கிய, வேந்தன் - வீமராசனுடைய, புரோகிதனுக்கு - புரோகிதனாகிய சுவேதனுக்கு, என்னை - என்னை, இரு கானில் - பெரிய வனத்தில், நீத்த - விட்டுச் சென்ற, இகல் வேந்தன் தன்னை - போரிற் சிறந்த அரசனை, நீ நாடுக என - நீ தேடக்கடவாயென்று, இந்த உரை - இச்சொல்லைப் பகர்வது ஆனாள் - சொல்வதில் ஆயினாள் (சொல்லத் தொடங்கினாள்), எ-று.

(வி-ரை.) தண்கோதை - பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். இகலென்பதைப் போரை

யுணர்த்தும் பெயராகக் கொண்டு, இகல்வேந்த னென்பதை இரண்டாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடராகக் கொள்ளலே அன்றி, வினைத்தொகைநிலைத்தொடராகவுங் கொள்ளலாம்; விரிந்தால் இகலின்ற, இகலின, இகலும் என விரியும். புரை கதிர்-இடைச்சொலடியாகப் பிறந்த வினைத்தொகைநிலைத்தொடர்; விரிந்தால் புரைகின்ற, புரைந்த, புரையும்என விரியும். பகர்வது-எதிர்காலத்தொழிற்பெயர்; பகர்கின்றது, பகர்ந்தது எனக் கால இடைநிலைபெற்ற உடன்பாட்டுத் தொழிற்பெயரிலும், முயற்று, வேது என இடைநிலை பெறாத தொழிற்பெயரிலும், பகராதது என எதிர்மறைத்தொழிற்பெயரிலும் இத்துவ் விகுதி வரும். புரோகிதன்-மேல்வரும் நற்காரியத்தை முன்னே அறிவிப்போன். (உ௬)

> காரிருளிற் பாழ்மண்ட பத்தேதங் காதலியைச்
> சோர்துயிலி னீத்த றுணிவன்றே—தேர்வேந்தர்க்
> கென்றறைந்தா னோர்நின் றெதிர்மாற்றந் தந்தாரைச்
> சென்றறிந்து வாவென்று டேர்ந்து.

(இ-ள்.) தேர்ந்து-(தமயந்தி) ஆலோசித்து; சென்று-நீ போய், தேர் வேந்தர்க்கு-தேர்ச்சேனையையுடைய அரசர்க்கு, துணிவு - துணிவென்பது, கார் இருளில்-கருமையாகிய இருளில்(நடுஇராத்திரியில்), பாழ் மண்டபத்து - பாழாகிய மண்டபத்தில், தம் காதலியை - தம்முடைய ஆசைநாயகியை, சோர் துயிலில் - அயர்ந்த நித்திரையில், நீத்தல் அன்றே என்று-கைவிட்டுப் பிரிதலன்றே என்று, நேர் நின்று-(உன்னால் சந்தேகிக்கப்படுமவர்க்கு) எதிரில் நின்று, அறைந்தால்-சொன்னால், எதிர் மாற்றம் தந்தாரை - மறுமொழி சொன்னவரை, அறிந்துவா என்றாள்-அறிந்துவாவென்று சொல்லினாள், எ-று.

(வி-ரை.) காதலியென்னும் பெண்பாற்படர்க்கைப் பெயரில் இ-பெண்பாற் படர்க்கை விகுதி. துயில்-முதனிலைத்தொழிற்பெயர்;

இதனடியாகத் துயிலல், துயின்றான், துயின்ற, துயின்று, துயி லாமை, துயிலான், துயிலாத, துயிலாமல் என வினைவிகற்பங்கள் பிறக்கும். அன்று-பண்படியாகப் பிறந்த ஒன்றன்படர்க்கைக் குறிப்பு வினைமுற்று; ஓ-எதிர்மறை; இரண் டெதிர்மறையைப் புணர்த்திக் கூறல் தேற்றப்பொருள் பயத்தற்கென்க; பாழ்மண்டபம்-பண்புத்தொ கைநிலைத்தொடர்; விரிந்தால் பாழாகிய மண்டபமென விரியும்; பாழ்-பயன்படாமைப் பொருளது; சென்றமாதம் எடுத்த கிணறு பாழாய்க் கிடக்கிறதென்றால் பயன்படாததாய்க் கிடக்கிறதென்பதன்றிப் பழ மையதாய்க் கிடக்கிறதென யாரும் பொருள் கொள்ளார்; கருங்குழல் கார்க்குழலென்பதுபோலப் பழமறை பாழ்மறை, பழம்பாடல் பாழ்ம் பாடலென வழங்கல் எங்கு மில்லாமையால் பாழென்பது பழமை யின் விகாரமெனல் விபரீதம். வேந்தரென்பது சாதிப்பன்மை. குல மகளுக்குத் தன் நாயகனை உயர்த்துக் கூறல் மரபாதலால் அவ்வாறு கூறிய பால்வழுவமைதி எனினுமொக்கும். சோர் என்னும் வினைத் தொகையாகிய காலங்கரந்த பெயரெச்சம் தன் காரணமாகிய துயி லென்னும் பெயர் கொண்டது. (௫0)

மின்னாடு மால்வரையும் வேலையும் வேலைசூழ்
நன்னாடுங் கானகமு நாடினன்—மன்னு
கடந்தாழ் களியானைக் காவலனைத் தேடி
அடைந்தா னயோத்தி நகர்.

(இ-ள்.) மின் ஆடும் - மின்னல் தோன்றுகின்ற, மால்-மேகந் தவழ்கின்ற, வரையும் - மலையிலும் மலையைச் சேர்ந்த நிலத்திலும், வேலையும் - சமுத்திரத்திலும், வேலை சூழ்-கடலைச்சார்ந்த, நன்னாடும்-நல்ல நாட்டிலும், கான் - காட்டிலும், அகமும் - காட்டைச்சார்ந்த நிலத்திலும், நாடினன் - கருதிச்சென்று, மன்னு - மாறாத, கடம் - மதநீர், தாழ் - ஒழுகுகின்ற, களி யானை - களிக்கும் யானைச் சேனை

யையுடைய, காவலனைத் தேடி - அரசனைத் தேடாநின்று, அயோத்தி நகர் - அயோத்தி நகரத்தை, அடைந்தான் - சேர்ந்தான், எ - று.

(வி-ரை.) வரை - தானியாகுபெயர். வேலை - வினையாகுபெயர். அகமுமென்ற உம்மையைக் காவென்பதனொடு கூட்டுக. நகரடைந் தானெனவே மருதத்தில் நாடுதலைக் கூறவேண்டாதாயிற்று. காவலன்-தொழிலடியாகப்பிறந்த பெயராகக் கொண்டால் காவல்-பகுதி, அன்-ஆண்பாற் படர்க்கை விகுதி; காப்பதில் வல்லவெனை உரைத்துத் தொடர்மொழியாகக் கொண்டால், கா - முதனிலைத்தொழிற்பெயர்; காவலன் - ஏழாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்; வலன்-பண்படியாகப் பிறந்த குறிப்புவினைப்பெயரென்க. யானைக்காவல னென்பதில் யானை சாதிபற்றிவந்த அடைமொழி. (௩௧)

கானகத்துக் காதலியைக் காரிருளிற் கைவிட்டுப்
போனதுவும் வேந்தர்க்குப் போதுமோ—தானென்று
சாற்றினா னந்தவுரை தார்வேந்தன் றன்செவியில்
ஏற்றினான் வந்தா னெதிர்.

(இ - ள்.) கானகத்து - வனத்திலே, காதலியை - தன்னிடத் தன்புள்ள நாயகியை, கார் இருளில் - மிக்க இருளில், கைவிட்டுப் போனதுவும் - விட்டுப்பிரிந்ததும், வேந்தர்க்கு - அரசராயினார்க்கு, போதுமோ - தகுமோ, என்று சாற்றினான் - என்று சொல்லி, அந்த உரை - அச்சொல்லை, தார் வேந்தன் - (தமயந்தியினால்) மாலையணியப்பெற்ற நளராசனது, செவியில் ஏற்றினான் - காதில் ஏறச் செய்தான், எதிர் வந்தான் - (சுதேவனுக்கு) எதிரேவந்தான் (நளன்), எ-று.

(வி-ரை.) கானகம்-கானினது அகமென ஒற்றுமைப் பொருளில்வந்த ஆறாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்; கானாகிய அகமெனப் பண்புத் தொகைநிலைத்தொட ரெனினும் ஒக்கும். "உயிர்

வரின் உக்குறள்" என்னுஞ் சூத்திரத்தில் கெடுமென்னாது ஒடுமென்றமையால் குற்றுகரங் கெடாமல் "இஈஐவழி" என்னும் பொதுவிதியை ஏற்றுப் போனதுவுமென வந்தது; பின் வரும் நீத்ததுவு மென்பதும் இது. 'அந்தவுரை தார்வேந்தன் றன்செவியில், ஏற்றினன் வந்தா னெதிர்'என்பதற்கு 'அச்சொல்லைப் பூமாலையணிந்த நளராசன் தன் காதில் ஏற்று எதிரில் வந்தான்'என வுரைக்கினும் பொருந்தும். ஏற்றினன்-பிறவினையாகிய ஆண்பாற் படர்க்கை இறந்தகால வினைமுற்று; எல் - தன்வினைப்பகுதி, று - பிறவினைபடுத்தும் விகுதி, லகரம் றகரமாதல் சந்தி பெற்றுநின்ற ஏற்று பகுதி; இவ் வினைமுற்று வினையெச்சமாய்நின்றது. இன்னமும் பல தீமைகள் செயல்வேண்டுமெனப் பொருள் தரலால் உம்மை எதிரதுதழீஇய எச்சவும்மை. ஓ-எதிர்மறை. சுவேதன் தன்னிலேபேச அச்சொல்லை நளன் கேட்டானாதலால் 'சாற்றி ஏற்றினன்' என்றார். சாற்றினனென்னும் வினைமுற்று வினையெச்சமாய் நின்றது. (கூஉ)

ஒண்டொடி தன்னை யுறக்கத்தே நீத்ததுவும்
பண்டை விதியின் பயனேகாண்—தண்டாளப்
பூததாம வெண்குடையான் பொன்மகளை வெவ்வனத்தே
னீத்தானென் றையுறே னீ.

(இ-ள்.) ஒள் தொடிதன்னை-ஒளியாகிய வளையணிந்தநாயகியை, உறக்கத்து-தூங்குகையில், நீத்ததுவும்-விட்டுப்பிரிந்ததும், பண்டை விதியின்-முன்னை ஊழினது, பயனே-பயனே ஆகும்; தண் தாளம்-குளிர்ச்சியாகிய முத்துக்களினாற்செய்த, பூ - அழகிய, தாமம் - மாலைகளையுடைய, வெள் குடையான் - வெண்கொற்றக் குடையையுடைய வீமராசனது, பொன் மகளை-பொன்போலு மகளை, வெம் வனத்து-வெம்மையாகிய வனத்தில், நீத்தான் என்று-(அவள் நாயகன் வேண்டுமென்று) கைவிட்டானென்று, நீ ஐயுறேல் - நீ ஐயப்படாதை, எ-று.

(வி-ரை.) ஒண்டொடி பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். பயன் பயமென்னும் பண்புப்பெயரின் ஈற்று மகரம் இருகுறிலை யடுத்ததாகையால் அதற்கு னகரம் போலியாக வந்தது. காண்-முன்னிலையொருமை அசைச்சொல். ஐயுறேல் - ஏவலொருமை எதிர்மறைவினை; ஐயமென்னும் பண்புப்பெயரை வினைப்படுத்துதற்கு உரிச்சொலடியாகப் பிறந்த உறு என்னும் முதனிலைபுணர்ந்து, ஒருசொல்லின் தன்மைத்தாய்நின்ற ஐயுறு-பகுதி, ஆ-எதிர்மறை விகுதி புணர்ந்துகெட்டது, ஏல்-ஏவலொருமை விகுதிபெற்று முடிந்தது; ஏல் விகுதி எதிர்மறை ஏவற்கே வரும்; அங்ஙனமாயின், எதிர்மறை ஆகாரம் வேண்டாது நின்றதெனின், செய்வல், உண்பலென்னும் தன்மை யொருமை எதிர்காலவினைமுற்றுக்கே அவ்விகுதி வருதலால் வகரபகரங்களை எழுத்துப் பேறெனக் கொள்ளாமல், இடைநிலையே எனக்கொண்டு, அல் விகுதியைத் தன்மையொருமை எதிர்காலமுற்றுக்கே யுரியது; எதிர்கால முணர்த்தாதெனக் கொள்ளல்போல ஏல் விகுதி எதிர்மறை உணர்த்திலதென்க; இவ்வாறே உண்ணுமல், உண்ணுமே முதலியவற்றில் மல், மே எதிர்மறையில் வரும் விகுதிகள் எதிர்மறை உணர்த்தாமை காண்க. நீத்ததுவுமென்ற உம்மை முன்னே செல்வ மிழந்து வனத்தடைந்த தன்றி* எனப் பொருள்படலால் இறந்ததுதழீஇய எச்சவும்மை. இடையிலுள்ள ஏ தேற்றம்; மற்ற இரண்டும் ஈற்றசை. நளராசன் தன்னைப் படர்க்கையிடத்தானாக வைத்துக் கூறியது இச்செய்யுள். ()

அம்மொழி கேட் டந்தணனு மையுற் றுருநோக்கி
விம்முகருங் குழலைமீண் டடைந்தான்—தெம்மன்னர்
ஊன்றோய் வடிவேல் விதர்ப்பன்ற னெண்ணகர்க்கே
வான்றோய்பொற் கோயிலிடை வந்து.

(இ - ள்.) அ மொழி கேட்டு - (வாகுகன் சொல்லிய) அச்சொல்லைக்கேட்டு, அந்தணனும் - சுதேவனென்னும் பிராமணனும்,

உரு நோக்கி - (அவனுடைய) உருவத்தைப் பார்த்து, ஐயுற்று - சந்தேகித்து, தெவ் மன்னர் - பகையரசர்களுடைய, ஊன் தோய் - உடலில் முழுகுகின்ற, வடி வேல் - கூரிய வேலைத்தாங்கிய, விதர்ப்பன் தன் - விதர்ப்பராசனுடைய, ஒள் நகர்க்கு - அழகாகிய நகரத்துக்கு, மீண்டு - திரும்பி, வான் தோய் - மேகம் படிகின்ற, பொன் கோயில் இடைவந்து - பொன்னாற்கட்டிய மாளிகையினிடத்து வந்து, விம்மு - (நாயகனுடைய பிரிவால்) துன்பப்படுகின்ற, கருங்குழலை - தமயந்தியை, அடைந்தான் - சேர்ந்தான், எ-று.

(வி-ரை.) மொழியால் நளனென்றும், உருவால் அவனல்லனென்றும் துணியப்படாமையால் ஐயுறுவானாயினன். அந்தணனுமென்றவும்மை ஒருபுடை இறந்ததுதழீஇய எச்சவும்மை. அந்தணன்: அம் - அழகிய, தணன் - தண்மையாகிய குணமுடையோனெனவும், அந்தம் - வேதமுடிவிற் கூறிய பொருளை, அணன் - பொருந்தினவனெனவும் பொருள் கூறுவார்; இச்சொல் இடுகுறிமாத்திரத்தில் பிராமணனையும், மேற்சொல்லிய காரணங் கருதியபோது அத்தன்மையுடையானையு முணர்த்தலால் காரணவிடுகுறிப்பெயர், ஆயினும் இங்கு இடுகுறிமாத்திரையாய் நின்றது. கருங்குழல் - பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர்! ஊன்றோய் - ஏழாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்; நிலைமொழியீற்று னகரம் [நன்-மெய்-கூ-கஉ-ஆல்] இயல்பாயிற்று; இரண்டாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடராகக் கொள்ளின் அன்னகரம் [உருபுப்புணரியல் - கூ-சு-சு-இல்] எண்ணின் கணின்ற இறந்தது தழீஇய இழிவுசிறப்பும்மையால் இயல்பின் இயல்பாயிற்றெனக. தெம்மன்னர்-தெவ் என்னும் நிலைமொழி யீற்று வகரம் வருமொழி மகரமாதலால் அதுவாகத் திரிந்தது [நன்-மெய்-கூ-உஉ]; "தெவ்வென் மொழியே தொழிற்பெயரற்றே, மவ்வரின் வஃகான் மவ்வுமாகும்." (உச)

எங்க ணுறைந்தனைகொ லெத்திசைபோய் நாடினைகொல்
கங்கைவள நாட்டார்தங் காவலனை—அங்குத்
தலைப்பட்ட வாறுண்டோ சாற்றென்றாள் கண்ணீர்
அலைப்பட்ட வாகத்தா ளாங்கு.

(இ-ள்.) கண் நீர் - கண்ணீரினது, அலைப்பட்ட - அலையைப் பொருந்திய, ஆகத்தாள் - மார்பையுடைய தமயந்தி, ஆங்கு - சுதேவ னென்னும் அந்தணன் வந்தபோது, எங்கண் உறைந்தனை - எங்கு தங்கினாய், எத்திசை போய் - எந்தத் திக்கிற்போய், கங்கை - கங்கை யாற்றையுடைய, வளநாட்டார்தம் - வளப்பமாகிய நிடதநாட்டாரது, காவலனை - அரசனை, அங்கு-நீ சென்ற திக்கில், தலைப்பட்ட ஆறு-கூடியவிதம், உண்டோ-உள்ளதோ, சாற்று என்றாள்-சொல்லென்று கேட்டாள், எ-று.

(வி-ரை.) தேடாது சிலநாள் கழித்து வந்தாயோ என்பாள் 'எங்கணுறைந்தனை' என்றாள். எங்கண் - எகரவினா இடைச்சொல் கண்ணென்னும் இடப்பெயரோடு புணர்ந்தபோது இடையே இன மெல்லெழுத்து மிக்கது. உறைந்தனை-முன்னிலையொருமை இறந்த கால வினைமுற்று; உறை-பகுதி, த்-சந்தி, த்-இறந்தகால இடைநிலை, அன்-சாரியை, ஐ-முன்னிலையொருமைவிகுதி, சந்தித் தகரம் நகர மாதல் மெலித்தல். ஓ-வினா. மேலாடை சோர்ந்ததையும் அறிந்திலளென்பதைக் குறிப்பித்ததற்குக் 'கண்ணீர் அலைப்பட்ட வாகத்தாள்' என்றார். கொல் இரண்டும்-அசை. அலை - தொழிலடியாகப் பிறந்த பெயர்; அலை - வினைமுதற்பொருண்மை யுணர்த்தும் இகரவிகுதி புணர்ந்து கெட்டுநின்றது. அலைப்பட்ட வெனப் பகரத்தோற்றம் "அல்வழி இ ஐ முன்ன ராயின், இயல்பும் மிகலும் விகற்பமும் ஆகும்," என்பதில் விகற்ப மென்பதனால் வந்தது. (௩௫)

வாக்கினான் மன்னவனை யொப்பான் மறித்தொருகால்
ஆக்கையே நோக்கி னவனல்லன்—பூக்கமழும்

*கூந்தலாய் மற்றக் குலப்பாக னென்றுரைத்தான்*
*ஏந்துநூன் மார்ப னெடுத்து.*

(இ-ள்.) ஏந்து - தாங்குதற்குரிய, நூல் மார்பன் - பூணூலைத் தரித்த மார்பனாகிய சுவேதன், பூ கமழும்-மலர் மணக்கின்ற, கூந்தலாய் - கூந்தலையுடையாளே, அக் குலப்பாகன் - நீ சொல்லியபடி பரீட்சிக்கப்பட்ட சிறந்த தேர்ப்பாகன், ஒருகால்-ஒருமுறை, வாக்கினால் - பேசுஞ் சொல்லினால், மன்னவனை ஒப்பான் - (நம்முடைய) அரசனை ஒக்கின்றான்; மறித்து - (அச்சொல்லை) ஒழித்து, ஆக்கையே - உடலொன்றையுமே, நோக்கின் - பார்த்தால், அவன் அல்லன்-நம்மரசனல்லனாயிருக்கிறான், என்று உரைத்தான் - என்று சொல்லினான், எ-று.

(வி-ரை.) வாக்கு கருவியாகுபெயராய்ச் சொல்லை யுணர்த்திற்று. பாகன் அவனல்லனென்பது எழுவாய்த் தொகாநிலைத்தொடர்; பாகன் அன் விகுதிக்கும், அவன் அல் என்னும் பண்படிக்கும் உரியனவாய் நின்றன. பூக்கமழு மென்பது எழுவாய்த்தொகாநிலைத் தொடராதலால் இனமெல்லெழுத்து மிகாதாயிற்று. கூந்தலாளென்னும் சினையடியாகப் பிறந்தபெயர் விளியுருபேற்றுக் கூந்தலாயென நின்றது. பூக்கமழுங் கூந்தலாயெனவே பூ கூந்தலையடைந்து மிக்க மணம் பெறுகின்றதென்பது. கமழுமென்னும் பெயரெச்சம் கூந்தலென்னும் கருவிப்பெயர் கொண்டது. ஒப்பான் என்னும்' வினைமுற்றில் பகரம் நிகழ்காலங் காட்டியது; இதனைத் தொழிலடியாகப் பிறந்த குறிப்பு வினைமுற்றாகக் கொள்ளினும் இழுக்காது; ஒப்பு - பகுதி (தொழிற்பெயர்), ஆன்-விகுதி, உகரக்கேடு - சந்தி. ஆக்கை-யாக்கப்பட்டதென்னும் பொருளில் ஆ-பகுதி (யா என்பதன்மரூஉ), க்-சந்தி, கு-சாரியை, ஐ-செயப்படுபொருண்மை விகுதி, உகரக்கேடு-சந்தி; தொழிலாகுபெயரெனக் கொள்ளின் ஆ - பகுதி, க் - சந்தி, கை-புடைபெயர்ச்சியை யுணர்த்தும் விகுதி; இச்சொல் "உலகம்

யாவையுந் தாமுள வாக்கலும்," என்பதில் உலகம் இடத்தையும், இடவாகுபெயராய் இடத்து நிகழ்பொருளையும் உணர்த்துவதுபோல உடலையும், முதலாகுபெயராய் மேனியையும் உணர்த்தியதாகக் கொள்ளினு மிழுக்காது. ஏ-பிரிநிலை. (௩௬)

*மீண்டோர் சுயம்வரத்தை வீமன் றிருமடந்தை*
*பூண்டாளென் றந்தணநீ போயுரைத்தால்—நீண்ட*
*கொடைவேந்தற் கித்தூரத் தேர்க்கோலங் கொள்வான்*
*படைவேந்த னென்றாள் பரிந்து.*

(இ-ள்.) அந்தண - அழகிய சாந்தகுணமுடைய பிராமணனே, வீமன் திரு மடந்தை - வீமராசனுடைய அழகிய மகள், மீண்டு - (நளனுக்கு உரிமையான நிலையினின்று) நீங்கி, ஓர் சுயம்வரத்தை- விசேடமான சுயம்வரத்தை, பூண்டாள் என்று - மேற்கொண்டா ளென்று, நீண்ட கொடை வேந்தற்கு - மிக்க ஈகைத்தன்மையுடைய இருதுபன்னனுக்கு, நீ போய் உரைத்தால் - நீ போய்ச் சொல்லினால், இத்தூரம் - (அயோத்தியினின்று) இவ்வளவு தூரத்துக்கு, தேர்க் கோலம்கொள்வான் - சாரதியாவான், படை வேந்தன் - சேனை மிகுதியையுடைய நளராசன், என்றாள் பரிந்து - என்று அன்போடு சொல்லினாள், எ-று.

(வி-ரை.) அயோத்திக்கும் விதர்ப்பநகரத்துக்கும் இடைநின்ற வழித்தூரம் ௩௭௫-நாழிகையதாதலால் தேர் ஓட்டற்கு நளனே இசைவா னென்னுங் கருத்தால் இவ்வாறு கூறினாள். சுயம்வரம்- தானே வரித்தல் (கோருதல்), அதாவது மங்கையானவள் தன் கருத் துக் கிசைந்தவனை நாயகனாகக் கோருதல். வரம் என்பதற்குப் பொருள் வருவித்தலெனக் கொள்ளலாகாதோ எனின் கொள்ளின், அது தரம் என்பதற்குப் பொருள் தருவித்தல் என்னல்போலுமன்றி அது பொருளன்மை அறிக. இத்தூரம் என்பதில் இகாரச்சுட்டுத்

தன்மை யிடத்துக்குரியதாகையால் இடவழுவமைதியன்று; வழா நிலையேயாம். தேர்க்கோலங்கொள்வான் என்பது அரவணைச்செல்வனென்பதுபோல ஒரு சொல்லின் தன்மையதாய்த் தேர்ப்பாகனுக்குப பெயராயிற்று. படை என்னும்அடை சாதியடை. கொடை-தொழிற் பெயர்; கொடு-பகுதி, ஐ-புடைபெயர்ச்சியை யுணர்த்தும் விகுதி, உகரக்கேடு-சந்தி,மீண்டு: மீள்-பகுதி, ட்-இறந்தகால இடைநிலை, உ-வினையெச்சவிகுதி, ளகரம் டகரமாதல் சந்தி, அது ணகரமாதல் மெலித்தல்விகாரம். முன் ஒரு நாயகனுக்கு உரியாளாகி, மக்களைப் பெற்றும், அதன்மேலும் வேறொருவனைக் கோருதலால் இது விசேட சுயம்வரமாயிற்று. (௩௭)

எங்கோன் மகளுக் கிரண்டாஞ் சுயம்வரமென்
றங்கோர்முரச மறைவித்தான்—செங்கோலாய்
அந்நாளு நாளை யளவென்று னந்தணன்போய்த்
தென்னாளுந் தாரானைச் சேர்ந்து.

(இ - ள்.) அந்தணன் போய் - (புரோகிதன்) அயோத்தியாநகரத்துக்குப் போய், தேன் - வண்டுகள், ஆளும் - இடைவிடாது வசிக்கின்ற, தாரானை - மாலையணிந்த இருதுபன்னனை, சேர்ந்து - அடைந்து, செங்கோலாய் - அரசனே, எம் கோன் மகளுக்கு -,எமக்கு அரசனாகிய வீமராசன் தன் புத்திரிக்கு, இரண்டு ஆம் சுயம்வரம் என்று - (இரண்டென்னும் எண்ணில் நின்ற) இரண்டாவதாகிய சுயம்வரம் நடக்குமென்று, அங்கு - அவ்விதர்ப்பதேசத்தில், ஓர் முரசம் - ஒப்பற்ற பேரிகையை, அறைவித்தான் - கொட்டுவித்தான், அந்நாளும் - சுயம்வரங் குறித்த நாளும், நாளை அளவு என்றான் - நாளைத்தினத்தின் அளவினது (நாளையே) என்று சொல்லினான், எ - று.

(வி-ரை.) அந்தணரை ஓம்புதல் அரசர்க் குரியதோ ரறமாதலின் தன்னைப்போல்வாரையும் தன்னொடுபடுத்தி 'எங்கோன்' என்

ளுன். கோல்-அரசனது ஆளுகை கோல் போலுதலால் உவமையாகு பெயர்; இது பிறிதினியைபு நீக்கிய விசேடணமாகிய செம்மையை அடுத்துச் செங்கோலென நின்றது; பிறிதாவது கொடுமை; செம்மை - கோணாமை. கொடுமை - கோணுதல். உம்மை-உயர்வு சிறப்பு. அந்நாளும் நாளை யனவினதென்பது "இல்லவள் மாண் பானால்" என்பதுபோல 'அந்நாளு நாளையளவு' என வந்தது; இது குணி யைக் குணமாகக் கூறுவதோர் மரபுவழுவமைதி. இரண்டாமென்பது ஏழாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். ஆஞ்சுயம்வரம் - பெய ரெச்சத் தொகாநிலைத்தொடர்; இவ்வாறன்றி ஆம் என்பதைச் சாரியை எனக் கொள்ளின் இரண்டாஞ் சுயம்வர மென்பதற்கு இரு சுயம்வரமெனப் பொருள்படுவதே யன்றி இரண்டாவது சுயம்வர மெனப் பொருள்படாமை உணர்க. தேனென்பது தென்னெனக் குறுக்கல் பெற்றது. (௩அ)

வேத மொழிவாணன் மீண்டுஞ் சுயம்வரத்தைக்
காதலித்தாள் வீமன்றன் காதலியென் — றோதினான்
என்செய்கோ மற்றிதனுக் கென்றா னிகல்சீறும்
மின்செய்த வேலான் விரைந்து.

(இ-ள்.) வீமன்தன் காதலி - வீமராசனுடைய புத்திரி, மீண் டும் - மீளவும், சுயம்வரத்தைக் காதலித்தாள் என்று - சுயம்வரத்தை விரும்பினாளென்று, வேத மொழி வாணன் - வேதப்பொருள்களைக் கூறும் வாழ்க்கையையுடைய புரோகிதன், ஓதினான் - சொல்லினான்; இகல் சீறும்-பகைவராகிய இருளைச் சீறுகின்ற, மின் செய்த-வெற்றி யாகிய ஒளியைச் செய்த, வேலான் - வேலைத்தாங்கிய இருதுபன் னன், விரைந்து-ஆத்திரப்பட்டு, இதனுக்கு - இச்சுயம்வரப் பிரயா ணத்துக்கு, என் செய்கோ - யாது செய்வேன், என்றான் - என்று சொல்லினான், எ-று.

(வி-ரை.) என்செய்கு என்பது இருதுபன்னன் தன்னில் தானே சொல்லிக்கொண்டானெனல் செய்கென்னும் தன்மையொரு மையால் விளங்கியது; சாரதியை நோக்கிக் கூறியிருப்பானாயின் அவன் தேரைச் செலுத்துவோனாதலால், என் செய்தமெனப் பன்மையாற் கூறியிருப்பானென்க. என் என்பது இரண்டாம் வேற்றுமைப்பொருள்பட நிற்றலால் வினாப்பெயரென்றே கொள்க; எவனென்னும் வினாவினைக் குறிப்புமுற்றின் மரூஉ அன்று. வாணனென்பது வாழ்நனென்பதன் மரூஉ; இது தனித்து வருதலின்றிப் பாவாணன், குன்றவாணன், தஞ்சைவாணன், அம்பலவாணனென ஒருமொழியைச் சார்ந்தே வரும்; இச்செய்யுளிலும் தொழிவாணனென வந்தமை காண்க. மீண்டென்பது மீள என்பதன் திரிபு. உம்மை-இறந்தது தழீஇய எச்சவும்மை. காதலித்தாள் - பெண்பாற் படர்க்கை இறந்தகாலவினைமுற்று; இதில் காதலென்னும் பண்புப் பெயரினடியாகப் பிறந்த காதலி முதனிலை. காதலி-பண்படியாகப் பிறந்த பெண்பாற் படர்க்கைப்பெயர்; காதல்-பகுதி, இ - பெண்பாற் படர்க்கைவிகுதி. செய்கு-தன்மையொருமை எதிர்கால வினைமுற்று; இக் குவ்விகுதி இடம் பால் காலங்களை யுணர்த்தியது. இகல்-பண்பாகு பெயர். ஓ-இரக்கப்பொருளது. மற்று-அசைநிலை. (கூக)

குறையாத கற்பினாள் கொண்டானுக் கல்லால்
இறவாத வேந்திழையா ளின்று—பறிபீறி
நெல்லிற் பருவரா லோடு நெடுநாடா
சொல்லப் படுமோவிச் சொல்.

(இ-ள்.) பறி பீறி-(தன்னைப் போடுகின்ற) பறியைக் கிழித்துக் கொண்டு, நெல்லில்-நெல்வயலில், பரு வரால்-பருமையமைந்த வரால் மீன், ஓடும் - ஓடுகின்ற, நெடு நாடா - பெரிய கோசலநாட்டரசனே, குறையாத - (தமயந்தி என்னும்) நிறைவாகிய, கற்பினாள் - கற்பை

யுடையாள், கொண்டானுக்கு - மணஞ்செய்த நாயகனிடத்து, அல்லால் - அல்லாமல், (பிறரிடத்து) இறவாத - வரம்புகடந்து (மனம்) செல்லாத, ஏந்து இழையாள் - தாங்கிய ஆபரணங்களை யுடையாள், (அப்பெண்) இன்று-(நாயகனைப் பிரிந்த) இக்காலத்தில், இச்சொல்- இரண்டாஞ் சுயம்வரமென்னுஞ் சொல், சொல்லப்படுமோ - (அவளால்) சொல்லப்படாது, எ-று.

(வி - ரை.) தன்னிற்றானே சொல்லிக்கொண்ட இருதுபன்னனை நோக்கி மனம்பொறாமல் நளன் சொல்லியது இச்செய்யுள். கற்பினுள் ஏந்திழையாள் என்னுங் குறிப்புமுற்று இரண்டடுக்கி அப்பெண் என்னும் ஒருபெயர் கொண்டது; அது இங்கே எஞ்சி நின்றது. நெல் தான் விளைகின்ற நிலத்துக்காதலால் தானியாகு பெயர். சொல்லப்படும் - செய்யுமென் வாய்பாட்டுச் செயப்பாட்டு வினைமுற்று; சொல் - பகுதி, ல் - சந்தி, அ - சாரியை, படு - செயப்படுபொருண்மை விகுதி, அனைத்துமொரு பகுதி, உம் - திணைபால்களுக்குப் பொதுமையாய் எதிர்காலமுணர்த்தும் விகுதி, உகரக்கேடு சந்தி; அவ் வும்விகுதி பொதுமை நீங்கி அஃறிணை ஒன்றன்பாலுக்குரியதாய் நின்றது. பறிபீறி நெல்லிற் பருவராலோடு மென்றமையால் அந்நாடு நீர்வள முடையதென்பது கருத்து. கொண்டான் - கணவன்; இது உலகவழக்கு. இன்று இச்சொல் சொல்லப்படுமோ என்றது இக்காலத்தில் நாயகன் பிரிந்த பிரிவால் தான் துன்பப்படுதலொழிந்து இவ்வாறு சொல்லாளென்பதை யுணர்த்தியது; இது பற்றியே சொல்லப்படுமென எதிர்காலத்தால் கூறியது மென்க. ஓ - எதிர்மறை. (௪0)

ஏன்மே லெறிகின்ற மாலை யெழினளன்றன்
முன்னே விழுந்ததுபோன் முன்னாளில்—அன்னதற்குக்
காரணந்தா னீதன்றோ வென்றான் கடாஞ்சொரியும்
வாரணந்தா னன்னான் மதித்து.

(இ - ள்.) கடாம் - மதசலத்தை, சொரியும் - பொழிகின்ற, வாரணந்தான் - யானையையே, அன்னான் - ஒத்த இருதுபன்னன், மதித்து - (புரோகிதன் சொல்லையே) நன்குமதித்து, முன் நாளில் - சுயம்வரம் நடந்தகாலத்தில், என்மேல் எறிகின்ற மாலை - (தமயந்தி) என்னைக்குறித் தெறியப்பட்டு வருகிற மாலையானது, எழில் நளன் தன்மூன் - அழகிய நளனிடத்து, விழுந்தது போனும் - விழுந்தது போலும்; அன்னதற்கு - அவ்வாறெண்ணுதற்கு, ஈது - இவ்விரண்டாம் சுயம்வரம், காரணம் அன்றோ - எதுவே ஆகும், என்றான் - என்று சொல்லினான், எ-று.

(வி - ரை.) ஆதலால் விதர்ப்ப நாட்டுக்குச் செல்லவேண்டும் தேரைக்கொண்டுவா என்றானென்பது இசையெச்சமாக நின்றதெனக் கொள்க. எழினளனென்றது சுயம்வரமாலை பெற்றமையைக் குறித்துக் கூறினானே யன்றி அவனதழகை வியந்து கூறினனல்லனென்பது என்மேலெறிகின்ற மாலை யென்றதனால் விளங்குகின்றது. எறியப்பட்டுவருகிறமாலை அவன்மேல் விழுந்ததென்னுங் கருத்தால் கூறியதாகையால் எறிகின்ற என்னும் நிகழ்காலப் பெயரெச்சம் வழாநிலையேயன்றிக் காலவழுவமைதியன்று. ஒப்பில் போலியாகிய போலுமென்னும் செய்யுமென் முற்று ஈற்றுயிர்கெட்டுப் போனுமென நின்றது. விழுந்தது காணென்று பாடமாயின் காணென்பனத நீ அறி எனப் பொருள் தரும் ஈறுகெட்டுநின்ற ஏவலொருமை எதிர்கால வினைமுற்றாகவாவது, முன்னிலையொருமை அசையாகவாவது கொள்க. அன்னான் - அன் என்னும் இடைச்சொலடியாகப் பிறந்த செயப்படுபொருள் குன்றாத குறிப்பு வினையாலணையும் பெயர். மூன்னன்-பண்புத்தொகைநிலைத்தொடர்; விரிந்தால் முன்னாகிய நாளென விரியும். தானென்பன இரண்டில் முன்னது அசை; பின்னது தேற்றப்பொருளது. வாகுகன் கூறிய உண்மையை உணராத உன்மத்தனதைக் குறித்து 'வாரணந்தா னன்னான்' என்றார். (௬௪)

முன்னை வினையின் முடிந்ததோ மொய்குழலாள்
என்னைத்தான் காண விசைந்ததோ—தன்மரபுக்
கொவ்வாத வார்த்தை யுலகத் துரைப்பட்ட
தெவ்வாறு கொல்லோ விது.

(இ - ள்.) தன் மரபுக்கு - தன்குலத்துக்கு, ஒவ்வாத - தகாத, வார்த்தை - மறு சுயம்வரமென்னும் சொல், உலகத்து - உலகத்தில், உரைப்பட்டது - பேசுதலில் பொருந்தியது (வழங்கியது), இது - இச்சொல், முன்னை வினையால் - முன் பிறப்பில் செய்த வினையினால், முடிந்ததோ - சம்பவித்ததோ, தான் என்னைக் காண - தான் என்னைக் காணுதற்காக, மொய் குழலாள்-மொய்த்த கூந்தலையுடைய தமயந்தி, இசைந்ததோ - சம்மதித்துச் சொல்லியதோ, எவ்வாறோ - எவ்வகையால் உண்டாயிற்றோ, எ-று.

(வி-ரை.) மயிராகிய சினையினது வினையாய் நின்ற மொய் என்னும் வினைத்தொகையாகிய காலங்கரந்த பெயரெச்சம் குழலென்னும் முதலாகிய பிறபெயர் கொண்டது. ஒவ்வாத - எதிர்மறைப்பெயரெச்சம்; ஒ பகுதி, உடம்படுமெய்யாகிய வ்-சந்தி, இரட்டிய வகரமுஞ் சந்தி, ஆ - எதிர்மறைவிகுதி, அனைத்து மொருபகுதி, த் - எழுத்துப்பேறு, அ-பெயரெச்சவிகுதி. உரைப்பட்டதென்பதை ஒரு சொல்லாகக் கொண்டு உரைக்கப்பட்டதென்பது, க்-சந்தி, கு, அ - சாரியைகள் தொகுக்கப்பட்டு நின்றதெனவும் உரைக்கலாம். ஓ மூன்றனுள் முன்னுள்ள இரண்டும் வினாப்பொருளிலும், பின்னுள்ள ஒன்றும் இரக்கப்பொருளிலும் வந்தன. ஓர் பெண் இரண்டாமுறை வேறொருவனை மணஞ்செய்தல் உயர்ந்த வருணத்தாரது ஒழுக்கமல்லாமையால் இரண்டாஞ் சுயம்வரத்தைத் 'தன்மரபுக் கொவ்வாத வார்த்தை' என்றான். கொல்-அசை. இச்செய்யுள் நளன் கருதியதைக் கூறியது, பின் வருவதும் இது. (௪௨)

ஒற்றைத் தனியாழித் தேரென்ன வோடுவதோர்
கொற்ற நெடுந்தேர் கொடுவந்தேன்—மற்றிதற்கே
போந்தேறு கென்றுரைத்தான் பொம்மென் றளிமுரலத்
தீந்தேறல் வாக்குந்தார்ச் சேய்.

(இ-ள்.) அளி-வண்டுகள், பொம் என்று முரல-பொம்மென்று ஒலித்து எழ, தீ தேறல் - மதுரமாகிய தேனை, வாக்கும் - ஊற்றுகின்ற, தார்ச்சேய் - மாலையணிந்த சுப்பிரமணியனை ஒத்த வாகுகன், தனி - ஒப்பில்லாத, ஒற்றை ஆழி - ஒரு சக்கரத்தையுடைய, தேர் என்ன - சூரியரதம்போல, ஓடுவது-ஓடுவதாகிய, கொற்றம் - வெற்றியைத் தரத்தக்க, ஓர் நெடு தேர் - ஒரு பெருந்தேரை, கொடுவந்தேன்-கொண்டுவந்தேன், இதற்கு - இத்தேரில், போந்து ஏறுக-வந்து ஏறக்கடவாய், என்று உரைத்தான் - என்று சொல்லினான், எ - று.

(வி-ரை.) ஒற்றை: "மென்றொடர் மொழியுள் சிலவேற் றுமையில், தம்மின வன்றொடர் ஆகா மன்னே" என்பதனால் ஒன்றென்பது ஒற்றென்றாகி, "ஐஈற் றுடைக்குற் றுகரமும் உளவே" என்பதினால் ஐகாரச்சாரியை பெற்றது. இதற்கென்னும் நான்கனுருபு போந்தென்னும் வினையைக் கொண்டதெனக் கொள்ளின் ஏழாவதனிடப்பொருளில் வந்ததெனவும், ஏறுக என்னும் வியங்கோள் வினையைக் கொண்டதாகக் கொள்ளின் உருபுமயக்கமெனவுங் கொள்க. கொடு என்பது கொண்டென்பதன் மரூஉ. பொம்மென்று - பொம் என்பது ஒலி; அது என்று, என என்னும் இடைச்சொற்களைச் சார்ந்தே வரும் ஆதலால் என்றென்னும் சொற்குப் பொருள் இசையென்று கொள்க. பொம்மெனல், பொம்மென்றது எனத் தொழிற்பெயரும் வினைமுற்றும் முதலிய வினைவிகற்பங்கள் பிறக்கும். அவ்வினைவிகற்பங்களுக்குப் பகுதி பொம்மென் என்பது. கொற்றம் - தொழிற்பெயர்; கொல்-பகுதி, று - சாரியை, அம் - புடைபெயர்ச்சி

விகுதி, லகர தகரங்கள் றகரமாதலும், உகரங் கெடுதலும் சந்தி. ஆழி-சக்கரம்; தேரினுறுப்புப் பலவற்றுள்ளும் பூமியி லழுந்துத லுடையது சக்கரமாதலால், இது தொழிலடியாகப் பிறந்த பெயரெனக்கொண்டு, இ - வினைமுதற்பொருண்மை விகுதியென்க; இவ்வாறன்றிப் பண்பாகுபெயரெனினும் ஒக்கும்; ஆழி-வட்டம். தேறல்-தொழிலாகுபெயர். சேய் என்பது காரென்பதுபோல விகாரப்பட்டுநின்ற பண்புப்பெயர் பண்பாகுபெயராய்க் குமரனை உணர்த்தி, அது நளனுக்கு உருவகமாய் நின்றது. ஒற்றைத்தனி - ஒருபொருட் பன்மொழியாக வைத்துரைப்பினும் பொருந்தும். (சஙட)

முந்தை வினைகுறுக மூவா மயல்கொண்டான்
சிந்தை யினுங்கடுகச் சென்றதே—சந்தவிரை
தார்குன்று மெல்லோதி தன்செயலைத் தன்மனத்தே
தேர்கின்றா னூர்கின்ற தேர்.

(இ - ள்.) சந்தவிரை - மயிர்ச்சாந்தின் மணமும், தார் - மலர்மாலையும், குன்றுத - நீங்குதலில்லாத, மெல்லோதி தன் - மென்மையாகிய கூந்தலையுடைய தமயந்தியினது, செயலை - இரண்டாம் சுயம்வரத்தை விரும்பிய செய்கையை, தன் மனத்தே தேர்கின்றான் - (புறத்தில் தோன்றாமல்) தன் மனத்திலேயே ஆராய்கின்ற வாகுகன், ஊர்கின்ற தேர் - நடத்துகின்ற தேர், முந்தை வினை-முன்னைவினை, (ஆக்கூழானது) குறுக - நெருங்குகையில், மூவாத மயல் - இளமையாகிய ஆசையை (புது விருப்பத்தை), கொண்டான் - கொண்ட இருதுபன்னனுடைய, சிந்தையினும் - மனத்தைப்பார்க்கிலும், கடுகச் சென்றது - விரைவாக ஓடியது, எ-று.

(வி-ரை) முந்தை வினையென்றது நளன் தமயந்தி இருவருடைய வினையை. முந்தை-பண்புப்பெயர்; முந்து - பகுதி, ஐ-பகுதிப்பொருள் விகுதி, உகரக்கேடு - சந்தி; இப்பண்படியாக முந்து,

மூந்துதல், மூந்தின, மூந்தி, மூந்தினன், மூந்தாமை, மூந்தாத, மூந்தாமல், மூந்தான் என வினைவிகற்பங்கள் பிறக்கும். குறுக - காரண காரியப் பொருளில் வாராமையால் நிகழ்காலச்செயவென் வாய்பாட்டு வினையெச்சம். காரணப்பொருட்டாய் இறந்தகாலத்ததென வைத்துரைப்பினும் பொருந்தும். முன் நடந்த சுயம்வரத்தில் தமயந்தியைக் கண்ட நாள்தொட்டு அடங்காத ஒரு தன்மையதாகிய காதலுடையானாதலால் 'மூவா மயல் கொண்டான்' என்றார். மூவா-ஈறுதொகுத்தலாய் நின்ற எதிர்மறைப்பெயரெச்சம்; மூ-பகுதி, வ்-சந்தி, ஆ-எதிர்மறைவிகுதி, அினத்து மொருபகுதி, த்-விரித்தல் விகாரம், அ பெயரெச்சவிகுதி; குன்று என்பதும் இது. ஏ இரண்டனுள் முன்னது ஈற்றசை; பின்னது பிரிநிலை. ஐந்தனுருபு எல்லைப்பொருளது. உம்மை உயர்வு சிறப்பு. (சச)

மேலாடை வீழ்ந்த தெடுவென்று னவ்வளவில்
நாலாறு காத நடந்ததே—தோலாமை
மேல்கொண்டா னேறிவா வெம்மைக் கலிச்சூதில்
மால்கொண்டான் கோல்கொண்ட மா.

(இ-ள்) மேல் ஆடை-உத்தரியம், வீழ்ந்தது - விழுந்தது, எடு என்றான்-எடு என்று (இருதுபன்னன்) சொல்லினன்; அவ்வளவில்-அச்சொல் சொல்லிய அளவில், நால் ஆறு காதம் - பத்துக்காதம், நடந்தது - சென்றன, தோலாமை-வெற்றியை, மேல் கொண்டான்-மேன்மையாகக் கொண்ட அவ்வரசன், ஏறிவா-ஏறிவாரிநிற்க, வெம்மைக் கலி - கொடுமையாகிய கலியினால், சூதில் மால் கொண்டான்-சூதாட்டத்தில் மயக்கங்கொண்ட னனாகிய வாகுகன், கோல் கொண்ட மா - முட்கோல் கொண்ட குதிரைகள், எ-று.

(வி - ரை.) நாலாறு-உம்மைத்தொகை; விரிந்தால் நாலும் ஆறுமெனை விரியும். நாவென்பது உலகவழக்கு. இதை நாலாகிய ஆறு

இருபத்துநான்கு எனப் பொருள் கொண்டு பண்புத்தொகையாக்கினும் பொருந்தும்; இருவழியும் நாலாறு பல என்பதை உணர்த்த வந்த குறிப்புச்சொல். தோலாமை என்பது எதிர்மறைத் தொழிற் பெயர்; அது இங்கே வெற்றிக்காயிற்று. மேல் கொண்டானென்னும் வினையாலணையும் பெயர் சுட்டுப்பொருளதாய் நின்றது. மா சாதியொருமை யாதலால் நடந்ததென்னும் ஒருமைவினை கொண்டது. கொண்ட என்னும் காரியப்பொருட்டாகிய இறந்தகாலப் பெயரெச்சம் மா என்னும் கருவிப்பெயர் கொண்டது எதுகைத் தொடை நோக்கி மேற்கொண்டானென்பது மேல்கொண்டானெனத் திரியாது நின்றது. வெம்மைக் கலிச்சூதின் மால் கொண்டா னென்றது அது காரணத்தால் இந்நிலைமையானுயினுனென்னும் இரக்கத்தாலென்க. (சகு)

ஆய தறிந்த வயோத்தியர்கோ னாங்கதற்கு
மேயவிறும் பூதினனாய் வேட்கைமிகத்—தூயதிறல்
அன்னவன்பா லவ்விஞ்சை யாயுமாறி யாதென்ன
உன்னுவான் றன்னுள்ளே யோர்ந்து

(இ-ள்.) ஆயது - அவ்வாறு குதிரைகளோடியதை, அறிந்த அயோத்தியர் கோன் - தெரிந்துகொண்ட அயோத்தி நகரத்தரசன், ஆங்கு - அங்கே, அதற்கு - அதனால், இறும்பூது மேயினன் ஆய் - ஆச்சரியத்தை யடைந்தவனாகி, வேட்கை மிக - விருப்பம் மிகுதலினால், தூய திறல் - குற்றமில்லாத சாமர்த்தியமுடைய, அன்னவன் பால் - அந்நளனாகிய வாகுகனிடத்து, அவ்விஞ்சை-அவ்வசுவமந்திரத்தை, ஆயும் ஆறு-ஆராய்ந்தறியும் வகை, யாது என்ன - யாதென்று, தன் உள் - தன் மனத்தில், உன்னி ஓர்வான் - நினைத்து ஆலோசிப்பான், எ-று.

(வி-ரை.) ஆயதென்னும் இறந்தகால வினையாலணையும் பெயரினும், மேயவென்னும் அக்காலப் பெயரெச்சத்தினும் யகரம் கால

முணர்த்தியது; ஆ-பகுதி, ய்-இறந்தகால இடைநிலை, அ - சாரியை, து - ஒன்றன்படர்க்கை விகுதி; மே - பகுதி, ய் - இறந்தகால இடைநிலை, அ - பெயரெச்சவிகுதி. தூய - குறிப்புப் பெயரெச்சம்; தூய்-பகுதி, அ - பெயரெச்சவிகுதி; அதற்கு இக் குவ்வுருபு மூன்றாவதற்குரிய நிமித்த காரணப்பொருளில் வந்தது. மேயவிறும்பூதினன், உண்ணுவான் ஓர்ந்து என்னுஞ் சொற்களைப் பின்முன்னாக நிறுத்தி விகுதிகளைப் பிரித்துக் கூட்டுக. வேட்கை - தொழிற்பெயர்; வேள்-பகுதி, கை-புடைபெயர்ச்சி விகுதி, ளகரம் டகரமாதல் சந்தி; வேள், வேட்ட, வேட்டு, வேட்டான், வேட்காமை, வேட்காத, வேட்காமல், வேட்கான் என ஒழிந்த வினைவிகற்பங்கள் வரும்; எதிர்மறையிலும், வேட்கும், வேட்கின் என உடன்பாட்டுப் பெயரெச்ச வினையெச்சங்களிலும் குச்சாரியை பெற்றே வரும். (சகூ)

இத்தாழ் பணையி லிருந்தான்றிக் காயெண்ணின்
பத்தா யிரங்கோடி பாரென்ன—உய்த்ததனில்
தேர்நிறுத்தி யெண்ணினான் றேவர்சபை நடுவே
தார்நிறுத்துந் தோள்வேந்தன் றான்.

(இ-ள்.) இத் தாழ் பணையில்-இந்தப் பள்ளமாகிய வயலிலுள்ள, இரு தான்றிக்காய்-பெரிய தான்றிமரத்தினது காய்கள், எண்ணின்-எண்ணினால், பத்தாயிரம் கோடி - பதினாயிரங்கோடி காய்களாகும், பார் என்ன - எண்ணி அறி என்று (இருதுபன்னன்) சொல்ல, தேவர் சபை நடு - (இந்திரன் முதலிய) தேவர்கள் கூடிய சபையின் மத்தியில், தார் நிறுத்தும்-சுயம்வரமாலையை (ப் பிறர் பெறவொட்டாமல்) தம்மேல் நிலைக்கச்செய்த, தோள் வேந்தன்-தோள்களையுடைய நளராசனாகிய வாகுகன், அதனில் - அம்மரத்தருகே, தேர் உய்த்து-தேரைச் செலுத்தி, நிறுத்தி - நிற்கச்செய்து, எண்ணினான் - எண்ணிப்பார்த்தான், எ-று.

(வி - ரை) தேவர்களினு மிக்க அழகுடையானும், கட்டழகுடைய மங்கையரால் விரும்பப்படுந் தோள்களுடையானுமாமென்பார் 'தேவர் சபைநடுவே தார் நிறுத்துந் தோள்வேந்தன்' என்றார். காய்-தொழிலடியாகப் பிறந்தபெயர்; இது வினைமுதற்பொருண்மை இகரவிகுதி புணர்ந்து கெட்டு நின்றது. பத்தாயிரங்கோடி - எண்ணளவையாகுபெயர். பத்தாயிரம், ஆயிரங்கோடி என்பன பண்புத்தொகைநிலைத்தொடர்கள். என்ன - இடைச்சொலடியாகப் பிறந்த காரணப்பொருட்டாகிய இறந்தகாலவினையெச்சம்; என்-பகுதி, ன்-சந்தி, அ - இறந்தகாலவினையெச்சவிகுதி. நடு - பண்பாகுபெயர்; சபைநடு - உறுப்புத்தற்கிழமைப்பொருளதாகிய ஆறாம்வேற்றுமைத்தொகைநிலைத்தொடர். இத்தாழ் பணை என்ற குறிப்பால் விதர்ப்பநாடடைந்தாரென்பது விளங்குகின்றது. (சஎ)

ஏரடிப்பார் கோலெடுப்ப வின்றேன் றொடைபீறிக்
காரடுத்த சோலைக் கடனாடன்—தேரடுத்த
மாத்தொழிலு மித்தொழிலு மாற்றுதுமா லென்றுரைத்தா [ன்
தேர்த்தொழிலின் மிக்கானைத் தேர்ந்து.

(இ-ள்.) ஏர் அடிப்பார் - உழுமாடுகளை அடிக்கக் கருதும் உழவர், கோல் எடுப்ப - தாற்றுக்கோலை உடிக்க உயர்த்ததினால். (அதன் மூனைபட்டு) இன் தேன் தொடை பீறி-இனிய தேன்கூடு கிழிபடுதலால், கார் அடுத்த - மேகத்தைப் பொருந்த வளர்ந்த, சோலை-சோலைகளாற் சூழப்பட்ட, கடல் நாடன் - கடலைச்சார்ந்த கோசலநாட்டரசன், தேர்த்தொழிலின் மிக்கானை - தேரை நடத்துந் தொழிலில் சிறந்த வாகுகனை, தேர்ந்து - தெளிந்து, தேர் அடுத்த - தேரிற்பூட்டிய, மாத்தொழிலும் - குதிரையை நடத்துந் தொழிலையும், (அதாவது அசுவமந்திரத்தையும்) இத்தொழிலும் - இக்கணிதத் தொழிலையும், மாற்றுதும் - நம்மில் மாற்றிக்கொள்வோம், என்று-என்று சொல்லி,

உரைத்தான் - (அட்ச இருதய வித்தையை அவனுக்குச்) சொல்லி னான், எ - று.

(வி - ரை.) ஏரடிப்பார்-எதிர்காலவினையாலணையும்பெயர். மிக் கான் - இறந்தகால வினையாலணையும்பெயர். எடுப்ப - காரணப்பொ ருட்டாகிய செயவென்வாய்பாட்டு வினையெச்சம்; இது இறந்தகாலத் தில் வந்தது. பீறி-அப்பொருளதாகிய அவ்வினையெச்சத்தின் திரிபு; இதுவும் அக்காலத்தில் வந்தது. தொடை - தொழிலடியாகப் பிறந்த பெயர்; தொடு - பகுதி, ஐ - செயப்படுபொருண்மை விகுதி, உகரக் கேடு சந்தி; இது இங்கே தேனென்ற குறிப்பால் தேன்கூட்டுக்காயி ற்று. உழவுமாட்டை யடிக்கும்படி உழவர் கோலை உயர்த்த அதுபட்டு மரத்திலுள்ள தேன்கூடு கிழிபட்டுத் தேனொழுகுதலால் மேகத்தை அளாவும்படி வளர்ந்த சோலைகளால் சூழப்பட்ட நாடென்பது; இது தொழிலதிசயவணி. காவென்னும் பண்புப்பெயர் மேகத்துக்காதலால் பண்பாகுபெயர். என்று - இடைச்சொலடியாகப் பிறந்த இறந்தகால வினையெச்சம். மாற்றுதும்-பிறவினையாகிய உளப்பாட்டுத் தன்மைப் பன்மை எதிர்காலவினைமுற்று; மாற்று - பகுதி, தும் - எதிர்காலத் தன்மைப் பன்மை விகுதி. உகரக்கேடு சந்தி; மாறுதும் தன்வினை. ஆல் - அசை. தேர்தல் மறைக்காது சொல்வானெனத் துணிதல். ()

வண்டார் வளவயல்சூழ் மள்ளுவநாட் டெங்கோமான்"
தண்டார் புனைசந் திரன்சுவர்க்கி—கொண்டாடும்
பாவலன்பா னின்ற பசிபோல நீங்குற்றான்
காவலன்பா னின்ற கலி.

(இ-ள்.) வண்டு - சந்தகள், ஆர் - நிறைந்த, வளவயல் சூழ் - நீர் வளமுள்ள வயலாற் சூழப்பட்ட, மள்ளுவ நாடு - மள்ளுவநாட்டை ஆள்கின்ற, எம் கோமான் - எம்முடைய பெருமானாகிய, தண் தார் புனை - குளிர்ச்சியுடைய மலர்மாலை யணிந்த, சந்திரன் சுவர்க்கி - சந்

திரன் சுவர்க்கியை, கொண்டாடும் - புகழ்ந்து பாடுகின்ற, பாவலன் பால் நின்ற-பாட்டுச் செய்யவல்ல புலவனிடத்து இருந்த, பசிபோல - வறுமை நீங்குதல்போல, காவலன்பால் நின்ற - நளராசனிடத்து நின்ற, கலி - கலிபுருடன், நீங்குற்றான் - நீங்கினான், எ - று.

(வி - ரை) இந்நூலாசிரியர் தம்மையொத்த புலவரைத் தம்மொடுபடுத்தி 'எம்' என்றார்; [நன்-உ௫-ரு-௧௩-இல்] "உயர்திணையிடத்து விரிந்தும்" என்றபடி உயர்திணையில் விரிந்து நிற்கவேண்டிய ஐயுருபு மறைந்து நிற்றலால் சந்திரன் சுவர்க்கி என்னும் பெயரினீற்றில் அவ்வுருபு தொகுத்தலென்க. கோமானென்னும் ஆண்பாற்படர்க்கைப் பெயரில் மான் - ஆண்பாற்படர்க்கைவிகுதி. பசுமையில்லதனைப் பசி என்றது மங்கலவழக்கு; பசு - பகுதி, இ - ஒன்றன்படர்க்கைவிகுதி, உகரக்கேடு சந்தி; பசுமையாவது ஈரம்; வழக்கில் அவனுக்கு வயிற்றி லீரமில்லை என வருதலுங் காண்க; பசி என்பது ஐம்புலநுகர்ச்சியின்மையை. தார்புனை-நிலைமொழி அஃறிணைப்பெயராதலாலும், இது இரண்டாம் வேற்றுமைத் தொகையாதலாலும், [நன் - மெய்-ரு-௨௧-இன்படி.] மிகாது, [உரு-ரு-௧௩-இன்படி விகாரத்தியல்பாயிற்று. பா என்னும் முதனிலைத்தொழிற்பெயர் தொடைபாவி கடக்கும் செய்யுளுக்காதலால் தொழிலாகுபெயர். (௬௧)

ஆண்மை முதுகி லலவன் றுயில்கொள்ளும்
கீர்மூர் செடுநாடு கைவிட்டு—வீமன்றன்
பொன்னகரி சென்றடைந்தான் போர்வேட் டெழுங்கூற்றம்
அன்னகரி டொன்றுடையா னங்கு.

(இ - ள்.) போர் வேட்டு - போரை விரும்பி, எழும் கூற்றம் - எழுகின்ற யமனை, அன்ன-ஒத்த, கரி-யானைப்படையையும், ஒன்று-குதிரைப்படையையும், உடையான் - உடைய இருதுபன்னன், ஆங்கு - அப்போது, ஆமை முதுகில் - ஆமையினது முதுகில், அல

வன் - ஞண்டு, துயில் கொள்ளும் - நித்திரை செய்யும், காமர் - அழகிய, நெடு காடு - பெரிய விதர்ப்பநாட்டை, கைவிட்டு - நீங்கி, வீமன்றன் - வீமராசனுடைய, பொன் நகரி - அழகிய நகரத்தை, சென்று அடைந்தான் - போய்ச் சேர்ந்தான், எ-று.

(வி-ரை.) கரி என்பதைச் சார நின்றமையால் ஒன்றென்னும் எண்ணலளவைப் பெயர் குதிரைப்படையை ஆகுபெயரா யுணர்த்தியது. கரி-கரமுடையதென்பது பொருள்; இது வடமொழி; இவ்விரு படையை யுடையானெனவே ஒழிந்த தேர்ப்படையையும், காலாட் படையையு முடையானென்பதை "ஒருமொழி ஒழிதன் இனங்கொளற் குரித்தே" என்பதனாற் கொள்க; இதை வடநூலார் உபலக்கண மென்பர். சென்று-இறந்தகால வினையெச்சம்; செல்-பகுதி, ற்-இறந்தகால இடைநிலை, உ-வினையெச்சவிகுதி, லகரம் றகரமாதல் சந்தி, அது னகரமாதல் மெலித்தல் விகாரம். கைவிட்டு ஒருசொல். (௫௦)

வெற்றித் தனித்தேரை வீமன் பெருங்கோயில்
முற்றத் திருத்தி முறைசெய்யும்—கொற்றவற்குத்
தன்வரவு கூறப் பணித்துத் தனிப்புக்கான்
மன்விரவு தாரான் மகிழ்ந்து.

(இ-ள்.) மன் விரவு - மிகுதியாக (மலர்) நெருங்கிய, தாரான் - மாலையையணிந்த இருதுபன்னன், வெற்றி - வெற்றியைத் தருகின்ற, தனித்தேரை - ஒப்பில்லாத தேரை, வீமன் பெரு கோயில் - வீமராசனுடைய பெரிய மாளிகையினது, முற்றத்து-முன்னிடத்து, இருத்தி - இருக்கச்செய்து, முறை செய்யும் - நடுவுநிலைமையாக ஆளும், கொற்றவற்கு - அவ்வீமராசனுக்கு, தன் வரவு - தனது வருகையை, கூற - சொல்லும்படி, பணித்து-(வாயில் காப்போனுக்குக்) கட்டளையிட்டு, (வீமராசன் வரும்படி சொல்ல) மகிழ்ந்து தனிப் புக்கான் - குதூகலத்தோடு தனிமையாகப் புகுந்தான், எ-று.

(வி-ரை.) கோ-அரசனுடைய, இல் - வீடு என்பது பொருளா கும் கோவில் என்பது கோயிலென வந்தமையால் இலக்கணப் போலி; இச்சொல் ஆலயத்தை யுணர்த்தின் கோ என்பதற்குக் கடவு ளெனப் பொருள் கொள்க. அகம் முன்று என்பது முற்றமென நிற் கின்றமையால் இதுவும் அவ்விலக்கணப்போலியேயாம். ஒரு தினத் துக்குள் அயோத்தியினின்று விதர்ப்பநாட்டை அடைந்த விரைவைப் பற்றித் தேருக்கு வெற்றி என்னும் அடை தரப்பட்டது. புக்கான்- ஆண்பாற்படர்க்கை இறந்தகால வினைமுற்று; புகு-பகுதி, ஆன்-ஆண் பாற்படர்க்கை விகுதி, பகுதி முற்றியலுகரமாதலால் தன்னொற் றிரட்டல் விரித்தல் விகாரம், அது இறந்தகாலங் காட்டியது, உகரக் கேடு சந்தி, வேறரசர் வந்திலரென்பதைக் குறிப்பித்தற்குத் 'தனிப் புக்கான்' என்றார். (௫௧)

கன்னி நறுந்தேறன் மாந்திக் கமலத்தில்
மன்னித் துயின்ற வரிவண்டு—பின்னையும்போய்
நெய்தற் கவாவு நெடுநாட நீயென்பால்
எய்தற் கவாவியவா றென்.

(இ - ள்.) கன்னி - புதுமையாகிய, நறு தேறல் - மணமுள்ள தேனை, மாந்தி - உண்டு, கமலத்தில் - அத்தாமரைமலரில், மன்னி - நிலைபெற்று, துயின்ற - உறங்கிய, வரி வண்டு - இசையைப் பாடும் வண்டு, பின்னையும் போய் - மீண்டுஞ் சென்று, நெய்தற்கு-நெய்தல் மலர்த்தேனை, அவாவும் - விருப்பங்கொள்ளும், நெடு நாட - கோசல நாட்டரசனே, என்பால் - என்னிடத்தில், எய்தற்கு - வருவதை, நீ அவாவிய ஆறு - நீ விரும்பிய விதம், என் - யாது, எ - று.

(வி-ரை.) என்று வீமராசன் இருதுபன்னனைக் கேட்டான்; இது இசையெச்சம். கன்னி யென்னும் இளமைப்பண்பை யுணர்த் தும் பண்புப்பெயர் இங்குப் புதுமைப் பண்பை யுணர்த்தியது. கம

லம் - முதலாகுபெயர். வரிவண்டு என்பதற்கு இரேகைகளையுடைய வண்டெனவும் பொருள் கூறலாம். நெய்தல் என்பது மலருக்கு முதலாகுபெயராய், பின் அதன் தேனுக்கு இடவாகுபெயராய் நிற்றலால் இருமடியாகுபெயர். நெய்தற்கென்னும் குவ்வுருபு இரண்டாவதன் செயப்படுபொருளில் வந்தது ஆதலால் உருபுமயக்கமன்று; தகுதியே யாம். எய்தற்கென்னும் நான்கனுருபும் அவ்வாறு நின்றது. இருது பன்னனுடைய வருகை இன்னதற்கெனக் குறிப்பாலுணர்ந்துகொண் டவனாகலால் வீமசேனன் அதனைக் குறிப்பிக்க, 'தேறன் மாந்திக் கமலத்தில், துயின்ற வண்டு, நெய்தற் கவாவும் நெடுநாட' னை விளித் தான்; இது பரியாயமென்னும் அணி. (௫௨)

இன்றுன்னைக் காண்பதோ ராதரவால் யானிங்ஙன்
மன்றன் மலர்த்தாராய் வந்தடைந்தேன்—என்றான்
ஒளியார்வேற் கண்ணாண் மே லுள்ளந் துரப்பத்
தெளியாது முன்போந்த சேய்.

(இ - ள்.) ஒளி ஆர் - ஒளி நிறைந்த, வேல் கண்ணாள் மேல் - வேல்போன்ற கண்களையுடைய தமயந்தியைக் குறித்து, உள்ளம் துரப்ப - மனமானது (தன்னை) கடத்தியதனால், தெளியாது - ஆராயாமல், முன் போந்த - முன்னே வந்த, சேய் - முருகனை ஒத்த இருது பன்னன், இன்று - இத்தினம், உன்னைக் காண்பது - உன்னைக் காணுதலாகிய, ஓர் ஆதரவால் - ஒருவகையன்பால், யான் - நான், இங்ஙன் - உன்னிடத்து, மன்றல் - மணமாகிய, மலர்த்தாராய் - மலர்மாலை யணிந்த வீமராசனே, வந்து அடைந்தேன் - வந்து சேர்ந்தேன், என்றான் - என்று சொல்லினான், எ - று.

(வி - ரை.) இன்று - ஏழாவத னிடப்பொருண்மையில் காலத்தை யுணர்த்தும் இடைச்சொலடியாகப் பிறந்த பெயர்ச்சொல்; இ - பகுதி, று - காலப்பொருண்மை யுணர்த்தும் விகுதி, றகரத்தோற்றம் சந்தி.

அது னகரமானது மெலித்தல்; இச்சொல் வேற்றுமை உருபுகளை ஏலாமையால் இடைச்சொலென்பர் ஓராசிரியர்; அவர் இன்றைக்கு என்பதில் ஐ, கு - இரண்டும் சாரியை என்பர். இங்ஙனமென்னும் தொடர்மொழியில் இடத்தையும் தன்மையையு முணர்த்தும் ஙன மென்பது கடைக்குறையாய் நின்றது. முன் என்பது ஆதரவா லடைந்தே னென்பதற்கு முற்பட்டகாலத்தை யுணர்த்தியது. காண்பதோ ராதரவெனக் காரியத்தைக் காரணமாக வுபசரித்தார். மன்ற லென்பதில் அல் சாரியை. மலர்த்தார்-மலர்களால் தொடுத்ததார் என மூன்றும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடராகவும், மலராகிய தார் என விரித்துரைத்தால் பண்புத்தொகைநிலைத்தொடராகவுங் கொள்க.

ஆதி நெடுந்தேர்ப் பரிவிட் டவையாற்றிக்
கோதி லடிசிற் குறைமுடிப்பான்—மேதிக்
கடைவாயிற் கார்நீலங் கண்விழிக்கு நாடன்
மடைவாயிற் புக்கான் மதித்து.

(இ - ள்.) மேதி-(மேய்கின்ற) எருமையினது, கடை வாயில்-(குதட்டுகின்ற) வாயினது கடையில், கார் நீலம் - கருமையாகிய நீலோற்பல அரும்பு, கண் விழிக்கும்-(கடைசியருடைய) கண்களைப் போல மலர்கின்ற, நாடன்-நிடதநாட்டரசனாகிய வாகுகன், மதித்து-(தான் இனிச் செய்வதை) யோசித்து, நெடு தேர் - பெரிய தேரிற் பூட்டிய, ஆதிப் பரி - கோரோமாந்தலையுடைய குதிரைகளை, விட்டு-(அப்பூட்டினின்றும்) நீக்கிவிட்டு, அவை ஆற்றி - அக்குதிரைகளை இளைப்பாற்றி, கோது இல் - குற்றமில்லாத, அடிசில் குறை-உணவாகிய குறையை, முடிப்பான் - நிறைவேற்ற, மடைவாயில் - மடைப் பள்ளியில், புக்கான் - புகுந்தான், எ-று.

(வி - ரை.) மடைத்தொழிலையுந் தேர்த்தொழிலையுஞ் செய்ய உடன்பட்டவனாதலால் அடிசில் சமைத்தலைக் 'குறை' என்றார்.

முடிப்பான்-காரியப்பொருட்டாகிய எதிர்காலப் பான் விகுதி வினையெச்சம்; பான்-எதிர்கால வினையெச்ச விகுதி; இச்சொல் வினைமுற்றெனக்கொண்டு, வினையெச்சமாக்கி உரைக்கலாகாதோ எனின், வினைமுற்று வினையெச்சமாயின், அது காரணப்பொருட்டாய் இறந்தகாலத்ததா யிருத்தல்வேண்டுமாதலால் குற்றமென்க. கோதில் - எழுவாய்த் தொகாநிலைத்தொடர்; இல் அடிசில் - பண்புத் தொகை நிலைத்தொடர்; இதனை ஈறுகெட்ட குறிப்புப் பெயரெச்சத் தொகா நிலைத் தொடரென்பா ரொருவர்; என்னின்: நற்றாள், கருங்குதிரை என்பவற்றையும் அவ்வாறு கொள்ளல்வேண்டும்; கொள்ளின் பண்புத்தொகை யென்பதொன்று வேண்டுவதில்லை; ஆதலால், அது முழுமடமை என்க. குறை - பண்பாகுபெயர். அடிசிற்குறை - இருபெயரொட்டுப் பண்புத் தொகைநிலைத்தொடர். கடைவாய் - இலக்கணப் போலி. (௩௪)

*ஆதி மறைநூ லனைத்துந் தெரிந்துணர்ந்த*
*நீதி நெறியாளர் நெஞ்சம்போல்—யாதும்*
*நிரப்பாம லெல்லா நிரம்பிற்றே பொற்றேர்*
*வரப்பாகன் புக்க மனை.*

(இ-ள்.) பொன் தேர் - அழகிய தேரினது, வரம்-சிரேஷ்டமாகிய, பாகன் - பாகனாகிய வாகுகன், புக்க மனை-நுழைந்த மடைப்பள்ளி, ஆதி - முதன்மையாகிய, மறை நூல் - வேதமும் சாஸ்திரமுமாகிய, அனைத்தும் - எல்லாவற்றையும், தெரிந்து - ஆராய்ந்து, உணர்ந்த - (அவற்றின்பொருளை) உள்ளபடி அறிந்த, நீதி நெறியாளர் - (அவை கூறிய) நீதியாகிய வழியில் நடப்பவருடைய, நெஞ்சம் போல் - மனம் (எல்லாப் பொருளாலும் நிரம்பியது)போல, யாதும் - (நீர் தீவிறகு முதலியவற்றுள்) எதொன்றாலும், நிரப்பாமல் - நிரப்பப்படாமல், எல்லாம்-எல்லா உண்டிகளும், நிரம்பிற்று-நிரம்பினது, எ-று.

(வி-ரை.) இடவாகுபெயராகிய நெஞ்சம் தொழிலுவமம். தம் மைப்பற்றித் தமயந்திபால் தூது சென்றதற்காகத் தனக்கு இந்திரன் அக்கினி யமன் வருணன் என்னும் நால்வருள் அக்கினிதேவன் நீ பரிசித்த மாத்திரத்தில் அரிசிமுதலிய பொருள்கள் உணவாய்ப் பாகமாகுமெனத் தந்தவரத்தை யுடையானாதலால் புக்கமனை யாதும் நிரப்பாமல் எல்லாம் நிரம்பியதாயிற்று. யாதும் என்றவும்மை முற்றுப்பொருளோடு இழிவுசிறப்புப்பொருளில் வந்தது. யாதென்னும் வினாப்பெயரி னீற்றில் மூன்றனுருபு தொகுக்கப்பட்டது. மனை எல்லாம் நிரம்பிற்று - பால் வழுவமைதி; [நன் - பொது - ரு-உசு இன்] விதியை, [உரி-உ0-சூ-ஆல்] எற்றது. அனைத்து-பண்படியாகப் பிறந்த ஒன்றன்படர்க்கைப்பெயர்; அத்தனை என்பதின் மரூஉஆகிய அனை - பகுதி, த் - சந்தி, து - ஒன்றன் படர்க்கைவிகுதி; இது பன்மையி னொருமைவந்த பால்வழுவமைதி. நூல் - உவமையாகுபெயர்; இதனை, [நன்-பொதுப்பாயிர வெண்பா-உஅ, உரு-இரண்டானும்] நன்குணர்க. (ருரு)

இடைச்சுரத்திற் றன்னை யிடையிருளி னீத்த [ழில்கள்
கொடைத்தொ ழிலா னென்றயிர்த்த கோமான்—மடைத்தொ
செய்கின்ற தெல்லாந் தெரிந்துணர்ந்து வாவென்றாள்
நைகின்ற நெஞ்சா ணயந்து.

(இ - ள்.) நைகின்ற-(நாயகனது பிரிவால்) மெலிகின்ற, நெஞ்சள் - மனமுடைய தமயந்தி, நயந்து - விருப்ப மிகுந்து, இடைச்சுரத்தில் - பாலைவன நடுவில், இடை இருளில் - நடுவிராத்திரி இருளில், தன்னை நீத்த-தன்னைவிட்டுப் பிரிந்த, கொடைத் தொழிலான் என்று - கொடுத்தற்றொழிலில் மிகுந்தவனாகிய நளனென்று, அயிர்த்த - (தன்னால்) சந்தேகிக்கப்பட்ட, கோமான் - தலைவன், மடைத் தொழில்கள் - உண்டி சமைக்குந் தொழில்களின் முறையை, செய்

கின்றது எல்லாம் - செய்கின்றதை எல்லாம், தெரிந்து உணர்ந்து - ஆராய்ந்தறிந்து, வா என்றாள் - வாவென்று (தோழியரில் ஒருத்திக்குச்) சொல்லினாள், எ-று.

(வி-ரை.) இடைச்சுரம், இடையிருள்-இலக்கணப்போலி. அயிர்த்த-செயப்பாட்டு வினையாகிய இறந்தகாலப் பெயரெச்சம்; அயிர் - பகுதி, க்-சந்தி, கு: அ-சாரியை, ப்-சந்தி, படு-செயப்பாட்டு வினைப் பொருண்மை விகுதி, அனைத்துமொருபகுதி, அ-பெயரெச்சவிகுதி, பகுதி ஒற்றிரட்டல் குற்றியலுகர மாதலால் சந்தி, அது காலங்காட்டியது, உகரக்கேடும் சந்தி; படு விகுதி முதலியவை தொகுத்தல். நளனைக் கொடைத்தொழிலானென்றது முதலெழுவள்ளல்களில் ஒருவனாதலால்; அவ்வெழுவராவார்: குமுணன், சகரன், சகாரி, செம்பியன், துந்துமாரி, நளன், நிருதி யென்பவர். கொடை என்னுந் தொழிற்பெயரோடுதொழிலானென்னும் பெயரின் பகுதி இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடராகத் தொடர்ந்தது. மடைத்தொழில்கள் - மடையினது தொழில்கள், மடைக்குரிய தொழில்கள், மடையைச்செய்யுந் தொழில்கள் என மூன்று பொருளால் மயங்கும்; உண்டி பலவாதலால் அவற்றைப்பற்றிய தொழிலும் பலவாயின. செய்கின்றது என்பது தொழிற்பெயராதலால் து புடைபெயர்ச்சியை யுணர்த்தும் விகுதியென்க; ஒன்றன்பால் விகுதியன்று. (நிக)

கோதை நெடுவேற் குமரனையுந் தங்கையையும்
ஆதி யரசனரு காகப்—போத
விளையாட விட்டவன்றன் மேற்செயனு டென்றாள்
வளையாடுங் கையாண் மதித்து.

(இ - ள்.) வளை ஆடும் கையாள்-பொன்வளையல் அசைகின்ற கைகளையுடைய தமயந்தி, மதித்து - ஆராய்ந்து துணிந்து, கோதை-மாலையணிந்த, நெடு வேல் - நெடிய வேலைத் தாங்கிய, குமரனையும்-

இந்திரசேனையும், தங்கையையும்-(அவன்) தங்கையாகிய இந்திர சேனையையும், ஆதி அரசன்-முதன்மைபெற்ற நளராசனது, அருகு ஆக - சமீபமாக, போத - புகவும், விளையாட-விளையாடவும், விட்டு-விட்டு, மேல் - அதன்மேல், அவன்தன் செயல் - அவனது செய்கையை, நாடு - ஆராய், என்றாள்-என்று (ஒருத்திக்குச்) சொல்லினாள், எ-று.

(வி-ரை.) தங்கை - பொருளடியாகப் பிறந்த பெண்பாற் படர்க்கை முறைப்பெயர்; தாம்-பகுதி, கை-பெண்பாற்படர்க்கை முறைப் பொருண்மை விகுதி, தாம் தம்மென்றானது குறுக்கல், மகரம் ஙகரமாதல் சந்தி, பகுதி ஒருமையில் பன்மைவந்த பால்வழுவமைதி. வளை-பண்பாகுபெயர். அருகாக, போத, விளையாட என்னும் செயவென் வாய்பாட்டு மூன்றெச்சமும் காரியப்பொருளன ஆதலால் எதிர்காலத்தில் வந்தன. ஆக என்னும் வினையை அருகென்னும் பண்புப்பெயர் விசேடித்து வந்தது. போத என்பதில் பகுதி போ, இது புகு என்பதன் மரூஉ, து-சாரியை, அ-விகுதி, உகரக்கேடு சந்தி; போ பகுதியாயின் போக எனவருமே அன்றித் துச்சாரியை பெறாது. (கஎ)

மக்களைமுன் காணா மனநடுங்கா வெய்துயிராப்
புக்கெடுத்து வீரப் புயத்தணையா—மக்காணீர்
என்மக்கள் போல்கின்றீர் யார்மக்க ளென்றுரைத்தான்
வன்மக் களியானை மன்.

(இ - ள்.) வன்மம்-தீராப்பகைக்குணமுள்ள, களி யானை மன்-மதயானைச் சேனையுடைய நளராசனாகிய வாகுகன், மக்களை- பிள்ளைகளை, முன்- எதிரில், காணா- கண்டு, மனம் நடுங்கா - மனம் நடுங்கி, வெய்து உயிரா - வெப்பமாக மூச்சுவிட்டு (பெருமூச்செறிந்து), புக்கு எடுத்து - (அவர்களிடம்) புகுந்தெடுத்து, வீரம் - வீரந்தங்கிய, புயத்து அணையா - புயங்களில் அணைத்து, மக்காள் - பிள்ளைகளே,

நீர் - நீங்கள், என் மக்கள் போல்கின்றீர் - என் பிள்ளைகளைப்போலக் காணப்படுகின்றீர், யார் மக்கள் - எவருடைய பிள்ளைகள், என்று உரைத்தான் - என்று வினவினான், எ-று.

(வி-ரை.) நடுங்கா என்பதொன்றும் சினைவினை. காணா, நடுங்கா, உயிரா, அணையா இந்நான்கும் செய்யா என்னும் வாய்பாட்டிறந்தகால வினைச்சொற்கள்; முறையே இவை ஒன்றனை ஒன்று கொண்டு முடிய ஈற்றில் நின்ற அணையா என்பதொன்றும் உரைத்தானென்பதைக் கொண்டது; ஆதலால் இது வினையெச்சம் வேறு பல அடுக்கி வந்ததன்று. இடைச்சொல் பெயரோடொடாக்குமாதலால் மிகுதிப்பொருட்டாகிய மன்-பண்பாகுபெயர். (௩அ)

மன்ன னிடதத்தார் வாழ்வேந்தன் மக்கள்யாம்
அன்னைதனைக் கான்விட் டவனேக — இந்நகர்க்கே
வாழ்கின்றோ மெங்கள் வளநாடு மற்றொருவன்
ஆள்கின்றா னென்றா ரழுது.

(இ-ள்.) மன்னன் - அரசனாகிய, நிடதத்தார் - நிடததேசத்தார், வாழ் வேந்தன் - வாழ்வதற்குக் காரணமாகிய அரசத்தன்மையுடையானுடைய, மக்கள் யாம் - பிள்ளைகள் நாங்கள்; அன்னைதனை - எங்களுடைய தாயை, கான் விட்டு - காட்டிலேவிட்டு, அவன் ஏக - அவன் போனமையால், இந்நகர்க்கே - இந்நகரத்திலேயே, வாழ்கின்றோம்-வசிக்கிறோம்; எங்கள் வளநாடு-எங்களுடைய வளப்பமாகிய நிடதநாட்டை, மற்று ஒருவன்-வேறு அரசன், ஆள்கின்றான்-ஆளாநின்றான், என்றார் அழுது-என்று அழுதுகொண்டு சொல்லினார்கள், எ-று.

(வி-ரை.) தொன்றுதொட்டுவந்த அரசுரிமை யுடையானென்பார் வாளா 'மன்னன்' எனவும், மன்னனென்ற மாத்திரத்தில் தங்கள் பிதா இன்னானென விளங்காமையால் 'நிடதத்தார் வேந்தன்' எனவும், நீதியையுடையானென்பார் 'வாழ்வேந்தன்' எனவுங் கூறி

ணர். வாழ்வேந்தன் மக்களென்பதை வாழ்வு, ஏந்தல், மக்களெனப் பதம் பிரித்து, வாழ்வுக்குக் காரணமாகிய அரசனுடைய மக்களென உரைத்தலுமாம். அன்னையைத் தம்மொடுபடுத்தி 'யாம்' என்றார். ஏக - காரணப்பொருட்டாகிய இறந்தகாலச் செயவெனெச்சம். குவ் வுருபு ஏழாவதனிடப்பொருளது. அழாநின்றென்பது அழுதெனத் திரிந்தது. (௫௧)

ஆங்கவர் சொன்ன வுரைகேட் டழிவெய்தி
நீங்கா வுயிரோடு நின்றிட்டான்—பூங்காவில்
வள்ளம்போற் கோங்கு மலருந் திருநாடன்
உள்ளம்போற் கண்ணீ ருகுத்து.

(இ-ள்.) பூ காவில்-பூஞ்சோலையில், வள்ளம்போல - வட்டில் போல, கோங்கு - கோங்கரும்பு, மலரும்-மலர்கின்ற, திரு நாடன் - செல்வமிக்க நிடதநாட்டரசன், ஆங்கு - அவ்வாறு அழுதுகொண்டு, அவர் சொன்ன-அப்பிள்ளைகள் சொல்லிய, உரை கேட்டு - சொல்லைக்கேட்டு, அழிவு எய்தி - ஊக்கமழிந்து, உள்ளம்போல - உள்ளம் உருகுவதுபோல, கண் நீர் உகுத்து - கண்ணீர் சிந்தி, நீங்காத உயிரோடு - பிரியாத உயிரையுடையானாகி, நின்றிட்டான் - திகைத்து நின்றான், எ - று.

(வி-ரை.) அவர் சொல்லிய சொல்லைக்கேட்டமாத்திரத்தில் உயிர் பிரியத்தக்க பெருந்துன்பத்தையடைந்தானென்பார் 'நீங்காவுயிரோடு நின்றிட்டான்' என்றார். பூங்கா-பொலிவாகிய கா எனப் பண்புத்தொகைநிலைத்தொடராகவாவது, பூவையுடைய கா என இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்றொக்கதொகைநிலைத் தொடராகவாவது கொள்க. கோங்கு முதலாகுபெயர். நீங்காத என்னும் எதிர்மறைப் பெயரெச்சத் தீறு தொகுத்தல்; இதனை [நன்-உயி-௫௬-௬,] "சாவ வென் மொழியீற் றுயிர்மெய் சாதலும்விதி" என்னும் விதியை

உபலக்கணமாகக் கொண்டு, இப்பெயரெச்சத் திறு கெட்டதெனின், தொல்-"சாவ வென்னுஞ் செயவெனெச்சத், திறுதி வகரங் கெடுதலு முரித்தே" என்னுஞ் சூத்திரத்துக்கு உரையாசிரியரும், நச்சினார்க்கினியாரும், நன்-"சாவவென் மொழியீற் றுயிர்மெய் சாதலும்விதி" என்பதற்கு நன்னூ லுரைகாரரும் இவ்வாறு கொள்ளாமையாலும், இவர் இப்புணர்ச்சி சாவக்குத்திரனென்னும் புணர்ச்சிபோலச் சிறந்ததல்லாமையால் சாதலும் விதியென்று ரென்றமையாலும், இது சாவ என்னுஞ் சொல்லுக்கே கூறிய சிறப்புவிதி யாகலாலும், உடையாச் சட்டி, சுழற்றுச் சக்கரம் என எதிர்மறைப் பெயரெச்சம் யாவும் ஈறு கெட்டுவரு மாதலாலும், சாவ வினையெச்சம், நீங்கா பெயரெச்ச மாதலாலும், அது உடன்பாடு, இது எதிர்மறை, இப்படி வருதற்கு விதி பிரயோகவிவேகத்தி லுண்டெனின், இந்நூல் தொல்காப்பிய வுரையினும், நன்னூலுரையினும் சிறந்ததன்றாதலாலும், அது ஆராய்ந் துணரும் நுண்ணுணர்வின்மையாலாகிய மடமையின் காரிய மென்க. நின்றிட்டா னென்பதில் இடு பகுதிப்பொருண்மை விகுதி. போலென்பன இரண்டும் போல என்னும் செயவெனெச்சத்தீறாகிய அகரம் தொகுத்தலாய் நின்றன. (சுo)

உங்க ளரசொருவ னாளநீ ரோடிப்போந்
திங்க ணுறைத லிழுக்கன்றோ—செங்கை
வளவரசே யென்றுரைத்தான் மாதவத்தாற் பெற்ற
இளவரசை நோக்கி யெடுத்து.

(இ-ள்.) மா தவத்தால் பெற்ற-பெருந்தவத்தால் பெற்ற, இள அரசை நோக்கி-இளவரசாகிய இந்திரசேனனைப் பார்த்து, செம் கை வள அரசே - சிவந்த கைவளமுள்ள அரசனே, உங்கள் அரசு - உங்களுடைய அரசுரிமையை, ஒருவன் ஆள - அயலான் பெற, நீர் ஓடிப் போந்து-நீங்கள் (பயத்தால்) ஓடிவந்து, இங்கண் - (நின் தந்தைக்கு

வேட்டசமாகிய) இந்த, உறைதல்-வசிப்பது, இழுக்கு அன்றோ-குற்றம் (மானக்கேடு) அல்லவோ, என்று எடுத்து உரைத்தான்-என்று எடுத்துச் சொல்லினான், எ-று.

(வி·ரை.) இழுக்கு-முதனிலை திரிந்த தொழிற்பெயர். செங்கை வளவரசு-[நன்-பொது-கூ-உ-கூ-இல்] "சொற்றொறும் இற்றிறிதன்பெற்றி" என்பதனால் வந்த பால்வழுவமைதி. பின்னுள்ள அரசு பண்பாகுபெயர். நீர்: தங்கையையும், அவன் தாயையும், அவனோடுபடுத்துக் கூறினமையால் பால்வழுவமைதியன்று. (கூக)

நெஞ்சாலிம் மாற்ற நினைத்துரைக்க நீயல்லா
தஞ்சாரோ மன்ன ரடுமடையா—எஞ்சாது
தீமையே கொண்ட சிறுதொழிலா யெங்கோமான்
வாய்மையே கண்டாய் வலி.

(இ - ள்.) அடு மடையா-சமைக்கும் மடைத்தொழிலையுடையானே, எஞ்சாது-குறையாமல் (நிறைவாக), தீமையே கொண்ட-அவமதிப்பையேயுடைய,சிறு தொழிலாய்-(சேரோடடுதலாகிய) சிறு தொழிலையுடையானே, இம்மாற்றம் - (நீரேசடிப்போந்து இங்கணுரைத்த லிழுக்கென்னும்) அச் சொல்லை, நெஞ்சால் நினைத்து-மனத்தினால் நினைந்து, உரைக்க-(வாயால்) சொல்ல, நீ அல்லாது-நீ யல்லாமல், மன்னர்-அரசர்கள், அஞ்சாரோ-பயப்படாரோ, எம் கோமான்-எம் அரசனாகிய நளனுக்கு, வலி- வலி என்பது, வாய்மையே-(சொன்ன சொல் மறுக்காமையாகிய) சத்தியமேயாம், எ-று.

(வி - ரை.) எம் அரசன் உண்மையே வலியெனக் கொண்டனாதலால் தான் சூதில் தோற்ற தேசத்தைப் புட்கரனுக்குக் கொடுத்தானே அல்லாமல் போர்வலியிலனாய்க் கொடுத்தவனல்லன் என்றறியென்பது. ஓ - எதிர்மறை வாய்மை - வாயின்தன்மை பலவற்றுள்ளும் சிறந்த சொல்லிய சொல் தவறாமைக்காயிற்று. வாய்மையை

அன்றி: படை, குடி, கூழ் முதலியவற்றை உடைமையை வலியெனக் கருதானென்பது குறிப்பெச்சம். மேலே மடையா என்றதினால் சிறுதொழில் தேரை நடத்துந் தொழிலை யுணர்த்தியது. முன்னுள்ள ஏ-பிரிநிலை. பின்னுள்ள ஏ-தேற்றம். கண்டாய் - முன்னிலையசைச்சொல். (சுஉ)

எந்தை கழலிணையி லெம்மருங்குங் காணலாம்
கந்து சுளியுங் கடாக்களிற்றின்—வந்து
பணிமுடியிற் பார்காக்கும் பார்வேந்தர் தாழும்
மணிமுடியிற் றேய்ந்த வடு.

(இ-ள்.) பணி முடியில் - ஆதிசேடனது முடியிலுள்ள, பார் காக்கும் - பூமியை ஆள்கின்ற, பார் வேந்தர் - பேரரசர், கந்து-கட்டுத்தறியை, சுளியும் - கோபித்து முறிக்கும், கடாம் களிற்றின் வந்து-மதயானைமேல் வந்து, தாழும் - வணங்குகின்ற, மணி முடியின்-இரத்தின மிழைத்த முடியினால், தேய்ந்த வடு-தேய்ந்ததனால் உண்டாகிய வடுவை, எந்தை - அரசர்க்கரசனாகிய தந்தையினுடைய, கழல் இணையில் - இருபாதங்களிலும், எம்மருங்கும் காணல் ஆம் - எல்லாப் புறத்திலும் காணலாகும், எ - று.

(வி-ரை.) என்று இந்திரசேனன் கூறினன். கழலிணை இணை கழலென்னும் பண்புத்தொகைநிலைத்தொடர் பின்முன்னாக மாறி நிற்றலால் அல்வழிப்புணர்ச்சியில் தழாத்தொடர். இணை-ஒன்றினோடொன்று சேரும் சேர்க்கை; இது இங்கே இரண்டென்னும் வரையறைப்பண்பை யுணர்த்திற்று. பார் என்பது: கருமை கார், பெருமை பேர் எனப் பண்புப்பெயர்கள் விகாரப்பட்டு நின்றாற்போலப் பருமை விகாரப்பட்ட சொல்லாதலால் பார்வேந்த ரென்பதற்குப் பேரரசரெனப் பொருளுரைக்கப்பட்டது. முன்னுள்ள பார்-பண்பாகுபெயர். தாழும் என்னும் பெயரெச்சம் முடி என்னுங் கருவிப்பெயர் கொண்

டது. தேய்ந்த என்னும் பெயரெச்சம் வடு என்னுங் காரியப்பெயர் கொண்டது. எந்தை - பொருளடியாகப் பிறந்த ஆண்பாற் படர்க்கை முறைப்பெயர்; யாம் - பகுதி, தை - ஆண்பாற்படர்க்கை முறைப் பொருண்மைவிகுதி, யா - இடப்பிறப்பாலொத்த எவ்வானது குறுக்கல், மகரம் நகரமாதல் சந்தி. எம்மருங்கு மென்பதில் உம்மை முற்று ம்மை யாதலால் எகரவினா எஞ்சாமைப்பொருளது. தலையின்பெய ராகிய முடியென்பது அத்தலை தாங்குதற்குரிய கிரீடத்துக்கானமை யால் இடவாகுபெயர்; முடி என்பதனோடு ஐ என்னும் செயப்படு பொருண்மை விகுதி புணர்ந்து கெட்டதெனின், முடிக்கப்படும் பொருள் மலரும், மலர்போல்வனவு மன்றிக் கிரீடம் அன்றாதலால் அது பேதைமையென்க. பணி - படத்தை யுடையது; அஃது தலைமை பற்றி ஆதிசேடனுக்காயிற்று. (௬௧)

*மன்னர் பெருமை மடைய ரறிவரோ*
*உன்னை யறியா துரைசெய்த — என்னை*
*முனிந்தருள லென்று முடிசாய்த்து நின்றான்*
*கனிந்துருகி நீர்வாரக் கண்.*

(இ-ள்.) மன்னர் பெருமை - அரசருடைய பெருமையை, மடை யர் - மடைத்தொழில் செய்வோர், அறிவரோ - அறியவல்லரோ; உன்னை அறியாது - உன் பெருமையை அறியாமல், உரை செய்த - சொல்லிய, என்னை முனிந்தருளல் - அறிவில்லாத என்னைக் கோபி யாதை, என்று - என்று சொல்லிக்கொண்டு, கனிந்து உருகி - மனம் கனிந்து உருகி, கண் நீர் வார - கண்ணினின்று நீர் ஒழுக, முடி சாய்த்து நின்றான் - தலையை வளைத்து நின்றான், எ - று.

(வி-ரை.) உருகி என்னுஞ் சினைவினை சாய்த்தென்னும் முதல் வினை கொண்டது [நன் - வினை - ௫ - ௨௭]. உன் - பொருளாகு பெயர். மன்னர், மடையர் - சாதிப்பன்மை. முனிந்தருளல் - எவ

லொருமை எதிர்மறை வினைமுற்று; முனி - பகுதி, த் - சந்தி, து - சாரியை, அருள் - வினை முதலினுடைய உயர்வுப் பொருண்மை விகுதி, சந்தித் தகரம் நகரமானது மெலித்தல், உகரக்கேடு சந்தி, அனைத்து மொருபகுதி, அல் - ஏவலொருமை எதிர்மறை விகுதி; இதனை வியங்கோளெனின், இது ஐம்பால் மூவிடங்களிலும் செல் லாமையின் வியங்கோளென்னல் முழுமடமையென்க. மடையர் - தொழிலடியாகப் பிறந்தபெயர்; மடு (உண்)-பகுதி, ஐ - செயப்படு பொருண்மைவிகுதி, உகரக்கேடு சந்தி; இது தன்னைச் சமைக்குந் தொழிலை யுணர்த்தலால் காரணவாகுபெயர்; ஆதலால், தொழிலடியா கப் பிறந்த தென்றும். தன்மேப்பாட்டைக் கூறினமையால் உள்ள முருகிக் கண்ணீர் ஒழுகும்படி தலையைச் சாய்ப்பானாயினான். (சுச)

கொற்றக் குமரனையுங் கோதையையுந் தான்கண்டு
மற்றவன்றா னாங்குரைத்த வாசகத்தை—முற்றும்
மொழிந்தாரம் மாற்ற மொழியாத முன்னே
அழிந்தாள் விழுந்தா ளழுது.

(இ-ள்.) கொற்றம்-வெற்றிக்குரிய இலக்கணமுள்ள, குமரனை யும் - இந்திரசேனனையும், கோதையையும் - இந்திரசேனையையும், அவன் கண்டு - அவன் பார்த்து, ஆங்கு உரைத்த - அம்மடைப்பள்ளி யிடத்துச் சொல்லிய, வாசகத்தை உம் - சொல்லையும், முற்றும்-மற்ற செய்கைகளெல்லாவற்றையும், மொழிந்தார் - (தோழியர்) சொல்லி னார்கள்; அம்மாற்றம்-அச்சொற்கள், மொழியாத முன்னே-சொல்லி முடியாத முன்னே, அழிந்தாள் - மனமழிந்து, அழுது விழுந்தாள் - அழாநின்று விழுந்தாள், எ-று.

(வி-ரை) தானிரண்டும், மற்றும் அசை. ஏ-தேற்றம். வாசகத் தையு மென்னும் உம்மை தொகுத்தல். முற்றுமென்றவும்மை எண் ணுப்பொருளோடு முற்றுப்பொருள்பட நின்றது. மற்ற செய்கைக

ளாவன - பிள்ளைகளை எடுத்தணைத்ததும், மனமுருகிக் கண்ணீர் சிந்தித் தலைசாய்த்ததும், தீ நீர் பெறாது சமைத்ததுமாம். அம்மாற்ற மென்பதில் அகரச்சுட்டு, நளன் சொல்லிய சொற்களையும், மற்ற செயல்களையும் சுட்டிநின்றது. (கரு)

கொங்குலவு கூந்தல் குழைதிருத்திக் கோலஞ்செய்
அங்கை யிரண்டு மடுபுகையால்—இங்ஙன்
கருகியவோ வென்றழுதாள் காதலனை முன்னாள்
பருகியவேற் கண்ணாள் பதைத்து.

(இ-ள்.) முன்னாள் - பிரிவுக்கு முற்காலத்தில், காதலனை-நாயகனதழகை, பருகிய-உண்ட, வேற்கண்ணாள்-வேல்போலுங் கண்ணையுடைய தமயந்தி, கொங்கு உலவு - மணம் பரிமளிக்கின்ற, கூந்தல்-என் கூந்தலையும், குழை-காதணிகளையும், திருத்தி-செவ்வைசெய்து, கோலம் செய்-(எனக்கு) அலங்காரஞ் செய்கிற, அங்கை இரண்டும்-இரண்டு உள்ளங்கைகளும், அடு புகையால் - சமைத்தலா லுண்டாம் புகையினால், இங்ஙன் கருகியவோ - இப்படிக் கறுத்தனவோ, என்று-என்று சொல்லி, பதைத்து-துடித்து, அழுதாள்-அழுதனள், எ-று.

• (வி-ரை.) அங்கையிரண்டு - அல்வழிப்புணர்ச்சிப் பண்புத்தொகைநிலைத்தொடரில் தழாத்தொடர். கையகமென்பது அங்கை என்றானது இலக்கணப்போலி; இதற்கு நன்னூலார் செய்கைச் சூத்திரங் கூறுவர் [நன்-மெய்-சூ-கக] "அகமுனர்ச் செவிகை வரின் இடையனகெடும்". இங்ஙன் என்ற குறிப்பால் தமயந்தி நளனைக் கண்டு கூறியது இச்செய்யுளென விளங்குகின்றது. ஓ-இரக்கப்பொருட்டு. அவனைக் கண்டபோ துண்டாகிய துன்ப மிகுதியால் அவன் அக்கினி முதலியோர்பால் பெற்ற வரத்தையு முணராமல் அடுபுகையால் கருகியவோ என்பாளாயினள். (கசு)

மற்றித் திருநகர்க்கே வந்தடைந்த மன்னவற்குக்
கொற்றத் தனித்தேருங் கொண்டணைந்து—மற்றும்
மடைத்தொழிலே செய்கின்ற மன்னவன்கா ணெங்கள்
கொடைத்தொழிலா னென்றாள் குறித்து.

இச் செய்யுள் தமயந்தி தன் தந்தையிடஞ் சென்று கூறியது.

(இ-ள்.) இத் திரு நகர்க்கு - இவ் வழகிய நகரத்துக்கு, வந்து அடைந்த - வந்து சேர்ந்த, மன்னவற்கு - அயோத்தி அரசனுக்கு, கொற்றம் - வெற்றியைத் தருகின்ற, தனித் தேரும் கொண்டு - ஒப்பற்ற தேரையும் ஓட்டிக்கொண்டு, அணைந்து-சேர்ந்து, மற்று மடைத் தொழில் உம் செய்கின்ற - மற்ற மடைத்தொழிலையும் செய்கின்ற மன்னவனே - தலைவனே, எங்கள் - எங்களுடைய, கொடைத்தொழிலான் - வள்ளலாகிய நளராசன், என்றாள் குறித்து - என்று நிச்சயித்துச் சொல்லினாள், எ-று.

(வி-ரை.) மற்று இரண்டனுள் முன்னது அசைநிலை, பின்னது வினைமாற்று. தேருமென்ற உம்மை எதிரதுதழீஇயதனோடு இழிவுசிறப்பில் வந்தது; மற்ற உம்மை இறந்ததுதழீஇயதனோடு இழிவுசிறப்பில் வந்தது. மற்றுமென்ற உம்மையைத் தொழிலென்பதனோடும், தொழிலே என்ற ஏகாரத்தை மன்னவ னென்பதனோடுங் கூட்டுக; இது தேற்றம். (கூஎ)

போதலருங் கண்ணியான் போர்வேந்தர் சூழப்போய்க்
காதலிதன் காதலனைக் கண்ணுற்றான்—ஓதம்
வரிவளைகொண் டேறும் வளநாடன் றன்னைத்
தெரிவரிதா நின்றான் றிகைத்து.

(இ-ள்.) போது அலரும் - நாளரும்புகள் மலர்கின்ற, கண்ணியான் - மாலையணிந்த விதர்ப்பராசன், போர் வேந்தர்-போரிற் சிறந்த

அந்நர், சூழப் போய் - சூழச் சென்று, காதலிதன் - தன் குமாரத்தியி னுடைய, காதலனை - நாயகனை, கண்ணுற்றான் - கண்டு, ஓதம் - கட லானது, வரிவளை கொண்டு - வரிகளையுடைய சங்குகளை (அலைக ளாகிய கைகளால்) தாங்கி, ஏறும் - (கரையில்) ஏறுகின்ற, வள நாடன் தன்னை - வளப்பமாகிய நிடததேசத்தானை, தெரிவு அரிது ஆக - அறிதல் அரியதாக, திகைத்து நின்றான்-பிரமித்து நின்றான், எ - று.

(வி - ரை.) பெரும்பொழுதும், சிறுபொழுதும் தவறாமல் அவ் வப்பொழுதுகளில் மலர்வதாதலால் போது-காலவாகுபெயர். வளம்- பண்புப்பெயர்; வள்-பகுதி, அம்-பகுதிப்பொருள் விகுதி. கண்ணுற் றான்-ஒரு சொல்லின் தன்மையதாக நின்ற இறந்தகால வினைமுற்று வினையெச்சமாய், நின்றானென்னும் வினைகொண்டது. அரிதாக என்பது தொகுத்தலாய் அரிதா என நின்றது. (கூஅ)

செவ்வாய் மொழிக்குஞ் செயலுக்குஞ் சிந்தைக்கும்
ஒவ்வாது கொண்ட வுருவென்று—எவ்வாயும்
நோக்கினா னோக்கித் தெளிந்தா னுணங்கியதோர்
வாக்கினான் றன்னை மதித்து.

(இ-ள்.) வாய் - வாயினிடத்துண்டாகும், செம் மொழிக்கும் - கம்பீரமான சொல்லுக்கும், செயலுக்கும் - செய்தொழிலுக்கும், சிந் தைக்கும் - எண்ணத்துக்கும், ஒவ்வாது-ஒத்திராமல், கொண்ட-மாறா கக்கொண்ட, உரு - உருவமாகும், (இவ்வுருவம்) என்று - என்று கருதி, எவ்வாயும் - எல்லா வழியாலும், நோக்கினான் - ஆராய்ந்தான், நோக்கி - ஆராய்ந்து, நுணங்கியது - நுட்பமா யறியத்தக்க பொரு ளுடையதாகிய, ஓர் வாக்கினான் தன்னை - ஒப்பற்ற வாக்கையுடைய வாகுகனை, தெளிந்து மதித்தான் - (நளனே எனத்) துணிந்து நன்கு மதித்தான் (வீமன்), எ-று.

(வி-ரை.) உரு என்னும் பெயர்ப் பயனிலைக்கு இவ்வுருவ மென்னும் எழுவாய் அவாய்நிலையால் வந்தது. என்று-இடைச்சொலடியாகப் பிறந்த செய்யா என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். செயலென்றது-இருத்தல், நிற்றல், நடத்தல் முதலிய செய்கைகளை. "நெஞ்சம் கடுத்தது காட்டும் முகம்" என்றபடி சிந்தை முகக்குறியால் அறிந்தானாதலால் 'சிந்தைக்கு மொவ்வாது கொண்டவுரு' என்றான். ஒவ்வா யென்பத னீற்றில் மூன்றனுருபு தொகுத்தல்; தொகையன்று. அறியும் அறிவின் நுணங்குநிலைச் செயப்படுபொருளின் மேலேற்றி 'நுணங்கிய தோர்வாக்கு' என்றார். நுணங்கியது - இறந்தகால வினையாலணையும்பெயர்; நுணங்கு (நுண்மை) - பகுதி, இன்-இறந்தகால இடைநிலை, அ - சாரியை, து - ஒன்றன்படர்க்கை விகுதி, இடைநிலை ஈற்று னகரக்கேடு கடைக்குறை, யகரத்தோற்றம் சந்தி. ஒவ்வாது என்பது இடைச்சொலடியாகப் பிறந்த ஒத்தென்னும் உடன்பாட்டு வினையெச்சத்துக்கு எதிர்மறை வினையெச்சம். (சுக)

பைந்தலைய நாக பணமென்று பூகத்தின்
ஐந்தலையின் பாளைதனை யையுற்று—மந்தி
தெளியா திருக்குந் திருநாடா வுன்னை
யொளியாது காட்டுன் னுரு.

(இ-ள்.) பூகத்தின் - கமுகமரத்தினது, பைந்தலையின் - பசுமையாகிய தலையிலுள்ள, பாளைதனை - பாளையை, ஐந்தலைய - ஐந்து தலைகளையுடைய, நாக பணம் என்று - பாம்பின் படமென்று, ஐயுற்று - சந்தேகித்து, மந்தி - குரங்கு, தெளியாது-(இன்னதெனத்) துணியாமல், இருக்கும் - இருப்பதற்கிடமாகிய, திரு நாடா - செல்வமிக்க நிடதநாட்டானே, உன்னை ஒளியாது - உன்னை ஒளிக்காமல், உன் உரு - உன் உருவத்தை, காட்டு - காட்டாய், எ-று.

(வி - ரை.) பசுமை என்பதன் விகாரமொழியாகிய பை என்பதைத் தலையி னென்பதனோடும், ஐந்தென்பதன் விகாரமொழியாகிய

ஐ என்பதைத் தலைய என்பதனோடுங் கூட்டியுரைக்க. தலைய - வினையடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். ஒளியாது-செயப்படுபொருள் குன்றியவினைக்கும், செயப்படுபொருள் குன்றாவினைக்கும் பொதுவினையாயினும் இங்குச் செயப்படுபொருள் குன்றாவினையாய் நின்றது. மந்தி, பூகத்தின் பாளையை நாகத்தின் படமென்று ஐயுற்றுத் தெளியாதிருக்கு நாடா என்றமையால் நின்னைத் தெளிய எம்மாலாகாதென்பது குறிப்பெச்சம். இது திரிபதிசயவணி. இது வீமன் கூறியது: (எ0)

அரவரசன் றான்கொடுத்த வம்பூந் துகிலின்
ஒருதுகிலை வாங்கி யுடுத்தான்—ஒருதுகிலைப்
போர்த்தான் பொருகலியின் வஞ்சனையாற் பூண்டளிக்குங்
கோத்தாய முன்னிழந்த கோ.

(இ-ள்.) பொரு கலியின் - போர் செய்யவல்ல கலிபுருடனது, வஞ்சனையால் - வஞ்சனையினால், பூண்டு அளிக்கும் - மேற்கொண்டு (உயிர்களைக்) காக்கின்ற, கோ தாயம் - அரசுரிமைப்பொருள், முன் இழந்த கோ - முன்னே இழந்த அரசனாகிய நளன், அரவு அரசன் தான் கொடுத்த - பாம்புக்கரசனாகிய கார்க்கோடகன் கொடுத்த, அம் பூ துகிலின்-அழகிய பொலிவாகிய ஆடைகளுள், ஒரு துகிலை வாங்கி உடுத்தான்-ஓராடையை எடுத்து (அரையில்) உடுத்தான்; ஒரு துகிலை போர்த்தான் - மற்றோராடையை (மேலே) போர்த்துக்கொண்டான், எ - று.

(வி-ரை.) அரவரசனென்பது பாம்புகளுள் சிறந்த பாம்பென்பது. பொருகலி: வினைத்தொகைநிலைத்தொடராதலால் வருமொழி முதல் ககர மிகவில்லை [நன் - உயி-சூ-உக]. பூந்துகில்-பண்புத்தொகைநிலைத்தொடர்; பூப்போலுந் தொழிலை யமைத்த துகிலென உரைக்கின் இரண்டாம் வேற்றுமையுருபும் பயனும் உடன்தொக்க தொகை

நிலைத்தொடர் பூ தன் உருவத்துக்கு முதலாகுபெயர். உடுத்தான் - ஆண்பாற்படர்க்கை யிறந்தகால வினைமுற்று; உடு-பகுதி, த் - சந்தி, த் - இறந்தகால இடைநிலை, ஆன் - ஆண்பாற்படர்க்கை விகுதி; இதற்கு எதிர்மறை உடான், உடுககான் என வரும். தாயமாவது-தந்தை முதலானோருடையதாகிப் புத்திரன் முதலியோர் கைக்கொள்ளுதற்குரிய பொருள். (எஃ)

> மிக்கோ னுலகளந்த மெய்யடியே சார்வாகப்
> புக்கோ ரருவினைபோற் போயிற்றே—அக்காலம்
> கானகத்தே காதலியை நீத்துக் கரந்துறையும்
> மானகதேர்ப் பாகன் வடிவு.

(இ - ள்.) கானகத்து - வனத்தில், காதலியை - மனைவியை, நீத்து - கைவிட்டு, கரந்து உறையும் - ஒளிந்து வசிக்கும், மால் - பெருமையாகிய. நகம் - மலையை ஒத்த, தேர்ப்பாகன் வடிவு - தேர்ச் சாரதியினது மேனி, மிக்கோன்-(தேவரெனப்படுமவரில்) சிறந்தோனாகிய இறைவனது, உலகு அளந்த - உலகங்களை அளந்த, மெய் அடியே - மெய்ம்மையாகிய சீர்பாதங்களையே, சார்வ ஆக - துணையாக, புக்கோர் - சரணடைந்தவர்களுடைய, அருவினைபோல் - (பிறரால் நீக்குதற்கு) அருமையாகிய வினைகளைப்போல, அக்காலம் - ஆடைகளை அணிந்தகாலத்தில், போயிற்று - நீங்கியது, எ-று.

(வி-ரை.) தனக்கு ஒப்பாரும் உயர்ந்தாரு மிலனாதலால் 'மிக்கோன்' எனவும், எதுவின்றியே உயிர்களுக்கு அருள்செய்பவன் ஆதலால் 'உலகளந்த' எனவும், நித்தியமாகிய நிரதிசய இன்பத்தைத் தருவன ஆதலால் 'மெய்யடி' எனவும், மற்றொன்றிற் பற்றுடையார்க்கு ஏருளுவவல்ல ஆதலால் 'அடியே' எனவும் கூறினர். ஏ - பிரிநிலை. அருவினை என்றது ஆகாமியம், சஞ்சிதம், பிராரப்தம் என்பவற்றை. வினை - சாதியொருமை, மிக்கோன் உலகளந்த செய்தி:—"தேவர்க

னுக்கு நன்மை யுண்டாகும்படி, காசிபருக்கு மைந்தனாக வாமனவுருக் கொண்டு அவதரித்து, மாபலியினிடஞ் சென்று, மூன்றடி நிலம் யாசித்து, ஓரடியால் மண்ணுலகையும், மற்றோரடியால் விண்ணுலகத்தையும் அளந்து, மற்ற அடிக்கு அவனைக் கொண்டமை." (எ௨)

தாதையைமுன் காண்டலுமே தாமரைக்க ணீரரும்பப்
போதலருங் குஞ்சியான் புக்கணைந்து—கோதிலாப்
பொன்னடியைக் கண்ணிற் புனலாற் கழுவினான்
மின்னிடையா ளோடும் விழுந்து.

(இ - ள்.) போது - பேரரும்புகள், அலரும்-மலர்கின்ற, குஞ்சியான் - சிகையையுடைய இந்திரசேனன், தாதையை - பிதாவை, முன் காண்டலும் - எதிரே காணுதலும், தாமரைக்கண்-செந்தாமரை மலர்போன்ற கண்களில், நீர் அரும்ப - நீர் சுரந்துவர, மின் இடையாளோடு - மின்னலை ஒத்த இடையையுடைய இந்திரசேனையோடு, புக்கு - (தந்தையினிடம்) புகுந்து, அணைந்து - கட்டிக்கொண்டு, விழுந்து - சேவித்து, கோது இலாத - குற்றமில்லாத, பொன் அடியை - பொன்போலப் பூச்சியமாகிய (அவனது) பாதங்களை, கண்ணின் புனலால் - கண்ணீரால், கழுவினான் - அலம்பினான், எ-று.

(வி-ரை.) கண்ணின் என்பதிற் சாரியை யீற்று னகரம் சந்தஇன்பப்பொருட்டு வலித்தலாயிற்று. காண்டலும் - இறந்தகாலவினையெச்சம்; காண் - பகுதி, து: அல் - சாரியை, உம் - இறந்தகாலவினையெச்ச விகுதி, தகரம் டகரமாதலும், உகரக்கேடும் சந்தி. கோதிலாத - எழுவாய்த்தொகாநிலைத்தொடர்; இலாத பொன் - குறிப்புப்பெயரெச்சத்தொகாநிலைத்தொடர்; இலாத என்னும் குறிப்புப் பெயரெச்சத்தீறு தொகுத்தல். கோதிலாத பொன் - பால்வழுவமைதி; இலாப்பொன் என்பதில் மையென்னும் பகுதிப்பொருள் விகுதி கெட்டதெனக் கொள்ளின் பண்புத்தொகைநிலையெனக் கொள்க.

விரிந்தால் இலாமையாகிய பொன் என விரியும்; இங்ஙனமன்றி இலா என்பதில் ஆகாரஞ் சாரியை என வைத்து அத் தொகைநிலைத் தொடரெனினு மொக்கும்; இது விரியின் இன்மையாகிய பொன்னென விரியும் [நன் - மெய்-சூ-கூ0]. மூன்றனுருபைச் சார்ந்துவந்த உம்மை சாரியை. (எகூ)

பாதித் துகிலோடு பாய்ந்திழியுங் கண்ணீரும்
சீதக் களபதனஞ் சேர்மாசும்—போத
மலர்ந்ததார் வேந்தன் மலரடியில் வீழ்ந்தாள்
அலர்ந்ததே கண்ணீ ரவற்கு.

(இ - ள்.) பாதித் துகிலோடு - பாதி வஸ்திரத்தோடு, பாய்ந்து - பெருகி, இழியும் - வடிகின்ற, கண்ணீரும் - கண்ணீரும், சீதம் - குளிர்ச்சியாகிய, களபம் - கலவைச்சாந்து அணிதற்குரிய, தனம் சேர் மாசும் - தனங்களில் படிந்த அழுக்கும், போத - (தன்னோடு) வர, (இவற்றை யுடையளாகி) மலர்ந்த தார் - மலர்ந்த மாலையணிந்த, வேந்தன் - நளராசனுடைய, மலர் அடியில் - தாமரைமலர்போன்ற பாதத்தில், வீழ்ந்தாள் - தொழுதாள், அவற்கு - அவளது நிலைமையைக் கண்ட நளராசனுக்கு, கண்-கண்களில், நீர் அலர்ந்தது-நீர் பரந்தது, எ-று.

(வி - ரை.) துகிலோடு கண்ணீரும், மாசும் போத என்றது இலக்கணை. போத-செயவென் வாய்பாட்டு நிகழ்கால வினையெச்சம்; போ - பகுதி, (புகு என்பதன் மரூஉ), து-சாரியை, அ-விகுதி, உகரக்கேடு சந்தி. வனத்தில் பாதியாக அரிந்து உடுத்த அப்பாதி வஸ்திரத்தை அன்றி வேறு உடுக்காமலும், நாயகனுடைய பிரிவால் அழுது கொண்டு நீராடல் செய்யாமலு மிருக்கின்றவ ளாதலால் இவ்வாறு கூறினர். உடல் முழுமையும் மாசு படிந்திருப்பினும் கலவைச் சந்தனமுதலிய சந்தனங்களை யணிதற்குரியன தனங்களே ஆதலால் அவற்

றின் மாசைக் கூறவே ஒழிந்தவற்றின் மாசு கூறவேண்டாதாயிற்று. பாதித்துகில்-பண்புத்தொகைநிலைத்தொடர்; பாதி-பகுதியென்பதன் மரூஉ. (எச)

வெவ்விடத்தோ டொக்கும் விழியிரண்டும்வீழ்துயில்கொள்
அவ்விடத்தே நீத்த வவரென்றே—இவ்விடத்தே
வாரார் முலையாளம் மன்னவனைக் காணுமல்
நீரான் மறைத்தனவே நின்று.

(இ - ள்) வெம் விடத்தோடு - வெம்மையாகிய விஷத்தோடு, ஒக்கும் - ஒத்திருக்கும், விழி இரண்டும் - கண்களிரண்டும், வீழ் துயில் கொள் - (மற்றைப் பொறிகளும்) அடங்குகின்ற நித்திரையைக்கொண்ட, அவ்விடத்து - அவ்வனப் பாழ்மண்டபத்தில், நீத்த - கைவிட்ட, அவர் என்றே - அத்தன்மையானவரென்று கருதியே, இவ்விடத்து - (காணவந்த) இவ்விடத்தில், வார் ஆர்-கச்சுப்பொருந்துதற்குரிய, முலையாள் - முலைகளையுடைய தமயந்தி, அம் மன்னவனைக் காணாமல் - அவ்வரசனைக் காணாதபடி, நின்று - சலியாமல் நின்று, நீரால் மறைத்தன - நீரினால் மறைத்துவிட்டன, எ-று.

(வி-ரை.) பிரிந்த நாயகனைக் கண்டபோது தமயந்திக்குக் கண்ணீர் மிகச் சுரந்தமையால் அவனுருத் தோன்றாமையாகிய இயல்பாக நிகழுந் தன்மையொழிய, நளன் முன்செய்த தீமையைக் குறித்துக் கண் இவ்வாறு மறைத்தனவென்று இவ்வாசிரியர் தாம் கருதிய வேறொன்றை அவற்றின் மேலேற்றிக் கூறினமையால் இது தற்குறிப்பேற்றம். நன்றல்லதன்றே மறப்பது நன்றெனக் கொள்ளாமையால் அவற்றை 'வெவ்விடத்தோ டொக்கும் விழி' என்றார். ஒடுருபு ஒப்புப்பொருளது. அவரென்றது இழிப்பினால்வந்த பால்வழுவமைதி. முதலாவது ஏ-ஈற்றசை; இரண்டாவது ஏ-தேற்றம். ஈற்றிலுள்ளது வியப்புப்பொருளது. இது புதியன புகுதல். சலியாது நிற்றல் - இமைக்காமலிருத்தல். (எரு)

உத்தமரின் மற்றிவனை யொப்பா ரொருவரிலை
இத்தலத்தி லென்றிமையோ ரெம்மருங்கும்—கைத்தலத்தின்
தேமாரி பெய்யுந் திருமலர்த்தார் வேந்தன்மேல்
பூமாரி பெய்தார் புகழ்ந்து.

(இ-ள்.) இமையோர்-தேவர்கள், இத்தலத்தில்-இப்பூமியில், உத்தமரில்-உண்மையாளர்களில், இவனை ஒப்பார்-இவனை ஒப்பவர், ஒருவரும் இலை என்று புகழ்ந்து-ஒருவரும் இலரென்று துதித்து, தேன் மாரி பெய்யும்-தேனை மழையைப்போலப் பெய்கின்ற, திரு மலர்த்தார்-அழகிய மலர்மாலையணிந்த, வேந்தன்மேல்-நளராசன் மேல், கைத்தலத்தின்-கைகளினால், பூமாரி-கற்பகப்பூமழையை, எம்மருங்கும் பெய்தார்-எல்லாப் பக்கங்களிலும் பொழிந்தார், எ-று.

(வி-ரை.) தேன் என்னுஞ் சொல்லி னீற்று னகரம் வருமொழி முதல் மகரமாதலால் கெட்டுத் தேமாரியென நின்றது; சில விடங்க ளில் கெடாமல் தேன்மாரி எனவும் வரும். ஒருவருமென்னும் முற் றுப்பொருளோடு இழிவு சிறப்புப்பொருள் தரும் உம்மை ஒருவ ரெனத் தொகுக்கப்பட்டது. இமைத்த லில்லாரை இமையோ ரென் றது மங்கலவழக்கு; இது மாயோன், விண்ணோர் என்பனபோல ஈற் றுபலாகாரம் ஓகாரமாய் இமையோரென்றே பயின்றுவரும்..அவ் வாகாரம் எதிர்மறைப்பொருளதாயின் ஓகாரமாய்த் திரியாமையானும், இமையவர் என்பதற்குப் பொருந்தாமையானும், எதிர்மறை ஆ என் னற்க; பொன்னிற முடையாரெனப் பொருள்கூறின் ஐகாரம் போலி யெனல்வேண்டும்; போலியாயின் அரையரென்பது அரயரெனப் போலிபெறாமல் வழங்கல்போல இமயவரென வழங்கல் வேண்டும்; அஃதில்லாமையால் மடமையென்க. (எசு)

தேவியிவள் கற்புக்குஞ் செங்கோன் முறைமைக்கும்
பூவுலகி லொப்பாயார் போதுவார்—காவலனை

மற்றென்பால் வேண்டும் வரங்கேட்டுக் கொள்ளென்றான்
முற்றன்பாற் பாரளிப்பான் முன்.

(இ-ள்.) முற்று அன்பால் - நிறைந்த அன்பினால், பார் அளிப்பான் முன்-பூமியைக் காத்தற்குரிய நளராசன்முன், (கலிபுருஷன்) காவலனே - அரசனே, தேவி இவள் - நின் மனைவியாகிய இவளது, கற்புக்கும் - கற்பினுக்கும், செங்கோல் முறைமைக்கும் - நினது ஆளுகையினது முறைமைக்கும், பூ உலகில்-பூமியாகிய உலகத்தில், ஒப்பு ஆக-ஒப்பவராக, யார்-எப்பெண் எப்புருஷன், போதுவார்-வருவார்; என்பால் - (அப்படிப்பட்ட உம்மைப் பிரித்துத் துன்பப்படுத்திய) என்னிடத்து, வேண்டும்-நீ விரும்புகிற, வரம்-வரத்தை, கேட்டுக்கொள் - கேட்டுக்கொள்ளாய், என்றான் - என்று சொல்லினான், எ - று.

(வி-ரை.) ஒப்பு-தொழிலாகு பெயர். ஆக என்பது ஈறு தொகுத்தலாய் ஆ என நின்றது. ஆ எனப் பதம் பிரித்து ஆகவென்னும் செயவெனெச்சத்தின் திரிபெனினுமொக்கும். யார்-யாவரென்பதன் மரூஉ. கேட்டுக்கொள் - ஏவலொருமை; கேள் - பகுதி, து சாரியை, கொள்-தற்பொருட்டு விகுதி, ளகர தகரங்கள் டகரமாகத் திரிந்ததும், ககரத்தோற்றமுஞ் சந்தி, ஆய் - விகுதி; இதுவே ஏவலொருமைப் பன்மையும் எதிர்காலத்தையுங் காட்டியது, இவ்விகுதி குறைந்து அவ்வாறு நின்றது. (எஎ)

உன்சரிதஞ் செல்ல வுலகாளுங் காலத்தும்
மின்சொரியும் வேலாய் மிகவிரும்பி—என்சரிதம்
கேட்டாரை நீயடையே யென்றான் கிளர்மணிப்பூண்
வாட்டானை மன்னன் மகிழ்ந்து.

(இ-ள்.) கிளர் - விளங்குகின்ற, மணிப் பூண்-மணிகளழுத்திய அணிகளணிந்த, வாள்-வாள்போரில் வல்ல, தானை மன் - சேனையை

யுடைய நளராசன், மதித்து - (கலிபுருடனுடைய சொல்லை) நன்று மதித்து, உன் சரிதம் - நினது நடக்கை, செல்ல - (முட்டின்றி) நடக்கும்படி, உலகு ஆளும் காலத்தும்-நீ உலகத்தை ஆளுகின்ற காலத்திலும், மின் சொரியும் வேலாய் - ஒளியைப் பொழிகின்ற வேலைத் தாங்கிய கலிபுருடனே, என் சரிதம் - என் ஒழுக்கத்தை, மிக விரும்பிக் கேட்டாரை - மிகுதியாக விரும்பிக் கேட்டவர்களை, நீ அடையேல்-நீ சேராதே, என்முன் - என்று கேட்டுக்கொண்டான், எ-று.

(வி-ரை.) 'உன் சரிதஞ் சொல்லி' எனப் பாடமானால் 'உனது நடக்கையைப் புகழ' எனப் பொருளுரைக்க; அப்படி உரைத்தால் சொல்லி என்பது செயவெனெச்சத் திரிபென்க. மணிப்பூணென்னும் விசேடணம் மன்னனுக்குக் கொள்க. கலி யுலகாளுங் காலம் கலியுகம். உம்மை-இறந்தது தழீஇய எச்சவும்மை. கேட்டாரைக் கூறவே படித்தாரைக் கூறவேண்டாதாயிற்று. தமிழ் மொழியாகிய உலகு இடவாகுபெயரா யுயிர்களை யுணர்த்திற்று; உலகத்துக்கும், உலகத்துயிர்களுக்கும் வழங்கும் வடமொழி உலோகம்; இதனை நச்சினார்க்கினியாருரையானு முணர்க. (௪அ)

என்காலத் துன்சரிதங் கேட்டாரை யானடையேன்
மின்கா லயில்வேலாய் மெய்யென்று—நன்காவி
மட்டிறைக்குஞ் சோலை வளநாடன் முன்னின்று
கட்டுரைத்துப் போனான் கலி.

(இ-ள்.) கலி - கலிபுருடன், நல் காவி - நன்மையாகிய நீலோற்பலமலர்கள், மட்டு - தேனை, இறைக்கும் - பாய்ச்சுகின்ற, சோலை - சோலைகளாற் சூழப்பட்ட, வளநாடன் முன்னின்று - வளப்பமாகிய் நிடதநாட்டான் முன்னின்று, மின் கால் - ஒளியை (க் கக்குகின்ற) வீசுகின்ற, அயில் வேலாய் - கூர்மையாகிய வேலையுடைய நளராசனே, என் காலத்து - என் காலத்தில், உன் சரிதம் கேட்டாரை -

உன் ஒழுக்கத்தைக் கேட்டாரை, யான் அடையேன் - நான் சேர்ந்து துன்பஞ் செய்யேன், மெய் யென்று - (இச்சொல்) உண்மையா மென்று, கட்டுரைத்துப் போனான் - உறுதியாகச் சொல்லிப் போயி னான், எ-று.

(வி-ரை) குளங்களிலுள்ள நீலோற்பல மலர்த்தேன் அக்குளத் தை நிரப்பிப் பெருகிப் பாய்தலால் வளர்கின்ற சோலை யென்பது. நன்காவி யென்பதை நன்கு ஆவி எனப் பதம் பிரித்து, மிகுதியாகக் குளங்களென உரைக்கலுமாம். குளங்களில் தேன் தாமரை முதலிய மலர்களினின்றும் வழிந்ததேன். காவி - சாயம்; அது பண்பாகு பெயராய் நீலோற்பலத்தை யுணர்த்திற்று ; காவி சென்நிறமெனக் கருதி, பற்காவி என்னும் வழக்கத்தையு முணராமல் பேதைமையால் குற்றமென்ப ரொருவர். கட்டுரைத்து-ஒரு சொல்லின் தன்மையதாய் நின்ற இறந்தகால வினையெச்சம்; கட்டுரை - பண்புத் தொகைநிலைத் தொடர்; விரிந்தால் கடுமையாகிய உரையென விரியும்; இதனடியா கக் கட்டுரைத் தென்னும் வினையெச்சம் பிறந்தது; கட்டழகு, கடுங் காற்று என்பவற்றிலும் கடுமை மிகுதிப்பொருள் தருதல் காண்க. ()

வேத நெறிவழுவா வேந்தனையும் பூந்தடங்கட்
கோதையையு மக்களையுங் கொண்டுபோய்த்—தாது
புதையத்தேன் பாய்ந்தொழுகும் பூஞ்சோலை வேலி
விதையக்கோன் செய்தான் விருந்து.

(இ-ள்.) தாது - தாதுக்கள், புதைய - முழுகும்படி, தேன் பாய்ந்து - தேன் பெருகி, ஒழுகும் - ஓடுகின்ற, பூ சோலை - மலர்ச்சோலை யாகிய, வேலி - வேலியையுடைய, விதையக்கோன் - விதர்ப்ப தேசத்து அரசனாகிய வீமராசன், வேத நெறி - வேதத்தினது விதியை (வேதங் கூறிய விதியை), வழுவாத - தப்பி நடவாத, வேந்தனையும் - நளராசனையும், பூ - தாமரைப்பூ போன்ற, தடவு - பெருமையாகிய,

கண் கோதையையும் - கண்களையுடைய தமயந்தியையும், மக்களையும் - அவர்களுடைய பிள்ளைகளையும், கொண்டுபோய் - (மடைப்பள்ளியினின்றும்) அழைத்துச் சென்று, விருந்து செய்தான் - விருந்து செய்தான், எ-று.

(வி-ரை.) விதர்ப்ப மென்னும் ஆரியமொழி விதைய மெனத் திரிந்தது போலும். புதுமைப் பண்பை யுணர்த்தும் விருந்தென்னும் பெயர் இங்கே பண்பாகுபெயராய்ப் புதியவர்களுக்காகி, அவர்களுக்குச் செய்யும் உண்டியிடுதல் முதலிய உபசாரத்துக்குக் காரணவாகு பெயராயிற்று. அறிந்தவர்க்குச் செய்தல், அறியாதார்க்குச் செய்த லென்னும் விருந்து இரண்டனுள் அது முன்னது. வீமராசன் தன் மகளுடைய நாயகன் கிடைத்தா னென்கிற பெருமகிழ்ச்சியால் தன் மருமகனுக்கும், அவன் பிரிவாலுண்டாகிய துன்பத்தால் நல்லுண்டிகளை உண்ணாத தன் மகளுக்கும், பிள்ளைகளுக்கும் விருந்து செய்தா னென்பது. கோ னென்பதில் னகரம் சாரியை. ஒழுகு மென்னும் பெயரெச்சம் பூவென்னும் பிறபெயர் கொண்டது; எல்லைப் பொருட்பெயரைக் கொண்டதெனினும் பொருந்தும். பூ-தொழிலடியாகப்பிறந்த பெயர்ச்சொல்; பூ-பகுதி, இ-வினைமுதற் பொருண்மை விகுதிபுணர்ந்து கெட்டது. (அ0)

உன்னையா னென்று முணரா துரைத்தவெலாம்
பொன்னமரு மார்ப பொறுவென்று—பின்னைத்தன்
மேனீர்மை குன்றா வெழுந்தேர் மிசைக்கொண்டான்
மானீ ரயோத்தியார் மன்.

(இ-ள்.) மால் நீர் அயோத்தியார் - பெருமையாகிய நீர்வளமுள்ள அயோத்தியா நகரத்தாருக்கு, மன் - அரசனாகிய இருதுபன்னன், பொன் அமரும் - இலட்சுமி வீற்றிருக்கின்ற, மார்ப - மார்பையுடைய நளராசனே, உன்னை - நிடதேசத்தரசனாகிய உன்னை,

ஒன்றும் உணராது - சிறிதும் தெரிந்துகொள்ளாமல், யான் உரைத்த எலாம் - நான் சொன்னவைகளையெல்லாம், பொறு என்று-பொறுத்துக்கொள்ளென்று, பின்னை - அதன்மேல், தன்மேல் நீர்மை - தன் புறத்தில் தோன்றுந்தன்மை, குன்று-குறைந்து, வெறு தேர்மிசைக் கொண்டான்-வெறுமையான தேரில் ஏறிச்சென்றான், எ - று.

(வி-ரை.) ஒன்றென்னும் வரையறைப் பண்புப்பெயர் சிறுமைப் பண்பை யுணர்த்தியது. புறத்தில் தோன்றுந்தன்மை குறைதலாவது-தமயந்திக்கு நடக்கும் இரண்டாம் சுயம்வரத்தில் அவளை அடையலாமென்னுங் கருத்தால் புறத்தில் தோன்றிய முகமலர்ச்சி, வாக்கு நடைகளின் பெருமைமுதலியன இல்லையாதல். மேனீர்மையாகிய காரியத்தி னில்லாமையைக் கூறவே அதன் காரணமாகிய உண்ணீர்மை அதற்குமுன் இல்லாமையாதலென்பது தானே அமைதலால் அதனைக் கூறுதொழிந்தார்; மேனீர்மையென்பது மேன்மையாகிய தன்மையெனப் பொருள் கொள்ளினும் இழுக்காது; மேன்மையாகிய தன்மையாவது - நளனை ஏவலாளனாகக் கருதிக் கட்டளையிடல் முதலியன. மிசைக்கொள்ளல்: ஒரு சொல்லின் தன்மையது. தமயந்தியை மணம்புரிந்து அவளோடு அயோத்திக்கு மீளலாமெனக் கொண்டுவந்து, அவளைப் பெறுமற் றனித்துச் செலுத்துதலால் 'வெறுந் தேர்மிசைக் கொண்டான்' என்றார். (அ௯)

வெற்றனை முன்செல்ல வேல்வேந்தர் பின்செல்லப்
பொற்றேர்மேற் றேவியொடும் போயினன்—முற்றும்பற்
றேனீ ரளித்தருகு செங்நெற் கதிர்விளக்கு
மாநீர் நிடதத்தார் மன்.

(இ-ள்.) முற்று - (மலரவேண்டியகாலம்) நிறைந்த, ஆம்பல் - ஆம்பல்மலர்களின்று, தேன் நீர் - தேனாகிய நீரை, அளித்து - பாய்ச்சி, அருகு - (தன்) அருகிலுள்ள, செங்கெல் கதிர் - செங்நெற்கதிர்

களை, விளைக்கும் - விளையச் செய்யும், மா நீர்-மிக்கநீர்நிறைந்த குளங் களையுடைய, நிடதத்தார்மன்-நிடததேசத்தார்க்கு அரசன், வில்தானை- வில்லைத்தாங்கிய படைகள், முன் செல்ல - (தன்) முன்னே நடந்து போகவும், வேல் வேந்தர் - வேலைத்தாங்கிய அரசர்கள், பின் செல்ல- தன்பின்னே நடந்து வரவும், பொன் தேர் மேல் - பொன்னாற்செய்த தேரின்மேல், தேவியொடும் போயினான் - தமயந்தியோடு சென் றான், எ - று.

(வி-ரை) செந்நெல் - பண்புத்தொகைநிலைத்தொடர்; செம்மை யென்னும் பண்புப்பெயரோடு நெல்லென்னும் வருமொழிபுணர்ந்த போது, "ஈறுபோதல்" என்பதனால் மையீறு கெட்ட செம் என்ப தன் ஈற்று மகரம் தனிக்குறிலைச் சார்ந்த மகரமாதலால், [நன்-மெய்- கூ - கஅ - இன் விதியை உருபு - கூ - கஅ - ஆல் எற்று] தன்னொடு மயங்காத நகர மெய்யாகத் திரிந்தது. ஆம்பற்றேன் - சினைத்தற்கிழ மைப்பொருட்டாகிய ஆறாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்; எழுவாய்த் தொகாநிலைத் தொடராயின் லகரங்கெடத் தகரம் றகர மாய் ஆம்பறேனென நிற்கும். (அஉ)

> தானவரை வெல்லத் தரித்தநெடு வைவேலாய்
> ஏனைநெறித் தூரமினி யெத்தனையோ—மானேகேள்
> இந்த மலைகடந் தேழுமலைக் கப்புறமா
> விந்தமெனு நம்பதிதான் மிக்கு.

(இ - ள்.) தானவரை - அசுரரை, வெல்ல - வெற்றிகொள்ளு தற்கு, தரித்த - பிடித்த, நெடு வை வேலாய் - நீண்ட கூர்மையாகிய வேலையுடைய சுப்பிரமணியனை ஒத்தவனே, ஏனை நெறித் தூரம் - (நடக்கவேண்டிய) மற்ற வழியினது தூரம், இனி எத்தனை ஓ-இனி எவ்வளவினதோ, (என்று தமயந்தி கேட்க) மானே கேள் - மானை ஒத்தவளே கேளாய், இந்த மலை கடந்து-தோன்றுகிற இம்மலையைக்

கடந்து செல்ல, எழு மலைக்கு - உள்ள எழுமலைகளுக்கு, அப்புறம் - அப்புறத்தில், மிக்கு - (எல்லா நகரினும்) சிறந்து, மாலிந்தம் எனும் - மாலிந்தமென்று சிறப்பித்துச் சொல்லப்படும், நம் பதி - நமது நகரம் உளது, எ - று.

(வி-ரை.) உளது என்னும் பயனிலை எஞ்சிநின்றது. கடந்து - செயவெனெச்சத்திரிபு. தனு என்பவளுடைய புத்திரர் தானவர். நளன் அசுரரை வென்றிலனாயினும், 'தானவரை வெல்லத் தரித்த நெடுவேலாய்' என்று விளித்தது இறைவனுக்குத் தைத்தியாரி என்னும் பெயருள்ளதாதலாலும், அரசன் இறைவனெனப்படுதலாலுமென்க. தீயனாகிய புட்கரனைச் சூதில் வெல்லச் செல்கின்றவனாதலால் இவ்வாறு விளித்தான். பிறிதென்னும் பொருள்படநின்ற எனை - இடைச்சொல். ஓ - இரக்கப்பொருளது. மலைக்கு என்னும் நான்கனுருபு எல்லைப்பொருளது. (அஅ)

> இக்கங்குல் போக விகல்வே னளனெறிநீர்
> செய்க்கங்கு பாயுந் திருநாடு—புக்கங்
> கிருக்குமா காண்பான்போ லேறினான் குன்றில்
> செருக்குமான் றேர்வெய்யோன் சென்று.

(இ - ள்.) இகல் வேல் - (தீயோரைப்) பகைக்கின்ற வேலைத் தாங்கிய, நளன் - நளராசன், எறி நீர் - அலை எறிகிற நீர், அங்கு - அவ்விடத்தில், செய்க்கு - கழனியில், பாயும் - பாய்கின்ற, திரு நாடு - செல்வமிக்க நிடதநாட்டில், புக்கு - புகுந்து, அங்கு - அந்நாட்டில், இக் கங்குல் போக - (தான் சென்ற) இத்தினத்தின் இராப்பொழுது கழியும்படி, இருக்கும் ஆறு - தங்கும் விதத்தை, காண்பான் போல - பார்க்கவருபவன்போல, செருக்கும் - களிக்கின்ற, மான் தேர் - குதிரைகளைப் பூட்டிய தேரையுடைய, வெய்யோன் - வெப்பமாகிய கிரணங்களையுடைய சூரியன், சென்று - போய், குன்றில் ஏறினான் - உதயகிரியில் ஏறினான், எ - று.

(வி-ரை.) எறிநீர் செய்க்கங்கு என்பதற்கு இறைக்கின்ற நீர் கழனியினது வரம்பின் பக்கத்தும் எனவும் உரைக்கலாம்; அவ்வாறு உரைக்கின் இறந்ததுதழீஇய எச்சவும்மை விகாரத்தால் தொக்கதெனக் கொள்க. ஆறென்னும் பெயர்ச்சொல்லி னீற்றுகரம் தொகுத்தல். போக என்னுங் காரியப்பொருட்டாகிய எதிர்காலச்செயவெனெச்சம் தன் காரணமாகிய இருக்குமென்னும் வினைகொண்டது. போல என்னும் சொல், வெய்யோன் குன்றி லேறினுன் என்னும் தற்குறிப்பேற்ற அணியில் வருவதோ ரிடைச்சொல். (அச)

மன்றலிளங் கோதையொடு மக்களுந் தானுமொரு
வென்றி மணிநெடுந்தேர் மேலேறிச்—சென்றடைந்தான்
மாவிந்த மென்னும் வளநகரஞ் சூழ்ந்தவொரு
பூவிந்தை வாழும் பொழில்.

(இ - ள்.) மன்றல் - மணமமைந்த, இள கோதையொடு - புது மலர் மாலையைத் தரித்த தமயந்தியோடு, மக்களும் தானும் - பிள்ளைகளும் தானும், வென்றி - வெற்றியைத்தரும், மணி - மணிகளையுடைய, ஒருநெடு தேர்மேல்-ஒருபெருந்தேரில், ஏறிச்சென்று-ஏறிப் போய், மாவிந்தம் என்னும் - மாவிந்தமென்று சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற, வள நகரம் - வளமாகிய நகரத்தை, சூழ்ந்த - சூழ்ந்த சோலைகளில், பூ விந்தை - தாமரைப்பூவி லெழுந்தருளிய விசயலட்சுமி, வாழும் ஒரு பொழில்-வாழ்கின்ற ஒருசோலையை, அடைந்தான் - சேர்ந்தான், எ - று.

(வி-ரை.) மக்களுந் தானும் அடைந்தான் என்பது சிறப்புப்பற்றி வந்த பால்வழுவமைதி [நன் - பொது - சூ - உள]. இச்சோலையின்கணிருந்து சூதாட்டத்தில் புட்கரனை வென்று இழந்தநாடு முதலியவற்றைப் பெறுகின்றானாதலால் அதனைப் 'பூவிந்தை வாழும் பொழில்' என்றார். சூழ்ந்த-இறந்தகால வினையாலணையும்பெயர்; அது சோலை

களை யுணர்த்தியது. இளங்கோதை-பண்புத்தொகைப்புறத்துப் பிற ந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். (அரு)

மற்றவனுக் கென்வரவு சொல்லி மறுசூதுக்
குற்ற பணைய முளதென்று—கொற்றவனைக்
கொண்டணைவீ ரென்று குலத்தூ தரைவிடுத்தான்
தண்டெரியற் றேர்வேந்தன் தான்.

(இ-ள்.) தண் தெரியல் - குளிர்ச்சியாகிய மலர்மாலை யணிந்த, தேர் வேந்தன் - தேரையுடைய நளராசன், கொற்றவனுக்கு - புட்கர ராசனுக்கு, என் வரவு சொல்லி - நான் வந்த செய்தியைச் சொல்லி, மறு சூதுக்கு - மறு சூதாட்டத்துக்கு, உற்ற பணயம் - தக்க பந்தயப் பொருள், உளது என்று - உள்ளதென்று சொல்லி, அவனைக் கொண்டு-அவனை அழைத்துக்கொண்டு, அணைவீர் என்று-வாருமென்று, குலத் தூதரை விடுத்தான்-உயர்குலத்திற் பிறந்த தூதர்களை அனுப்பி னான், எ-று.

(வி·ரை.) செய்யுளாதலால் சுட்டுப்பெயர் முன்னே வந்தது [நன்-பொது·சூ-சஅ]. "படர்க்கைமுப் பெயரோ டணையின் சுட்டுப், பெயர்பின் வரும்வினை எனிற்பெயர்க் கெங்கும், மருவும் வழக் கிடைச் செய்யுட் கேற்புழி,"; அவ்வாறு சுட்டுப்பெயர் முன்வந்ததாயி னும், உயர்திணைச் சிறப்புப்பெயராகிய கொற்றவனென்பதை முன் னும், அவனென்னுஞ் சுட்டுப்பெயர் முன்வந்ததாயினும், உயர் திணைச்சிறப்புப்பெயராகிய கொற்றவனென்பதை முன்னும், அவ னென்னுஞ் சுட்டுப்பெயரைப் பின்னுங் கூட்டி உரைக்க. என் வரவு- வினைமுதற்பொருண்மையில்வந்த ஆறும்வேற்றுமைத்தொகைநிலைத் தொடர். முன்னே புட்கரனிடத்துச் சூதில் தோல்வியடைந்தபோது பொருள் வைக்கப் பெறுமல் மறு சூதை விட்டுப்போயின அத் தொடர்ச்சி தோன்ற 'மறுசூது' என்றான். தொன்றுதொட்டுவந்த

தூதராதலால் 'குலத்தூதர்' என்றார். தெரியல் - தொழிலாகுபெயர். தான்-அசை. (அக)

மாய நெடுஞ்சூதில் வஞ்சித்த வன்னெஞ்சன்
தூய நறுமலர்ப்பூஞ் சோலைவாய்—ஆய
பெருந்தானை சூழப் பெடைநடையா ளோடும்
இருந்தானைக் கண்டா னெதிர்.

(இ-ள்.) மாயம் நெடு சூதில் - வஞ்சனை மிக்க சூதாட்டத்தில், வஞ்சித்த-(எல்லாச் செல்வங்களையும்) வஞ்சித்துப்பெற்ற, வல் நெஞ்சன் - இரக்கமில்லாத மனமுடைய புட்கரன், தூய - சுத்தமான, நறு மலர் - நல்ல மலர்களையுடைய, பூ சோலைவாய் - பொலிவாகிய சோலையில், ஆய பெரு தானை சூழ - பெருமை உண்டாகிய சேனைகள் சூழ்ந்துநிற்க, பெடை நடையாளோடு - பெண்ணன்ன நடைபோன்ற நடையையுடைய தமயந்தியோடு, இருந்தானை - வீற்றிருந்த நளராசனை, எதிர் கண்டான் - முன்னே கண்டான், எ-று.

(வி-ரை.) அங்குள்ள அரசர் முதலியோரில் அழகு முதலியவற்றில் விளக்கமாய்த் தோன்றுவோர் தமயந்தியும், நளனுமேயாதலால் 'பெடைநடையா ளோடு, மிருந்தானை எதிர்கண்டான்' எனவும், சுயம்வரத்தில் தமயந்தியினுடைய அழகைக் கண்டானாயினுஞ் சூதில் நளன் தோல்வியடைந்து காட்டுக்குச் செல்லாநிற்கையில் அவன் பின்னே நடந்த தமயந்தியினது நடை இவனது நெஞ்சில் கிடந்ததைக் குறிப்பிக்கப் 'பெடைநடையாளோடும்' எனவும், இவன் வந்தது அவளைக் குறித்தன்றாதலால் அவளை உடனிகழ்பொருளாக்கி 'இருந்தானை' எனவுங் கூறினார். வஞ்சித்த-வஞ்சமென்னும் பெயரடியாகப் பிறந்த இறந்தகாலப் பெயரெச்சம்; வஞ்சி - பகுதி, த் - சந்தி, த்-இறந்தகால இடைநிலை, அ - பெயரெச்ச விகுதி, இது காரியப்பொருட்டாய் நெஞ்சமென்னும் கருவிப்பெயர் கொண்டது. ஆய - இறந்த

காலப் பெயரெச்சம்; ஆ-பகுதி, ய் - இறந்தகால இடைநிலை, அ-பெய ரெச்ச விகுதி. (அஎ)

செங்கோ லரசன் முகநோக்கித் தேர்ச்சியிலா
வெங்கோ லரசன் வினவினான்—அங்கோலக்
காவற் கொடைவேந்தே காதலற்குங் காதலிக்கும்
யாவர்க்குந் தீதிலவே யென்று.

(இ-ள்.) வெம் கோல் அரசன் - கொடுங்கோ லரசனாகிய புட்கரன், செங்கோல் அரசன் முகம் நோக்கி - செங்கோலரசனாகிய நளனது முகத்தைப் பார்த்து, தேர்ச்சி இலாத - ஆராயும் அறிவில்லாத, அம் கோலம்-அழகாகிய அலங்காரமுள்ள, காவல் கொடை வேந்தே-காக்குந் தன்மையையும் கொடுக்குந் தன்மையையுமுடைய அரசனே, காதலற்கும்-நாயகனாகிய உனக்கும், காதலிக்கும்-நாயகிக்கும், யாவர்க்கும்-நின் மக்களிருவருக்கும், தீது இலவே என்று - தீமையிலவா (க்ஷேமமுளதா) என்று, வினவினான் - கேட்டான், எ - று.

(வி-ரை.) காதலன்-முன்னிலையில் படர்க்கைவந்த வழுவமைதி. சூதால் தான் எல்லாச்செல்வங்களையும் பெற்றதுமன்றி, நளன் மனைவி முதலானோரோடு காட்டுக்குச் செல்லுகையில் "வண்டாடுந் தார் நளனை மாநகரில் யாரேனுங், கொண்டாடி னார்தம்மைக் கொல்வமெனத்-தண்டா, முரசு" அறைவித்தலுஞ் செய்தவனாதலால் 'வெங்கோலரசன்' எனவும், இவற்றி லொன்றும் இப்போ துணர்ந்திலனாதலால் 'தேர்ச்சியிலா அரசன்' எனவுங் கூறினார். தீது - பண்புப்பெயர்; தீ-பகுதி, து-பகுதிப்பொருண்மை விகுதி; இது பால்பகா அஃறிணைப் பெயராதலால் இல என்னுங் குறிப்புவினைமுற்றால் இந்தப் பாற் பொதுமை நீங்கிப் பலவின்பாலை யுணர்த்தியது. யாவர்க்கு மென்னும் உம்மை எண்ணுப்பொருளோடு முற்றும்மைப் பொருளதாதலால் யா வினா எஞ்சாமைப்பொருளது. ஏ - வினா. (அஅ)

தீது தருகலிமுன் செய்ததனை யோராதே
யாது பணைய மெனவியம்பச்—சூதாட
மையாழி யிற்றுயிலு மால்பாராய் வண்மைபுனை
கையாழி வைத்தான் கழித்து.

(இ - ள்.) தீது தரு-தீமையைத் தருகின்ற, கலி - கலிபுருடன், முன் செய்ததனை - (தான் வெல்லும்படி) முன்னே செய்ததை, ஓராது-உணராமல், சூது ஆட-சூதாடுதற்கு, பணையம் யாது என-பந்தயப்பொருள் எதென்று, இயம்ப - புட்கரன் கேட்க, மை ஆழியில் துயிலும் - பாற்கடலில் கண்வளர்கின்ற, மால் பராய்-திருமாலை வணங்கி, வண்மை புனை-ஈகையை அணிந்த(ஈகையையுடைய), கை ஆழி-கைவிரலிலணிந்த மோதிரத்தை, கழித்து வைத்தான் - கழற்றிவைத்தான், எ-று.

(வி-ரை.) ஓராதென்னும் வினையெச்சம், கலி முன் செய்ததனை ஓர்வானாயின் சூதாடுதற்கு இணங்கானென்பதைக் குறிப்பிக்கின்றது. கையாழி வைத்ததே இன்னதென விடை கூறியதனோடொக்குமாதலின், வாயால் விடை கூறானாயினன். பராய் - இறந்தகாலவினையெச்சம்; பரா - பகுதி, ய் - இறந்தகாலவினையெச்ச விகுதி; முதனிலைத் தனிவினைப்பெயராதலால் பரா என்னும் குறியதன் கீழ் ஆ, விரா வினவு என்றாதல்போலக் குறுகி,உகரம் ஏற்றுப் பரவு என வருதலு முண்டு; அது பரவி எனவும், மேலது யகரமெய் விகுதிபெறாமல் உகரவிகுதியின் திரிபாகிய இகரவிகுதி பெற்றுப் பராவி எனவும் வரும் [நன்-உயிர்-சூ - ௨௨]. கை - முதலாகுபெயர். வெண்மையாகிய பாற்கடலை மையாழியென்றது அதில் கண்வளர்கின்ற இறைவனது கரிய திருமேனியினொளி பரந்து பாய்தலால் அக்கடல் கரியதாகக் காணலின். 'மாலனையான்' எனவும் பாடமுண்டு; பொருள் 'திருமாலை ஒத்தவன்' என்பது. (௬௧)

அப்பலகை யொன்றி னருகிருந்தார் தாமதிக்கச்
செப்பரிய செல்வத் திருநகரும்—ஒப்பரிய
வன்றானை யோடு வளநாடும் வஞ்சனையால்
வென்றானை வென்றானவ் வேந்து.

(இ-ள்.) அவ் வேந்து - நளராசன், அப்பலகை ஒன்றின் - அவ்வொரு பலகை ஆட்டத்தில், அருகு இருந்தார் - பக்கத்திலிருந்த அரசர், மதிக்க - மதிக்கும்படி, செப்பு அரிய - (அளவிட்டுச்) சொல்லுதலரிய, செல்வத் திருநகரும்-செல்வமிக்க அழகிய நகரத்தையும், ஒப்பு அரிய - உவமை இல்லாத, வல் தானையோடு - வன்மையாகிய சேனையோடு, வள நாடும் - வளப்பமாகிய நாட்டையும், வஞ்சனையால் - வஞ்சனையினால், வெற்றானை-வென்ற புட்கரனை, வென்றான் - (நகர முதலிய எல்லாம் தானடையச்) சயித்தான், எ-று.

(வி-ரை.) செப்பு - முதனிலைத் தொழிற்பெயர்; இது எழுவாய்த் தொகாநிலைத்தொடராக அரிய என்னும் பண்படியாகப் பிறந்த குறிப்புப்பெயரெச்சங் கொண்டது. செப்பரிய என்பதைச் செப்ப அரிய எனப் பதம் பிரிக்கின், பொருள்: சொல்ல அரிய என்பது; நிலைமொழி ஈறு தொகுத்தலாய் அவ்வாறு நின்றதென்க. செப்புத் தெலுங்கு மொழியாதலால் திசைச்சொலென்க. பலகை - கருவியாகுபெயர். (௯0)

அந்த வளநாடு மவ்வரசு மாங்கொழிய
வந்த படியே வழிக்கொண்டான்—செந்தமிழோர்
நாவேய்ந்த சொல்லா னளனென்று போற்றிசைக்குங்
கோவேந்தற் கெல்லாங் கொடுத்து.

(இ-ள்.) அந்த வளநாடும் - வளப்பமாகிய அந்நிடதேசமும், அவ்வரசும் - அதையாளும் ஆட்சியும், ஆங்கு - அவ்வோராட்டத்தில்,

ஒழிய - ஒழிந்துபோக, செம் தமிழோர் - செந்தமிழில்வல்ல புலவர், நா வேய்ந்த - நாவினால் தொடுத்த, சொல்லால் - செய்யுளால், நளன் என்று - நளராசனென்று, போற்று இசைக்கும்-துதியைச் சொல்லு கின்ற, கோ வேந்தற்கு - அரசர்க்கரசனுக்கு, எல்லாம் கொடுத்து - எல்லாச் செல்வங்களையும் (தோற்றுக்) கொடுத்து, வந்தபடியே-(ஒரு பொருளுமின்றி) வந்த விதமாகவே, வழிக் கொண்டான்-(புட்கரன்) போயினான், எ - று.

(வி - ரை.) 'நாவெய்ந்த' என்பதை 'நா ஏய்ந்த' எனப் பிரித்து 'நாவில் பொருந்திய' எனப் பொருளுரைத்தலுமாம். போற்று-முதனிலைத் தொழிற்பெயர். ஏ - தேற்றம். "ஒருமொழி ஒழிதன் இனங் கொளற் குறித்தே" என்பதனால் செந்தமிழோ ரென்பது ஆரிய முதலிய பாடைகளில் வல்லோரென்னும் தன்னினங் கொள்ளுகின்றது. வந்தபடியே என்றது கலிபுருடனுடைய ஏவுதலால் புட்கரன் தன்னோடு சூதாட வருகையில் ஒரு பொருளுமின்றி வந்து, தான் ஏறி வந்த கலிபுருடனாகிய இடபத்தைப் பந்தயப்பொருளாக வைத்தாடினவனாதலால். நெடுநாளைக்குமுன் தோற்கப்பட்டன ஆதலால் 'அந்த வள நாடும், அவ்வரசும்' என்றார். (கக)

ஏனை முடிவேந்த ரெத்திசையும் போற்றிசைப்பச்
சேனை புடைசூழத் தேரேறி—ஆனபுகழ்ப்
பொன்னகர மெய்தும் புரந்தரனைப் போற்பொலிந்து
நன்னகரம் புக்கா னளன்.

(இ - ள்.) ஏனை முடி வேந்தர் - (புட்கரனையல்லாத) முடியை யணிந்த மற்ற அரசர்கள், எத்திசையும் - எல்லாப் பக்கங்களிலும், போற்று இசைப்ப - துதியைச் சொல்லிச் செல்லவும், சேனை புடை சூழ - சேனைகள் பக்கத்தில் சூழ்ந்துவரவும், தேர் ஏறி - தேரின்மேலேறி, ஆன புகழ்-உண்டாகிய புகழையுடைய, பொன் நகரம்-அமரா

வதி நகரத்தை, எய்தும் - அடைகின்ற, புரந்தரனைப் போல - இந்திரனைப்போல, பொலிந்து-விளங்கி, நளன்-நளராசன், நல் நகரம் - நன்மையாகிய மாவிந்தநகரத்தில், புக்கான் - சேர்ந்தான், எ-று.

(வி - ரை.) ஏனை - பிறிதென்னும் பொருள்படும் மற்றென்பதற்குப் பிரதிபதம். அமராவதி என்பது சுவர்க்கலோகத்தில் முதன்மையான நகரம். புரந்தரன் - (பகைவருடைய) உடலைச் சேதிப்பவன். நன்னகரம் - பண்புத்தொகைநிலைத்தொடர்; நன்மை யென்னும் நிலைமொழி நகரமென்னும் வருமொழிப் புணர்ச்சியில் மையீறு கெட்டு, ஈற்று லகரம் [நன் - மெய் - கூ - உ.ச - ஆல்] னகரமாகி, வருமொழிமுதல் நகரம் [மெய்-கூ-கூ.ச-ஆல்] னகரமாயிற்று. (கூஉ)

காரெபற்ற தோகையோ கண்பெற்ற வாண்முகமோ
நீர்பெற் றுயர்ந்த நிறைபுலமோ—பார்பெற்று
மாதொடு மன்னன் வரக்கண்ட மாநகருக்
கேதோ வுரைப்ப னெதிர்.

(இ-ள்.) பார் பெற்று - நிடததேச வுரிமையைப் பெற்று, மாதோடு - தமயந்தியோடு, மன்னன் வர-நளராசன் வராநிற்க, கண்ட - பார்த்த, மா நகருக்கு - பெருமையாகிய நகரசனங்களுக்கு, எதிர் - உபமானம், கார் பெற்ற-மேகம் வரப்பெற்ற, தோகையோ-மயிலோ, கண் பெற்ற - இழந்த கண்களைப் பெற்ற, வாள் முகமோ - ஒளியாகிய முகமோ, நீர் பெற்று - மழைநீரைப் பெற்று, உயர்ந்த-வளர்ந்த, நிறை புலமோ - குறைவில்லாத வயலோ, ஏது உரைப்பன்-(இவற்றுள்) எதைச் சொல்லுவேன், எ - று.

(வி - ரை.) கார், பார் என்னும் விகாரப்பட்ட பண்புப்பெயர்கள் முறையே மேகத்துக்கும், பூமிக்கும் ஆனமையால் பண்பாகு பெயர். தோகை யென்னுஞ் சினைப்பெயர் முதலுக்கானமையால்

சினையாகுபெயர். நகரமென்னு மிடப்பெயர் அவ்விடத்துப் பொருள்களுக் காதலால் இடவாகுபெயர். முன்னுள்ள ஒ மூன்றும் ஐயப்பொருளன; ஈற்றிலுள்ள ஒ ஈற்றசை. எதுவைப்பனென உடன்பட்டமையால் இம்மூன்றும் நகருக்கெதிரெண்பது கருத்து. (கஙு)

வென்றி நிடதத்தார் வேந்தன் சரிதையீ
தென்றுரைத்து வேத வியன்முனிவன்—நன்றிபுனை
மன்னு பருவரலை மாற்றுதியென் றாசிமொழி
பன்னு நடந்திட்டான் பண்டு.

(இ - ள்.) பண்டு - பூர்வத்தில், வேதம்-வேதங்களைப்போன்ற, இயல் - தன்மையையுடைய, முனிவன் - வியாசமுனிவன், வென்றி- (பகைவர்களையே அன்றிப் பொய்ம்மையையும் வென்ற) வெற்றியையுடைய, நிடதத்தார் வேந்தன் - நிடததேசத்தாருடைய அரசனது, சரிதை ஈது என்று - சரித்திரம் இத்தன்மையது ஆகுமென்று, உரைத்து - சொல்லி, நன்றி புனை - நற்குணங்களை (அணிகளாக) அணிந்த, மன்னு - தருமராசனே, பருவரலை - (சூதால் செல்வத்தை இழந்தோமென்று) துன்பப்படுதலை, மாற்றுதி என்று - நீக்கென்று சொல்லி, ஆசி மொழி - ஆசீர்வசனங்களை, பன்னு - சொல்லி, நடந்திட்டான் - சென்றான், எ - று.

(வி-ரை.) பொய்ம்மையை வெல்லுந்திறம் அவனு லாளப்படும் குடிகளுக்கு முண்டென்பார் வென்றியை அவனைச் சாரவையாமல் 'வென்றி நிடதத்தாசர்'எனவும், பொய்யா மொழியுடையானென்பார் 'வேத வியன்முனிவன்' எனவும், உடலைப் புனையும் அணிகளினும், நற்குண நற்செய்கைகளை யுடைமையே அமையுமெனக் கருதுவோனென்பார் 'நன்றி புனைமன்னு' என்றனெனவுங் கூறினர். ஈது - சுட்டடியாகப் பிறந்த குறிப்பு வினைமுற்று. ஆசிமொழி - ஆசியை யுணர்த்து மொழி என இரண்டாம்வேற்றுமை யுருபும் பயனு முடன்

தொக்க தொகைநிலைத்தொடர்; ஆசியாகிய மொழி என இருபெய ரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடருமாம். (கூச)

வாழி யருமறைகள் வாழிநல் லந்தணர்கள்
வாழிநளன் காதை வழுத்துவோர்—வாழிய
மன்னுவநாட் டாங்கண் வருசந்திரன் சுவர்க்கி
தென்னுறுமெய்க் கீர்த்தி சிறந்து.

(இ - ள்.) அரு மறைகள் - (உயர்வாகிய) வேதங்கள், வாழி வாழக்கடவன; நல் அந்தணர்கள் - (அவ்வேதநெறியில் ஒழுகும்) சிறந்த பிராமணர்கள், வாழி - வாழக்கடவர்கள்; நளன் காதை - நளச் சக்கரவர்த்தியினுடைய (திவ்விய) சரித்திரத்தை, வழுத்துவோர் - கூறுபவர்கள், வாழி - வாழக்கடவர்கள்; மன்னுவ நாடு - மன்னுவ நாடாகிய, ஆங்கண் - அவ்விடத்து, வரு சந்திரன் சுவர்க்கி - பிறந்து வீற்றிருக்கும் சந்திரன் சுவர்க்கியினுடைய, தென் உறு - (குற்ற மில்லாமையால்) தூய்மையாகிய, மெய்க் கீர்த்தி - உண்மையாகிய புகழ், சிறந்து - அழியாமல், வாழிய - வாழக்கடவது, எ - று.

(வி- ரை.) அருமறைகளையும், அந்தணர்களையும், வழுத்துவோ ரையும் கூறவே, "ஒருமொழி ஒழிதன் இனங்கொளற் குரித்தே" என்பதனால் முறையே மற்ற வைதிக நூல்களையும், மற்ற வரு ணத்தாரையும், கேட்போரையுங் கொள்க. வாழிய என்னு வியங்கோள் வினைமுற்று ஈற்றுயிர்மெய் கெட்டு வாழி என நின்றது [நன்-உயிர்- ரு-கஅ.] (கரு)

கலிநீங்குகாண்டம் முற்றிற்று.

## கலிதொடர்காண்டம்

[கக0-ம் செய்யுளுக்குப்பின் வேறு பிரதியிற் காணப்பட்ட செய்யுள்.]

உடுத்த துகிலரிந்த தொண்டொடியாள் கண்டு
மடுத்த துயிலான் மறுகி—யடுத்தடுத்து
மன்னே யெனவழைப்பாண் மற்றுமவ னைக்காணா
தென்னேயிஃ தென்னென் றெழுந்து.

(இ - ள்.) மடுத்த-(தன்னைத்) தனக்குட்படுத்திய, துயிலான் - (தனது) தூக்கத்தின் உதவியினால், உடுத்த - தான் உடுத்தியிருந்த, துகில்-தன் வஸ்திரத்தை, அரிந்தது-நளனால் அரியப்பட்டிருப்பதை, ஒள் தொடியாள் - அழகிய வளையலையணிந்த தமயந்தி, கண்டு - பார்த்து, மறுகி-வருந்தி, மற்றும் - அரியப்பட்டிருப்பதேயன்றி, அவனை-தன்நாயகனை, காணாது - காணாமையால், இஃது என்னே என்னே - இஃது என்னகாரணத்தினால் நேர்ந்தது என்னகாரணத்தினால் சேர்ந்தது, என்று - என்று பலவாறும் எண்ணி, எழுந்து - எழுந்து, அடுத்தடுத்து - உடனுக்குடன், மன்னே - அரசனே, என அழைப்பாள் - என்று அழைப்பாளாயினள், எ-று.

(வி - ரை.) ஆதரவின்றியிருப்பவரை ஆதரித்தற்குரிய அரசனாகிய நீ உன்காதன் மனைவியாகிய என்னை இங்ஙனம் தனியேவிட்டுச் செல்லுதல் தகுமா என்பாள் 'மன்னே' என்றழைத்தாள் என்க. இவளது துயில் இவளது துகிலை அரிந்துகொள்ள நளனுக்கு உதவிற்று என்க.

---

## கலிநீங்குகாண்டம்

[சஉ-ம் செய்யுளுக்குப்பின் வேறு பிரதியிற் காணப்பட்ட செய்யுள்.]

காவலனுக் கேவற் கடன்பூண் டேன் மற்றவன்ற
னேவன் முடிப்பே னினியென்று—மாவைக்

குலத்தேரிற் பூட்டினான் கோதையர்தங் கொங்கை
மலர்த்தேன் றுளிக்குந்தார் மன்.

(இ-ள்.) கோதையர்தம்-பெண்களுடைய, கொங்கை - தனங்களின்மேல், மலர்த் தேன் - (தன்னிடமுள்ள) மலரிலுள்ள தேன், துளிக்கும் - துளிக்கும்படியான, தார் - மாலையை அணிந்த, மன் - நளமகாராஜன், காவலனுக்கு - ருதுபர்ணமகாராஜனுக்கு, ஏவல் - ஏவல்தொழிலைச் செய்யும், கடன் பூண்டேன் - கடமையை மேற்கொண்டேன், (ஆதலால்) அவன்தன் - அவனுடைய, ஏவல்-கட்டளையை, இனி - இனி, முடிப்பேன் - செய்துமுடிப்பேன், என்று-என்று தனக்குள் துணிந்து, மாவை - குதிரைகளை, குலத்தேரில் - சிறந்ததாகிய தேரிலே, பூட்டினான் - சேர்த்துக் கட்டினான், எ-று.

(வி-ரை) இவன் அணிந்த தாரின் மலரிலுள்ள தேன் மாதர்கள் நெருங்கிப் பழகுதலால் அவர்தம் கொங்கைகளில் துளிப்பதாயிற் றென்க. இவ்வாசிரியர், இங்ஙனம் பெருஞ் சிறப்போடிருந்த வரசன், ருதுபர்ணனுக்கு ஏவற்றொழில் செய்யுங்கடமை பூண்டனனே என்னுந் தமதிரக்கம் குறிப்புப் பொருளாகத் தோன்ற விச்செய்யுளைக் கூறினார்.

---

## இந்நூல் ஆக்கியோன் பெயர்.

பாரார் நிடத பதிநளன்சீர் வெண்பாவாற்
பேரார் புகழேந்தி பேசினான்—றாரார்
செழியனையுஞ் சென்னியையுஞ் சேரத் திறைகொண்
மொழியின் சுவையே முதிர்ந்து.

(இ-ள்.) பேர் ஆர் (கல்வியின் திறத்தால்) புகழ்மிக்க, புகழேந்தி - புகழேந்திப்புலவர், தாரார் - (வெற்றி) மாலையினையுடைய, செழியனையும் - பாண்டியனிடத்திலும், சென்னியையும் - சோழனிடத்தி

லும், சேர - ஒன்றாய், திறை கொள் - கப்பங்கொள்ளத்தக்க, மொழி யின் - சொற்களாலே, சுவையே - சுவைகளே, முதிர்ந்து - மிக்கிருக் கும்படி, நிடதபதி - நிடததேசத்துக்கு அரசனாகிய, நளன் - நளச்சக்கர வர்த்தியின், பார் ஆர் - பூமியில் எங்கும் நிறைந்த, சீர் - சிறப்பினை யுடைய சரித்திரத்தை, வெண்பாவால் - (நேரிசை) வெண்பாவினால், பேசினான் - பாடினார், எ-று.

(வி-ரை.) பாண்டியனும் சோழனும் கேட்டமாத்திரத்தில் மன மிணங்கிக் கப்பங்கட்டும்படி வளமமைந்து நிற்கின்றன இந்நூலின் மொழிகள் என்பார் 'தாரார், செழியனையும் சென்னியையுஞ் சேரத் திறைகொண், மொழி' என்றும், இந்நூலிற் பொருட்சுவையில்லாச் செய்யுட்களே இல்லை என்பார் 'சுவையே முதிர்ந்து' என்றுங் கூறி னார். தாரார்செழியன், தாரார்சென்னி என்றியைக்க. தமிழ் அரசர் மூவராக, இதில் இருவரைமாத்திரம் கூறியது என்னெனின், இவர் அவ்விரு அரசரிடமாத்திரம் சென்றிருந்தனராகலின் என்க. இந்நூலில் ஒருவரோடொருவர் பேசும்படி இயற்றப்படும் நாடகச்சுவை யமைந் திருக்கின்றது என்பார் 'பேசினான்' என்றார். செழியனையும் சென்னி யையும் உருபுமயக்கம். இருக்கும்படி என்பது இசையெச்சம்.

குறிப்பு : இம்மூன்று செய்யுட்களும் இவற்றிற்கு உரையும் பிள்ளையவர்களின் உரைப்புத்தகத்திற் காணப்பட்டில; ஆயினும், இச்செய்யுள்கள் வேறு பிரதிகளிற் காணப்படுகின்றமையின், இவை இறுதியிற் சேர்க்கப்பெற்று உரை யெழுதப்பட்டன.

நளவெண்பா மூலமும் உரையும்

முற்றுப்பெற்றன.

ஸ்ரீ

## நளவெண்பாவின்

# செய்யுள் முதற்குறிப்பகராதி.

நளவெண்பாவின் செய்யுள் முதற்குறிப்பகராதி

முற்றுப்பெற்றது.